அனைத்திந்திய நூல் வரிசை

# கங்கவ்வா கங்கா மாதா

கன்னட மூலம்
சங்கர் மோகாசி புணேகர்

இந்தி வழி தமிழாக்கம்
எம்.வி. வெங்கட்ராம்



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

# முன்னுரை

கன்னடத்தில் பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் நாவல் பரவலாயிற்று என்று நிச்சயமாகச் சொல்ல முடியும்; ஆனால், 'நாவலின் தொடக்கம் எப்போது?' என்கிற கேள்விக்கு அத்தனை நிச்சயமாக மறுமொழி கூறுவது எளிதல்ல. 1823 இல் எழுதப்பெற்ற கெம்பு நாராயணனின் 'முத்தரமஞ்ஜூஷ்' கன்னடத்தின் முதல் நாவல் என்பது சில விமரிசகர்களின் கருத்து. இந்த உரைநடைக் கதையின் விவரிக்கும் முறை நாவலுக்கு சமீபத்தில் இருக்கிறது; ஆனால் அதற்கு அப்பால் வருகிற, நாவலின் உருவம் பற்றின கற்பனை கெம்பு நாராயணனுக்கு இல்லை. உரைநடையைத் திருத்தம் செய்து, அதன் வாயிலாக நாவல் இயற்றுவதற்குத் தேவையான மொழி வளத்தைத் தயாரித்த இந்தப் புகழ் இந்த எழுத்தாளருக்கே உரியது என்று கட்டாயம் கூற முடியும். சிறந்த உரை நடையில், 'ராமாசுவமேதம்' ஆசிரியர் புட்டண்ணா (1870 — 1901) 'கோதாவரி' என்ற பெயருள்ள ஒரு நாவலைப் பாதி எழுதினார். வேங்கடாசார்யவின் படைப்புகளைப் புட்டண்ணா மிகவும் சுவையோடும் ஆவலோடும் படித்தார், அதிலிருந்துதான் அவருக்கு நாவல் எழுதும் முனைப்பு உண்டாயிற்று.

பீ. வேங்கடாசார்ய (1845 — 1914) பங்கிம் சந்திரர், மற்ற வங்காளி ஆசிரியர்களின் படைப்புகளை மொழிபெயர்த்து, கன்னட வாசகர்களுக்கு நாவலை அறிமுகம் செய்து வைத்தார். வாழையடி வாழையாக வரும் மதிப்பீடுகளைப் போற்றுபவரான பங்கிம்சந்திரரின், விஷவிருஷம், தேவி சௌத்ராணி, கிருஷ்ணகாந்தன் உயில், முதலிய சமூக நாவல்களையும், ராஜசிம்மன், துர்கேசநந்தினி, ஆனந்தமடம் போன்ற வரலாற்று நாவல்களும் கன்னடத்தில் மக்களின் நன்மதிப்பைப் பெற்றன. வங்காளி நாவல்களில் ஸமஸ்கிருதம் மிகுதி. அதே நடையைக் கைக்கொண்ட காரணத்தால் கன்னட மொழியும் அல்லல்பட்டது. 'நடையின் பால் நமக்குள்ள மோகம் வங்காளி நாவல்களின் கன்னட மொழிபெயர்ப்பைப் படித்ததால் வந்தது' என்னும் சிவராம் காரந்தின் கூற்று குறிப்பிடத்தக்கது.

மைசூரின் வேங்கடாசார்ய, வங்காளி நாவல்களைக் கன்னடத்தில் மொழிபெயர்ப்பு செய்திட, மராட்டி எழுத்தாளர்களின் — முக்கியமாக ஹரிநாராயண் ஆப்டேயின்- நாவல்களின் கன்னடமொழியாக்கத்தை வட கர்நாடகத்தின் வி.டி. கலகநாத் (1869 — 1942) செய்தார். ராணா ராஜசிம்மன், லக்ஷ்மீபாய், பகவதி காத்யாயினி முதலிய படைப்புகளின் பெயர்ப்பு மொழியில், வேங்கடாசார்யவின் கன்னடத்தைவிட எளிமையும் இயல்பான தன்மையும் காணக்கிடைக்கின்றன. மராட்டி மொழி ஸமஸ்கிருதச் சார்பற்று இருப்பதே இதற்கு அடிப்படைக் காரணமாக இருக்கக்கூடும். வட கர்நாடகத்தில் வழக்கிலுள்ள நடையையே கலகநாத் ஒழுங்குபடுத்தி இருக்கிறார். இந்தப் பிரதேசத்தின் பல நாவலாசிரியர்கள் கலகநாத்தின் நடையையே பின்பற்றினார்கள். இதனால் அவருடைய மொழி, செல்வாக்கு வாய்ந்தது என்பது வெளியா கிறது. புகழ் பெற்ற வீரர்களின் ரோமம் சிலிர்க்கச் செய்யும் சாகசச் செயல்களின் வருணனை, மக்கள் விழிப்புக்கான விருப்பம், மொழியின் எளிமை, மகாராஷ்டிரம் அண்மையில் இருப்பது முதலிய காரணங்களால், அவர் வட கர்நாடகத்தில் பிரபலமான மொழி பெயர்ப்பாளர் ஆனார்.

வேங்கடாசார்ய, கலகநாத் ஆகியோரின் காலத்தை மொழி பெயர்ப்பு யுகம் என்று மொழியலாம். இந்த மொழி பெயர்ப் பாளர்களால் நாவல் சாமானிய மக்களுக்கும் எட்டத் தொடங்கியது. வாசகர்களுக்கு இலக்கியத்தில் நாவல்பால் விருப்பம் உண்டாகலாயிற்று. நாட்டில் அரசியல், பண்பாட்டு விழிப்பு உண்டாக்க இப்படைப்புகள் துணை ஆயின. முக்கிய மாக, இந்த மொழிபெயர்ப்புப்பணி கன்னடத்தில் நாவலின் தோற்றத்தைத் தூண்டுவதாயிற்று. கலகநாத் தாம், விஜய நகர சாம்ராஜ்யத்தை ஆதாரமாய்க் கொண்டு 'மாதவ கருண விலாஸ்', 'குமுதினி' என்னும் பெயருள்ள இரண்டு சொந்த நாவல்களை இயற்றினார். இந்தப் படைப்புகளில் நாட்டுப்பற்று, அறச் செருக்கு, கடவுட்பற்று ஆகியவை சிறப்பான முறைகளில் காணப்படுகின்றன. இதில் கன்னடத்தின் பழம்பெருமையைச் சுட்டும் நோக்கமும் உள்ளது. ஆனால், தீண்டாமை விலக்கு போன்ற சமகாலப் பிரச்னைகளோடு வரலாற்று மெய்மை கலகநாத்தின் சொந்த நாவல்களில் சரியான முறையில் பொருத்தப்படவில்லை.

கலகநாத்தின் சொந்த நாவல்கள் வெளியிடப்படுவதற்கு முன்பு தென் கர்நாடகத்திலும் கூட சொந்த நாவல்கள் எழுதப் பட்டுக் கொண்டு இருந்தன. குல்வாடி வேங்கடராயின் 'இந்திரா பாய்' (1899) கன்னடத்தின் முதல் சமூகநாவல். ஒரு வேளை

இதுவே முதல் சொந்த நாவலாக இருக்கும். எப்படி ஆயினும் சரி, பத்தொன்பதாம் நூற்றண்டின் முடிவுக்குள் நாவல் ஆரம்பம் ஆகிவிட்டது என்று தெளிவாக பாபூராவும், 'ரோஹிணி'யை (1907) இயற்றிய குல்வாடி அண்ணாஜீராயும் தென் கர்நாடகத்தில் நாவல் இலக்கியத்தை வளர்த்துக் கொண்டு இருந்தார்கள். கன்னட மொழிப் பிரதேசம் ஆட்சி பழைய மைசூரில் பிரிந்து இருந்தாலும் இருபதாம் நூற்றண்டின் முதல் பத்தாண்டு முடிவதற்குள், அதில் போதுமான அளவில் மொழிபெயர்ப்பு நாவல்களும் சொந்த நாவல்களும் எழுதத் தொடங்கி விட்டனர்.

1915இல் வெளியான 'மாடித்துண்ணோ மகாராய்' கன்னட நாவல் வளர்ச்சியின் நோக்கில் ஒரு சிறப்பு நிறைந்த படைப்பாகும். பழைய மைசூரின் பண்பட்ட நடையை எம்.எஸ். புட்டண்ணா இதில் கையாண்டுள்ளார். அவர் முதல் முறையாக முடிந்தவரையில் வழக்கிலுள்ள மொழியையே உரையாடலில் பயன்படுத்தினார். நாவலில் மதிப்பீடுகளையும் ஒழுக்கத்தையும் விவரிக்கப் புராண ஆதரிசம் தேவை என்பது அவர் கருத்து; ஆயினும் அவர் நாவலின் கதைப் பொருளை சாமானியமக்களிடம் இருந்தே எடுத்துக் கொண்டார். 'ராமாயணதர்சன்' கவி கே.கே.வி. புட்டப்பா தம் நாவல்களின் கதைப் பொருளை சாமானிய மக்களிடத்திலிருந்தே எடுத்தார் என்பது இங்கே குறிப்பிடத்தகுந்தது.

புட்டப்பாவின் 'கானூரு சுவ்வம்மா ஹேக்கிடதி', 'மலேயவல்லி மதுமகளு' என்னும் மிகப்பெரிய நாவல்களின் வெளியீட்டுக் காலத்தில், இரண்டிற்கும் இடையில் முப்பது ஆண்டுகளின் வேற்றுமை இருக்கிறது. புட்டப்பா தம் குழந்தைப் பருவத்தையும் இளமையையும் மலேய நாட்டின் மடியில் கழித்தவர். இவ்விரு நாவல்களிலும் ஆசிரியர்களின் அந்த அனுபவமே சிறப்பாக வெளிப்பட்டுள்ளது. அழகை வழிபடுகிறவரான புட்டப்பாவின் நாவல்களுடைய, எல்லா வற்றிலும் பெரிய சிறப்பு, அவரால் கன்னட நாவல்களுக்கு காவ்யமயப் பரப்பு கிடைத்தது என்பதே.

ஒழுக்கத்தின் பண்பட்ட அனுபவத்தின் அடிப்படையிலேயே நாவல் இயற்றப்படவேண்டும் என்பது சிறுகதை ஆசிரியர் என்கிற முறையில் புகழ்பெற்ற மாஸ்தி வேங்கடேச அய்யங்காரின் கருத்து. மாஸ்தியின் பேனா இடையறாது பணியாற்றுகிறது. அவர் 'சுப்பண்ணா' என்னும் பெயருள்ள ஓர் அழகிய படைப்பைப் பலவருடங்களுக்கு முன்பு இயற்றினார். அப்பால் அவர் மலய நாட்டு வரலாற்றைப் பக்கப்பலமாய் வைத்து 'சென்னபஸவ நாயக்' எழுதினார். அவருடைய மற்றொரு

நாவல் 'சிக்கவீர ராஜேந்திர' கோடக வரலாற்றைக் கதைப் பொருளாய்க் கொண்டு எழுதப்பட்டுள்ளது.

'வாழ்க்கை அனுபவமே இலக்கிய ஆக்கத்திற்கு ஆதாரமாக வேண்டும்' — கன்னடத்தின் செல்வாக்கு வாய்ந்த நாவலாசிரியர் சிவராம் காரந்த்தின் உறுதியான கருத்து இது. யதார்த்தமானதும் பகட்டற்றதுமான நடையே காரந்த்தின் நாவல்களுடைய பொதுத் தன்மை. சமூக சீர்திருத்தத்தையே முதல் நோக்கமாய்க் கொண்டு எழுதப்பட்ட நாவல்களிலும் கூட ஆசிரியரின் சிருஷ்டித்திறன் விழிப்போடு இருக்கிறது, உணர்வின் வெளியீடு பொருளுக்குகந்த வகையில் இருக்கிறது. சமூகசிந்தனை காரந்த்தின் நாவல் களுக்குப் புத்தி-பூர்வமான தன்மையை அளிக்கிறது. நாவல்களின் தொடர் அவருடைய சாதனையின் இரண்டாவது சொரூபம். இலக்கியத்தில் எந்த ஒரு வகுப்பையும் அவர் ஏற்படுத்தவில்லை. காரந்த்தைப் பின்பற்றுகிறவர் யாரும் இல்லை. அவருடைய பெரும்பாலான நாவல்களில் தென் கர்நாடக மக்களின் வாழ்க்கை சித்தரிக்கப்பட்டுள்ளது, சாதாரண மக்களின் சுகதுக்கங்களோடு அங்குள்ள நிலம், நீர், விலங்கு, பறவை, மரம் செடிகள் உருக்கொண்டுள்ளன. காரந்த்தின் உயர்ந்த படைப்புகளில் புட்டப்பாவின் நாவல்களில் இருப்பதைப் போன்று சுதந்திரமான வருணனை இல்லாமல் நூலின் போக்கோடு ஒட்டினதாய் இருக்கிறது. 'ஸரஸம்மன் ஸமாதி', 'சோமன் துடி', 'மரலி மண்ணிகோ', 'வேட்டத ஜீவ்', — முதலிய வெற்றிப் படைப்பு களில் காரந்த் நாவல்களில் பல்விதத்தன்மை வெளிப் படுகிறது. 'அலித மேலே' யில் புதிய உத்தி கையாளப்பட்டுள்ளது. கையாளும் தன்மை காரந்த்தின் தனித்தன்மையின் குணமே என்றாலும் நாவலாசிரியர் காரந்த்தின் சாதனையுடைய சிறப்பு அல்ல.

புதிய உத்திப்பிரயோகங்களைத் தர்க்கமுறை நோக்கோடு கையாண்டுக் கன்னட இலக்கியத்துக்குப் புதுமையை அளித்த வர்கள் புதிய தலைமுறையைச் சேர்ந்த எழுத்தாளர்களே. ஆனால் இங்கு இதற்கு முன்னால் இலக்கியத்துக்கு ஒரு திருப்பம் தந்து அதை முன்னேற்றும் முற்போக்கு எழுத்தாளர்களைப் பற்றி இரண்டொரு வார்த்தைகள் கூற வேண்டும். எம்.எம். புட்டண்ணாவின் காலம் வரை வந்த நாவல்களை கன்னட நாவலின் பூர்வயுகம் எனலாம். கே.வி. புட்டப்பா, மாஸ்தி, காரந்த் — இந்த முதன்மையான எழுத்தாளர்களின் படைப்புகளை வந்த பிறகு, அதாவது தூலமாக 1930க்குப் பிறகு கன்னட நாவல் விசேஷ வளர்ச்சி பெறத் தொடங்கியது. நாவல் வளர்ச்சியில் முற்போக்கு எழுத்தாளர்களின் பங்கைக் கண்ணோட்டமாய்க் கணிக்க முடியாது.

'சந்த்யா ராக்', 'நாசார்வபௌமா' — வின் ஆசிரியர் ஏ.என். கிருஷ்ணராவ் காரணமாக மக்களுக்கு இடையில் நாவலின் செல்வாக்கு, இதற்கு முன் ஒருகாலத்திலும் இல்லாத அளவுக்கு உயர்ந்தது. விமரிசன நோக்கோடும், மக்கள் - ருசியின் நோக் கோடும் நாவல் படிப்பவர்களின் எண்ணிக்கை வரை யறையின்றி வளர்ந்தது. கிருஷ்ணராவும் சில வேறு எழுத்தாளர் களும் வேசி வாழ்க்கை, கலைஞன் உலகம், முதலாளித்துவத்தின் தீய விளைவுகள் முதலிய பொருள்களைத் தங்கள் நாவல்களுக் காகத் தேர்ந்தார்கள். இலக்கியத்தின் கருப் பொருளைப் பற்றி நிலவிவந்த புனிதமான பாவனையை மாற்றி, புதிய எழுத் தாளர்களின் வருகையின் போது ஒரேயடியாக விரோதம் ஏற்படும் சாத்தியக்கூறு இருந்தது, அதன் கடுமையை முற்போக்கு எழுத்தாளர்கள் குறைத்தார்கள். ஆனால் மக்களிடம் செல்வாக்கு பெறுவதற்காக அவர்கள் கையாண்ட நடைத்தெளிவுக்கும், இனிய உரையாடலுக்கும், ஆர்வ நிறைவுக்கும், கதைப் பொருளின் சுவைக்கும், எழுச்சிக்கும் புகழ் பெற்றுள்ளது. இதே காரணத்தால் திருவாளர்கள் கிருஷ்ணராவ், சுப்பாராவ், பஸவராவ், கட்டீமணி நிரஞ்ஜன், கிருஷ்ணமூர்த்தி ராணிக்கு முதலியவர்களின் நாவல்கள் பத்திரிகைத் தரத்திற்கு மேல் உயரமுடியவில்லை.

சுமார் 1960இல் வெளிவந்த நாவல்களில் ராவ் பஹாதுரின் 'க்ராமாயண்' ஒரு சிறப்பு மிக்கபடைப்பு. ஒரு கிராமத்தில் நிகழும் நிகழ்ச்சிகளில் அநியாயத்தின் தட்டு கனமாக இருக்கிறது, விளைவாக இயற்கையின் சீற்றத்தால் கிராமம் முழுவதும் காலி ஆகிவிடுகிறது. இந்தத் துயர அனுபவத்தை இந்த நாவல் வலிய மொழியில் வெளியீடுகிறது. கூடவே இதில் வட்டாரத்தன்மை, குறியீட்டுத்தன்மையோடு அனைத்துக்காலத்தன்மை வெற்றி கரமாகப் பொருத்தப்பட்டுள்ளது.

இந்த நூற்றண்டின் ஆறாவது பத்தாண்டில் மலர்ந்த புதிய சம்பிரதாயத்தின் கலைப்பிரயோகத்துக்குப் புத்துணர்ச்சி அளித்த எழுத்தாளர் கன்னடத்தின் சிறந்த கவி கோபால கிருஷ்ண அடிக. ஆனால் எந்தச் செல்வாக்கின் நிழலிலும் நீண்டநேரம் தங்குவது புதிய சுபாவத்துக்கு மாறுபட்டதாகும். யூ.ஆர். அனந்த மூர்த்தி, பீ. லங்கேச், தேஜஸ்வி, கிரி முதல் இந்த வட்டத்தில் மிகவிரை வாகத் தங்கள் செல்வாக்கை நிலைநாட்டி விட்டார்கள். இவர்கள் எல்லோரும் மாஸ்தியைப் போன்று சிறுகதைக் களத்திலிருந்து நாவல்களத்திற்கு வந்தார்கள். புதிய எழுத்தாளர்களில் மிகச் சிறப்புள்ள நாவலாசிரியர் அனந்த மூர்த்தியின் புகழ்பெற்ற நாவல் 'ஸம்ஸ்கார' வாழ்க்கை அனுபவத்தை அறிவுபூர்வமான தன்மை யின் அடிப்படைமீது உணர்ச்சிமிக்க ஒருவன் வாயிலாக பண் பாட்டை அழிப்பதை ஒரு புதிய முறையில் சொல்கிறது.

அனந்தமூர்த்தியின் இரண்டாவது நாவல் 'பாரதீபுர்'. ஏ.கே. ராமானுஜனின் 'ஹவதிமீனு' சாரியின் வெளிவராத ஆங்கில நாவலின் மொழி பெயர்ப்பாக இருப்பினும் உத்தியாலும் நிலையான உள்ளார்த்தபாவங்களைப் பரிசீலனை செய்வதாலும் கன்னட இலக்கியத்தில் ஒரு சிறப்பான இடம் பெறுகிறது. பீ. லங்கேசின் 'விருது', தேஜஸ்வியின் 'ஸ்னரூப்', கிரியின் 'கதி—ஸ்ததி', யச்வந்த் சிந்தாவின் 'முருதாரிகலு', சாந்தி நாத் தேசாயின் 'முக்கி' ஆகிய நாவல்களால் புதிய எழுத்தாளர்களின் ஆற்றல் விளங்குகின்றது. புதிய இலக்கியம் மனிதனின் சமூகச் சூழலிலும் தனி நபர் உணர்விலும் வெளிப்படும் உண்மையான அனுபவத்தை சூக்குமமான — ஆனால், கூர்மையான கிண்டலும் காவ்யமயமுமான மொழியில் வலிய உருவத்தில் வெளி யிடுகிறது. ஆண்—பெண், தனிநபர் சமூகம் ஆகியவற்றுக்கும் பண்பாட்டுக்கும் உள்ள தொடர்புகளால் ஒழுங்கீனம் வளரும் போது மனிதன் தனக்கும் உலகத்திற்கும் இடையிலுள்ள அகழியைப் புரிந்து கொள்ளத் தொடங்குகிறான் — இதனால் அவனுள் நிராசை நிரந்தரமாக நிலைக்க ஆரம்பிக்கிறது — அதனுடைய ஆராய்ச்சியே புதிய இலக்கியத்தில் நடக்கிறது. புதிய இலக்கியத்திற்கு முந்தின நாவல்களில் வாழ்க்கையில் ஒரு மறைபொருளும் நிலையுண்மையும் காணக் கிடைக்கிறது எனில், இதில் பொருளின்மையும் பண்பாட்டின் உயிரின்மையும் வெளியாகிறது.

புதிய எழுத்தாளர்களுக்கு வாழ்க்கையின்பால் அவநம்பிக் கையும் அவமதிப்பும் ஏற்படுவதற்குக் காரணம், சமகாலத்து ஐரோப்பிய இலக்கியத்தில் காணப்படும் இருக்கை வாதமும் தகுதியற்ற பரம்பரையுமே; அதிலும் முக்கியமாக, காஃப்கா, காமுவின் செல்வாக்கே. புதிய இலக்கியம் ஏற்றுக் கொள்ளப் படத் தக்கதா என்று ஐயப்படுகிறகிறவர்கள், ஐரோப்பியப் பண் பாட்டின் செல்வாக்கு நம் வாழ்க்கையில் மிகவும் ஓங்கி இருக்கிறது என்பதைக் குறிப்பாய்க் கவனிக்க வேண்டும். ஆக, இதுவரை வெளியாகியுள்ள நாவல்களின் அடிப்படையில் இப்போது, கன்னடத்தின் ஆற்றல்மிக்க எழுத்தாளர்களில் அதிக மானவர்கள் நவீனகால எழுத்தாளர்களே என்று கூற முடியும்.

இங்கு கன்னட நாவல் இலக்கியத்தின் சுருக்கமான ஆராய்ச்சி, புராணம், வரலாறு, அரசியல், சமூகம் என்று தனித் தனித் தலைப்பிட்டு செய்யப்படவில்லை. இதுவரை குறிப்பிடப் பட்டவர்களைத் தவிர, இத்துறையில் குறிப்பிடத் தக்க பணியாற்றி யுள்ள வேறு சில எழுத்தாளர்களும் இருக்கின்றனர். தேவரு, கோகாக், ஸ்ரீரங்க, பைரப்பா, கே.வி.அய்யர், இனாம்தார், மிர்ஜி அண்ணாராவ், ரா.ஸ்ரீ.முகலி, வீரகேசரி, சீதாராம சாஸ்திரி, கோரடி

ஸ்ரீநிவாஸராவ், சதுரங்க, வியாசராய் வல்லால, எஸ். அனந்த நாராயண், ராமமூர்த்தி, திரிவேணி, எம்.கே. இந்திரா முதலியோர். கன்னட நாவல் இலக்கியம் போதுமான அளவு வளமாக இருக்கிறது. இதன் மதிப்பீடு இனி செய்யப்படும்.

கன்னட, ஆங்கில எழுத்தாளர் திரு சங்கர் மோகாசி ராஜ்யமட்டத்தில் மட்டும் அல்ல, தேசீய மட்டத்திலும் போது மான புகழ் பெற்றவர். அவருடைய 'கங்கவ்வா, கங்காமாயி' நாவலைத் தவிர 'தாயின் மூன்று முகங்கள்' என்னும் பெயருள்ள ஒரு கவிதைத் தொகுதியும், 'பேந்த்ரேயின் காவ்ய ஆராய்ச்சி' என்கிற ஒரு விமரிசன நூலும், சில விமரிசனக் கட்டுரைகளும் எழுதி உள்ளார். அவர் தம் விமரிசனத்தில் புதுமை எழுத்தாளர் களை எதிர்த்துள்ளார். 'விமரிசனத்தின் முதன்மையான பணி ரசவுணர்வு தான், மதிப்பீடுதல் அன்று, ஆகையால் கன்னட இலக்கிய ஆராய்ச்சியில் ரண சிகித்சை செய்யும் முனைப்பு உள்ள இடத்தில் உற்சாகம் நிரப்ப வேண்டும்' என்பது அவருடைய கருத்து.

கன்னடத்தில் மோகாசி ஒரே நாவல் எழுதி இருக்கிறார். 'கங்கவ்வா கங்காமாயி'. ஆயினும் இந்த நாவலுக்குத் தனி இடம் உண்டு. இதில் பரம்பரையாகப் பிறந்த நீதியுணர்வு, வீட்டுப் பந்தங்களில் நிலவும் மனித மரியாதை, தன் சூழ்நிலைக்கு வெளியிலும் உள்ளிலும் நிகழும் நிகழ்ச்சிகள் மிக வன்மையாகச் சித்திரிக்கப்பட்டுள்ளன. கதை முடியும் போது ஏறக்குறைய எல்லா பாத்திரங்களுமே தங்கள் குண தோஷங்களைப் புரிந்து கொண்டு தங்களைத் திருத்திக் கொள்ளச் செய்யும் முயற்சி தெளிவாக இருக்கிறது. மனிதனின் பலவீனம் மோகாசிக்கு நன்கு தெரியும், தர்க்க முறைக்கு உகந்ததாக ஏற்றுக் கொள்ளப்பட்டுப் பரம்பரையாக வரும் தத்துவத்திற்காகவும் கலைக்காகவும், கண்களுக்குத் தென்படும் வாழ்க்கையில் சூக்குமமாகவும் தூலமாகவும் நடை பெறும் இழுபறிகளை வெற்றிகரமாக வெளியிடுவதால் 'கங்கவ்வா கங்காமாயி'க்கு கன்னட இலக்கியத்தில் ஒரு சிறப்பான இடம் உண்டு.

அழிக்கும் தன்மையுள்ள போக்குகள் சமூகத்தின் வாயிலாகவே நடத்தப்படுகின்றன என்பது மோகாசி வெளி யிட்டுள்ள சித்தாந்தத்தின் சாரம். நாவலின் சூழ் நிலையில் இந்தப் பொருள் வலுவற்றுவிடக் கூடாது என்பதும் 'கங்கவ்வா கங்காமாயி'யின் முக்கியமான நோக்கமாக இருந்திருக்கிறது. ஆகையால் நாவலில் துன்பியல் முடிவின் நிழல் இருந்தும் கூட அதனுடைய மொத்த தரிசனம் இன்பியல் முடிவாக இருக்கிறது. இந்த சித்தாந்தத்திற்கு முதன்மை கொடுத்து மலரும் படைப்பில் அநுபவத்தைக் கடைவதால் வெளிவருகின்ற நஞ்சை முழுமை

யாக ஜீரணித்துக் கொள்ளும் ஆற்றல் தேவைப் படுவதில்லை; ஏனெனில் பண்பாட்டு மட்டத்திலும் புத்தி வாதமட்டத்திலும் அது பரம்பரையாகக் கிடைத்து விடுகிறது. சித்தாந்தச் சிறப்புகள் படைப்பின் அநுபவத்தைத் தம் வசப்படுத்திக் கொண்டு விடவில்லை என்பதும் இந்த நாவலின் வெற்றியாகும்.

இந்நோக்கில் கங்கவ்வா கங்காமாயி ஒரு குடும்ப நாவல். அதன் கதைப் பொருள் வரையறுக்கப்பட்டது. முக்கியமாக, தார்வாரின் கங்கவ்வா, ராகப்பா, தேசாய் ஆகிய இம்மூன்று குடும்பத்தைச் சுற்றி நிகழும் நிகழ்ச்சிகளை வைத்து நாவல் வளருகிறது; ஆனால், கூடவே இந்தப் படைப்பில் தன் எல்லைக்கு வெளியிலும் உள்ளேயும் பார்ப்பதையும் காண முடியும். இவ்வாறு நாவலின் பரப்பு விரிவாகியுள்ளது. வசந்தன் கிராமத்திற்குப் போதல், அச்சுதனின் பம்பாய் வாசம் இவற்றின் வாயிலாக, தார்வாரின் செயல் களத்தின் பகைப்புலத்தில் கிராமவாழ்க்கையும் ஒரு பெரிய நகரமும் வருகின்றன. தார்வாருக்கோ, கிராமத்துக்கோ, அல்லது பம்பாய்க்கோ முதன்மை தரும் முயற்சி 'கங்கவ்வா கங்காமாயி'யில் இல்லை என்பதும் கவனிக்கப்பட வேண்டும். பாத்திரப்படைப்பு தெளிவு பெறுவதற்கு இன்றியமையாத வட்டாரத் தன்மை இதிலும் உள்ளது. ஆனால், தார்வாருக்கும் பம்பாய்க்கும் உள்ள தொடர்பு நோக்கமற்றது அல்ல. மூன்று குடும்பங்களின் துன்பத்தையோ உறவுகளையோ தார்வார் நகரவாழ்க்கை பாதிக்கவில்லை. ஆனால், கிராமத்தின் அமைதியான சூழல் வசந்தனின் நடவடிக்கைகளால் அமைதியற்றுவிடும் என்று தேசாய் கருதுகிறார். அச்சுதன் பம்பாயில் சத்யாக்ரகத்தில் கலந்து கொள்வது, தார்வார் பள்ளி ஊர்வலங்களில் சாந்தாவும் முன்னணியில் இருப்பது - இந்த இரு நிகழ்ச்சிகளையும் அவற்றின் விளைவுகளையும் ஒன்று சேர்த்துப் பார்க்கையில், வாழ்க்கையின் ஒருமைப்பாட்டை மாற்றும் சக்தியை இந்த நாவல் ஏற்றுக் கொண்டுள்ளது. ரத்னாவுக்குக் கற்பனையிலும் கிட்ட முடியாத சுதந்திரம் சாந்தாவுக்கு அரசியல் கிளர்ச்சி காரணமாகக் கிடைத்திருக்கிறது. இதில் ஒரு தலைமுறையிலிருந்து மறு தலைமுறைவரை ஏற்படக்கூடிய மாறுதல்களும், அக்காரணத்தால் எழுகின்ற சிக்கல்களும் ஆராயப் பெறுகின்றன. (...ஒவ்வொரு தலைமுறைக்கும் முன்னால் அதனதன் பிரச்னைகள் உள்ளன. பழைய மகளிருக்கு இந்த இளம் தலைமுறையின் பிரச்னைகள் புரிவதில்லை. மேலே ஆகவேண்டியதைப் பற்றிக் கவனி ...) பரம்பரை பற்றிய பிரச்னை, மோகாசியை என்றைக்கும் மாறுவதாகிய வாழ்க்கையினின்று முகத்தைத் திருப்பிக் கொள்ள விடவில்லை. சாந்தாவின் மனத்திலும், அவளுடைய தாயின்

மனத்திலும் சூழ்நிலைக்கு வசப்பட்ட ஓர் ஒற்றுமை காணப்படுகிறதே, அதுவும் இந்த விஷயத்தை ஒருவிதத்தில் தெளிவாக்குகிறது. பரம்பரை பற்றிப் போதுமான ஆராய்ச்சி நடப்பதால் இந்த நிகழ்ச்சிகளின் இரட்டிப்பின் கேலியில் ரசிகத் தன்மை இருக்கிறது.

இந்த நாவலில் இக் கேள்வியும் எழுப்பப்பட்டு இருக்கிறது. வாழ்க்கையினின்று முகத்தைத் திருப்பிக் கொண்டு ஒதுங்குவது எந்த அளவு சாத்தியமும் பொருத்தமும் ஆகும்? வாழ்க்கையில் அலுப்பு தட்டியதால் கங்கவ்வா கங்கமாதாவைத் தஞ்சம் அடைய யோசிக்கிறாள். ஆனால், அவளுடைய கடமை இன்னும் நிறைவு பெறவில்லை - கிட்டிக்கு மணம் செய்து குடும்பம் ஏற்படுத்தும் வரை தாயின் பாதுகாப்பு அவனுக்குத் தேவை என்ற எண்ணம் வந்ததுமே அவளுக்கு மகனைப் பற்றிக் கவலை வந்துவிடுகிறது. கங்கையின் அழைப்பைப் புறக்கணித்துவிட்டுக் கங்கவ்வா குடும்பத்தின்பால் கவனத்தைத் திருப்புகிறாள். ரயில் வண்டியி லிருந்து கங்காதீர்த்தத்தைக் கீழே கொட்டுகிற பாவத்தையும் அவள் செய்து விடுகிறாள். கங்கைத் தியாகத்தால் அவளுடைய தனித்தன்மை மேலும் அழுத்தம் பெறுகிறது. கங்கவ்வா கடமையினின்று முகம் திருப்பிக் கொள்ளவில்லை, ஆனால் பாவத்தினின்றும் விடுதலை ஆகவில்லை. தம்பி செய்த அநியாயத்தை அவள் மறக்கவில்லை. இறந்தகாலத்தைப் பற்றி எண்ணி எண்ணி அவள் மனம் துயர்ப்பட்டுக் கெட்டிப்பட்டு விடுகிறது. அவளுடைய வாயிலிருந்து கிண்டலான சொல் அம்புகள் கிளம்புகின்றன. ராகப்பாவும் சம்பாவும் சோக முடிவு எய்திய பிறகே அவளுடைய மனம் வளர்ச்சி பெறுகிறது. அதுவரை நெஞ்சத்து அன்பு எல்லாம் கவலை எல்லாம் கிட்டியின்பால் மட்டுமே இருக்கின்றன.

வாழ்க்கையோடு போராடி வெற்றி கொள்ளும் ஆற்றல் கிட்டிக்குக் கிடையாது. அவன் இயல்பிலேயே பிறரைச் சார்ந்து வாழ்கிறவன். அவன் இறுதிவரை பிள்ளைப் பிராயத்திற்கு மேல் எழவே இயலாது. அவனுக்குத் தனக்கென ஒரு தனித்தன்மை இல்லாததால் அவன் பலவீனனாகவே இருந்துவிடுகிறான். இந்த முக்கியமான பாத்திரம் பொறுமையும் தாராள குணமும் உள்ள கதாநாயகனாக ஆக்கப்பட்டிருக்கிறது. மனித இயற்கையை மோகாசி நன்கு அறிந்தவர், ஆகையால் அவர் எந்தப் பாத்திரத் தையும் முழுமையின் எல்லைவரை கொண்டு செல்வதில்லை. மனிதனின் பலவீனத்தை வெளியிடுவதால் நாவலில் இயற்கைத் தன்மை வெளிப்படுகிறது. மனிதனின் செருக்கு, மோசடி, அறிவீனம், துயரம், போராட்டம் - கங்கவ்வாவுக்கும் ராகப் பாவுக்கும் இடையில் இருக்கின்றன. கங்கவ்வாவைப் போல

எட்டி விலகிச் செல்ல முயன்று சூழ்நிலையின் வயப்பட்டு வரிந்து கட்டிக் கொண்டு போராட்டத்தில் குதித்த மற்றொரு ஆள், தேசாய். பிறருடைய சச்சரவுகளில் தலையிடக் கூடாது என்று அவர் பல முறை நினைக்கிறார். ஆனால் கங்கவ்வாவின் கஷ்டத்தைக்கண்டு ராகப்பாவை எதிர்க்க இறங்கிவருகிறார். இதன் விளைவாக, கிட்டி ராகப்பாவின் வலையில் சிக்கி பிடிவாதம் செய்து ரத்னாவை மணக்கிறான், மறுபக்கம் வசந்தன் சாந்தாவைப் பின்தொடருகிறான். இறுதியில் பல துன்பங் களுக்குப் பிறகு எல்லாரும் ஒன்று சேருகிறார்கள். இதில் முதன் மையாக எதிரெதிராகப் போராடும் மூன்று பெரியவர்களும் போதிய சக்தியும் கூரிய புத்தியும் வாய்ந்தவர்கள். ராகப்பாவின் குணாதிசயம் கங்கவ்வா, தேசாயைவிடச் சிக்கலானது. அவனுக்கு அனுபவமும் மிகுதி. தன் லாபத்துக்காக அவன் எதையும் செய்யக் காத்திருக்கிறான். நேரம் வரும் போது தானே நகைகளை எடுத்துக் கொண்டு செல்கிறான். திருடு போய்விட்டது என்று கூறி தேடுவது போல் பாசாங்கு செய்யவும் தயங்குவதில்லை. ஆனால் அவன் முற்றிலும் இரக்கமற்ற கீழ்மகனும் அல்ல. அவனுடைய மகளின் மணம் நிகழ்ந்த அன்று அவன் மானத்தைக் காக்கும் பொருட்டு மகபூப்ஜான் தன் ஆரோக்கியத்தைப் பொருட்படுத்தாமல் அவனுக் காக பணம் சேகரிக்கிறாள். அதைக் கண்டு அவனுடைய மனம் துன்புறுகிறது. வாழ்க்கையில் ஒருகாலும் தோல்வியை ஏற்பதில்லை என்று உறுதிபூண்டுள்ளவன் அந்தக் கணத்தில் இருந்தே தோல்வியினைப் பார்க்கத் தொடங்குகிறான். ஆனால் அவனுள் மனிதத் தன்மையும் நீதியுணர்வும் அப்போதிருந்தே விழித்துக் கொள்ள ஆரம்பிக்கின்றன. சத்யத்தையும் அசத்யத் தையும் பற்றிப் புதுவிதமாகச் சிந்தனை செய்த பிறகு ராகப் பாவுக்கு வாழ்க்கையில் வெறுப்பு ஏற்படுகிறது. அதனால் அவன் தற்கொலை செய்து கொள்ளுகிறான். ராகப்பாவின் பாத்திரம் கங்கவ்வா, தேசாய் ஆகிய பாத்திரங்களிலிருந்து வேறுபட்ட முறையில் வளர்ச்சி பெற்றுள்ளது. மெய்-பொய் பற்றிய விவேகம் அவர்களை வாழ்வதற்குத் தூண்டுகிறது.

இந்த நிகழ்ச்சிகளின் வளர்ச்சியில் முக்கியமான இடம் பெறாவிட்டாலும்கூட ஜார்ஜ் நாவலில் ஒரு முக்கியமான மையப்புள்ளி. இயல்பாகவே நீதியுணர்வு அவனுள் வேரோடி உள்ளது. எந்நிலையிலும் அவனால் பற்றற்று இருக்கமுடியும். காலத்திற்கேற்ப அவன் லஞ்சமும் ஏற்கிறான். அவனுடைய தனித்தன்மையில் கலங்கல் என்பதே இல்லை. அவனுடைய பற்றற்ற தன்மை கிட்டியின் உதவியற்ற சார்புத்தன்மைக்குத் துணையாகவில்லை. இதுமட்டுமல்ல, அவனுடைய பற்றற்ற தன்மை நாவலின் உள்ளோட்டமாக இருக்கும் உணர்வோடு

இசைந்துள்ளது. அதாவது, நிலவரம் பற்றின அறிவு இருப்பினும் அதன் திசையில் இழுபடாமல் பற்றற்ற நிலையில் நின்று திருப்தி கொள்ளும் இயற்கையான சக்தி அவனுள் இருக்கிறது. யதார்த் தத்தின் துணையால் நாவலின் பொருத்தமான பெருமையைக் கெடுக்கும் துணிச்சல் மோகாசியின் பேனாவுக்கு இல்லை.

கங்கவ்வா கங்காமாயியின் முதல் இரண்டு அத்தியாயங் களைப் படிக்கும்போது இதில் குறியீட்டுத் தனம் மிகுதியாகப் பயன்படுத்தப்பட்டுள்ளதாய்த் தோன்றுகிறது. வாழ்க்கையினின்று விடுதலை, சாவின் அழைப்பை ஏற்றுக் கொள்ளுதல் கங்கைத் தாயின் ஒரு சொரூபம். அவள் கங்கவ்வாவுக்குள் தனிமை யான உருவத்தில் தங்கி விடுகிறாள். பின்னர் இந்த உருவகம் கொஞ்ச காலம் வரை கண்ணுக்குப் புலப்படாத வடிவத்தில் இருக்கிறது. வாசகர்களின் கவனம் சந்தர்ப்பங்களின் சேர்க்கையின் பாலும், பாத்திரப்படைப்பின் பாலும் கவர்ச்சிக்கப்பட்டு இருக்கிறது, ஆனால் மாமியார்-மருமகள் போராட்டத்திற்கும் பூசலுக்கும் இடையில் மறைவாகப் பெருகியோடும் ஆற்றில் நஞ்சு கசியும் குறியீடு காணக் கிடைக்கிறது. இறுதியில் கங்கவ்வாவின் அனுபவக்குடம் உலர்ந்து போகிறது. கங்கா தீர்த்தக் கலசம் கங்கவ்வாவிடம் வருகிறது. அப்போது வாழ்க்கைக்கும் மரணத் திற்கும் எதிராக, கங்கவ்வா - கங்காமாதாவுக்கும் ஒருவரோடு ஒருவர் மாறுபட்டு இருந்த கண்ணோட்டம் மறைந்து போகும் அடிக்குறிப்பு இருக்கிறது. கங்காமாதா உருவத்தில் இரண்டாம் பட்சமாக இருக்கும் தெய்விகம் சாலிக்ராமத்தில் முதன்மை பெற்றுவிடுகிறது. சாலிக்ராம அனுபவம் வாயிலாய்க் கங்கம்மாவுக்கு அப்போது கொஞ்சம் புத்தி வருகிறது, அதனால் வீட்டில் அமைதியின்மை குறைகிறது. கங்கா நதியைப் போன்று முழங்கும் கங்கவ்வாவின் குணாதிசயத்தில் மற்றொரு பற்றற்ற உருவத்தையும் இது தெளிவாகக் காட்டுகிறது. இந்தக் கம்பீரமான மௌனம் கங்காமாதாவின் மற்றுமொரு முகம் கூட. சாலிக்ராமம், கங்கவ்வாவோடு குறியீட்டு மட்டத்தில் ஜார்ஜின் தொடர்பு பற்றின கற்பனை செய்து தெய்விகத்தின் எளிய குறியீடான சாலிக்ராமத்தை, இந்த நாவலில் பற்றற்ற தஞ்சத்தை மோகாசி உறுதிப்படுத்தியுள்ளார். கங்காமாதாவும் சாலிக் கிராமமும் குறியீடாக நாவலின் இறுதிவரை ஒரே மாதிரி பயன்படுத்தப் படவில்லை. ரகசிய ஆயுதம், ரணசிகிச்சை, கோட்டை, தலைமை முதலிய மரபு வழிப் பிரயோகங்கள் செயலற்றுப் போகின்றன. கதைப் போக்கில் விறுவிறுப்பு வந்தும் கூட அவை இறுதி வரை நிலைக்க முடியவில்லை.

இந்த நாவலில் குடும்ப வாழ்க்கைபற்றி விரித்துரைக்க முயற்சி செய்யப்பட்டுள்ளது, இந்த முயற்சியில் மரபாக வந்துள்ள

உத்திகள் கைக்கொள்ளப்பட்டுள்ளன. உதாரணமாக, அத்தியாயங்களுக்குத் தலைப்பு கொடுத்தல், சமஸ்கிருத சுலோகங்களைப் பயன்படுத்தல், டிக்கன்ஸைப் போல் நாடகபாணி ஹாஸ்யச் சந்தர்ப்பங்களைச் சிருஷ்டித்தல்; கூடவே பதினெட்டாம் நூற்றாண்டின் ஆங்கில நாவல்களைப் போல, கதைப் பொருளின் வளர்ச்சிக்காகப் பாத்திரங்களைப் பயன்படுத்துதல். நாவலின் கடைசிப் பகுதியில் கதைப் பொருளின் தனித்தனிப் போக்குகளை ஒருங்கே இணைக்கும் முயற்சியில் பாத்திரங்களைப் பயன் படுத்துவதால் மோதல் ஏற்பட்டுள்ளது. சாமானிய உத்தியின் வாயிலாகவே நாவல் வளர்ச்சியுற வேண்டும் என்பது மோகாசியின் கருத்து. வாழையடி வாழையாக வந்த சித்தாந்தங்களின் பழக்கமான வாசல் நிலையில் இருந்தவாறு மனிதனின் திறமையைப் பரிவோடு பார்த்து, ஆங்காங்கு சிற்சில சமயங்களில் இலக்கியத்தின் பரம்பரை எல்லைகளை புறக்கணித்தும் கூட ஒரு படைப்பை உருவாக்க முடியும் என்பதற்குக் 'கங்கவ்வா கங்காமாதா' ஒரு வெற்றிகரமான உதாரணம்.

பீ. தாமோதர ராவ்

கங்கவ்வாவை எல்லாருக்குமே தெரியும். நாற்பதாம் வயதைக் கடந்ததுமே அவள் தன் கணவனை இழந்துவிட்டாள், ஆனால் தன்னுடைய ஒரே பிள்ளை கிட்டி (கிருஷ்ணன்)க்காகத் தன் உயிரைப் பேணிக் காத்தாள். ஏற்கனவே வறுமை, அத்தோடு சம்பாதித்துப்போடுகிற ஆசாமி போய் விட்டதால் குடும்ப நிலவரத்துக்கு ஆண்டவன் தான் எஜமானன். இப்போது கிட்டிக்குப் பதினெட்டு வயது ஆகிவிட்டது. இந்த எட்டு ஆண்டுகளில் என்ன என்ன கஷ்டங்களைத் தான் அனுபவிக்க வில்லை? ஆனால் அவள் எல்லாவற்றையும் விழுங்கிவிட்டாள் - எல்லாம் தன்னுடைய கிட்டிக்காகத்தான். அவள் அரைவயிற்றுக்கு உண்டு அவனுக்கு வயிறார உண்பித்தாள். அந்நியர் வீடுகளில் சமையல் வேலை செய்து, அவனைப் படிக்க வைத்தாள். எப்படியோ, கிட்டி இப்போது மெட்ரிக் பாஸ் செய்து விட்டான்; தாசில்தார் அலுவலகத்தில் இப்போது வேலைக்கும் அமர்ந்து விட்டான். தன் முயற்சிகள் பயனுற்றதைக் காண அவளுக்கு மிகவும் மகிழ்ச்சி உண்டாயிற்று. ஆசைகளுக்கு ஆழம் காண முடியுமோ? கிட்டிக்கு ஓர் அழகான மணமகளைக் கொண்டு வந்த பின் கண்களை மூட வேண்டும் என்று அவளுக்கு ஆசை. அவன் தன் குடும்பத்தைத் தானே நிர்வாகம் செய்து கொள்ளத் தொடங்கினால்தான் அவள் தன் கடமை நிறைவேறியதாய்க் கருதுவாள்.

இந்தச் சமயத்தில்தான் பக்கத்துவீட்டுத் திரு. தேசாயின் வீட்டுக்காரி காசியாத்திரைக்குப் புறப்பட்டுக்கொண்டிருந்தாள். இதை நல்ல வாய்ப்பாய்க் கருதிய கங்கவ்வாவும் அவர்களோடு சேர்ந்துகொண்டாள். பகவான் விசுவேசுவ ராயின் முன்னிலையில் தன் இறுதி விருப்பத்தை விண்ணப்பித்துக்கொள்ளக் கிட்டி யையும் உடன் அழைத்துச் செல்ல சாத்தியமில்லை, ஆகையால் தனியாகவே அவர்களோடு கிளம்பினாள்.

காசியை அடைந்ததும் அவள் கங்கையில் நீராடினாள். விசுவேசுவரர், காலபைரவர், குண்டிராஜ், பிந்துமாதவர் முதலிய எல்லா தெய்வங்களையும் தரிசனம் செய்தாள். ஹரிசந்திர

கட்டத்தில் விளக்குக் காணிக்கை செலுத்தினாள். பஞ்சாரந்தி, கோபுர ஆரத்தி, கற்பூர ஆரத்தி முதலிய எல்லா ஆரத்திகளையும் செய்வித்துப் பிரசாதம் பெற்றுக் கொண்டாள். கங்கவ்வா ஒவ்வோரிடத்திலும் கண்களை மூடியபடி பக்திபாவத்துடன் விழுந்து கும்பிட்டாள்; பகவானே, கிருஷ்ணாவுக்குத் திருமணம் ஆகவேண்டும். அவனுடைய குடும்பவாழ்க்கை நிறைவு பெற வேண்டும்; அதுபோதும், அருள் புரிவாய் பகவானே என்று வேண்டிக் கொண்டாள். கிட்டி செல்வந்தனாக விளங்க வேண்டும், அவன் ஆளாகவேண்டும், அவனுடைய வாழ்க்கை இன்பகர மானதாகத் திகழவேண்டும் என்பதே அவளுடைய விருப்பம். அவளுடைய நெஞ்சில் பாசம் நிரம்பிவழிந்தது. விசுவேசுவரரின் திருமுன் கோபுர ஆரத்தி நடைபெற்றபோது பகவானிடம் கண்ணீர்ப்பெருக்குடன் அழுது மன்றாடினாள்.

காசியிலிருந்து கிராமத்திற்குத் திரும்பும் நேரமும் வந்துவிட்டது. எல்லோரும் தத்தம் 'சாமான் செட்டுகளை' மூட்டை கட்டலாயினர். கங்கவ்வாவும் தன் சின்ன மூட்டையைத் தூக்கிக்கொண்டாள். முந்தின நாள் எல்லாரையும் போலவே அவளும் செப்புமூடி உள்ள சிறுகுடம் ஒன்றை வாங்கி இருந்தாள்.

எல்லாரையும் போலவே அவளும் அதைக் கங்கா தீர்த்தத்தினால் நிரப்பி, மூடியை மெழுகினால் சீல் செய்தாள். குடத்தின் கழுத்தில் பிடித்துக்கொள்வதற்காகக் கயிறும் கட்டி விட்டாள். குடம் சற்றுப்பாரமாகத் தோன்றியது. தூக்குவதற்குச் சிறிது கஷ்டமாக இருந்தது. ஆனால் காசிக்கு வந்து கங்கா தீர்த்தம் இல்லாமல் திரும்புவதுண்டோ? இறக்கும்போது, இறுதி மூச்சு பிரியும் சமயம், கிட்டி தலைப்பக்கம் அமர்ந்து, அவளுடைய வாயில் கங்கை நீரை விடாவிட்டால் அவளுக்கு நற்கதி ஏது?

ரயில் புறப்படுவதற்கு ஒருமணி நேரத்துக்கு முன்பே எல்லாரும் வந்து ஒரு பெட்டியை வளைத்துக்கொண்டு உட்கார்ந்தார்கள். சிலர் நடுவே குறுக்கில் உட்கார்ந்து கொண்டார்கள், சிலர் தூங்கிவழியத் தொடங்கினார்கள். வண்டி எப்போது ஸ்டேஷனை விட்டு நகர ஆரம்பித்தது என்று சிலருக்குத்தான் தெரியும்.

கங்கவ்வா ஜன்னலில் சாய்ந்தபடி தன் மூட்டையைக் கெட்டியாகப் பற்றிக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். ரயில் ஓடுவதாய் உண்டான குலுக்கலிலும், நாலைந்து நாட்களின் களைப்பிலும் அவளுடைய கண்கள் அயரலாயின..

அவள் இரண்டு மூன்று மணி நேரம் தூங்கிக் கொண்டிருந் தாள். ரயிலின் விசில் ஒலியால் அவளுடைய தூக்கம் திடீரென்று கலைந்தது. பெட்டியின் ஜன்னல்கள் எல்லாம் மூடியிருந்தன.

கங்கவ்வாவுக்கு அருகில் இருந்த ஜன்னல் மட்டும் திறந்திருந்தது. குளிரால் அவளுடைய கைநரம்புகள் மரத்துவிட்டன. உடலில் நடுக்கம் உண்டாகி இருந்தது. அவள் வெளியே பார்த்தாள், வண்டி வலது பக்கம் திரும்பிக் கொண்டிருந்தது. மேலே இஞ்சினின் கரும்புகை பரவியிருந்தது. முழுநிலா தலைக்கு மேலே நாலா பக்கங்களிலும் நிலா ஒளி, ஒளிரும் விண்மீன்கள், குன்றுகள் போலவும் கோபுரங்கள் போலவும் வெகுதொலைவில் தென்பட்ட மரங்களின் நிழல்—எல்லாவற்றின் மீதும் ஒரு பார்வை செலுத்திவிட்டு கங்கவ்வா ஜன்னலை மூடினாள். அவளுக்கு உடனே தூக்கம் வரவில்லை. நினைவுகள் சரமாரியாக வந்தன. பார்த்துவந்த எல்லா ஆலயங்களும், மூர்த்திகளும், கங்கையும் ஒன்றன்பின் ஒன்றாக அவளுடைய அகக்கண்களுக்கு முன்னால் நடமாடலாயின. அக்காட்சிகளில் அவள் தன்னை இழந்தாள். அவளுக்குக் காசியாத்திரை கனவு போல தோன்றத் தொடங்கியது. விசுவநாதரைத் தரிசனம் செய்த ஞாபகம் வந்ததும் அவளுக்குப் புல்லரித்தது. அதற்காகத்தான் பாக்கியம் செய்தவள் என்று எண்ணினாள்.

தர்ம பாவனைகள் அனைத்துக்கும் மேலாக மனிதனுக்கு இறுதித் துணை ஒன்று உண்டு: பாசமும் அன்பும். அவளுக்குத் திடீரென்று கிட்டியின் நினைவு வந்தது. இந் நேரத்தில் அவன் தார்வாரில் உறங்கிக் கொண்டிருக்கலாம். கனவில் என்னை அம்மா என்று கூப்பிட்டுப் பிதற்றிக் கொண்டிருக்கலாம். பாவம்! அவள் இல்லாத நாட்களில் அவன் தானே சமையல் செய்து கொண்டிருப்பான். எவ்வளவு கஷ்டமாக இருந்திருக்கும் அவனுக்கு ! இப்போது அவன் மூக்கில் ஒரு மூக்கணைக் கயிறு கோத்துவிட்டால் என் கடைசி வேலை முடிந்தாற்போல. பிறகு நான் நிம்மதியாக உயிரை விட முடியும்.

அவளுடைய எண்ணம் மேலும் மேலும் தழைத்தது. சாவின் பயங்கரமான உருவம் அவளுடைய மனத்தைத் துன்புறுத்தலாயிற்று. மனிதனுடைய எல்லா ஆசைகளையும் தடுக்கும் சுவர் தான் சாவு. மருமகளின் முகம் பார்த்த பிறகு நான் சாவதுதான் நல்லதா? கிட்டிக்குக் கலியாணம் செய்து வைத்து விடுவதால் மட்டும் என் வேலை முடிந்திடுமா? அவளுடைய வாழ்க்கைப் பயன் பிறகுதான் கிட்டும், மகனின் இல்லற வாழ்க்கை பிறகு காண வேண்டியது காட்சி அல்லவா—இதற்காகவே நான் அப்புறமும் உயிரோடு இருக்கவேண்டும். பத்து பேர் அவனைப் புகழ வேண்டும், அது அவள் காதுகளில் விழவேண்டும். அவனுடைய குழந்தைகள் பாட்டியின் கைகளின் ஊட்டப்பட வேண்டும். அவர்களுக்குக் கதை சொல்லித் தாலாட்டி நான்

உறங்கவைக்க வேண்டும். இவை இல்லாமல் நான் சாகமாட்டேன். முடிந்தவரை நான் உயிரோடு இருக்க வேண்டும். வாழ வேண்டும் என்ற விருப்பம் அவளுடைய மனத்தை ஊக்கி உற்சாகத்தினால் நிரப்பியது.

வண்டியிலிருந்த பல்பின் மங்கலான வெளிச்சத்தில் கங்கை நீர்க்கலசம் மினுமினுவென்று மினுமினுத்துக் கொண்டு இருந்தது. அதனுடைய கூர்மையான பிரகாசம் அவளுடைய மனத்தில் அம்பு போல் ஊடுருவியது. கலசத்துக்குள் இருந்த கங்கா தீர்த்தம் சலசலவென்று ஒலி எழுப்பிக்கொண்டிருந்தது. இந்த ஒலி அவளை எமராஜனிடம் தூக்கி எறிவது போலப் பட்டது. இந்தக் கங்காஜலம் எதற்காக? அவளே இறக்கும் தருவாயில் தொண்டையை நனைப்பதற்காகத்தானே? இல்லை, இல்லை. அவள் இப்போது சாகமாட்டாள், கட்டாயம் உயிர் வாழ்வாள். அவள் வாழ்ந்தாக வேண்டும். அவளுக்குக் காசிவிசுவேசுவரரின் பிரசாதம் அல்லவா கிடைத்து இருக்கிறது?

சுற்றிலும் நிசப்தம். கங்காதீர்த்தக் கலசம் ஒளிர்ந்து கொண்டே இருந்தது. அதற்குள் இருந்த கங்கா தீர்த்தம் சலசலவென்று ஒலி எழுப்பி மரணச்செய்தி சொல்லியவாறே இருந்தது. கங்கவ்வா தைரியம் இழந்தாள். அவளுடைய நெஞ்சு விசையோடு படபடக்கத் தொடங்கியது. ஒருபுறம் உயிர் வாழ வேண்டும் என்ற வேட்கை, மறுபுறம் சாவின் அழைப்பு இரண்டிற்கும் இடையில் அவள் திகில் கொண்டாள், அச்ச முற்றாள்; அவளால் சகிக்க முடியவில்லை. மனத்தில் போராட்டம் நடக்கலாயிற்று. உயிர்வாழ வேண்டும் என்ற ஆசையே வெற்றி பெற்றது. ஜன்னலைத் திறந்தாள், மெதுமெது வாகக் கங்கைநீர்க் கலசத்தைத் தூக்கினாள். நகத்தால் மெழுகைச் சுரண்டினாள்.

மூடியைத் திறந்தாள். கங்காதீர்த்தக் கலசத்தைக் கண்களில் ஒத்தியவாறு, 'கங்காமாதாவுக்கு ஜே!' என்றாள். பிறகு அதை ஜன்னலுக்கு அருகில் வைத்துத் தலைகீழாய்க் கவிழ்த்துவிட்டாள். கங்காமாதா சலசலத்து ஓடிவிட்டாள்.

கடைசித்துளி கீழேவிழும் வரை கலசத்தை அப்படியே பிடித்துக்கொண்டிருந்தாள். எல்லோரும் தூங்கிக்கொண்டு இருந்தார்கள். மறுபடியும் மூடியிட்டு மெழுகு பூசினாள். கலசத்தை மறுபடியும் கீழே வைத்தபோது உண்டான சத்தத்தால் தூக்கக் கலக்கம் செறிந்து குரலில் யாரோ, ''யாரது?'' என்று கேட்டார்கள்.

'ஒன்றும் இல்லை', என்றபடி கங்கவ்வா அமைதியாக ஆழ்ந்த மூச்சு கழித்தாள்.

# 2. பழைய உறவினர்

காசியாத்திரையிலிருந்து திரும்பியதும் எல்லாருமே கங்கவ்வாவைப் புகழ ஆரம்பித்தார்கள். அக்கம்பக்கத்தில் உள்ள எல்லாரிடமும் கங்கவ்வா தன் விதம்விதமான யாத்திரை அனுபவங்களைச் சுவை நிறைந்த முறையில் வண்ணக்கலவை செய்து சொன்னாள். ஆனால் கங்கா மாதாவை ரயில் ஜன்னல் வழியாகப் பெருகி ஓடச்செய்ததைக் கேட்ட சிலருக்குப் பிடிக்க வில்லை. அண்டை வீட்டுக்காரியான காசியின் தாய் கூறினாள்: 'நீ செய்தது தப்புவேலை, கங்கவ்வா. வீட்டுக்கு வந்து கொண்டிருந்த கங்கையை நீ வெளியேற்றிவிட்டாய். நீ மறுபடியும் போய் அவரைத் தரிசனம் செய்ய வேண்டும்.' நடந்தது நடந்துவிட்டது; மற்றொரு முறை காசியாத்திரை செய்கிற யோகம் கிட்டட்டும் என்று கூறி கங்கவ்வா தன் மனத்தைத் தேற்றிக் கொண்டாள்.

ஆனால், தன்னுடைய ஓர் அனுபவத்தைக் கங்கவ்வா யாரிடமும் உரைக்கவில்லை. அதைப்பற்றி வறண்ட வருணனை மட்டும் செய்து கொண்டிருந்தாள்.

ஒரு செங்குத்தான மலையிலிருந்து கங்காமாதா கீழே பெருகி ஓடுகிறாள். யாத்திரிகர்கள் ஆயிரக்கணக்கான அடிகள் மேலே ஏற வேண்டியுள்ளது. கீழேயுள்ள பள்ளத்தைப் பார்த்தால் தலை சுற்றும். இதனால் பலர் கீழே விழுந்துவிடுகிறார்கள் என்று சாமான்களைச் சுமந்துவரும் கூலிகள் யாத்திரீகர்களுக்கு எச்சரிக்கை செய்கிறார்கள். ஆனால் கங்கவ்வாவினால் அப்பக்கம் பார்க்காமல் இருக்க முடியவில்லை. தொலைவில் இருளொத்த ஆழத்தில் கங்காமாதாவின் வெண்மையான பிரவாகம் பளபளவென ஒளிர்ந்தவாறு ஓடிக்கொண்டிருந்தது. அது அவளைக் கூப்பிடுவது போல அவளுக்குப்பட்டது. கங்கவ்வா உடனே கண்களைத் திருப்பிக்கொண்டாள், இன்னொரு முறை அப்பக்கம் பார்க்கவில்லை. அவள் முன்னேறிக்கொண்டே இருந்தாள். விந்தையான அனுபவம் அது. அப்படிச் சிறப்பாய்க் குறிப்பிடத்தக்க விஷயம் இல்லை, ஆனால் அவளுடைய மனத்தெழுந்த சித்திரம், அடர்த்தியான அனுபவம், அச்சம், எதிர்பார்ப்பு எல்லாம் திரண்டு கங்கவ்வாவின் மனத்தில் ஒரு விசித்திரமான கனவு போல் நிலைத்துவிட்டது. அந்த அனுபவம் முற்றிலும் அவளுடைய வாழ்க்கையின் ஒரு பகுதி ஆகிவிட்டது. அதைத் தெளிவாக வருணிப்பதும் சாத்தியமில்லை, அதை மறைத்துவைப்பதும் சாத்தியமில்லை.

வாழ்க்கைச்சக்கரம் மெள்ளமெள்ளச் சென்று கொண்டு இருந்தது. கிட்டிக்குத் தாயில்லாமல் தனியாக இருக்க நேர்ந்த முதல் சந்தர்ப்பம். கிட்டி பாலுண்ணும் பாலகன் அல்ல என்றாலும் தனியாக இருப்பது அவனுக்குக் கொஞ்சம் கஷ்டமாகவே இருந்தது. முதலில் சமையல் செய்ய மனம் வரவில்லை; தாயார் இல்லாதது உறுத்தியது. தவிர, அலுவலகத்தில் ஏற்பட்ட கசப்பான அனுபவங்களைப் பரிவோடு கேட்டுத் தைரியம் கூறுகிறவள் இல்லாததும் துன்பமாக இருந்தது. கிட்டிக்குக் கஷ்டத்துக்குக் குறைச்சல் இல்லை. புத்தம் புதிய வேலை, வருமானவரித் துறையில் யாரையும் நம்பக்கூடாது என்று யாரோ அவனுக்கு யோசனை கூறினார்கள். ஆகையால் வேறு யாரையும் கேட்காமல் தனக்குப் புரிந்த அளவு வேலை செய்தான். அதன் விளைவாக மேல் அதிகாரிகளின் ஏச்சு கிடைத்தது, உடன் வேலை செய்வோர் கேலி செய்தார்கள். அவனுக்கு வேலை வாங்கித் தந்த தாசில்தார் முதன்முதலில் பரிவோடு அவனுடைய தவறுகளைத் திருத்திக் கொடுத்தார். ஆனால் இரண்டு மாதங்கள் கழிந்த பின்பும் கிட்டி சரியாக வேலை செய்யாததோடு தனக்கு என்ன கஷ்டம் என்று சொல்லத் தெரியாமல் இருக்கவே, அவனுடையை தப்பும் தவறுமான காகிதங்களைப் பார்த்த தாசில்தார் அவன் இன்னும் வேலை கற்கவில்லை என்பதைப் புரிந்துகொண்டு, 'உனக்கு வேலைதரச் சொன்னேனே, நான் ஒரு முட்டாள்,' என்று சுருக்கென்று தைக்கும்படி அவனிடம் பேசிவிட்டார். அப்பால் கிட்டி அவரிடமிருந்து இன்னும் ஒதுங்கி இருக்க ஆரம்பித்தான். மெதுவாக ஜோஷி ராம்ராய் என்ற கிளார்க்கோடு நட்பு செய்து கொண்டு, அவனுடைய யோசனைப்படி ஏதோ வேலை செய்யலானான். ஆனால் அதிலும் தப்புகள் இருக்கச் செய்தன. ராமராயின் ஆலோசனைப்படி ஒரு முறை ஒரு 'டிராப்ட்' தயாரித்து அவன் தாசில்தாரிடம் அனுப்பினான். அவர் கிட்டியைத் திட்டினார்; ராமராயைக் கூப்பிட்டு அதே டிராப்டைத் தயாரிக்கு மாறு கூறினார். இம்மாதிரி விசித்தரமான சூழல்களில் அம்மா அவனுக்கு ஆலோசனையாளர். அம்மாவுக்கு முன்னால் ஒருமுறை சிரித்தும், ஒருமுறை சிடுசிடுத்தும் எல்லாவற்றையும் சொல்லித் தீர்த்தால் தான் அவனுக்கு நிம்மதி உண்டாகிறது.

ஆபீசில் காட்ட முடியாத அதிகாரத்தைக் கிட்டி மிக எளிதில் வீட்டில் பெற்று விடுவான். படிப்பில்லாத அம்மா தெரியாத் தனமாகச் சொல்லும் விஷயங்களை வைத்து அவளைப் பரிகாசம் செய்வான்; அவள் கூறும் 'பத்தாம் பசலி' யோசனைகளுக்காக அவளைப் பழித்து ஒரு வகை மகிழ்ச்சி கொள்வான். அம்மா வோடு சிறிய—பெரிய சச்சரவிடுவது அவனுடைய தினசரி வேலை. இப்போது அம்மா காசிக்குப் போய்விட்டதால்

கிட்டியின் சக்தி சுண்டிவிட்டது. ஒன்றரை மாதம் கிட்டி தனியாக இருந்தான்.

கங்கவ்வா திரும்பியதும் கிட்டி சில நாட்கள் மிக உற்சாகமாய்க் கழித்தான். அம்மா இல்லாத போது ஆபீசில் நடந்த பல விஷயங்களை அவளிடம் கூறினான். அம்மா நீர்ததும்பும் கண்களோடு, காசியில் மகனின் நினைவோடு கழித்த நாட்களைப் பற்றி உரைத்தைக் கேட்டபின் கிட்டி சற்று வெட்கமுற்றான்; ஆனால் எல்லா விஷயங்களையும் அன்போடு கேட்டுக் கொண்டிருந்தான். கங்காதீர்த்தத்தைத் தியாகம் செய்ததைப் பற்றி அவள் துயரமும் பச்சாத்தாபமும் கலந்த குரலில் கூறியபோது அவன் அவளை உற்சாகப்படுத்தி, 'அம்மா, கவலைப்படாதே. நீ மற்றொரு முறை காசிக்குப் போய்வரலாம்,' என்றான்.

நாளாக ஆகப் பழைய அதே வேலைத் திட்டம் ஆரம்பம் ஆகியது. நடுநடுவில் உண்டான சிறிய—பெரிய சண்டைகள் வாழ்க்கையில் ஒரு நிறம் கூட்டி விட்டுச் சென்றன.

கிட்டிக்கு இரண்டு சொந்த மாமாக்கள் இருந்தார்கள். ஒருவரின் பெயர் வேங்கடராய், மற்றவரின் பெயர் ராகப்பா. கிட்டி அவர்களுடைய பெயரைத்தான் கேள்விப் பட்டிருந்தான். ஒருகால் குழந்தைப் பிராயத்தில் அவர்களைப் பார்த்திருக்கலாம். அவனுக்கு இப்போது ஒன்றும் நினைவு இல்லை. ஆனால் கங்கவ்வா காசியாத்திரை போன போது ஒரு மாமா அடிவானத்தில் உதயமானான். ஒரு தடவை ஏதோ காரியமாக ராகப்பா ஆபீசுக்கு வந்திருந்தான். அவன் அப்போது கிட்டியைத் தேடிக் கண்டுபிடித்துச் சந்தித்தான்; தன் உறவுபற்றிச் சொன்னான். ரிச்ய சிருங்கரைப் போல் உறவினர்களையே அறியாத கிட்டிக்கு, ஜரிகைத் தலைப்பாகை அணிந்து கோதுமை வண்ணத்தில் உயரமான உருவம் படைத்த சொந்த மாமாவிடம் சிறப்பான பற்று ஏதும் உண்டாகவில்லை. ராகப்பா கங்கவ்வாவின் உடல் நிலை, அவளுடைய தினசரி காரியங்கள் பற்றி விசாரித்தான். பிறகு அவன் தன்னைப்பற்றிக் கூறினான். தார்வாரிலுள்ள தன் வீட்டுக்கு ஆறுமாதங்களுக்கு முன்பு மீண்டும் வந்திருப்பதாய்ச் சொல்லி, ஏதோ 'லேன் பஜார்' முகவரி கொடுத்து, கிட்டியை வீட்டிற்கு வருமாறு அழைக்கவும் செய்தான். அவன் இதுவரை தன் பிந்தகோளக் கிராமத்தில் இருந்ததாகவும், இப்போது தான் மூத்த பெண் கிராமப் பள்ளித் தேர்வில் பாஸ் செய்து விட்டாள் என்றும், இரண்டு வகுப்பு ஆங்கிலம் படிக்க வைக்கவேண்டும் என்னும் எண்ணத்தோடு அவன் இப்போது தார்வாருக்குக் குடும்பத்தோடு வந்திருப்பதாகவும் அவன் கூறின்ான். கிட்டி எல்லாவற்றையும் அசட்டையாகக் கேட்டுக் கொண்டிருந்தான்; பிறகு மறந்தும் போனான். கங்கவ்வா திரும்பி இரண்டு மாதங்கள் ஆனபின் ராகப்பாவின் வண்டி வீட்டு வாசலுக்கு வந்து சேர்ந்தது.

# 3. எதிர்பாராத சந்திப்பு

தம்பியைச் சந்திப்போம் என்று கங்கவ்வா கனவிலும் கருதியதில்லை. ஆபீசில் ராகப்பாவைச் சந்தித்ததைக் கிட்டியும் மறந்து விட்டான். அவன் கங்கவ்வாவிடம் அதைப் பற்றிப் பேசவில்லை. பேசியிருந்தால் ராகப்பாவைச் சந்திக்கத் தயாராக இருந்திருப்பாள். ஆனால் பத்து ஆண்டுகளுக்குப் பிறகு ராகூ கங்கவ்வாவின் வீட்டுகக்கு நேரில் வருகை புரிந்து இருந்தான். கங்கவ்வா தன் மனப்பாங்கை வெளியிடவும் நேரம் தராமல், அவன் முற்றத்தில் இருந்த கட்டிலில் அமர்ந்து தன் பத்துவருட இன்பதுன்பங்களை விரித்து உரைக்கலானான். ஆரம்பத்தில் என்ன பேசுவது என்றே கங்கவ்வாவுக்குப் புரியவில்லை. அவளுக்குத் தம்பியிடம் அச்சம், வெறுப்பு. அவனுடைய வருகை பற்றி முன்னதாகத் தெரிந்திருந்தால் அவள் நாக்கைத் தீட்டிவைத்துக் கொண்டிருப்பாள். பத்து ஆண்டுகளில் நாக்கு மழுங்கிப் போயிருந்தது. கூடவே இந்தப் பத்து ஆண்டுகளில் தம்பியைப் பற்றி அறிய வேண்டும் என்ற ரகசிய ஆசையும் இருந்தது. ஆகையால் அவன் கூறியவற்றை எல்லாம் அவள் கேட்டுக் கொண்டாள். அன்று ஞாயிற்றுக்கிழமையானதால் கிட்டியும் வீட்டில் இருந்தான். அவனும் அசிரத்தையாக எதிர்பாராத விருந்தாளி பேசுவதைக் கேட்டுக் கொண்டு இருந்தான்.

ராகப்பா இந்த ஆண்டுகளை எல்லாம் கிராமத்திலேயே கழித்திருந்தான். இரண்டாவது பெண் குழந்தை ஈன்றபின் அவனுடைய மனைவி நோய்வாய்ப்பட்டு விட்டாள். இன்றுவரை நோயாளியாகவே இருந்தாள். அவ்வப்போது மார்பில் வலி உண்டாகிறது. வருடத்தில் மூன்று நான்கு மாதங்கள் படுக்கை தான். பிந்தகோளக் கிராமத்தில் அவன் ஒரு பசு பண்ணையைச் சில ஆண்டுகள் வரை வைத்திருந்தான். உயர்ந்த ஜாதி பசுக்களை வளர்த்தான். நீண்டகாலம் அவனுக்கு இதுதான் வியாபாரம். ஆனால் அதில் ஆதாயம் காணவில்லை. குடும்பத்தை நடத்த வேண்டுமே. இப்போது நடுவயது ஆகிவிட்டது; எல்லாம் அலுத்துப் போய், வயல்களைக் கைவிட்டு, பெண்களைப் படிக்க வைப்பதற்காகத் தார்வாருக்கு மறுபடியும் குடும்பத்தைக் கொண்டு வந்து விட்டான்.

'லேன் பஜாரில்' வீடு கிடைத்தது; எல்லா வசதிகளும் உள்ள வீடு. ஆனால் பழங்காலத்தை நினைத்தால் துக்கமாகவும்

இருந்தது. எத்தனை பெரிய உறவுக்கிளை; இப்போது எல்லாம் சிதறி விட்டன. இது எல்லா முன் பிறவியின் வினைப்பயன் என்று தோன்றுகிறது. மறுபடியும் எல்லோரும் ஒன்று கூடுவார்கள் ... முதலியன, முதலியன ....

அவன் கூறுவதை எல்லாம் கங்கவ்வா மௌனமாய்க் கேட்டுக் கொண்டிருந்தாள். ராகப்பா தன் பேச்சை எப்போது முடிப்பான் என்று அவள் எதிர்பார்த்தபடி இருந்தாள். சிறிது சிறிதாக அவனுடைய பேச்சு ஒரே தடத்தில் செல்லத் தொடங்கியது. உறவுமுறை, உட்கலகம், பாசம் முதலான பூர்வபீடிகைக்கு பின், கிட்டியின் புத்திசாலித்தனத்தை மனமாரப் புகழ்ந்த பிறகு, ராகப்பா அவன் பக்கம் திரும்பி வலை வீசினான்.

'கிட்டண்ணா, நாங்கள் எங்கள் ரத்னாவை உனக்காகவே வைத்திருக்கிறோம். அவளுக்கு நாங்கள் வேறு வரன் தேடமாட்டோம் ... சரிதானே, கங்கவ்வா ?'

ராகப்பா வீட்டுக்கு விருந்தாளியாக வந்திருந்தான், தம்பியாக அல்ல. கங்கவ்வா சிரித்தவாறு கேலியாக, 'கிட்டி உன்னைக்கு எட்டாதவனா என்ன தம்பி?' என்றாள்.

கிட்டிக்கு வேலையான பிறகு இம்மாதிரிப் பல கடுமையான சந்தர்ப்பங்கள் நேர்ந்திருந்தன. எல்லோருக்கும் கிட்டி ஒரே பதில் தான் அளித்து வந்தான். இப்போது மணம் புரிந்து கொள்ளும் எண்ணம் இல்லை என்பதே அது. ஆனால் ராகப்பா அட்டை போல் ஒட்டிக் கொள்கிற ஆசாமி; சுலபத்தில் விடுகிறவன் அல்ல.

'இப்போது செய்தாலும் சரி, இரண்டு வருஷம் கழித்து செய்தாலும் சரி. நாங்கள் ரத்னாவை உனக்கு என்று வைத்து விட்டோம். அவள் உனக்காகவே எங்கள் வீட்டில் பிறந்திருக் கிறாள் என்று வேண்டுமானாலும் வைத்துக் கொள். உன் வீட்டிலிருந்து என் கிட்டிக்கு ஒரு மருமகள் வரவேண்டும் என்று உன் தாயார் ஒரு தடவை சொன்னாள். அவள் அப்படிச் சொல்லி மூன்று மாதம் ஆயிற்று, ரத்னா பிறந்தாள். வேண்டுமானால், நீ உன் அம்மாவிடம் கேட்டுக் கொள்கிறாயா?'

கங்கவ்வா இடையிலேயே தடை போட்டாள். 'ஆமாம் கிட்டி, ராகூ நான் சொன்னதன் பேரில்தான் கலியாணம் செய்து கொண்டான், நான் சொன்னதன் பேரில்தான் குழந்தைகளும் பெற்றான். நான் சொல்லாமல் அவன் எதையும் செய்வதில்லை.'

ராகப்பா வேர்வையைத் துடைத்துக் கொண்டு பேச்சின் திசையை மாற்றினான். கங்கவ்வா இன்னும் பழைய விஷயங்களை மறக்கவில்லை, தன்னை மன்னிக்கவில்லை என்று அவனுக்குப்பட்டது.

'கிட்டண்ணா, நம் ரத்னா அழகில் குறைந்தவள் அல்ல. வெள்ளை நிறம்... ஆம், சினிமாக்காரிகள் போல அழகாக இருக்க வேண்டும் என்று நீ கேட்டால், அப்படி இருக்க மாட்டாளோ என்னவோ, வீட்டுக் காரியங்கள் எல்லாம் செய்கிறாள். உங்கள் மாமிக்கு வீட்டில் ஒரு வேலையும் செய்ய முடியவில்லை. ரத்னா தான் குடும்பத்தை நிர்வாகம் செய்கிறாள். கங்கவ்வா, அவள் உன்னைச் சிம்மாசனத்தில் உட்கார வைத்துக் குடும்பத்தை நடத்துவாள்.'

'எனக்கு எதற்கு சிம்மாசனம்? படுக்கை போதாதா?' - என்று கிண்டலாய்ச் சிரித்தாள் கங்கவ்வா.

ராகப்பா புரிந்து கொண்டான். வார்த்தைகளாலேயே உலகத்தை வெல்கிற ராகப்பாவின் வாக்குத்திறமை கங்கவ்வா வோடு பேசும் போது சிறிது மழுங்கிவிட்டது. அவளுடைய சொற்களில் விஷக்கடி இருக்கும் என்று அவனுக்குத் தெரியும். சென்ற பத்துவருடங்களில் ஏற்பட்டுள்ள மாறுதல்கள் தனக்குச் சாதகமாக இல்லை என்பதை அவன் உணர்ந்தான். ஆகையால் சகோதரி சொன்னைதைக் காதில் வாங்காதவன் போல், கிட்டியின் பக்கம் திரும்பிப் புன்னகை புரிந்தவாறு தன்னுடைய ரகசிய அஸ்திரங் களைப் பிரயோகம் செய்யத் தொடங்கினான்.

'கிட்டண்ணா, இப்போது நான் பென்ஷன் வாங்கும் சமயம் வந்துவிட்டது; உன் தாயாருக்கும் தான். இனி புதிய ரத்தம் முன்னேற வேண்டும், நம்முடைய பழைய மனஸ்தாபம் ஒழிய வேண்டும் என்பதுதான் முக்கியம். உங்கள் தாசில்தார் எனக்கு மிகவும் நெருங்கிய, பழைய நண்பர். நேற்றுதான் அவரைக் கண்டேன், பார்த்ததும் தெரிந்துகொண்டார். வீட்டுக்கு வரும்படி கூப்பிட்டார். நானும் எங்கள் வீட்டுக்கு ஒருமுறை வருமாறு அழைத்திருக்கிறேன். அவரும் ஒப்புக்கொண்டிருக்கிறார். இனி மேல் நீ எதற்கும் பயப்படத் தேவைஇல்லை'.

அங்கு நடக்கும் பேச்சுகளுக்கும் தனக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை போல் இதுவரை உட்கார்ந்திருந்தான் கிட்டி. ஆனால் ராகப்பா கடைசியாகக் கூறியதைக் கேட்டு அவனுடைய வாய் ஊறியது. அவன் வேலைக்குப் போனது முதல் பியூன் தொடங்கித் தாசில்தார் வரை எல்லாரும் தத்தம் பதவிக்கேற்ப அவனைப் பரிகாசம் செய்துகொண்டிருந்தார்கள். அலுவலகத்தில் அவன் ஏதாவது பிழைகள் செய்துவிடுவான்; அதனால் தாசில்தார் அவனைக் கடிந்து கொள்வார். அதனால் வெட்கப்பட்டு அவன் மேலும் அதிகப் பிழைகள் செய்வான். இந்தப் புதிய கற்றுக்குட்டி குறிப்பாகப் பழைய குமாஸ்தாக்களின் ஏளனத்துக்குக் காரணம் ஆனான். தானும் ஒருநாள் பழைய குமாஸ்தா ஆகி, புதிய கற்றுக்குட்டிகளின் தப்புகளைக் கண்டுபிடித்து அவர்களைத்

திட்டலாம் என்று அவன் கனவான கனவு கண்டு கொண்டி ருந்தான். சில சமயம் அம்மாவே அவனுடைய கனவுகளின் குறி ஆகிவிடுவாள். கிட்டியின் முகத்தில் வெற்றியின் பைத்தியக்கார ஒளிவரும்.

இப்போது திருமணம் பற்றிப் பேசிப்பயன் இல்லை என்று கண்டு கொண்ட ராகப்பா தாசில்தாரைப் பற்றியே மேலும் பேசினான். அவனும் தாசில்தாரும் ஒரே ஸ்கூலில் படித்தவர்கள் என்றான். இருவரும் சேர்ந்து ஃபுட்பால் விளையாடுவார்கள் என்றும், அவர் மெட்ரிக் தேறியதும் அரசுப்பணியில் சேர்ந்து விட்டார் என்றும். அவனோ நாலாம் வகுப்போடு ஸ்கூலுக்குக் கும்பிடு போட்டுவிட்டு படிப்பை நிறுத்திவிட்டான் என்றும் கூறினான். இது போன்ற விஷயங்களைச் சுவைபடச் சொன்ன பின், 'மிகவும் நேரம் ஆகிவிட்டது; புறப்படுகிறேன்', என்றான். இதுவரை அகலத்திறந்த விழிகளுடன், நடுநடுவில் சற்று சிரித்தபடியும் புன்னகை செய்தபடியும் கேட்டவாறிருந்த கிட்டி இப்போது தாயாரிடம், 'அம்மா, கொஞ்சம் தேநீர் தயார் செய்யேன்,' என்று கூறினான்.

அரைமணி நேரத்துக்கு முன் இதைக் கிட்டி சொல்லி யிருந்தால் கங்கவ்வா தேநீர் போட்டிருப்பாள். ஆனால் ராகப்பா பேசிய தோரணையையும் கிட்டி அதைக்கேட்ட தோரணையையும் பார்த்துப் புத்திசாலியான கங்கவ்வா இனியும் இவ்விஷயத்தைச் சகித்துக்கொண்டிருப்பது சரி அல்ல என்பதை உணர்ந்தாள். அவள் உற்சாகம் இல்லாமல், 'கிட்டி ராகூ டீ சாப்பிடுகிற ஆள் அல்ல', என்றாள்.

தாயார் இவ்வளவு நெஞ்சழுத்தக்காரி என்று கிட்டி எண்ணவில்லை; தவிர, அவன் சொல்லுக்கு மாறு சொல்லி விட்டாள். அவன் உத்தியோக புருஷன்; அவனைச் சந்திக்க வந்து இருப்பவர், அதுவும் தாசில்தாரின் நண்பர்! அவருக்கா இந்த அவமானம்!

ராகப்பா நகைத்தபடி கூறினான்: 'கங்கவ்வா, வயது ஆக ஆக நம்முடைய சக்தியும் குறைந்துக் கொண்டே போகிறது. முன்பு நீ என்னைப் பார்த்ததற்கும் இப்போதைக்கும் எவ்வளவு வேற்றுமை வந்துவிட்டது. ஒரு தேநீரும், புகையிலையும் எப்போதுமே வேண்டும். ஆனால் டீ சாப்பிட்டுத் தான் வந்தேன். இப்போது வேண்டாம். உன்னையும் கிட்டண்ணா வையும் சந்தித்தேனே, தேநீரைவிட அது எவ்வளவோ மேல்'.

அப்போதும் அவள் விடுகிறவளாக இல்லை. 'ஆனால் இதைவிடப் பெரிய விஷயங்கள் விட்டுப் போயிற்றே, அவை களையும் சொல்லேன்'.

ராகப்பா உரத்துச் சிரித்தபடி கூறினான்:

'சரி, இப்போது புறப்படுகிறேன். ஒரு முறை அம்மாவைக் கூட்டிக்கொண்டு எங்கள் வீட்டுக்கு வா, தம்பி. ஏழைகளை முற்றிலும் மறந்துவிட வேண்டாம்,' என்று அவன் வெளியே போய்விட்டான். தாயாரின் அநாகரிகமான நடத்தைக்கு எவ்வாறு மன்னிப்புகோருவது என்று விழித்துக் கொண்டிருந்த கிட்டி, 'டீ சாப்பிட்டுப் போனால் நன்றாக இருக்கும்' என்றான். மாமாவை வழி அனுப்பக் கூடவே போனான்.

வாயிலைத் தாண்டும் போது ராகப்பா கங்கவ்வா மீது ஒரு கடூரமான பார்வை செலுத்தினான். இதைக் கிட்டி பார்க்க வில்லை. ஆனால் கங்கவ்வா பார்த்துவிட்டாள். பல நாட்களுக்குப் பிறகு தம்பியைக் கண்டதால் மனத்தில் எழுந்த கொஞ்சநஞ்ச பாசமும் இந்தப் பார்வையைக் கண்டதும் பட்டுப் போயிற்று. அவள் மனத்தை மீண்டும் கல் ஆக்கிக் கொண்டாள்.

## 4. கிட்டியின் கோபம்

கிட்டி தெருவிலிருந்து திரும்பிய போது அவனே இயற்றிய 'ராகப்பா மாமா' என்ற அழைப்பு அவன் காதுகளில் ஓர் இனிமையை உண்டாக்கிக் கொண்டு இருந்தது, ஆனால் வீட்டில் நுழைந்ததும் அம்மா செய்த தவறுகளுக்காக அவளிடம் சிறிது சினம் காட்ட வேண்டியது தன் கடமை என்பது அவனுக்கு ஞாபகம் வந்தது. துன்புற்றவன் போல் தரையைக் கால்களால் உதைத்தவாறு உள்ளே நுழைந்தான். வெயிலிலிருந்து முற்றிலும் இருண்டவீட்டில் நுழைந்ததால் அவனுடைய கண்கள் இருளடைந்தாற் போல் இருந்தன. தடவித்தடுமாறியபடி அரை குறையாய்க்கிழிந்த சாய்வு நாற்காலியில் தொப் என்று உட்கார்ந்தான். அது பாக்கியும் கிழிந்துவிட்டது. அதற்கு நடுவிலிருந்து சமாளித்துக்கொண்டு எழுந்தபோது அவனுக்குச் சிரிப்பு வந்துவிட்டது; ஆனால் இப்போது சிரிக்கக் கூடாது என்று எண்ணி, புருவத்தை நெறித்துக் கொண்டு பாய்மீது படுத்துக் கொண்டான். கங்கவ்வா மூக்குக் கண்ணாடி அணிந்து, சமையல் அறையில் பக்தி விஜயத்தின் ஏடுகளைப் புரட்டிக் கொண்டிருந் தாள். கிட்டியின் ஆரவாரத்தைக் கேட்டு, புத்தகத்தில் இருந்த கவனத்தை அகற்றி அவன் பக்கம் செவிகளை நீட்டிக் கொண்டிருந் தான். கொஞ்ச நேரம் இருவருமே மௌனமாக இருந்தனர். கிட்டி கோபமாக இருக்கிறான் என்று கங்கவ்வாவுக்குத் தெரிந்து விட்டது. ஏதாவது பேச்சு கொடுத்தால் படார் என்று வெடிப்பான்.

ஆயினும் பேசாமல் இருக்கமுடியவில்லை. உள்ளே இருந்தபடி சொன்னாள்: 'கிட்டி, உள்ளே வாயேன்'.

'ஏன்?'

'உள்ளே வா, சொல்கிறேன்'.

'அங்கிருந்தே சொல்லு, எனக்குக் கேட்கிறது'.

'சரி, நான் சொல்வது இதுதான். இந்த ராகப்பாவோடு உறவு எனக்குப் பிடிக்கவில்லை.'

'உம்'.

'நீ இவன் வலையில் சிக்கிவிட வேண்டாம்.'

'உம்.'

பேசுவதற்கு இது உகந்த நேரமல்ல என்று கங்கவ்வாவுக்குத் தோன்றியது. கிட்டி தன்னுடைய கைக்குள்ளிருந்து நழுவி விடமாட்டான் என்று அவளுக்குத் தெரியும். ஆனால் அவனுக்கு அறிவுறுத்த இது தக்க தருணம் அல்ல. தனக்கு ஒரு சொந்தமாமா இருப்பதும், அவனுக்கு ஒரு பெண் இருப்பதும் மாமா அந்தப் பெண்ணைத் தனக்கு மணம் செய்துவைக்க விரும்புகிறான் என்பதும் கிட்டிக்குப் பெரிய விஷயம் அல்ல. தன் வீட்டிலேயே தன் சொல்லுக்கு மதிப்பு இல்லையே என்று அவனுக்குத் வருத்தம். அரசாங்க ஊழியனாக இருந்தும் தாசில்தாருக்குத் தெரிந்த மாமாவை ஒரு டீ கூடத் தராமல் அனுப்ப வேண்டிய தாயிற்று. வீட்டில் அம்மாவே அவனுடைய மானத்தைக் காக்கா விட்டால் அலுவலகத்தில் பியூன்கள் அவனை எப்படி மதிப் பார்கள்? அவனுடைய இந்த எண்ணங்களே வட்டமிட்டுக் கொண்டிருந்தன. ஆகையால் அம்மா பேச்சு தொடுக்கட்டும், சுடச்சுடக் கொடுப்போம் என்று காத்திருந்தான். பதினைந்து நிமிடங்கள் ஆயின, கங்கவ்வாவின் வாயிலிருந்து ஒரு வார்த்தையும் வெளிவரவில்லை. அம்மாவின் வாயிலிருந்து தெளிவில்லாத ஓசை கேட்கத் தொடங்கியது...அம்மா பக்தி விஜயத்தைப் பாராயணம் செய்ய ஆரம்பித்துவிட்டாள்.

கிட்டியின் கோபம் மேலும் அதிகரித்துவிட்டது. இன்னும் ஒரு மணிநேரம் அம்மாவின் கவனம் வேறுபக்கம் செல்லாது. அவன்தான் பேச்சைத் துவக்கி வைக்க வேண்டும்.

அம்மா...அம்மா...அம்மா...என்று பலமாய்க் கத்தினான்; புத்தகத்தில் மூழ்கியிருந்த கங்கவ்வாவுக்கு அவனுடைய குரல் தெளிவாய்க் கேட்கவில்லை: 'என்ன சொன்னாய்?' என்று கேட்டாள்.

'ராகப்பா வந்தபோது தேநீர் ஏன் தயாரிக்கவில்லை? சொல்லேன்...'

'என்னடா சொல்வது? போகட்டும் விடு.'

'வீட்டுக்கு வருகிறவர்களிடம் நீ இப்படி நடந்து கொண்டால் என் மரியாதை மண்ணோடு கலந்துவிடும். புரிந்ததா, இல்லையா? நான் அரசாங்க ஊழியன். என் வீட்டிலேயே என் வார்த்தை செல்லுபடி ஆகாவிட்டால் ஜனங்கள் என்ன சொல்வார்கள்? என்ன சொல்வார்கள், தெரியுமா?' என்று வார்த்தையை வளர்த்தான்.

'குழந்தை, கிட்டண்ணா தேயிலை தீர்ந்துவிட்டது. காலையிலே வாங்கிவரும்படி சொன்னேனே.'

'ஆமாம், ஆமாம், மறந்தே போனேன்'.

அம்மா காலையிலேயே கடைசிக் கரண்டி தேயிலையை டப்பியைச் சுரண்டி எடுத்துவிட்டு அவனிடம் காட்டினாள். இதோ வருகிறேன் என்று கூறிவிட்டு ஆபிஸ் காகிதங்களில் மூழ்கி விட்டான். மறந்துபோன விஷயம் முழுவதும் ஞாபகம் வந்தது. 'ஹரி...ஹரி...புரந்தரவிட்டல...நானும் என் ஞாபகமும், தூ!' கிட்டியின் கோபத்தின் கூர்மை மழுங்கி விட்டது. கொஞ்சம் சிரிப்பும் வந்தது. நல்லவேளை, அப்போது தேநீருக்காக அம்மாவிடம் அதிகப் பிடிவாதம் பிடிக்காமல் இருந்தோமே என்று அவன் தன்னைப் பாராட்டிக் கொண்டான். பிடிவாதம் பிடித்திருந் தால், தாசில்தாரோடு பழகும் மாமாவுக்கு முன்னால் அரசு ஊழியனின் அடுக்களையில் காலிடப்பாக்களே நிறைந்திருக்கும் பரிதாப நிலை பற்றிய ரகசியம் வெளிபட்டிருக்கும், இன்று பெண் கொடுக்க வந்தவன் நாளைக்கு மாட்டேன் என்றும் கூறி இருக்கக்கூடும். இவ்வாறெல்லாம் எண்ணித் தனக்குள் சிரித்துக் கொண்டு பேசாமல் இருந்துவிட்டான்.

அம்மாவுக்கு முன்னால் கோபத்தோடு முகத்தை நீட்டிக் கொண்டிருந்தவன் முகத்தில் இப்போது சிரிப்பு தென் பட்டால் தனக்கு மானபங்கம் ஏற்பட்டு விட்டதாய் அவனுக்குப் பட்டது. ஆகையால் முகத்தை முன்போலவே தூக்கிக் கொண்டு, கோட்டும் தொப்பியும் அணிந்து கொண்டு உலாவுவதற்காக வெளியே புறப்பட்டான்.

கங்கவ்வாவுக்கு இந்த டிரான்ஸ்ஃபர்ஸீன் பற்றி ஒன்றும் தெரியவில்லை. அவள் தன் விவேகத்தால் தனக்கே உரித்தான ஒரு வழியைக் கண்டுபிடித்தாள். நேற்று சனிக்கிழமை ஆஞ்சநேய மூர்த்திக்காக உடைத்த தேங்காயின் இன்னும் ஒரு கொப்பறை எஞ்சியிருந்தது. அதைத் தேடி எடுத்தாள். உள்ளிருந்து வறுத்த பருப்புத் துவையிலை எடுத்தாள். கிட்டி திரும்பி வருவதற்குள் அதை ரொட்டியோடு தொட்டுக் கொள்ள சுவையுள்ள சட்டினியாக ஆக்கிவைத்தாள். வீடு திரும்பிய கிட்டி சந்தியா

வந்தனம் முடித்துக் கொண்டு சாப்பிடுவதற்காக வந்து உட்கார்ந் தான். மத்தியானம் அம்மாவோடு போட்ட சண்டையைச் சமரச மாய்த் தீர்த்துக் கொள்ள அவனுக்கு நல்ல வாய்ப்பு கிட்டியது. சட்னியை ஏகமாய்ப் புகழ்ந்து அம்மாவோடு சமாதானம் செய்து கொண்டான். கங்கவ்வாவும், 'என்ன செய்வது குழந்தை, உனக்கு ரொம்பக் கோபம் வந்திருந்ததே' என்று சாந்தி பாடம் ஓதினாள்.

அம்மாவும் பிள்ளையும் இரவு வெகுநேரம் வரை நன்கு பேசிக்கொண்டிருந்தார்கள்.

# 5. பழைய நினைவுகள்

'கிட்டண்ணா, இன்றைக்கு மத்தியானம் உனக்குக் கோபம் வந்துவிட்டது. இந்த ராகப்பாவைப் பற்றி உனக்கு ஒன்றும் தெரியாது. நாம் எல்லாரும் மிகவும் கஷ்டப்பட்டு இருக்கிறோம். இந்தத் துன்பம் என்னை எந்நேரமும் வதைத்துக் கொண்டு இருக்கிறது. உன்னை ஒன்றும் அறியாதவன் என்று எண்ணி அவன் எவ்வளவு பொய்கள் வேண்டுமானாலும் சொல்லட்டும். எனக்கு முன்னால் எப்படி வேண்டுமானாலும் அவன் துள்ளிக் குதிக் கட்டும். ஆனால் அவன் உன்னை ஏமாற்றிவிடாமல் ஜாக்கிரதை யாக இரு. அவன் எதற்கும் தயங்குகிற ஆள் அல்ல. இரண்டொரு பொய்கள் சொல்லவா தயங்குவான்? அவன் இனிக்க இனிக்கப் பேசுவதைக் கேட்டு மயங்கிவிடாதே.'

'இவனால் தான் நாம் இப்படி வறுமை வாய்ப்பட்டோம், கிட்டண்ணா. நாம் எப்போதுமே ஏழைகளாக இருந்தவர்கள் என்று எண்ணுகிறயா? இல்லை, குழந்தை, ஒரு சேர் தங்கம் என் உடம்பில் சுமத்தப்பட்டு இருந்தது. நகைகளை எல்லாம் போட்டுக் கொண்டால் கையை இப்படி மேலே தூக்க முடியாது. ஒவ்வொரு வருடமும் லட்சுமி நாராயணரைத் தரிசனம் செய்வதற் காக இதே போத்தார் லட்சுமிபாயுடன் நான் போவது வழக்கம். அவர் இதை எல்லாம் பார்த்திருக்கிறார். அதனால் தான் அவர் என்னிடம் இவ்வளவு மரியாதையாக இருக்கிறார்...அது போகட்டும், இப்போது பழைய விஷயங்களை ஞாபகப்படுத்திக் கொள்வதில் என்ன பயன்?

'நான் அப்பேர்பட்ட நிலையில் இருந்தபோது இந்த ராகப்பா வந்து உன் தகப்பனாரிடம் குழைந்தான். 'நிலம் அடகில் இருக்கிறது. ஐநூறு ரூபாய் கொடுங்கள். ஒரு பகுதியை மீட்டுக் கொள்கிறேன்' என்றான். உன் தகப்பனாருக்கு மிகவும் தாராள குணம். என்ன செய்வது கிட்டண்ணா? நீ அப்போது ஒரு சாண்

உயரம் தான் இருந்தாய். அவர் என்னைத் தனியாக விட்டுப் போய்விட்டார்' - தாயார் விசித்தவாறு சொன்னாள் : 'அதை இப்போது மறந்துவிடு. நான் அழுது அரற்றும் பெண்பிள்ளை அல்ல, ஆனால், உனக்கு முன்னால் உட்காரும்போது அவருடைய ஞாபகம் வந்து துக்கமாக இருக்கிறது. இன்று அவர் இருந்தால் எவ்வளவோ மகிழ்ச்சி அடைந்திருப்பார். உனக்காகப் பெண்பார்க்க எங்கெல்லாம் போயிருப்பாரோ? போகட்டும், விடு... இந்த நீசனுக்கு ஐநூறு தந்து, நிலத்தை மீட்டுக் கொடுத்ததும், இவனுக்குத் திமிர் வந்துவிட்டது. இவனுடைய அகத்துக்காரி சம்பீ இப்போது செல்வத்தில் புரளுகிறாளே, அவளுக்குப் புதிய சேலை எப்போது கிடைக்கும் தெரியுமா? உன் தகப்பனார், 'இதோ, உன் வீட்டுக்காரிக்கு இரண்டு புதுசேலை வாங்கிக்கொள்' என்று சொல்லும்போது தான்... இப்படியும் ஒரு காலம் இருந்தது...கடைசியில் அந்த உபகாரத்துக்குப் பதிலாக என்ன செய்தான் தெரியுமா? இவன் உடன்பிறப்பா, முன் ஜன்மத்து விரோதி.'

'உனக்கு இன்னொரு மாமா இருக்கிறான், இந்த ராகப்பாவைவிடச் சிறியவன்.... அவன் பெயர் வெங்காடி... இருக்கிறானா போய்விட்டானா என்று தெரியவில்லை. அவனைப் பற்றிக் கேள்விப்பட்டுப் பத்து பதினொரு வருடம் ஆகிறது. கொஞ்சம் அரைப் பைத்தியம் போல் இருந்தான். ஆனால் நல்ல மனசு. தெய்வத்திடம் மிகவும் பக்தி. மாற்றார் பணம் லட்சரூபாய் கிடந்தாலும் ஒரு காசு தொடமாட்டான். நம் குடும்பத்தில் உலகத்திலுள்ள தீமைகள் எல்லாம் குடிகொண்டு இருப்பது இந்த ராகூவிடம் தான். நம் வெங்கடோ கொஞ்சம் அரைப்பித்து போல் இருந்தான். நாலு வகுப்பு படித்திருந்தான். ராகூவுக்கு மணமான பின், 'இனி உனக்கும் கலியாணம் செய்து வைத்துவிடுவார்கள்,' என்று யாரோ கேலியாகச் சொன்னார்கள். இதைக் கேட்டதும் வீட்டை விட்டு ஓடிவிட்டான். பல நாட்கள் பூனாவில் இருந்தான்; முட்டாள் யாரிடமும் சொல்லவுமில்லை. அவன் பங்கைக் கைப்பற்ற வேண்டும் என்று எண்ணி இந்த ராகூ அவனைத் தேடவே இல்லை. அவனே தார்வாரில் குடும்பம் வைத்துக்கொண்டு நாளுக்கு ஒரு தொழில் செய்ய ஆரம்பித்தான்.

'பூனாவில் யாரோ ஒரு குஜராத்தியின் வீட்டில் பூஜையும் பாராயணமும் செய்துகொண்டிருந்தான். அவர் மிகப் பெரிய பணக்காரர். இவன் மேல் பரமநம்பிக்கை. யார் என்ன சொல்லிக் கொடுத்தார்களோ, அவனுக்கும் பணத்தாசை உண்டாகிவிட்டது. ஒருநாள் இரண்டாயிரம் ரூபாய் உண்டியல் மோசடி செய்து விட்டான். முன்பே அவன் அரைப்பைத்தியம்: இது அவன் மட்டும் தனியாகச் செய்த வேலையாக இருக்கமுடியாது. அந்த

சமயம் பூனாவில் அவன் இருந்த இடத்தைக் கண்டுபிடித்து அவனோடு இரண்டுநாள் இருந்துவிட்டு வந்தான் ராகூ. இவன்தான் அவனுக்குச் சொல்லிக் கொடுத்திருக்க வேண்டும்.

'சில நாட்களில் ரகசியம் உடைந்துவிட்டது. அந்த சேட் போலீஸில் புகார் செய்தார். அவ்வளவுதான், போலீஸ் வந்து விட்டது. இந்தப் பைத்தியத்தை ஸ்டேஷனுக்கு அழைத்துக் கொண்டு போனார்கள். அப்போது யார் மூலமாகவோ அவன் ராகூவுக்குத் தந்தி அனுப்பினான். 'என்னை ஜெயிலில் போடுவார்கள். காப்பாற்று' என்று தந்தி. அந்தத் தந்தி வந்ததும் ராகூ நம்மிடம் ஓடோடி வந்தான். அவருடைய கால்களைப் பிடித்துக்கொண்டு, 'எப்படியாவது என் தம்பியை விடுவித்து விடுங்கள். நம் குடும்பத்து ஆள் ஒருவன் ஜெயிலுக்குப் போயிருக் கிறான் என்று வெளியில் தெரிந்தால் போதும், இப்போது நான் நாலுகாசு சம்பாதித்துக்கொண்டு இருக்கிறேனே அதிலும் மண் விழுந்துவிடும்,' என்று கெஞ்சினான். என்னைத் திருப்தி செய்வதற்காக அவர் இந்த வேலையில் தலையிட்டார். அன்று இரவு ராகூவோடு ரயிலேறிப் பூனாவுக்குப் போனார். ராகூவின் நிலம் எல்லாம் அடைமானத்தில் இருந்தது. இவர் ஐயாயிரம் ஜாமீன் கட்டி வெங்காடியை விடுவித்து தார்வாருக்கு அழைத்துவந்தார்.

'அவருக்குச் சொந்த வேலைகள் அதிகம். ஆயினும் இந்த வெங்காடிமேல் எப்போதும் ஒரு கண்வைத்திருந்தார். இந்த அற்பன் ராகூ என்ன செய்தானோ? ஒருநாள் இவர் ராகூவோடு படுக்க வெங்காடியை அனுப்பினார். இந்த ராகூ அவன் மூளையில் என்ன உருவேற்றினானோ, அன்று இரவே அவனைக் கிராமத்திலிருந்து துரத்திவிட்டான். இன்றுவரை அந்தப் பைத்தியம் பற்றித் தகவலே இல்லை.

'அடுத்து நடக்கவேண்டியது நடந்தது. அவனுக்கு ஜாமீன் கொடுத்த தவறுக்காகச் சொத்து, வீடுவாசல் எல்லாம் இழந்தார். வீட்டில் இருந்த விலையுர்ந்த சாமான்கள் எல்லாம் காரியத்திற்கு ஏலம் போயின...வீடு வெறிச்சோடி விட்டது. அப்போது ராகூ வந்தான். அழுவது போல் பாசாங்கு செய்தான், நாடகம் ஆடினான். இது ஒன்றும் அவருக்குப் பிடிக்கவில்லை. இதே கவலையால் அவருடைய மனம் உடைந்தது. இதனாலேயே உருகி உருகிக் கடைசியில் அவர்...' என்றவாறு அவள் தேம்பித் தேம்பி அழலானாள். சற்றுக் கழித்து ஆறுதல் செய்து கொண்டு அம்மா மீண்டும் உரைத்தாள்.

'சரி, விடு. இப்போது அழுவதால் என்ன கிடைக்கும்? அந்த ராமாயணம் எல்லாம் பேசி என்ன பயன்? அடுத்த ஆண்டு இந்த

ராகூ தார்வாரை விட்டுப் பிந்துகோளில் வசிக்கப் போனான். விவசாயம் செய்து பணக்காரன் ஆனான். அவனுடைய செல்வத்தைக் காட்டவும் நம்மைப் பரிகாசம் செய்யவும் இப்போது வந்திருக்கிறான்.

'கிட்டண்ணா, சில விஷயங்களைச் சொல்லலாம், சிலவற்றைச் சொல்லக் கூடாது... சுருக்கமாய்ச் சொல்கிறேன். இந்த மனிதன் நம்பத்தகுந்தவன் அல்ல, அவனோடு நீ போக வேண்டாம்.' கங்கவ்வா மேலும் பல சிறிய-பெரிய தகவல்கள் சொன்னாள். இரவு பன்னிரண்டு மணிவரை அம்மாவும் பிள்ளையும் பேசிக் கொண்டிருந்தார்கள். வேலையான பிறகு கிட்டி முதல்முறையாகத் தாயிடமிருந்து இவ்வளவும் கேட்டான். சென்ற காலத்துச் சித்திரத்தை நேரில் பார்க்காவிட்டாலும், அவனுடைய மனத்திரையில் சித்திரம் முழுவதும் விரிவாக உருவாயிற்று. இதனால் அவனுக்கு அன்னையிடம் மிகுந்த மரியாதை உண்டாயிற்று.

# 6. போராட்டம்

அம்மா பழைய தலைமுறையைச் சேர்ந்தாள், அவன் புதிய தலைமுறையைச் சேர்ந்தவன். ஒவ்வொரு தலைமுறைக்கும் தனித்தனிப் பிரச்னைகள் இருக்கச் செய்கின்றன. அதனுடைய போக்கை எதிர்த்து நடக்கக் கிட்டியால் இயலவில்லை. மணம் செய்து கொள்கிற துணிச்சல் அவனுக்கு இல்லை. நம் சமூகத்தில் ஒரு பையனுக்குப் பதினெட்டு அல்லது இருபது வயது ஆனதுமே பெண்களைப் பெற்ற தந்தைமார்கள் அவனைச் சுற்றி வளைத்துக் கொண்டு, 'திருமணம் வாழ்க்கைக்கு இன்றியமையாதது' என்ற எண்ணத்தை அவன் மனத்தில் உண்டாக்கிவிடுகிறார்கள். தங்களுக்கென்று தீர்மானமான சித்தாந்தம் இல்லாத இளைஞர்கள் இந்த சித்தாந்தத்துக்கு முன்னிலையில் தலை குனிந்து விடுகிறார்கள். கல்யாணம் என்றாலே கிட்டி அஞ்சினான். ஆனால், இன்று இல்லாவிட்டால் நாளைக்கு மணம் செய்து கொண்டே ஆக வேண்டும் என்ற கருத்து அவனுக்கு உண்டாகி விட்டது. தவிர, ஆபிசிலும் நாள்தோறும் அவனுக்குக் கசப்பான அநுபவம்.

அன்று தெருவில் விடைபெறும் போது ராகப்பா கடைசியாகச் சொன்ன சொற்கள், அலுவலகத்திலும் கிட்டியின் செவிகளின் எதிரொலித்துக் கொண்டிருந்தன: 'கிட்டண்ணா, நானும் உன் தாயும் பென்ஷன் வாங்கும் வயதை அடைந்துவிட்டோம். எங்கள் விவகாரங்கள் எங்கள் போக்குப்படி

இருக்கும். இதற்காக நீ அம்மாவைக் கோபித்துக் கொள்ள வேண்டாம். பழங்காலத்துப் பெண்பிள்ளைகளுக்கு இந்தத் தலை முறையின் விஷயங்கள் புரிவதில்லை. சண்டையும் மனவேற்று மையும் நமக்குள் வந்து கொண்டே இருக்கும். ஆனால் நீங்கள் இறந்த காலத்தின் பக்கம் கவனம் செலுத்தக்கூடாது, முன்னேறி எப்படி உருவாக வேண்டும் என்பதிலேயே நீங்கள் கவனமாக இருக்க வேண்டும் என்பதே முக்கியம்' ராகப்பாவின் இச் சொற்கள் அவனுக்கு நியாயம் போலத் தோன்றின.

கிட்டிக்கு முன் பல பிரச்னைகள். அவனுள் புதிய மனிதத் தன்மை பிறந்து கொண்டிருந்தது. இறந்த காலத்தோடு தொடர்பு வைத்துக் கொள்வது நாளுக்கு நாள் கஷ்டமாகி வந்தது. மாணவனாக இருந்த போது அவனுக்கு முறைச் சாப்பாடு[1] போட்டவர்கள் எதிர்ப்பட்டால் அவர்களுக்கு வணக்கம் கூறுவதா வேண்டாமா என்று தர்மசங்கடமாக இருக்கும்.

இம்மாதிரி கிட்டிக்கு உபகாரம் செய்தவர்கள் கிராமம் முழுவதும் இருந்தனர். அவன் நிக்கர் அணிவதை நிறுத்திவிட்டு பைஜாமா போட்டுக் கொள்ள ஆரம்பித்து விட்டான். இதைப் பார்த்து சிரிப்பார்கள் என்று அவனுக்குப் பயம். முடி நீளமாக வளரத் தொடங்கிவிட்டது, உச்சிக் குடுமி மெலிய ஆரம்பித்து விட்டது. அவன் கண்ணாடிக்கு முன்னால் நின்று வகிடு பிரித்து தலைவாரிக் கொள்ளத் துவங்கி விட்டான். உச்சிக் குடுமியை மறைப்பதற்காகக் கிட்டி மிகச் சாதுரியமாக ஒரு கருப்புத் தொப்பி அணிந்துகொண்டான். சில சமயம் உச்சிக்குடுமிக்கு வெளியே தென்படும். இதை வைத்து நண்பர்கள் கேலி செய்யவார்கள். 'என் தலைமயிரும் என் உடையும் என் சொந்த தனிப்பட்ட விஷயங்கள்; இதனால் உங்களுக்கு என்ன லாப நஷ்டம்?' என்று கூறிவிடுவதென்று சில சமயம் யோசிப்பான். ஆனால் இதைச் சொல்வதற்கும் அவனைவிடப் பெரியவர்களின் யோசனை தேவைப்பட்டது. இன்றில்லாவிட்டால் நாளைக்கு இவர்கள் பயன்படுவார்கள் என்பது அவன் எண்ணம். யாரிடமும் அவனால் சற்றுக் கடுமையாகவும் பேசமுடியவில்லை என்பதும் உண்மை.

இந்த அச்சம் கிட்டிக்கு எல்லாவற்றையும் விடப் பெரிய மனப்புதிர். மாணவனாக இருந்த காலத்தில் பல கஷ்டமான நெருக்கடிகளில், ' நான் முறைச் சாப்பாடு சாப்பிடுகிற பையன். கோபித்துக் கொள்வதால் எப்படி காரியம் நடக்கும்?' என்று சொல்லித் தனக்கு அறிவுறுத்திக் கொள்வான். இப்படித் தன்னைத் தான் அழுத்திக் கொள்ளும் பழக்கம் அவனுக்கு உண்டாகி விட்டது. ஆகையால் அவனால் கோபித்துக் கொள்ள முடிவது

---

1 பணக்காரர்கள் வீட்டில் ஏழை மாணவர்கள் ஒவ்வொரு வாரமாக முறை வைத்து உண்பார்கள். இப்பழக்கம் இப்போது அருகி வருகிறது.

இல்லை. எங்காவது அவனால் கோபம் கொள்ள முடிகிறது என்றால், அது வீட்டில், அம்மாவிடம் தான். தன் சினத்தை வெளியிடும் பழக்கம் இல்லாமற் போனதால் அவனுக்கு தன் தாய்தந்தையரையும் ஆண்டவனையும். கூடச் சபிக்க வேண்டும் என்று தோன்றியது. அம்மா பல தடவை தன் செல்வக்கொழிப்பு பற்றி வருணித்துவிட்டாள். இவை எல்லாம் இருந்தால் அவனுக்கு இன்று இந்த மனப்பலவீனம் அவனிடம் இருக்குமா?

இந்தத் தொந்திரவைவிட அதிகமாகக் கிட்டியின் மனத்தில் அம்மாவின்பால் கருணையும் பாசமும் இருந்தன. கிட்டிக்கு வேலையானதும் பக்கத்துவீட்டுத் திரு. தேசாய் அவனைச் சாப்பிட அழைத்து, 'கிட்டி, உன் தாயார் மிகவும் கஷ்டப்பட்டு இருக்கிறாள். அவள் உன்னை எப்படி வளர்த்தாள் என்று எங்களுக்குத் தான் தெரியும். அவளுக்குச் சுகம் கொடு', என்று கூறினார். 'வேலை கிடைத்தது', என்றான். இந்த வார்த்தைகள் வாயிலிருந்து வெளிப் பட்டதுமே, இதென்ன முட்டாள்தனமாகப் பேசி விட்டோம் என்றும் உணர்வு அவனுக்கு உண்டாயிற்று. அது மட்டுமல்ல, உள்ளே உணவு பரிமாறவந்த தேசாயின் மருமகள் அதைக் கேட்டதும் 'பக்' என்று சிரித்துவிட்டாள். திரு. தேசாயின் மனைவி வேணுபாய் உரைத்தாள்: 'பைத்தியக்காரா, நாங்கள் சொல்வதற்கு இது அர்த்தம் அல்ல. கலியாணம் செய்து கொண்டு குடும்பம் நடத்த வேண்டிய தகுதி உனக்கு வந்து விட்டது. யாருடைய சொல்லையும் கேட்டு ஏமாந்துவிடாதே. கவனமாக இரு.' கிட்டி இதை எண்ணிப்பார்த்துத் தன் தகுதியின்மையையும் அவமானத்தையும் அநுபவிப்பான்.

கச்சேரியில் ஒரு நிகழ்ச்சி நிகழ்ந்தது. கிட்டியின் இடம் மாறி விட்டது. கிட்டிக்குப் பியாதேஹுசைன் என்றாலே கொஞ்சம் அச்சம். அவன் மிகவும் கெட்டிக்காரன் என்றும் போதுமான பயன் கிட்டும்படி செய்யவும் தகுதி அவனுக்கு இருக்கிறது என்றும் அவனைப்பற்றி ஆபிசில் பிரபலமாக இருந்தது. இது வரை கிட்டியும் ஹுசைனும் எட்டியிருந்து பேசிய பழக்கம்தான். கச்சேரியில் சேருமுன்பே, சவுக்கார மிட்டுத் துவைத்த வெள்ளைக் கமீசும், காக்கி நிக்கரும், தொப்பியும் அணிந்து கிட்டி வந்ததும் ஹுசைன் அவனை மிகத்தைக்கும் பார்வை கொண்டு பார்த்தான். அப்போது முதல் கிட்டியின் நடை, உடை, உரையாடல் வேறு யாருடைய பார்வையிலிருந்து தப்பினாலும், ஹுசைனின் கூரிய பார்வைக்குத் தப்பமுடிந்ததில்லை. தெருவில் சந்திக்கும் போது ஹுசைன் சலாம் செய்தால் அவன் தன்னைக் கிண்டல் செய்வதாய்க் கிட்டிக்குத் தோன்றும். ஆனால், ஹுசைன் இன்று தானாகவே வந்து சலாம் செய்தான். கிட்டி இந்தப் புதிய நடைமுறையினால் பிரமித்துப் போய், 'என்ன விஷயம்?' என்று கேட்டான்.

ஹுசைன், 'வெளியில் யாரோ ஐயாவைச் சந்திக்க வந்திருக்கிறார்கள்', என்றான்.

கிட்டி பேசாமல் வெளியே வந்தான். அங்கே நீளக்கோட்டு அணிந்து, கறுப்புக் கண்ணாடி போட்டிருந்த ஒருவன் நின்றான். அவர்களுடைய பேச்சில் கலந்து கொள்கிறவன் போல் ஹுசைனும் சற்றுத் தள்ளி நின்றுக் கொண்டான். எல்லாம் நாற்காலியின் மகிமை என்று கிட்டிக்கு விளங்கிவிட்டது. கிட்டி புதிய இடத்துச் சார்ஜ் இன்னும் வாங்கிக்கொள்ளவில்லை. ஒரு நாளுக்கு முன்புதான் அவனுக்கு மாற்ற உத்திரவு வந்தது. இவ்வளவு விரைவாகத் தன் மாற்றச் செய்தி ஆபிசுக்கு வெளியே பரவும் என்று கிட்டிக்குத் தெரியாது.

கறுப்புக் கண்ணாடிக்காரன் இருமியபடி கூறினான்: 'என் பெயர் கீடல்லி பீமண்ணா. என் சண்டைக் கேஸ் ஒன்று உங்களிடம் வரும். கேஸ் எல்லாம் கிளியர் ஆகிவிட்டது. எனக்குச் சாதகமாக இதற்குள் தீர்ப்பு ஆகி இருக்கும். உங்களுடைய இடத்தில் பழைய ஜயா, ரஃப் நோட் எல்லாம் தயாரித்து வைத் திருப்பதாய்ச் சொன்னார். அவருக்கு மாறுதல் ஆகிவிட்டதால் நமக்குக் கவலையாக இருக்கிறது. கேஸ் கிளியராக இருக்கிறது. அவர் எழுதிவைத்த நோட்டையே நீங்கள் தாக்கல் செய்தால் பெரிய தயவாக இருக்கும். கேஸ் கிளியர் ஆனால்...'

எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டு கிட்டி சுருக்கமாக மறுமொழி கூறினான்: 'நான் இன்னும் சார்ஜ் வாங்கிக் கொள்ள வில்லை. பிறகு பார்ப்போம்.'

ஹுசைனுக்கு வியப்பாக இருந்தது. கிட்டியின் மறுமொழி யால் அவன் மனத்தில் ஒரு மரியாதை உண்டாயிற்று. 'பார்ப் போம்' என்ற எளிய சொல்லுக்கு ஹுசைனுக்கு ஒரே பொருள் தான் தெரியும். 'பார்ப்போம்' என்று சொல்லும் அதிகாரியே உண்மையான அதிகாரி.

தவிர, ஹுசைனுக்கு நாற்காலிமீது ஆழ்ந்த நம்பிக்கை. விக்கிரமாதித்தன் சிம்மாஸனத்தில் அமர்ந்து குழந்தையும் எப்படி நியாயம் சொல்ல முடியுமோ, அதே போல் நல்ல நாற்காலி கிடைத்தால் முட்டாளும் 'அதிகாரி' ஆகமுடியும். அவனுடைய இந்த அனுபவ ரத்தினக் களஞ்சியத்தில் கிட்டி ஒரு புதிய ரத்தினம். கிட்டி புதிய இடத்து சார்ஜ் வாங்கிக் கொள்ளாமலே 'பார்ப்போம்' என்று சொல்லிக் கூடுமானால், அது நாற்காலியின் மகிமை அன்றி வேறு என்ன?

கிட்டியின் பால் மனத்தில் புதிய மரியாதை விழித்துக் கொண்ட ஆவேசத்தோடு ஹுசைன் கறுப்புக் கண்ணாடிக்காரன் மீது பாய்ந்தான்: 'கேஸ் கிளியர் கேஸ் கிளியர் என்று என்ன உளறிக்கொண்டு இருக்கிறாய்? நாற்காலிக்கு மரியாதை செய்ய வேண்டாமா?'

கறுப்புக் கண்ணாடிக்காரன் பையைத் தளர்த்தி இரண்டு மூன்று ரூபா நோட்டுகளைப் புரட்டியபடி மேலும் கீழும் பார்க்கலானான். ஹுசைன் அதட்டிக் கூறினான்: 'புதிய எஜமான் அல்லவா? அதுதான் இந்த சாமர்த்தியம் பண்ணுகிறான்.' பிறகு கிட்டியின் பக்கம் திரும்பி, 'எஜமான், நீங்கள் உள்ளே செல்லுங்கள். இவனை நான் கவனித்துக் கொள்கிறேன்,' என்றான்.

அடுத்த பதினைந்து நிமிடங்களில் கிட்டியின் கையில் ஓர் ஐந்து ரூபாய் நோட்டு வந்தடைந்தது. ஹுசைனின் பையிலும் ஒரு ரூபாய் விழுந்துவிட்டது. இதுவரை இம்மாதிரி கை நீட்டுகிற அனுபவம் கிட்டிக்குக் கிடையாது. ஹுசைனின் நட்பு பற்றி அவனுக்குக் கேள்விஞானம் தான் இருந்தது. கிட்டிக்கு இந்த இடத்துக்கு மாற்றப்பட்டதால், முதல்நாள் முதலே பல பேருக்கு அவன் மேல் எரிச்சல். அந்தக் கறுப்புக் கண்ணாடிக்காரன் காரணமாகவே இந்த இடத்தில் கிட்டியைப் போன்ற புதியகற்றுக் குட்டியைத் தாசில்தார் நியமித்திருந்தார் என்பது ஹெட்கிளர்க் ஜோஷி ராமராய்க்குத் தெரியும். ஆனால் முதல்நாளே ஐந்துரூபாய் வரும்படி வந்ததோடு ஹுசைனின் நட்பும் கிட்டியதால் கிட்டிக்கு ஒரே மகிழ்ச்சி. ஹுசைனின் நடமாட்டதைக் கவனித்த சில கிளர்க்குகள் ஆபிஸ் நேரம் ஆனதும் கிட்டியைப் பிடித்து தேநீர்க் கடைக்கு இழுத்துச் சென்றார்கள். கிட்டி இதுவரை டீக்கடைக்கு போனதே இல்லை. அன்று ஹுசைனுடைய நட்பின் தொடக்கவிழாவைக் கொண்டாட வேண்டியதாயிற்று. ஆகையால் தேநீர்க் கடையில் நுழைய வேண்டிய தாயிற்று.

தீட்டுப் பயத்தால் கிட்டி ஒரு கப் பால் மட்டும் அருந்தினான். நண்பர்களுக்காகப் பதினைந்தணா செலவழித்து விட்டான். ராமராய் கிட்டி வழங்கிய சிற்றுண்டிபற்றி அரைமணி நேரம் விமரிசனம் செய்து கிட்டியின் நெற்றி வேர்வை நிலத்தில் சொட்டும்படி செய்துவிட்டான். 'உனக்கு டீ வேண்டாம், சிகரெட் வேண்டாம், புகையிலை வேண்டாம், அக்கப்போர் வேண்டாம், பெண்டாட்டி வேண்டாம் என்றால் நீ எதற்காகத்தான் வேலை செய்கிறாய், கிருஷ்ணா?' என்று கேட்டான். இக் கேள்விகளுக்குக் கிட்டியால் மறுமொழி கூற முடியவில்லை.

பார்ட்டீ கலையும் போது ராமராய் உரைத்தான்: "கிருஷ்ணா, இந்தக் காசை இப்படித்தான் தொலைக்க வேண்டும். வேறு வேலைக்கு இது உதவாது. அப்படி இல்லாவிட்டால் நாம் எல்லாரும் பெரிய பணக்காரர்கள் ஆகியிருப்போம். அதை இதில் தான் போட வேண்டும்.' அவனுடைய இந்த அறிவுரையை மற்றவர்கள் பலமாக ஆதரித்தார்கள்.

இந்த அறிவுரை கிட்டியை ஒரே கணம் கவர்ந்தது. பையிலிருந்து சில்லரைக் காசுகளின் ஓசைவந்து கொண்டிருந்தது. திருட்டுப்பூனை போல் கிட்டி வீடு நோக்கி நடந்தான். வழியில் போத்தார் லட்சுமிபாயைக் கண்டான். அவளைப் பார்த்தும் பாராதவன் போல் அவளோடு பேசாமல் வீட்டுப் பக்கம் நடக்கலானான்.

தாசில்தாருக்கு இந்த கேசில் தனிகவனம் இருக்கிறது என்று ஹெட்கிளர்க்கு ஜோஷி ராமராய்க்குத் தெரியும். தனக்கு முன்னால் இருந்த கிளர்க்கு நோட் ஏதாவது தயாரித்து வைத்திருக்கிறானா இல்லையா என்று கிட்டி மேஜை முழுவதையும் தேடிப் பார்த்துவிட்டான். ஒன்றும் கிடைக்கவில்லை. ராமராயிடம் யோசனை கேட்கப் போனான். ஜோஷி ராமராயைச் சனி ராமராய் என்றும் மக்கள் கூறுவது வழக்கம். கிட்டி தேநீர் கொடுத்த அன்றே 'இவனை அடித்துக் காயப்படுத்த வேண்டும்' என்று அவன் எண்ணிவிட்டான். கிட்டி கொண்டு வந்த காகிதங்களை எல்லாம் பார்த்து, 'கேஸ் பூராவும் கிளியராக இருக்கிறது' என்று சொல்லிக் கறுப்புக் கண்ணாடிக்காரன் கீடல்லி பீமண்ணாவுக்குச் சாதகமாக நோட் எழுதிக் கொடுத்தான். அதே நோட்டைக் கிட்டி தன் கையால் அழகாக எழுதித் தாசில்தாரின் ஒப்பத்துக்காக அனுப்பி வைத்தான்.

பத்து நிமிடங்களுக்குப் பிறகு தாசில்தாரின் அழைப்பு வந்தது. கிட்டியின் கைகால்கள் குளிர்ந்து விட்டன. ராமராயிடம் சென்று, 'இதற்கு என்ன பதில் சொல்ல வேண்டும்?' என்று கேட்டான். ராமராய் அவனை உற்சாகப்படுத்திக் கூறினான். 'தாசில்தாருக்கு என்ன தெரியும், அவன் தலை! அவன் ஏதாவது சொன்னால், எல்லாம் முறைப்படிதான் செய்திருக்கிறேன் என்று சொல்லி விடு. கிளியர் கேஸ். நீ இப்போது விட்டுக் கொடுத்தால் அப்புறம் அவன் உன் தலையில் கறுப்பு மிளகுவைத்து அரைப்பான்.'

கிட்டி தாசில்தாரின் அறையில் நுழைந்தான். தாசில்தார் ஆத்திரமாக உட்கார்ந்திருந்தான். கிட்டி அவர் மேஜை மேல் கைவைத்துக் கேட்டான். 'என்ன எஜமான்?'

'முதலில் மேஜை மீது வைத்திருக்கிற கையை எடு,' என்று அவர் உரக்கக் கத்தினார்.

கிட்டி சட்டென்று கையை அகற்றிவிட்டு 'அடென்ஷனில்' நின்றான்.

தாசில்தார் நேரடியாய்க் கேட்டார்: 'எவ்வளவு லஞ்சம் வாங்கினாய்?'

'இல்லை எஜமான்...'

'அட துரை மகனே, என் கேள்விக்குப் பதில் சொல்கிறாயா?'

கிட்டி திகைத்துப் போய் பேசாமல் நின்றான்.

'நோட் எழுதி இருக்கிறானாம் நோட். உன்னை எவன் மெட்ரிக்கில் பாஸ் போட்டான், எவன் உன்னை வேலையில் சேர்த்துக் கொண்டான். போ, போய்க் கழுதை மேய்த்துக் கொண்டு இரு.'

'ஏன் எஜமான், நான் ஏதாவது தப்பு...'

'தப்பு இல்லை, கழுதை, லஞ்சம் வாங்கினாயா இல்லையா? இந்தப் பார்ட்டியின் அந்தப் பாயின்டை நோட்ஸில் ஏன் எழுதவில்லை?'

கிட்டிக்கு ஒன்றும் விளங்கவில்லை. பிரமை கொண்டவன் போல், 'தப்பு, எஜமான்,' என்றான்.

தாசில்தாரின் சினம் சிறிது தணிந்தது: 'கிருஷ்ணா, நீ புதியவன். வேறு எவனுக்காவது இந்த இடத்தைக் கொடுத்தால் சர்வநாசம் செய்துவிடுவான் என்று எண்ணித் தான் உன்னை இந்த இடத்தில் போட்டேன். பொறுப்பு ஏற்று இரண்டுநாள் ஆகவில்லை, நீயும் அதே பாடம் கற்க ஆரம்பித்துவிட்டாயே. காசு தின்ன வேண்டாம் என்று நான் சொல்லவில்லை. ஆனால் சட்டப்படி சாப்பிடு. சாப்பிடுவதை ஜீரணம் செய். இன்று சாப்பிட்டதை நாளைக்கு வெளியில் எடுக்கும்படி ஆவதால் என்ன பயன்? முதலில் வேலையைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும்; பிறகு என்ன வேண்டுமானாலும் செய்துகொள்.'

ராமராய் கற்பித்த சொற்கள் கடவுள் அருளாலும் தாசில்தாரின் கோபம் காரணமாகவும் அவனுக்கு மறந்து விட்டான். ஒன்றும் சொல்லாமல் தாசில்தார் கூறியவாறு நோட் தயாரித்து அவருக்கு முன்னால் வைத்தான். தாசில்தார் அவனுடைய ஸ்பெல்லிங் அறிவைக் குறை கூறியபடி கையெழுத்திட்டார்.

கிட்டி அவமதிக்கப்பட்டவனாய் வெட்கத்தால் சிவந்த முகத்தோடு தன் மேஜையை நோக்கிப் போனான். ராமராய்க்குத் தன் முகத்தைக் காட்டவே அவன் விரும்பவில்லை. அவன் சொன்ன சொற்கள் ஒருபுறம் இருக்க, தன் வாயாலேயே தப்பு என்று ஒப்புக் கொண்டது, தாசில்தார் சொல்படி நோட் எழுதியது, அவருடைய கோபம் குன்றுவதைக் கண்டு அவனுக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது - இந்த அவனுடைய பலவீனங்கள் அவனுக்கு முன்னால் ஆடியபடி அவனை வெட்கமுறச் செய்து கொண்டிருந்தன.

கிளார்க்குகள் எல்லாரும் தங்கள் காகிதங்களில் மூழ்கியவர்கள் போலப் பாசாங்கு செய்தபடி தங்கள் புன்சிரிப்பை மறைக்கத் தலைகுனிந்து உட்கார்ந்திருந்தார்கள்.

அன்று மாலை கிட்டியின் கர்வம் முழுவதும் தூள் தூளாயிற்று.

'ஆம்! வேலை சரியாக நடக்காவிட்டாலும் இந்த வசவுகளிலிருந்து தப்ப வேண்டும். கடைசியில் எனக்கே இயல்பான பணிவால் வேலை நடந்துவிடும். ஆனால் சகிக்க முடியாத இந்த வசவுகள் இனி காதில் விழக்கூடாது. வசவுகள் ஊசிபோல் குத்துகின்றன,' என்று எண்ணினான் அவன்.

## 7. கங்கவ்வாவின் கவலை

கங்கவ்வா அன்று மாலை ஆறு மணிக்கு தேசாயின் வீட்டுக்குப் போனாள். தேசாயின் மூத்த மகன் அச்சுதன் காமர்ஸ் படிப்புக்காகப் பம்பாய்க்குச் சென்றது முதல் அவருடைய இரண்டாவது பிள்ளை வசந்தராவுக்கு வீட்டு விவகாரங்களில் மிகுந்த ஈடுபாடும் பொறுப்பும் உண்டாகி விட்டன. வசந்தராவுக்குக் கங்கவ்வாவும் அவளுடைய பிள்ளையும் என்றால் பிடிக்காது. ஆண்டுதோறும் கிட்டி தேறிக்கொண்டே போய் முதல் முயற்சியிலேயே மெட்ரிக் பாஸ் செய்துவிட்டு வசந்தனைத் தாண்டிச் சென்றுவிட்டான் என்பதும் இதற்கு ஒரு காரணம். 'நமக்கு கிட்டியும் வசந்தனும் ஒன்றுதான்' என்று தேசாய் கிட்டியிடம் சொல்வதைக் கேட்கிற வசந்தனுக்குத் தன் தந்தைக்கு தன்னைவிடக் கிட்டியிடம் வாத்சல்யம் அதிகம் என்று தோன்றும். இதைத் தவிர, கிட்டியின் தாயார் ரகசியமான முறையில் சிலசமயம் பத்தும் பதினைந்துமாக வாங்கிக் கொண்டு போகிறாள் என்றும் அவனுக்குத் தெரிந்துவிட்டது. வசந்தராவுக்கு ஸ்டன்ட் படங்களைப் பார்ப்பதில் ஆர்வம் அதிகம், ஆனால் அன்று தகப்பனார் சில்லறை கொடுக்க மறுத்துவிட்டார். அந்தத் துயரத் தால் வாழ்க்கையே வீண் என்று அவனுக்குப்பட்டது. அவன் முற்றத்தில் ஈக்களை ஓட்டிக்கொண்டு பாயில் உட்கார்ந்திருந் தான். அந்த நேரத்தில்தான் கங்கவ்வா உள்ளே நுழைந்தாள்.

வசந்தராவ் துக்கத்தோடு சொன்னான்: 'வாருங்கள். எத்தனை ரூபாய் வேண்டும்? கொல்லைப் பக்கம் நாங்கள் பணம் காய்ச்சி மரம் வளர்க்கிறோம்.'

கங்கவ்வாவின் உள்ளத்தில் சொற்கள் குத்தின. அவள் வேகமாக உள்ளே சென்றாள். தேசாய் நிம்மதியாகத் தாம்பூலம் மென்று கொண்டிருந்தார். அவருக்கு முன்னால் நின்று அவள் உரத்துச் சொன்னாள்: 'ஏன் கோபண்ணா, நாங்கள் உங்கள் ஆதரவில் இருக்கிறோம் என்பது உண்மைதான். ஆனால் நான்

கேட்கும் போதெல்லாம் நீங்கள் பணம் தருகிறீர்கள் அல்லவா, அது யாருடைய பணம்? உங்கள் பிள்ளையிடம் அதைக் கொஞ்சம் சொல்லி விடுங்கள்.'

எல்லாவற்றையும் கேட்டுத் தேசாய் மிகவும் வருத்தமுற்றார். அவனைக் கூப்பிட்டுத் திட்டினார், அவன் சினிமாவுக்குப் போக மூன்றணா கிடைக்காததைப் பற்றிப் பிதற்றியவாறு போய் விட்டான். கங்கவ்வா சொன்ன சொல் அவனுடைய செவியில் ஒலித்துக்கொண்டு இருந்தது: 'யாருடைய பணம்?' இந்தக் கேள்வியின் பொருள்பற்றி அவன் யோசிக்கலானான்.

கங்கவ்வா இந்நேரத்தில் வந்ததற்கு முக்கியமான காரணம் இருக்க வேண்டுமென்று என்று தேசாய்க்குத் தெரியும். சுவர் மீது முதுகைச் சாய்த்துக் கொண்டு கங்கவ்வா சொல்வதைக் கவன மாய்க் கேட்டார். அவருக்குக் கங்கவ்வாவிடம் மிகவும் மரியாதை இருந்தது. ஆனால் காரணம் இல்லாமல் அந்தக் குடும்பத்து விஷயங்களில் கைவைக்க அவர் விரும்பவில்லை; ஏனென்றால் ஹோமம் செய்யப் போய்க் கையை எரித்துக் கொண்ட கதை ஆகிவிடக் கூடாதே என்று அவருக்கு எப்போதும் அச்சம். கங்கவ்வா தன் பிரச்னைகள் எல்லாவற்றையும் அவர் தலையில் போடுவது வழக்கம். அவளுக்கு மிக முக்கியமான காரியங் களையே அவர் செய்ய விரும்பினார். கிட்டி முன்னைப் போல் என்னோடு பேசுவதில்லை, கிட்டி ரொம்பக் காசு செலவு செய்கிறான், கிட்டி இரவுநேரம் கழித்து வீட்டுக்குத் திரும்புகிறான் என்பது போன்ற கங்கவ்வாவின் சின்னச் சின்னப் புகார்களைக் கேட்க அவர் விரும்புவதில்லை. தவிர, தேசாய் ஒரு காரியத்தை மேற்கொண்டால் அதைப் பூர்த்தி செய்த பின்னரே மூச்சுவிடுவார். இயன்றவரை அவர் எந்தக் காரியத்தையும் ஏற்பதில்லை. மாற்றார் விவகாரங்களில் அநாவசியமான ஈடுபாடு கூடாது...என்று எண்ணி முடிந்த வரை ஒதுங்கியே இருப்பார். அவர் விரும்பா விட்டாலும் கங்கவ்வா தன் பிரச்னைகளை அவர் தலையில் சுமத்தியவாறு இருந்தாள்.

'கோபண்ணா, கிட்டி இந்த மாதம் எவ்வளவு ரூபாய் கொடுத்தான்?'

'கோட் தைக்க வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருந் தான். ஐந்து ரூபாய் கொடுத்திருப்பான்.'

'ரொம்பச் செலவு செய்கிறாய் என்று ஒரு தடவை புத்தி சொல்லுங்கள். வீண் செலவு அதிகமாய்ச் செய்ய ஆரம்பித்து இருக்கிறான்,' என்றாள் கங்கவ்வா.

ஆண் பிள்ளைகளின் பிரச்னைப் பற்றி அறிந்திருந்த தேசாய் சற்று சினந்து சொன்னார்: 'உங்கள் பிள்ளை முட்டாள்

பட்டிக்காட்டானா என்ன? நல்ல உத்தியோகத்தில் இருக்கிறான், காசு சம்பாதிக்கிறான். இப்போது பெரியவனாகவும் வளர்ந்து விட்டான். இம்மாதிரி விஷயங்களை நீ சொல்லக் கூடாது. ஒரு வேளை நீ சொன்னால் நடக்கவும் கூடும். நம்வாயால் இம்மாதிரி விஷயங்கள் பேசவே கூடாது. 'ப்ராப்தே து ஷோடசே வர்ஷே புத்ரம் மித்ரவதாசரே.' (பதினாறாவது வயதை அடைந்த புத்திரனோடு மித்திரன் போலப் பழகவேண்டும்.)'

இந்தப் பேச்சுத் தோரணையைக் கங்கவ்வாவினால் தாள முடியவில்லை. குழம்பியவளாய்க் கூறினாள்: 'அப்படியானால் நடப்பதைப் பேசாமல் பார்த்துக் கொண்டு இருக்கும்படி சொல்கிறீர்கள்.' அவளுக்கு விக்கல் வந்துவிட்டது.

அவளுடைய இந்தக் கோலத்தைக் கண்ட தேசாய், அவள் மனத்தில் வேறு ஏதோ விஷயம் இருக்கிறது என்று புரிந்து கொண்டார். இந்தக் குடும்ப விவகாரங்களில் தலையிடக் கூடாது என்ற எண்ணத்தால் தேசாய் கொஞ்ச நேரம் மௌனமாக இருந்தார். ஆனால் கங்கவ்வா சேலைத் தலைப்பில் முகம் புதைத்துக் கொண்டதால் மௌனமாக இருக்கமாட்டாமல், 'ஏன், என்ன நடந்தது?' என்று கேட்டார்.

'என்ன நடக்க வேண்டும்? வழக்கம் போல் ஆபீசிலிருந்து கோபமாக வந்தான். ராத்திரி பாட்டு கேட்கப் போகிறேன் என்றான். போகச் சொன்னேன்...' மேலே கங்கவ்வாவினால் பேச முடியவில்லை.

தேசாய் அவளுக்கு ஆறுதல் கூறிப் பாக்கி விவகாரம் கேட்டார்.

சங்கீத சபை ஏற்பாடு கங்கவ்வாவின் தம்பி ராகப்பா வீட்டில் நடந்து கொண்டிருந்தது.

நடந்தது இதுதான் : கிட்டியின் ஆபீசுக்கு வந்து அழைப்பு கொடுத்த போது அவனுக்கு ஒன்றும் தோன்றவில்லை. பாட்டுக்கும் அவனுக்கும் அவுரங்கஜீப் உறவு. ஆனால் ராகப்பா புறப்படும் போது, 'தாசில்தாரும் சங்கீத சபைக்கு வருகிறார். உன்னை அவருக்கு தனிப்பட்ட முறையில் அறிமுகம் செய்து வைக்கிறேன்,' என்று கூறிவிட்டுப் போனான், ஆகையால் கிட்டியின் மனத்தில் அங்கே போக வேண்டும் என்ற ஆவல் உண்டாகிவிட்டது. வசவுக் கலையில் வல்லுநரான தாசில்தாரோடு பழக்கம் ஆகிவிட்டால், ஒரு வேளை வசவுப் பீரங்கியிலிருந்து தப்ப முடியலாம் என்று எண்ணினான் அவன். ராகப்பா மாமா அவனுக்குக் கடவுள் போல வந்து சேர்ந்தார்.

புதிய இடத்துக்கு மாறுதலான பின் வீட்டிலும் கிட்டியின் நடத்தை மாறிவிட்டது. காலையில் நேரம் கழித்து எழுந்திருப்பான், மாலையில் உலாவச் சென்று தாமதமாய்த் திரும்புவான், வந்ததும் பசி இல்லை என்று சாக்கு சொல்லி இரண்டு கவளம் விழுங்கிவிட்டு படுக்கையில் விழுந்து விடுவான். அவன் இம்மாதிரி அடாவடித்தனம் ஆரம்பித் திருந்தான். வெளியில் இருந்து நாலு காசு வந்ததால் வாய் திறவாமல் தன் போக்கில் சென்று கொண்டிருந்தான். வீட்டில் இப்போது பேசுவதையே குறைத்துக் கொண்டுவிட்டான். முன்பிருந்த சிறுபிள்ளைத்தனம் இப்போது போய் விட்டது. இக்காரணத்தால் வீட்டில் மௌன சாம்ராஜ்யம் நிலவியது. முன்னைப் போல், சாப்பிடும் போது அவன் தாயிடம் பேச்சு கொடுப்பதில்லை, அவளிடம் ஏதோ மறைத்து வைத்திருப்பது போல், கிட்டி வீட்டில் முற்றிலும் பேசாமல் இருந்ததற்குக் காரணம், தன்னுடைய மேல் வரும்படி பற்றி அம்மாவுக்குத் தெரிந்துவிட்டால் அவள் அவனிடம் பணம் கேட்க ஆரம்பித்துவிடுவாள் என்பதாக இருக்கலாம்; அல்லது... அல்லது... வெட்கம் காரணமாக இருக்கலாம்.

இதனால் கங்கவ்வாவுக்கு மனவேதனை உண்டாயிற்று. மிகுதியான அலுவல் காரணமாக ஏற்பட்ட களைப்பாக இருக்கலாம் என்று எண்ணிச் சில நாள் மௌனமாக இருந்தாள். இறுதியில் தன் தாய்மையின் உரிமையோடு கூறினாள்: 'கிட்டி, தாசில்தார் உன் வேலையைப் பற்றி என்ன சொல்லுகிறார்? அவருடைய மனசு கோணாமல் நடந்து கொள், குழந்தை. இன்றைக்கு 'அநாரஸ்' ரொம்ப நன்றாக விழுந்திருக்கிறது. சுடச்சுட நாலு செய்து தருகிறேன். அவருக்குக் கொடுத்துவிட்டு வா.'

கிட்டிக்கு இந்தமாதிரி வீண்பேச்சுகள் பிடிப்பதில்லை. அம்மாவின் புத்திக்கு எட்டாத விஷயங்களில் அவள் ஏன் தலையிடுகிறாள் என்று அவனுக்கு எரிச்சலாக இருக்கும். நான் பெரியவனாகி விட்டேன் என்று அம்மாவின் புத்திக்கு ஏன் எட்டவில்லை என்று அவனுக்குத் கோபம். அம்மா தாசில்தாரின் பெயரைச் சொன்னாலே, 'என் முயற்சியால் தானே உனக்கு இந்த வேலை கிடைத்தது,' என்று அவள் காட்டிக்கொள்வது போல் அவனுக்குத் தோன்றும். இதனாலேயே அவமதிக்கப்பட்டது போன்ற கோபத்துடன் அவளிடம் கத்துவான். பிள்ளை ஆபீசில் இருந்து வாடிவதங்கி வருவது கங்கவ்வாவுக்குத் தினசரி அனுபவம் ஆகிவிட்டது.

கங்கவ்வாவினால் இதைப் பொறுத்துக் கொள்ள முடியும், ஆனால் பத்து ஆண்டுகள் அவள் நீர் பாய்ச்சி வளர்த்த மரம் கனிதரும் தறுவாயில் ராகப்பா அதைக் கவர வந்ததை அவளால் பொறுக்க முடியாது, மன்னிக்க முடியாது.

அன்று மட்டும் கிட்டி அம்மாவை ஏமாற்றி வெற்றி பெற்றுவிட்டான்.

ராகப்பாவின் வீட்டுக்குப் போவதாய்க் கூறினால் அம்மா சீறிவிடுவாள் என்று அவனுக்கு வெகு நன்றாகத் தெரியும், ஆகையால் அவளுடைய சினம் தணியும்வரை பேசாமல் இருந்தான். அதெல்லாம் முடிந்தபின், துணிகள் இருந்த டிரங்குப் பெட்டியைப் புரட்டிக்கொண்டே சற்று அதிருப்தி யான குரலில் உரைத்தான்: 'தாசில்தார் கூடக் கச்சேரிக்கு வருகிறார், தனிப்பட்ட முறையில் அவரோடு பழக்கமாகும் என்று எண்ணித்தான் வருவதை ஒப்புக்கொண்டேன். உன்னுடைய ராகூவின் பெண்ணுடைய கழுத்தில் மணமாலை போட நான் போக வில்லை, வீட்டுக்கு வந்ததும் உன்னுடைய இந்த சங்கீதம், பொழுது விடிந்ததும் உன்னுடைய இந்தக் கூப்பாடு. போட்டுக் கொள்ள இஸ்திரி செய்த கோட் இல்லை. என்ன போட்டுக் கொண்டு போவது? சரி, இந்த அழுக்குக் கோட்டைப் போட்டுக் கொண்டு தாசில்தாருக்கு முன்னால் போய் நிற்கிறேன்.'

கங்கவ்வா சிறிது நேரம் மலைத்துவிட்டாள். அம்மாவை வெற்றிகரமாக ஏமாற்றிவிட்டோம் என்கிற ஆனந்தம் கிட்டிக்கு. புதிய சீட்டுக்குப் போனவுடன் அவன் கொஞ்சம் வாக்குச் சாதுரியம் கற்றுவிட்டான். அவளுக்குச் சினமூட்டி பிறகு அவளுடைய வாயை மூடுவது என்பது சாதாரணமான வெற்றி அல்ல; ஆனால் இதற்குள் கங்கவ்வா நிதானித்து விட்டாள்.

'தாசில்தாரோடு பழக்கம் செய்து கொள்ள இந்த ராகூ எதற்கு? வைகுண்டம் போவதற்கு நொண்டி தாசய்யா[1] வின் உதவி தேவை. நான் இத்தனை நாளாய் சொல்லிக் கொண்டு இருக்கிறேன்: கிட்டி, தாசில்தார் வீட்டுக்குப் போய்வா, அவருக்கு ஏதாவது வேண்டுமோ என்று கேட்டுவா. பழைய பழக்கத்தை விடுவது நல்லதில்லை என்று படித்துப் படித்துச் சொல்கிறேன். நான் சொல்வதை யார் கேட்கிறார்கள்? இப்போது தாசில்தாரோடு பழக்கம் செய்து கொள்வதற்கு ராகப்பா மாமா வேண்டுமாக்கும்.'

'அம்மா, உனக்குத் தெரியாத விஷயங்களைப் பற்றி ஏன் பேசுகிறாய்? இப்போது இருக்கிற தாசில்தார் வேறே. அங்கடி தாசில்தார் மாற்றல் ஆகி ஐந்துமாதம் ஆகிவிட்டது.'

கீழே விழுந்திடப் போவதாய்த் தோன்றியது கங்கவ்வாவுக்கு; அவளுடைய வாயிலிருந்து ஒரு சொல்லும் வெளிப்படவில்லை.

...அங்கடி தாசில்தார் கங்கவ்வாவின் கணவருடைய நண்பர். கணவர் இருந்த காலத்தில் பெரிய மனிதரின் மனைவி என்ற

---

1. இரந்துண்டு பிழைப்பவன்

முறையில் அவள் தாசில்தாருடைய மனைவியோடு சமத்துவமாக அல்ல, சற்று பெருமையாகப் பழகுவது வழக்கம். அப்போது அவர் தாசில்தாரும் ஆகவில்லை. பிறகு அவர் வேலைமாற்றம் ஆகிப் பலமுறை தார்வாருக்கு வந்தார் ஆனாலும் அவளுக்கு அவர் முன் போகப் பிடிக்கவில்லை; ஏன் எனில் அவளுக்கு நல்ல காலமில்லை. கிட்டி மெட்ரிக் பாஸ் செய்த பிறகு, அவனுக்கு வேலை செய்துவைக்க வேண்டும் என்பதற்காக தன்னுடைய மான அவமானத்தை ஒருபுறம் வைத்துவிட்டு, பழைய தொடர்புகளை நினைவூட்ட பத்து வருடங்களுக்கு அப்பால் தாசில்தாரின் வாயிலை மிதித்தாள். அவரும் பழைய நட்பை நினைத்து மகிழ்ச்சியாக அவளுடைய வேண்டுகோளை நிறைவேற்றினார். கங்கவ்வா அவரிடம் மிக நன்றியுணர்ச்சியோடு இருந்தாள். அச்சமயத்தில் தாசில்தாரின் பன்னிரண்டு வயதுப் பெண் நீலவ்வாவுக்கு வரன் தேடிக் கொண்டிருந்தார்கள். இந்தப் பெண் பிறந்த நேரத்தில் கங்கவ்வாவின் கணவர் மிகவும் முயற்சி எடுத்துக்கொண்டு கைப்பணம் செலவு செய்து சிவில் சர்ஜனை வீட்டுக்கு அழைத்து வந்தார். தாசில்தாரின் மனைவி கங்கவ்வாவுக்கும் இவ்விஷயத்தை ஞாபகப்படுத்தித் தன் நன்றி உணர்ச்சியைத் தெரிவித்துக் கொண்டாள். இதனால் கங்கவ்வாவின் மனத்தில் இந்தச் சிறுமியிடம் ஒரு பாசம் உண்டாகியிருந்தது. நீலவ்வாவுக்கு வரன் முடிவானதும் அவளுக்காக ஒரு நல்ல ஜோடு தயாரிக்க வேண்டும் என்று கங்கவ்வாவுக்கு ஆசை. அவளுக்கு முகூர்த்த நாள் முடிவானதும் தன்னிடம் சொல்லும்படி அவள் கிட்டியிடம் சொல்லி வைத்திருந்தாள். இரண்டொரு முறை அவனிடம் கேட்டாள்; இன்னும் தெரியவில்லை என்று பொரிந்துவிட்டான். அப்பால், 'இனி நீ கேட்கவே வேண்டாம், எனக்குத் தெரிந்தவுடனே உனக்குச் சொல்கிறேன்,' என்று அவளைத் தேற்றினான். ஆனால் இவனோ அவருக்கு ஊர்மாற்றல் ஆனதைக் கூடச் சொல்ல வில்லை. குறைந்தபட்சம் இந்தத் தருணத்தில் கங்கவ்வா நெய்யில் அநாரஸ் வறுத்து அவர் வீட்டுக்கு அனுப்பி இருப்பாள். அவளும் தன்னகங்காரம் காரணமாக அன்று போய் வந்த பிறகு அவர் வீட்டுக்குப் போகவில்லை என்பதும் மெய்யே. ஆனால் ஊர் மாறுதல் காரணம் காட்டி அவருடைய வீட்டுக்குச் சென்று கொஞ்சம் இனிப்பு முதலியவை கொடுத்துவிட்டு வந்திருந்தால் நன்றாக இருந்திருக்கும். ஆனால் இவன் அவருக்கு மாறுதல் ஆனதை அவளிடம் கூறாமல் இருக்கலாமா? இந்த நம்பிக்கைத் துரோகம் காரணமாக கங்கவ்வாவினால் மேலே ஒன்றும் பேசவே முடியவில்லை. அவளுடைய மனசு எரிந்துவிட்டது.

அம்மாவோடு சண்டை போட்டு அவளுடைய வாயை அடைத்துவிட்டது பற்றிக் கிட்டிக்கு மனத்துக்குள் பெருத்த மகிழ்ச்சி.

தேசாயிடம் கங்கவ்வா எல்லாவற்றையும் தன் கண்ணோட்டத்தில் சொன்னாள்; ராகப்பா பற்றித் தன்னுடைய இரண்டு முக்கியமான அச்சங்களையும் தெரிவித்தாள். அவன் கிட்டிக்குத் தீய பழக்கங்களுக்கு ஆளாக்கிவிட்டால் என்ன செய்வது? கிட்டியின் காதுகளில் ஓதி அவன் தன் மகளைக் கிட்டிக்கு மணம் செய்து வைத்துவிட்டால் விளைவு என்ன ஆகும்?

இவ்வளவு பேச்சும் நடந்தபின் வேணுபாய் வேலைக் காரியிடம் ஏதோ சொல்வதற்காகப் பின்புறம் போனாள். இந்த வாய்ப்பைக் கண்டு கங்கவ்வா தேசாயிடம் உரைத்தாள்.

'கோபண்ணா, ஒரு விஷயம் சொல்கிறேன். யாரிடமும் சொல்லாதீர்கள். இந்த விஷயம் நம் இருவரோடு இருக்கட்டும். ராகப்பாவின் பெயரைக் கேட்டாலே என் உடம்பை நெருப்பில் இட்டாற் போலிருக்கிறது. ஆனாலும் அவனுடைய பெண்ணுக்குக் கலியாணம் ஆகவேண்டும், ஆனால் என் வீட்டில் அல்ல, என்னுடைய விருப்பம் இதுதான். ஏன் என்ன கேட்பீர்கள். இத்தனை நாட்களாய் நாம் மறைத்து வைத்திருந்த விஷயத்தைச் சொல்லி விடுகிறேன். ஏனெனில் நெருக்கடி நிலைமை நம்வீடு வரை வந்துவிட்டது. நம் ராகூவின் கல்யாணம் பற்றி உங்களுக்குத் தெரியாது. கலியாணத்துக்கு முந்தியே அவர்களுக்குப் பழக்கம். பிறகு கல்யாணப் பேச்சு ஆரம்பமானதும் அவன் மறுக்கத் தொடங்கினான். அப்போது அந்தப் பெண்ணின் தாயார் என் அகத்துக்காரர் கால்களில் விழுந்து கெஞ்சினாள்: 'என் மகளின் மானத்தைக் காப்பாற்றுங்கள்,' என்று முறையிட்டாள். இதைக் கேட்டதும் அவர் போய் ராகூவைப் பிடித்துக் கேட்டார். 'பேசாமல் கலியாணம் செய்துகொள், இல்லாவிட்டால் சவுக்கால் தோலை உரித்து விடுவேன். கழுதைமேல் ஏற்றி ஊர்வலம் விடுவேன்' என்று இவர் மிரட்டியதன் பேரில் அவன் இந்தப் பெண்ணை மணம் செய்து கொள்ளத் தயாரானான். இந்த மாதிரி ஆளின் மகளை நான் என்வீட்டில் சேர்த்துக் கொள்ள விரும்பவில்லை அண்ணா?'

இதன் பேரில் தேசாய் கூறினார்: 'கங்கவ்வா, இவ்வளவு காலமும் இந்த விஷயத்தை உங்கள் வயிற்றிலேயே ஒளித்து வைத்திருந்தீர்கள். இனியும் யாரிடமும் சொல்ல வேண்டாம். உங்களோடு இருக்கட்டும்.'

எட்டி இருக்க வேண்டும் என்று எவ்வளவு விரும்பினாலும் கிட்டிச் சென்று சேற்றில் சிக்குவதைத் தேசாய் உணர்ந்தார். இந்த

வீட்டின் விவகாரங்களிலிருந்து மிக விரைவில் விடுதலை பெறவேண்டும் என்று அவர் நினைக்கலானார்.

இதற்குள் வேணுபாய் உள்ளே வந்தாள். ஆகையால் அப்பேச்சு அங்கேயே முடிவுற்றது. இதர பல விஷயங்களைப் பேசிவிட்டுக் கங்கவ்வா தன் வீட்டிக்குத் திரும்பிவிட்டாள்.

## 8. பாட்டுக் கச்சேரி

கிட்டி பாட்டுக் கச்சேரிக்கு இஸ்திரி செய்யாத கோட் போட்டுக் கொண்டு போக வேண்டியதாயிற்று. அந்தக் கோட்டுக்கு அனுகூலமாகத் தாசில்தாருக்கு முன்னிலையில் பணிவாக நடந்து கொள்ளலாம் என்று எண்ணினான் அவன். பாட்டுக் கச்சேரி எப்படி இருக்கும் என்பது கிட்டியின் கற்பனைக்கு எட்டாத சங்கதி. ஓர் அறையில் தானும் ராகப்பா மாமாவும் தாசில்தாருக்கு எதிரில் உட்காரப் போகிறோம் என்று அவன் கற்பனை செய்து கொண்டிருந்தான். ராகப்பா இவனுடைய குணநலனைப் போற்றிப் பேசுவார், தாசில்தார் அதைப் புன்னகை பூத்த முகத்தோடு கேட்பார். இவனோ தலைகுனிந்து விநயமாய் அவருடைய சொற்களைக் கேட்டுக் கொண்டிருப்பான். பாட்டுக் கச்சேரி என்றால் ஒரு பாடகரும் இருக்க வேண்டும்; ஆனால் கிட்டியின் கற்பனையில் அவருக்கு இடமே இல்லை. ஏழுமணிக்கு கிட்டி மாமாவின் வீட்டை அடைந்தும் அவனுக்கு ஆரம்பத்திலேயே ஏமாற்றம் உண்டாகிவிட்டது. அவன் அங்கே போய்ச் சேர்ந்தும் வரவேற்க வேண்டிய மாமாவே வீட்டில் இல்லை. தாசில்தாரும் இன்னும் வரவில்லை; யாரும் அவனை உள்ளே வருமாறு அழைக்கவில்லை. வேறு வழியின்றி சப்பலை வெளியே போட்டுவிட்டு உள்ளே நுழைந்தான்.

முற்றும் முழுவதும் ஒரு சிவப்பு விரிப்பு விரிக்கப் பட்டிருந்தது. விரிப்பு இல்லாத ஒரு மூலையில் ஒரு பெட்ரோமாக்ஸ் வைக்கப்பட்டிருந்தது. அதைச் சுற்றிப் பூச்சிகள் வளைத்துக் கொண்டிருந்தன. பட்டுத் தலைப்பாகையும் கம்பளிக் கோட்டும் அணிந்த ஆறு ஏழு நாகரிகமான கனவான்கள் விரிப்பு ஓரமாய் போட்டிருந்த நாற்காலிகளில் அமர்ந்திருந்தார்கள். எல்லோருமே அரட்டை அடித்துக் கொண்டிருந்தார்கள். பெட்ரேமாக்ஸ் காஸின் சூடு காரணமாகச் சிலருக்கு வேர்த்துக் கொட்டிக் கொண்டிருந்தது. விரிப்பின் மறுபுறம் ஏழு முதல் பன்னிரண்டு வரை வயதுள்ள சிறுவர்கள் வட்டம்போல் உட்கார்ந்து பள்ளி ஆசிரியர்கள், விளையாட்டுகள் பற்றித் தணிவான குரலில் உரையாடிக்கொண்டிருந்தார்கள்.

கிட்டி உள்ளே நுழைந்ததும் தான்தோன்றிகளாய், உணர்ச்சி மரத்தவர்களாய், செல்வத்தாலும் தற்பெருமையாலும் மதம் கொண்டவர்களாய் வீற்றிருந்த கனவான்கள் ஒரு முறை விழிகளை உயர்த்திப் பார்த்தார்கள்; அவன் மீதே நிலைத்த பார்வையோடு தங்கள் பேச்சைத் தொடர்ந்தார்கள். சிறுவர்களோ இவனைப் பார்க்கவே இல்லை. ஓடோடி வந்து தோளோடு தழுவி வரவேற்கிற மாமாவோ எங்கோ மறைந்து போயிருந்தார். பெரிய மனிதர்கள் எல்லோருமே அவனை விட வயதால் பெரிய மனிதர்கள், அவனைவிட நன்றாக உடை அணிந்தவர்கள், ஆகையால் அந்தப் பள்ளிச் சிறுவர்களோடு சேர்ந்து உட்காருவதே நல்லது என்று கிட்டி இறுதியில் முடிவு செய்தான். சிறுவர்களின் கூட்டத்தில் சென்று சிறுவன் ஒருவனை ஒருபுறமாகத் தள்ளிவிட்டு, மற்றொருவனின் மார்பில் முழங்கையால் இடித்து மூன்றாமவனின் கைமீது கால் வைத்து, நாலாமவனின் மடியில் தடால் என்று விழுந்தான். இந்தக் கலவரத்தில் கை நசுக்கப் பட்டவன் ஏழு வயது பாலகன். அவன் வெகுபலமாய்க் கத்தினான். நாற்காலிகளில் அமர்ந்திருந்த தேவதைகள் கிட்டி மீது ஒரு கருணை நோக்கு செலுத்தினார்கள், தங்கள் சல்லாபத்தின் தங்களை இழந்தார்கள். பூமியன்னை தன்னை அப்படியே விழுங்கி விட்டால் நல்லது என்று கிட்டிக்குத் தோன்றியது. சிறுவர்கள் கும்பலில் எல்லாரையும்விட அவனே நெட்டை. ஆகையால் மழையில் நனைந்த பூனைகள் போல் அவர்கள் தங்களால் முடிந்த அளவு தங்களைச் சுருக்கிக் கொண்டு உட்கார்ந்தனர்.

இவனால் கொடுக்கப்பட்ட கஷ்டத்தைப் பொறுத்துக் கொண்ட சிறுவர்களின் ஆலோசனையைச் சற்று நேரம் கேட்ட பிறகு அவன் தனக்கு இடம் பண்ணிக் கொண்டான். பிறகு அவன் தன் கண்களை முற்றத்தில் நாலு பக்கங்களிலும் செலுத்தினான். சுவர்களில் பொருத்தியிருந்த சித்திரங்களையும் கூரையிலிருந்து தொங்கிய விளக்குத் தண்டுகளையும் மிகவும் கவனமாய்ப் பார்த்தான், பிறகு மிகுந்த ஆர்வத்தோடு மூலையில் வைக்கப் பட்டிருந்த தபலா, தம்பூரா முதலியவற்றைப் பார்வை இட்டான். 'அட, தம்பூரா இவ்வளவு பெரிதாக இருக்கிறதே' என்று மனத்தில் சொல்லிக் கொண்டான்.

முற்றத்தின் இரண்டு பக்கங்களில் இரண்டு அறைகள் இருந்தன. இரண்டு அறைகளிலும் மங்கலான வெளிச்சம் இருந்தது, அதனால் பெட்ரோமாக்ஸின் கண்களைக் கூசவைக்கும் வெளிச்சத்தின் காரணமாக முதன் முதலில் அங்கே ஒன்றும் புலப்படவில்லை. பத்து நிமிடங்கள் முற்றத்தில் இங்குமங்கும் பார்த்த பிறகு களைத்துப் போய்க் கிட்டி அறைக்குள்

பார்வையைத் திருப்பிய போது அவனுக்கு ஒரு விசித்திரமான காட்சி தென்பட்டது.

அந்த அறையில் ஓர் அழகி அமர்ந்திருந்தாள். சுவரின் நிழல் இருந்த போதிலும் அவளுடைய உருவம் தெளிவாய்த் தென்பட்டுக் கொண்டிருந்தது. கிட்டி புராணக் கதைகளில் ஊர்வசி, ரம்பை, சித்திராங்கதை முதலிய அழகியரின் பெயரை மட்டும் கேட்டு வைத்திருந்தான். அவளைப் பார்த்து அவன் பெருவியப்பு அடைந்தான். மெய்யாகவே அவள் அழகி.

...இவள் அப்சரசு தானோ? அது கிட்டியின் கற்பனைக்கு அப்பாற்பட்ட விஷயம். கிட்டி அவள் பக்கம் கவனமாகப் பார்த்தான். அவளும் அவன் பக்கம் பார்த்தபடி இருந்தாள். அவள் உடைய பார்வையை எதிர்க்கும் துணிவு அவனுக்கும் உண்டாக வில்லை. வெட்கித் தலை குனிந்தான். ஆனால் மீண்டும் சொர்க்க லோகமுகத்தைப் பார்க்க வேண்டுமெனத் தோன்றியது. அடிக்கடி கண்களை உயர்த்தி அவளை நோக்குவதும் தலையைத் தாழ்த்து வதுமாக இருந்தான். இதுவரை இத்தகைய அழகை இவன் கற்பனைச் செய்ததில்லை. யாருடைய அழகும் கிட்டியை இவ்வாறு கவர்ந்ததில்லை. அவனுடைய கண்களே அவனை மீறி நடக்கலாயின. என்றுமே அவனிடம் இராத அந்த துணிவு அவனுக்குள் தோன்றலாயிற்று. அவளும் இவன் பக்கமே பார்த்த வண்ணம் இருந்தாள்.

ஹுப்பளள்ளி மஹபூப்ஜான் பிரபலமான பாடகி, அழகி. அவள் தன் வழியே நன்கு பண்பட்டவள்கூட. ராகப்பாவின் 'ஸெலக்ஷன்' அற்ப சொற்பமாக இருக்குமா? சென்ற பத்து பன்னிரண்டு ஆண்டுகளாய் அவள் ராகப்பாவின் பாதுகாப்பில் இருந்தாள். சங்கீதத்தில் அவள் ஒரு சிறப்புப்புகழ் பெற்று இருந்தாள். சேஷசாயி நாடகக் கம்பெனி அவளுடைய புகழ்காரண மாக ஏராளமாகப் பணம் ஈட்டியது. அவள் விலகியபின் கம்பெனி புதுப்புது காட்சிகள் தீட்டிய திரைகளையும் புதிய கலைஞர் களையும் தயாரித்தும் அவ்வளவு பணம் சேர்க்க முடியவில்லை. பூனாவின் கந்தர்வ நாடகக் கம்பெனி காரணமாக ஒரு புதிய ரசிகர் குழாம் தோன்றியது. அவர்கள் மஹபூப்ஜானின் பாட்டில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர்கள். நாலைந்து ஆண்டுகளாய் அவள் நாடகங்களில் பங்குகொள்வதை நிறுத்தி விட்டாள். பல கம்பெனிக்காரர்கள் அவளுக்கு மாதம் முன்னூறு ரூபாய் சம்பளம் கொடுத்தார்கள். ஒரு முறை ஒரு விழாவில் நாடகமாடிய போது மஹபூப்ஜான் மிகவும் சிரமப்பட வேண்டியதாயிற்று, அதனால் அவள் நோயுற்றாள். அப்போது அவளுடைய 'எஜமானன்' அவளிடம் சத்தியம் செய்யச் செய்து நாடகங்களில் நடிப்பதைத் தடுத்துவிட்டான். அப்போது முதல் அவள் ராகப்பாவை நம்பி அவனுடைய கட்டளைப்படி அவனுடைய பாதுகாப்பிலேயே

காலம் கழித்து வந்தாள். இப்போது அவளுக்கு நடுத்தர வயது ஆகிவிட்டது. விக்கல் நோய் வாய்ப்பட்டதால் பாடுவதையும் குறைத்துக் கொண்டு விட்டாள். இன்று எஜமானர் வீட்டில் கச்சேரி ஆனதால் காலை முதல் ஏலக்காய் வால் மிளகு தின்று தொண்டையை சுதாரித்துக் கொண்டு பாட்டுப் பாடவந்திருந்தாள்.

ஆனால் தாசில்தாரை அழைக்கச் சென்ற வீட்டு எஜமானன் ஒரு மணி நேரமாகியும் திரும்பி வரவில்லை. அவளுக்கு மிகவும் அலுப்பாக இருந்தது. பாட்டு கேட்க வந்தவர்களுக்கு மகபூப்ஜானிடம் இரண்டொரு வார்த்தை பேச வேண்டும் என்று விருப்பம். ராகப்பா இல்லாததால் அவர்களும் விசேஷமான ஆர்வம் காட்டவில்லை, தங்களுக்குள் வார்த்தையாடலானார்கள். அவளோடு பேச யாருமே இல்லை. அன்று மாலையில் பெரிய ஆபீசர் சபைக்கு வருவார் என்று ராகப்பா அவளிடம் கூறியதால் மஹபூப்ஜான் தன் பட்டாடையை உடுத்தி இருந்தாள். முகத்துக்கு நன்றாக 'மேக்-அப்' செய்து இருந்தாள். கழுத்தில் தங்கச் சங்கிலியோடு சாமந்திப்பூமாலை அணிந்து இளம்பிராயத்தில் பெரிய பெரிய கச்சேரிகளுக்குப் போகும் போது அலங்காரம் செய்து கொண்டது போல் இப்போதும் அலங்கரித்துக் கொண்டு வந்திருந்தாள். நீண்டகாலமாகப் பயிற்சி குறைந்த காரணத்தால் அவளுக்கு வேர்த்துக் கொண்டிருந்தது. இந்த மாதிரி அலுப்பு தட்டிய நேரத்தில் கிட்டி உள்ளே வந்தான். அவனுடைய வருகையால் மஹபூப்ஜானின் அலுப்பு கொஞ்சம் தணிந்தது. அபிநயக்கலையில் விதுஷியான மஹபூப்புக்குக் கிட்டி சங்கடப்பட்டவனாய் இடம் தேடியதும், சிறுவர்களுக்கு இடையில் உட்காரும் போது உண்டான குழப்பமும், உடலைச் சுருட்டிக் கொண்டு அவன் உட்கார்ந்ததும், வாயைப் பிளந்து கொண்டு தம்பூராவை வெறித்துப் பார்த்ததும் காண நாடகத்தில் வரும் விதூஷகன் பாத்திரத்தின் ஞாபகம் வந்துகொண்டு இருந்தது. ஆகையால் உயிரோட்டமுள்ள அந்த நாடகத்தை கண் இமைக்காமல் பார்த்த வண்ணம் இருந்தாள்.

இதற்குள் ராகப்பா தாசில்தாரையும் மற்றொரு நண்பனையும் உடனழைத்துக் கொண்டு வந்துவிட்டான்.

தாசில்தார் வந்ததும் தலையணை மீது சாய்ந்தபடி அமர்ந்திருந்த நாகரிகமான கனவான்கள் நேராக உட்கார்ந்து அவரை வரவேற்றார்கள். தாசில்தார் தம்மோடு வந்த நண்பருக்குப் பெரிய தலையணை கொடுத்துவிட்டுத் தாமும் உட்கார்ந்தார். அவருக்கு அருகிலேயே ராகப்பாவும் அமர்ந்தான், எல்லாப் பிரமுகர்களையும் அறிமுகம் செய்துவைத்தான். ஏற்கனவே தாசில்தாருக்குப் பழக்கமானவர்களிடம் அவர் லேசாகப் போய் சிறுவர்களின் கும்பலுக்கு மேலே தலையை

நிமிர்த்திவிட்டான். தன் பக்கம் மாமாவின் கவனம் எப்போது திரும்பிடுமோ என எண்ணியவனாக அச்சத்தோடும் வணக்கத்தோடும் மாமாவையே நோக்கிக் கொண்டிருந்தான் அவன். ஆனால் தாசில்தாரோ, அவ்வளவு தூரம் அவனை இழுத்துவந்த மாமாவோ சேற்றில் சிக்கிய அந்தத் தாமரையின் பக்கம் பார்வை செலுத்தவில்லை.

அறையில் இருக்கை கொண்டிருந்த தேவசுந்தரியிடம் ராகப்பா உரத்த குரலில், 'மஹபூப், உன்னுடைய சங்கீதம் கேட்கத் தாசில்தார் எழுந்தருளி இருக்கிறார். உன் பாட்டு கேட்கவேண்டும் என்று அவர் பல நாட்களாய்ச் சொல்லிக் கொண்டு இருந்தார். நீ இன்று உன்னுடைய மிக இனியபாட்டுகளைப் பாடவேண்டும்' என்றான்.

மஹபூப் ஜான் வெளிச்சத்தின் பக்கம் கொஞ்சம் நகர்ந்து கொண்டே பெரிய திண்டு மீது வீற்றிருந்த தாசில்தாரின் நண்பருக்குத் தளுக்காக வணக்கம் செய்தாள். இதைக் கண்ட தாசில்தார் தம் உரிமையை நிலை நாட்டு முறையில், 'தாசில்தார் இவர் அல்ல, நான்,' என்றவர் கம்பீரமாய்க் கேட்டார் : 'கந்தருவராகம் வருமோ?'

மஹபூப் ஜான், 'வரும், ஐயா,' (அவையில் ஹிந்துஸ்தான்யில் பேசுவது அவள் கொள்கை) என்று கூறினாள். அவள் மேலும் தாமதிக்காமல் அறையிலிருந்து வெளிவந்து தனக்கெனத் தனியாக விரிக்கப் பட்டிருந்த ஜமக்காளத்தின் உட்கார்ந்தவாறு தலை முட்டாக்கைச் சரிசெய்து கொள்ளலானாள்.

அவள் வெளிச்சத்தில் வந்துவிட்டதால் கிட்டிக்கு அவளுடைய உருவம் மங்கலுற்று விட்டது. காஸ் வெளிச்சத்தில், அவள் முகத்தில் பூசிக்கொண்டிருந்த வண்ணத்தாலும் மறைக்க முடியாத சுருக்கங்கள் ஆங்காங்கு காணப்பட்டன. மிகுதியான அநுபவம் உள்ளவர்களுக்கு அவள் இப்போதும் அழகியாகவே இருக்கலாம். எழிலின் வாயிலிற்குச் சென்று உள்ளே போகலாமா வேண்டாமா என்று யோசிக்கிற கிட்டிக்கு அவளுடைய இப்போதைய அழகு பயங்கரமானதாய்ப்பட்டது. சற்றே பருத்த உடல் என்றாலும் அவளுடைய உறுப்புகள் யாவும் வளத்தோடு இருந்தன. அவளுடைய முகத்தை அருகிலிருந்து பார்த்தகிட்டிக்கு முற்றிலும் ஏமாற்றமாக இருந்தது.

ஆனால், ஐந்து நிமிடங்களுக்கு முந்தி அந்த அரை இருட்டறையின் பொய் வஞ்சனையான சித்திரம் காரணமாக அவனுடைய சிறுபிள்ளைத்தனம் அவனை விட்டு விலகி விட்டது. இப்போதைய இந்த ஏமாற்றம் மீண்டும் அவனைச் சிறுவனாக விடவில்லை.

ஹாலின் வெளிவராந்தாவில் பெஞ்ச் மீது உட்கார்ந்திருந்த ஒரு கிழவன் உள்ளே வந்தான். அங்கே வைக்கப்பட்டிருந்த தம்பூரா, தபலாக்களின் ஸ்வரத்தைக் கவனமாய்க் கேட்டான். தபலாவைச் சரிசெய்யும் சுத்தியவின் ஓசைக்கு இடையிலேயே தேஷ்பாண்டே 'புகையிலே டப்பாக்களில் புகையிலை காலி!' என்று அறிவித்தான். 'ஓ' என்றவாறு ராகப்பா சிறுவர்களின் பக்கம் திரும்பி, பையிலிருந்து இரண்டணா எடுத்து அவர்களின் பக்கம் நீட்டி, 'உங்களுக்குள் யாருக்கு மீசை வளர்ந்திருக்கிறதோ அவன் போய் இரண்டணாவுக்குப் புகையிலை கொண்டுவர வேண்டும்', என்றான்.

இந்தப் பக்கத்திலிருந்து வாத்திய ஓசை கேட்கத் தொடங்கிய தால் சிறுவர்கள் வெளியே போவதற்கு ஒருவர் முகத்தை ஒருவர் பார்க்கலானார்கள். ஒரு பையன் கிட்டியின் பக்கம் ஜாடை காட்டி இவனுக்கு மீசை முளைத்திருக்கிறது என்று கூறினான். கிட்டி மலைப்புண்டவனாய் சரேல் என்று எழுந்து மாமாவின் கையிலிருந்து இரண்டணா வாங்கிக் கொள்வதற்காக முன்னால் சென்றான். அப்போது தான் ராகப்பா இவனைப் பார்த்தான்.

'ஓஹ்....ஹோ....நீ வந்து விட்டாயா? இங்கே ஏன் உட்கார்ந்திருக்கிறாய்?' என்றவாறு கொஞ்சம் நகர்ந்து இடம் விட்டு உட்காரும்படி சைகை செய்தான். மஹபூப்ஜானின் முகத்தில் மெல்லியதொரு சிரிப்பு விளையாடியது. புகையிலை வாங்கிக் கொண்டு வருவதற்கு அவன் எழுந்ததைத் தாசில்தார் பார்த்தாரா இல்லையா என்பதை அறிவதற்குக் கூடக் கிட்டியின் பார்வை தாசில்தாரின் பக்கம் நிமிரத் துணியவில்லை. ஆயினும் உடனடியாகக் கிடைத்த பிரமோஷனே போதும் என்று எண்ணி அவன் மலர்ந்த முகத்துடன் அங்கேயே உட்கார்ந்து விட்டான். தன்னைக் கூர்ந்து பார்க்கும் எஜமானருக்கு வணக்கம் செய்தான். 'இவன் நம்முடைய பையன், உங்கள் கச்சேரியில் வேலை செய்கிறான்', என்று மட்டும் ராகப்பா அறிமுகம் செய்து வைத்தான். தாசில்தார் தலை ஆட்டினார். தனக்குக் கீழே வேலை பார்க்கிறவன் தனக்கு இவ்வளவு அருகில் உட்கார்ந்ததைக் கண்ட தாசில்தார் சங்கோசம் அடைந்தார். கிட்டியோ அவருக்கு அருகில் உட்காரும் போது தலையணை மீது சாய்ந்து கொள்ளலாமா கூடாதா என்ற சங்கடத்தில் இருந்தான். இதற்குள் கச்சேரி ஆரம்பம் ஆகிவிட்டது. சிறிது நேரம் அமைதியாக உட்கார்ந்த பிறகு தாசில்தார் தம் நண்பரோடு சுவாரசியமாகப் பேசத் தொடங்கினார். இவர்கள் பேசுவதைக் கேட்பதா பாட்டைக் கேட்பதா என்கிற சங்கடத்தில் மீண்டும் ஆழ்ந்தான் கிட்டி. அவனுக்கோ அந்தப் பாட்டின் அர்த்தம் விளங்கவில்லை, இதிலிருந்து மீளவே முடியாது என்று எண்ணி உட்கார்ந் திருந்தான். சற்று நேரத்தில், தலையணை மேல் சாயாததால்

அவனுக்கு இடுப்பு வலிக்க ஆரம்பித்தது. கூடவே, காதுகளுக்கும் கொடுமை. அந்தத் தேவ சுந்தரி சொர்க்கவாசல் போல் வாயைத்திறந்து விசித்திரமான ஸ்வரத்தில் சாஸ்திரீயமான ஒரு ராகத்தை ஆலாபனம் செய்து கொண்டிருந்தாள். 'சாஸ்திரீயம்', 'வேசைப்பெண்' என்பது எவ்வளவு பொருத்தம் என்று நினைத்துக் கிட்டிக்கு மனத்திற்குள் பலமான சிரிப்பு வந்தது. ஆனால் பிறகு அவள் ஒரு மராட்டி பதம், கன்னடப்பதம் 'கிருஷ்ண நீ பேகனே பாரோ' பாடினாள். அதில் கூடக் கிட்டிக்கு விசேஷமான ஆனந்தம் உண்டாகவில்லை. ஆனால் தாசில்தார் முதல் சிறுவர்கள் வரை எல்லாரும் தலை ஆட்டுவதைக் கண்டு அவனும் தலை ஆட்டத் தொடங்கினான், மெதுவாக யாரும் கேட்க முடியாதபடி பேஷ்...பேஷ் என்றான். அந்த இரண்டரை மணி நேர நிகழ்ச்சியில் மாமா ஒரே முறை அவனோடு பேசினார். தாசில்தார் இரண்டு முறை மட்டும் அவனுடைய இருக்கையை ஏற்றார். புகையிலை கொண்டு வரும் விஷயம் பற்றி ஒரு முறை, அவருக்கு சமீபத்திலிருந்த தலையணை ஆக்கிரமிக்கப்பட்ட போது இரண்டாவது முறை. தான் வந்தது வீணாயிற்று என்று கிட்டிக்குத் தெளிவாகப் புரிந்தது. ராகப்பா வேண்டியபடி, 'பீச்சாங்குழல் அடிக்காதே' என்ற 'டும்ரீ' (ஒரு விதப்பாட்டை) அபிநயத்தோடு பாடியதுடன் கச்சேரி முடிக்கப்பட்டது.

மஹபூப்ஜானின் அபிநயமோ மினுக்கோ கிட்டிக்குச் சிறிதும் களிப்பு உண்டாக்கவில்லை. 'இன்றைய இந்த ஹிம்சைதான் இன்றைய ஆதாயம்,' என்று அவன் நினைத்தான்.

கச்சேரி முடிவுற்ற பிறகு தாசில்தார் மஹபூப் ஜானிடம் இரண்டொரு வார்த்தைகள் பேசிவிட்டு, மற்றவர்களின் வணக்கத்தை ஏற்றுக் கொண்டு புறப்பட்ட போது கிட்டி வணங்கி, 'தாங்கா அழைத்துவரட்டுமா, எஜமான்?' என்று கேட்டான். 'ராகப்பா யாரோ பையனை அனுப்பிவிட்டார்.' என்றார் எஜமான். வசவு இல்லாத வார்த்தைகளும் எஜமானர் வாயிலிருந்து வரக்கூடும் என்பதைக் கண்டு கிட்டிக்குத் தைரியம் ஏற்பட்டது. ஏதேதோ பேசிக் கொண்டிருந்த பின் கிட்டி அந்தப் பழைய கேஸ் பற்றின விஷயத்தை எடுத்தான். இதற்குள் தாங்கா வந்து நின்றது. ஆனால் தாசில்தாரின் மனத்தில் கிட்டியோடு பேசவேண்டும் என்று விருப்பம் உண்டாகி விட்டதால் அங்கே நின்றவாறே கிட்டியிடம் கம்பீரமாய்க் கூறினார். 'இதோ பார், குல்கர்ணி. உன்னைப் போன்றவர்கள் ரிவென்யு டிபார்ட்மென்டில் நிலைக்க வேண்டும் என்றால் ஒரு விஷயம் தெரிந்து கொள்ள வேண்டும். நீ இருக்கிற இடத்தில் இருப்பவர்களுக்கு எல்லா சட்டங்களும் முறைகளும் ஆபீஸ் செயல் முறையும் நன்கு தெரிந்திருக்க வேண்டியது அவசியம். யாரோ ஒருவன் சொல்வதைக் கேட்கத் தேவை இல்லை. உன்னுடைய செயல் முறை சரியாக இருக்க

வேண்டும். அப்போது தான் நீ இதைச் சமாளிக்க முடியும். முந்தா நாள் உன்னை யார் நோட் (குறிப்பு) எழுத வைத்தார்கள் என்று எனக்குத் தெரியாதா என்ன?'

கிட்டி சொன்னான்: 'இல்லை எஜமான், அவருடைய கேஸ் கிளியரானது என்று தான் கூறினார்'.

'என்ன இருந்தாலும் நீ அவரை இவ்வளவு சார்ந்திருக்கக் கூடாது. முக்கியமான சட்டவிதிகள் கச்சேரி ஃபைலில் இருக்கின்றன. வீட்டுக்கு எடுத்துக் கொண்டு போ. ரிவென்யூ துறையில் வேலை செய்யும் போது யார் மீதும் நம்பிக்கை வைக்க கூடாது. இன்னும் ஜுனியர். ஆகையால் நாலு பேர் உனக்கு யோசனை சொல்கிறார்கள். நாளைக்கு தந்திரசாலியான ஒரு இளைஞன் உனக்குக் கீழே வேலைக்கு வந்தானானால் 10 அல்லது 15 நாளில் ஏதாவது ஒரு விவகாரத்தில் உன்னைமாட்டி வைத்து விட்டு உன்னுடைய சான்ஸைப் பறித்துக் கொண்டு போய் விடுவான். நீ நேர்மையானவன். இந்தத் துறையின் 'நெளிவு சுளிவுகள்' இன்னும் உனக்குத் தெரியாது. நாளைக்கு மாலை விதிகளின் அந்த ஃபைலை வீட்டுக்கு எடுத்துக் கொண்டு போ, காலையில் திருப்பி எடுத்துக் கொண்டு வா. உனக்கு யாராவது கொடுக்க மறுத்தால் என்னிடம் வா, கொடுக்கச் செய்கிறேன். பிறரைச் சார்ந்து எத்தனை காலம் இருக்க முடியும்? கையை எரித்துக் கொள்ளுமுன் இதைப் புரிந்து கொள்,' என்று கூறித் தாசில்தார் டாங்காவில் உட்கார்ந்துவிட்டார். அவரைக் கொண்டு போய் விடுவதற்காக ராகப்பாவும் டாங்காவில் ஏறினான். நன்றியுணர்வால் கிட்டியின் உள்ளம் நிறைந்தது.

டாங்கா போனபிறகு, 'இனி வீடு திரும்ப வேண்டியது தான்' என்று கிட்டி எண்ணிய போது, கைவிரல்கள் நசுங்கியதால் வலிதாங்காமல் கத்திய சிறுவன் வந்து அவனுடைய கமீஸைப் பற்றி இழுத்து, 'மாமி கூப்பிடுகிறாள்', என்றான். 'எந்த மாமி?' என்று கேட்டான் கிட்டி.

'எங்கள் மாமி'.

'நீ யார்?'

'நான் பீமசேனன்'.

இந்த வீண் பேச்சால் பயன் இல்லை என்று கிட்டிக்குத் தோன்றியது. ஆகையால் பேசாமல் பீமசேனன் கையில் சிக்கிய பகாசுரனைப் போல் அந்தப் பாலகனுக்குப் பின்னாலேயே நடந்தான். சிறுவன் அந்த வீட்டுக்குள்ளே ஓர் அறையைச் சுட்டிக்காட்டி 'அங்கே படுத்திருக்கிறாள்' என்று ஓடிவிட்டான். ராகப்பாவின் மனைவியை அந்த வட்டாரத்தில் எல்லாருமே மாமி என்று அழைப்பார்கள். கிட்டிக்கு ஏககாலத்தில் அச்சமும்

வெட்கமும் உண்டாயின. தன் மனைவி நீண்டகாலமாக ரத்த க்ஷயநோயினால் பீடிக்கப்பட்டிருக்கிறாள் என்றும், வருடத்தில் மூன்று நாலு மாதம் படுக்கையிலேயே கழிக்கிறாள் என்றும் ராகப்பா ஒரு முறை கூறியது அவனுக்கு நினைவு வந்தது. ஞாபகம் வந்ததும் கொஞ்சம் தைரியம் வந்தது. கதவை நோக்கி நடந்தான். கதவருகில் வந்ததும் இந்த உரையாடல் தெளிவாய்க் கேட்டது:

'மஹபூப் தங்கச்சி, நீ என்னுடைய தங்கை. நான் உன்னை விடப் பெரியவள். நீ இந்தப் பாவனையை விட்டு விடாதே. நீ எனக்குத் தெய்வம் போல.'

யோசித்தவாறே கிட்டி கதவருகில் வந்தான். அப்போது இரவு பத்து மணி ஆகிவிட்டது. அவனுடைய நிழலைக் கண்டதும் மஹபூப் சட்டென்று எழுந்து ஒரு பக்கம் ஒதுங்கினாள். லான்டேனின் மங்கலான வெளிச்சத்தில், நடுத்தர வயதுள்ள, களைத்தாற் போலத் துர்ப்பலமான ஒரு மாது தலை குனிந்தபடி உட்கார்ந்திருந்தாள். அவளுடைய நெற்றியில் நீண்ட மெல்லிய திலகம் இட்டிருந்தாள். அவளுடைய உடல் எலுமிச்சம் பழம் போல் வெளிறி இருந்தது. வயது கொஞ்சம் அதிகமாகத் தோன்றினாலும் இளம் பருவத்தில் அவள் மிகவும் அழகாக இருந்திருக்க வேண்டும் என்று தெளிவாகப் புலப்பட்டது.

அவளுடைய கன்னங்கள் சற்று மோவாய் பக்கம் தாழ்ந் திருந்தன, அதனால் அவள் பல ஆண்டுகளாய் இருமலினால் வேட்டையாடப்படுகிறாள் என்று தோன்றியது, ஆயினும் முகம் ஒளி நிறைந்ததாய் இருந்தது. அவள் இவன் பக்கம் மெள்ள முகத்தைத் திருப்பி, வியப்பு ஏதும் காட்டிக் கொள்ளாமல், இவனைப் பார்ப்பதற்கும் பிரயாசைப்படாமல், 'வா, கிட்டண்ணா வா,' என்றாள். பிறகு மஹபூப் ஜானிடம், 'மஹபூப், இங்கே பாய் போடு', என்றாள்.

கிட்டி பாய் மீது உட்கார்ந்தான். மஹபூப் ஜான் எழுந்து கூறினாள்: 'சரி அக்கா, இப்போது நான் புறப்படுகிறேன். வண்டி பத்தரை மணிவரை இருக்கிறது'. ராகப்பாவின் வீட்டில் இரவு தூங்காமல் தப்பித்துக் கொண்டு செல்லுவது மஹபூப்க்கு எப்போதும் பழக்கம். வேறு வழியில்லாத போது ராகப்பா சொல்வதை ஏற்று அங்கே படுப்பாள்.

சம்பக்கா, 'தங்கை, கொஞ்சம் பால் சாப்பிட்டுப் போ', என்று கூறியதன் பேரில் மஹபூப் அங்கேயே உட்கார்ந்துவிட்டாள். சம்பக்காவின் வலிமை இன்மை அவளுடைய சொற்களில் ஓர் அதிகார தோரணையை நிறைந்திருந்தது. அவளுடைய சொற்களில் வலிமையின்மை காரணமாக வற்புறுத்துவதற்கும் வலிமை இல்லை. மற்றவர்கள் அதைக் கண்டு, வேறு வழி

இல்லாத காரணத்தால் அவளுடைய விருப்பத்தையே கட்டளையாக ஏற்று நிறைவேற்றுவது வழக்கம்.

இதற்குள் சம்பக்கா கதவருகிலிருந்து சென்று கொண்டிருந்த ரத்னாவைக் கூப்பிட்டுச் சொன்னாள்: 'ரத்னா, வெளியே முற்றத்தில் இருக்கிற காஸ்விளக்கைக் கொண்டு வா?' விளக்கு வந்துவிட்டது. அவள் வாயிற்படி மீது விளக்கை வைத்துவிட்டு வெளியில் இருந்தவாறே நழுவி விட்டாள்.

'நீ இத்தனை சின்னக்குழந்தையாக இருந்தபோது நான் உன்னைப் பார்த்திருக்கிறேன், உங்களுக்கும் எங்களுக்கும் மனமுறிவு ஏற்பட்டு பத்து வருடங்கள் ஆகிவிட்டன. பார்ப்பது கூட அருமை ஆகிவிட்டது. எப்படியோ, நீ பெரியவனாக வளர்ந்து விட்டாயே,' என்று சம்பக்கா மஹபூப்ஜானிடம் கிட்டியின் உறவு பற்றி உரைத்தாள். மஹபூபும் ஆவலோடு இடையிடையில் கேள்வி கேட்டு எல்லாவற்றையும் தெரிந்து கொண்டாள். இதே கேள்வி-பதில்களுக்கு இடையில் சம்பக்கா கங்கவ்வா பற்றிச் சிறிய-பெரிய கேள்விகள் கேட்டு எல்லா விவரமும் அறிந்து கொண்டாள். கங்கவ்வாவுக்குத் தங்கள் பேரில் இன்னும் கோபம் இருக்கிறதா என்பதைக் கண்டுபிடிக்கும் முயற்சியாக அவள் கிட்டியிடம் அடிக்கடி கேள்விகள் கேட்டாள். கிட்டியின் தந்தை உயிரோடு இருந்தபோது, தன்னுடைய தந்தையிடம் எவ்வளவு அன்பாக இருந்தார் என்பதை எல்லாம் அவள் வருணிக்கத் தொடங்கினாள். தன்னுடைய வியாதி பற்றி மிகவும் உருக்கமாக உரைத்தாள். இந்த மாதர்களின் அண்மை காரணமாகக் கிட்டியின் மனம் மென்மையுற்று விட்டது. இதே நேரத்தில் சம்பக்கா தருணம் பார்த்துக் கிட்டியிடம் மிகவும் சகஜமான விதத்தில் ஒரு விஷயம் கூறினாள்: 'இந்த வலியோடு நான் உயிரோடு இருப்பதும், இறப்பதும் ஒன்றுதான். இன்று உயிரோடு இருக்கிறேன் என்றால் அது உங்கள் தகப்பனாரின் புண்யங் களினால் தான். உங்கள் தாயாரைப் பற்றிய வரை நான் செத்தாகி விட்டது அவர் எனக்குத் தர்ப்பணம் செய்து முடித்துவிட்டார்'.

இதைக் கேட்டு மஹபூப்ஜானின் உள்ளம் உருகியது: 'உங்களைப் போன்ற பெண்மணிகளிடம் யாராவது துவேஷம் கொள்ள முடியுமா?' என்று கேட்டாள்.

'மஹபூப், ஒவ்வொரு பொருளுக்கும் ஒரு காலம உண்டு. இதையே எடுத்துக்கொள். நீ யார், நான் யார்? சகோதரிகள் போல இருக்கிறோம். ஆனாலும், ரத்த சம்பந்தத்தில் இம்மாதிரி விஷயங்கள் நடந்துவிடுகின்றன. இதனாலே மக்கள் 'காலாய தஸ்மை நம:' (அப்பேர்ப்பட்ட காலத்தை வணங்குகிறேன்) என்கிறார்கள். ஆனால், தங்கை மஹபூப், சச்சரவு வருவதால் ரத்த சம்பந்தம் விட்டுப் போகுமா? நூறு ஆண்டுகளானாலும் ரத்தம் ரத்தமே'.

இவ்வளவு உதாரகுணமுள்ள உறவினர்களுக்கு அம்மா தர்ப்பணம் செய்துவிட்டதைக் கேட்டுக் கிட்டிக்குச் சற்றும் வெட்கம் வரவில்லை.

இதற்குள் ரத்னா இரண்டு கப் பால் கொண்டு வந்தாள். இப்போது உள்ளே வருவதைத் தவிர அவளுக்கு வேறு வழி இல்லை. வாயிற்படி மீது நாணத்தோடு நிற்கும் பதினைந்து வயது இளம் பெண் கிட்டிக்குப் புலப்பட்டாள். பெற்றவளின் அழகு அவளிடம் இரண்டு மடங்காக அவளிடம் ஓங்கி இருந்தது. அவள் பால் கொண்டு வந்து வைத்ததும் அவளுடைய வெறும் தலையை வெட்கம் வழியும் பார்வையால் பார்த்தான் கிட்டி.

மூன்று மணி நேரத்துக்கு முன் இளைஞன் ஆனான் கிட்டி, இப்போது காதலனும் ஆகிவிட்டான்.

# 9.கங்கவ்வாவின் அஜாக்கிரதையின் பயன்

சென்ற தடவை கங்கவ்வா தேசாய் வீட்டுக்கு வந்தபோது அஜாக்கிரதையாக ஒரு காரியம் செய்து விட்டாள்.

கோபத்தில் கங்கவ்வா பணம் பற்றிக் கூறியது வசந்தராவின் காதுகளில் வழுந்துவிட்டது. சினிமா பார்க்க சில்லறை கிடைக்காததால் அவன் மாலை முழுவதும் அடிக்கடி ஆத்திரப்பட்டுக் கொண்டு இருந்தான். இவ்வளவு காலமாகச் சினிமா பார்க்கிறேன், அங்கே அவன் நிரந்தர வாடிக்கைக்காரன், இருந்தும் அன்றைக்கு ஒரு நாள் மட்டும் டிக்கட் இல்லாமல் உள்ளே நுழையக் கேட்கீப்பர் அநுமதிக்கவில்லை. வசந்த ராவ் எவ்வளவோ மன்றாடினான், ஆயினும் அவன் ஒப்புக்கொள்ள வில்லை. மூன்றணாவுக்காக அவன் எக்காலத்திலும் இவ்வளவு துன்பப்பட்டதில்லை. அன்று சினிமாவுக்குச் சென்று விருதாவாகத் திரும்பி வேதனையால் வருந்திய அவன் கங்கவ்வா சொன்னதன் ரகசியத்தைக் கண்டு பிடிக்க வேண்டும் என்று முடிவு செய்து கொண்டான். வசந்த பருவத்தைப் போலவே வசந்தராவின் குறும்புகளும் விசித்திரமாக இருப்பது வழக்கம். மறுநாள் மதியம் தாயார் சாப்பிட்டு முடித்த நேரத்தில் அவன் வெற்றிலைப் பெட்டியை ஒளித்து வைத்து விட்டான். சாப்பிட்டு முடித்தவுடனே வேணுபாய் இரண்டு வெற்றிலையும் ஒரு பிடிபாக்கும் தின்னாவிட்டால் அவளுக்கு வாழ்க்கையே வெறுத்துப் போகும். துடித்தபடி அவள் வீடுமுழுவதும் அலசிப் பார்த்து விட்டாள்.

தேசாய் படுத்துக் கொள்கிற நேரமாதலால் அதிகச் சத்தமும் போட முடியவில்லை.

இந்நேரத்தில் மேலே இருந்து வசந்தராவ் கீழிறங்கி வசந்தராவ் அம்மாவிடம் வந்தான்: 'அம்மா, நேற்று கங்கவ்வா ஏதோ சொல்லிக் கொண்டு இருந்தாள் அல்லவா?'

'என்ன சொல்லிக் கொண்டிருந்தாள்? பாவம், பிள்ளை, பிள்ளை என்று கரைந்து கொண்டு இருந்தாள்.'

'இல்லை அம்மா, பணம் பற்றி சொன்னாள் அல்லவா?'

'பணம் எங்கிருந்து வந்ததடா?'

'ஆனால், அவள் எனக்குத் திட்டு வாங்கித் தந்தாள். வீட்டு வாரிசுக்கு சினிமா பார்க்க மூன்றணா சில்லறை கிடைக்க வில்லை, இந்த அம்மாளுக்குப் பத்து பதினைந்து வேண்டு மானாலும் உடனே கிடைக்கிறது. வீட்டில் என்ன நடக்கிறது என்று எனக்குத் தெரியாதா என்ன? ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்த்து விட்டு, வீட்டுப் பிள்ளை வாயிலே கட்டை விரலை வைத்தாளாம். நான் ஒன்றும் பேசாமல் இருக்கிறேன் அல்லவா. அதனால் தானே?'

'உனக்கு யாரடா கொடுக்கமாட்டேன் என்கிறார்கள் வசந்தண்ணா? அவர் உன் நன்மைக்காகத்தானே சொல்கிறார்? வாரம் ஒரு தடவை சினிமா பாருடா குழந்தை. தினம் பார்க்க வேண்டுமானால் எப்படி முடியும்? உன் படிப்பு என்ன ஆகும்?...'

'சினிமா பார்க்காவிட்டால் எனக்கும் தலைவலி வந்துவிடுகிறது. தலைவலி இருந்தால் படிப்பு எப்படி வரும்? நான் பெயில் ஆகிவிட்டால், 'அந்தக் கிட்டியைப் பார்' என்று சொல்வாய். இந்தக் கிட்டி-கிட்டி என்கிற பெயரால் என் காதுகளைக் கிடுகிடுக்க வைப்பாய். அந்த ஆட்களைப் பார்த்தாலே என் உடம்பில் நெருப்பு பற்றிக் கொள்கிறது... போகட்டும் போ, எனக்கும் பணம் வேண்டாம். ஆனால் வீட்டுப் பணம் எங்கே போகிறது என்று எனக்குத் தெரிந்திருக்க வேண்டும். நான் சின்னக் குழந்தை அல்ல. நான் இந்த வீட்டில் பிறக்கவில்லையா என்ன? எல்லாம் இப்படியே நடந்து கொண்டிருந்தால் அச்சுதண்ணாவுக்கு எல்லாம் எழுதிவிடுவேன்.'

'அச்சுதன் உன்னைப்போல் முட்டாள் அல்ல. என்ன வேண்டுமானாலும் நடக்கட்டும், முதலில் நான் வெற்றிலை போட்டுக் கொள்கிறேன்' — என்றாள் வேணுபாய், பேச்சை மாற்ற.

'நீ எப்படி வெற்றிலை போட்டுவிடுவாய்? நான்தான் வெற்றிலைப் பெட்டியை ஒளித்து வைத்துவிட்டேனே. சொல்லு முதலில், அப்புறம் தருகிறேன்.'

வேணுபாய்க்குத் தன் பிள்ளையின் இந்தத் தந்திரம் கண்டு இரக்கம் உண்டாயிற்று. அவள் வெற்றிலை - பாக்கைக்கூட விட்டு விட முடியும்; ஆனால் இந்தப் பிள்ளையின் விஷமங்கள், அவனுடைய பேச்சுக்கள், அவனுடைய கருத்துகள் ஆகிய வற்றைக் காண அவளுக்குக் கவலையாக இருந்தது. ஒருகணம் யோசித்த பிறகு, இதுவரை அவனுக்குச் சொல்லாமல் மறைத்து வைத்திருந்த விஷயத்தை அவனிடம் சொல்லுவதால் யாதொரு நஷ்டம் இல்லை, மறைத்து வைத்திருப்பதால் லாபமும் இல்லை என்று அவளுக்குப் பட்டது. சொல்லி விடுவதால், குறைந்த பட்சம், கங்கவ்வாவிடம் வசந்தனின் மனத்தில் கொஞ்சம் மரியாதை தோன்றலாம் என்று எதிர்பார்த்து அவள் வாய் திறந்தாள்.

'குழந்தை வசந்த, நீ இப்போது புத்திசாலி ஆகிவிட்டாய். உன்னுடைய பாக்கு வெற்றிலையை நீயே வைத்துக்கொள். ஆனால் உன்னுடைய பணக் கர்வம் தொலைய வேண்டும் என்பதற்காகச் சொல்கிறேன், கேள். யாரிடமும் சொல்ல வேண்டாம் என்று கங்கவ்வா சொன்னாள். ஆனால், உனக்கும் எனக்கும் யாதொரு பேதமும் இல்லை. இப்போது பத்து வருடம் ஆகிவிட்டது, இனி சொல்வதால் தப்பு ஏதும் இல்லை. குறிப்பாக, காசு விஷயத்தில் கர்வம் கொள்ளக் கூடாது. இன்று இருக்கும் அது நாளை போய்விடும். எல்லாரோடும் அநுசரித்து நடந்துகொள்...'

'என்ன விஷயம் என்று முதலில் சொல்லு,' என்றான் வசந்தன் ஆவலை அடக்கமாட்டாமல்.

'குழந்தை, கங்கவ்வா பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவள். அவளுடைய கணவன் முத்து வியாபாரம் செய்து வந்தான்; வெல்ல வியாபாரமும் இருந்தது. எவ்வளவுதான் சொல்வது, பாவம், ஏதோ ஆபத்தில் சிக்கிக் கொண்டான். எல்லாம் ஏலத்தில் போய்விட்டன. கொடுத்ததும் போயிற்று வாங்கியதும் போயிற்று, வைத்திருந்ததும் போயிற்று. ஆறே மாதங்களில் வயிற்றுவலி வயிற்றுவலி என்று அவரும் போய்விட்டார். கங்கவ்வா தைரிய சாலி. வியாபாரம் நொடித்ததில் நிலபுலம் எல்லாம் விற்றாகி விட்டது. ஜப்திவந்ததும் அவளுடைய வீட்டுக்காரன் பயந்து விட்டான். ஆனால் அவள் கையில் மிச்சம் மீதி இருந்த கொஞ்ச நஞ்சம் தங்கத்தைக் கிட்டியிடம் கொடுத்துப் பின்புறக் கதவு வழியாகக் குப்பைமேட்டில் எறியச் செய்துவிட்டாள். எப்படியோ, அது யாருடைய கண்களிலும் படாமல் தப்பிவிட்டது. எல்லாம் தொலைந்து, கட்டியவனும் மண்டை போட்டபிறகு அவள் அதை எடுத்துக் கொண்டு இரவோடு இரவாக நம்மிடம் வந்தாள், விற்றுப் பணம் ஆக்கிக் கொண்டாள். அதிலிருந்து ஏழு எட்டு நூறு ரூபாயை உன் தந்தையாரிடம் வைத்திருந்தாள். வட்டிக்குமேல் வட்டி கூடி அது சுமார் ஆயிரம் ரூபாய்

ஆகிவிட்டது. தேவைப்படும்போது, தன் பணத்திலிருந்து கேட்டு வாங்கிக்கொண்டு போகிறாள். நாம் அவளுக்கு ஒன்றும் கொடுக்கவில்லை. நாம் அவளுக்குக் கொடுப்பதெல்லாம், பிரியமான நாலு வார்த்தை. இதற்காக அவள் நம்மிடம் எவ்வளவோ நன்றியோடு இருக்கிறாள். அவளுடைய இந்த நல்ல குணத்தைப் பார்.'

'அப்படியானால், கிட்டியும் மாசாமாசம் பணம் கொண்டு வந்து தருகிறாளா?'

'போனதடவை நாம் காசி யாத்திரைக்குப் போனபோது அவளும் நம்மோடு வந்தாள். அப்போது அவளுக்காக நாம் செலவு செய்தோம் என்பது வெறும் வார்த்தை. இப்போது கிட்டி கையால் கொஞ்சம் பணம் மாதாமாதம் கொடுக்கச் செய்கிறாள். நாலு காசு மிச்சம் ஆகட்டும் என்று அவள் யோசனை. ஏழைகளின் விஷயம் இப்படித்தான் இருக்கும். வயிறாரச் சாப்பாடு கிடைக்கிறது என்பதற்காக நாக்கை அதிகமாக ஓட்டிவிடக் கூடாது.'

கடைசி வாக்கியம் வசந்தனை அடித்து வீழ்த்தியது. அவன் தன் அறையிலிருந்த வெற்றிலைப் பெட்டியைக் கொண்டுவந்து பெற்றவளுக்கு முன்னால் வைத்தான்.

'வேண்டாம், உன் வெற்றிலையை நீயே போட்டுக்கொள்,' என்றாள் தாயார்.

தாயார் கொடுத்த இந்தப் போதனை என்னும் பாலை நஞ்சாக மாற்ற அவனுக்கு இரண்டு நாளாயிற்று.

அன்று இரவே வேணுபாய் மகனுடைய காரியத்தையும் தனது மறுமொழியையும் விவரமாய்க் கூறினாள், கணவரிடம். இவற்றை எல்லாம் கேட்ட தேசாய் தம் பிள்ளையின் எதிர்காலம் பற்றி மிகவும் கவலைகொண்டார். இந்தப் பையன் போகிற வேகத்தைப் பார்த்தால், அது எங்கே போய் முடியும் என்று தெரியவில்லையே? மூத்தபிள்ளை அச்சுதனைப் பற்றி அவருக்கு யாதொரு கவலையும் இல்லை. அவனைப் பார்த்து அவர் பூரித்துக் கொண்டிருந்தார். வசந்தராவின் போதனையால் சின்னப்பையன் புருஷோத்தமனும் கெட்டுவிடப் போகிறானே என்று அவருக்குக் கவலை உண்டாகிவிட்டது.

அப்படியே பார்க்கப் போனால், தேசாய் கூடத் தம் காலத்தில் தந்தையாரோடு மிகவும் சண்டை போட்டிருந்தார், ஆனால், வசந்தனைப் போல் அவரிடம் அற்பத்தனம் இல்லை, அவர் சினிமா போக மூன்றணாவுக்காகச் சண்டையை விலைக்கு வாங்க வில்லை, ஆனால் சொத்தைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்பதற்காக பெரிய வீட்டுக் குழந்தைகள் எல்லாரும் சிறு வயதிலேயே செல்வம் சம்பத்து என்றால் விழிப்போடு இருக்

கிறார்கள். அவர்களே பெரியவர்கள் ஆகும்போது தங்கள் குழந்தைகளின் பண மோகத்தைக் கண்டு துயரப்படுகிறார்கள். இது செல்வத்தோடு ஒட்டுக் கொண்டுள்ள சாபம்.

தேசாய் இந்த நிலைமையை வேறுவிதமாகப் பயன்படுத்திக் கொள்ளத் தீர்மானித்தார். நீண்டகாலமாக அவருடைய கழுத்தில் கங்கவ்வா ஏற்றியிருந்த நுகத்தடியை என்ன முயன்றாலும் அவரால் இறக்க முடியவில்லை. இப்போது அதை இறக்கி எறிவதற்கு நல்லவாய்ப்பு கிட்டியுள்ளது. மறுநாளே அவர் கங்கவ்வாவுக்குச் சொல்லி அனுப்பினார். அவளிடம் எல்லா வற்றையும் விவரமாய்த் தெரிவித்தார்.

'நீங்கள் என்னிடம் கொடுத்து வைத்துள்ள பணத்துக்குப் பத்திரமோ கடிதமோ இல்லை. எனக்கும் இப்போது வயதாகிவிட்டது. நம் பெரியவர்கள் காலத்தில் இருந்த நம்பிக்கை இப்போது இல்லை; நம் காலத்து நம்பிக்கை நம் குழந்தைகள் காலத்தில் இருக்காது; இதுதான் உலக நடப்பு. உங்களுடைய மகன் நல்ல நிலையில் இருக்கிறான். நாளைக்கும் என் கையில் பணம் நிலைத்திருக்கும் என்கிற நம்பிக்கையும் இல்லை. என் குழந்தைகளும் வாலிபர்கள் ஆகிறார்கள்... சரி, இந்த விஷயத்தை விடுங்கள். ஆனால் நான் சொல்வதற்கு எல்லாம் சாரம் என்னவென்றால், பணம் அழிவது. உங்களிடம் கடன்பட்டவனாக நான் சாக விரும்பவில்லை. கையில் பணம் இருக்கும்போதே உங்களுடைய பணம் உங்களுக்குக் கிடைத்துவிட்டால் என் நெஞ்சு மீதுள்ள ஒரு சுமை கீழே இறங்கும்' — இவ்வாறு நீள அகலமுள்ள சொற்பொழிவு ஆற்றிய பின் தேசாய் அதுவரை உள்ள கணக்கு விவரங்களைப் படித்துக் காண்பித்தார்.

கங்கவ்வாவுக்கு முன்னால் அவருடைய சாமர்த்தியம் என்ன செய்ய முடியும்? அவளுடைய கண்ணீருக்கும் கம்பலைக்கும் முன் அவருடைய சொல்மாரி பயனற்றது. குறைந்தபட்சம் இந்தப் பணவிஷயம் கிட்டியின் காதுகளுக்காவது எட்டிவிட வேண்டும் என்று தேசாய் மன்றாடினார். கங்கவ்வா இதற்கும் தயாராக இல்லை.

'முன்பே அவன் தன் செலவை அதிகமாக்கிக் கொண்டே போகிறான். பின்னால் ஒன்றும் இல்லையே என்றுதான் நாலுகாசு சேர்த்து வைத்திருக்கிறேன். கோபண்ணா, இந்த ஆயிரத்தை எடுத்துக் கொண்டாலும் நாலு நாளைக்கு நிற்காது. எந்த வேலைக்கும் பயன்படாது. மூடிய கையையும் வாசனையையும் மூடியபடியே வைத்துக் கொள்வதில்தான் சாரம் இருக்கிறது என்று பெரியவர்கள் சொல்வார்கள். அவனுடைய காதுகளுக்கு இந்த விஷயம் எட்டக்கூடாது,' என்று கூறி தேசாய் பேச முடியாதபடி செய்துவிட்டாள்.

கடைசியில் வீடு திரும்பும்போது, 'யாராவது கேட்டால் என்னிடம் யாருடைய பணமும் இல்லை என்று சொல்லி விடுங்கள். இந்த அளவு என் சொல்படி செய்யுங்கள், என்ன நடந்தாலும் நான் பார்த்துக் கொள்கிறேன்,' என்று கூறினாள்.

தேசாய் பெருமூச்சு விட்டபடி மீண்டும் அந்தப் பொறுப்பை ஏற்றார்.

மறுநாள் வசந்தராவ் தாசில்தார் கச்சேரி கான்டீனில் டீயும் பகோடாவும் சாப்பிட்டு, கிட்டி ஆபீஸிலிருந்து வெளிவருவதை எதிர்பார்த்து, ஜன்னலிலிருந்து எட்டிப் பார்த்தவாறு உட்கார்ந் திருந்தான். தாசில்தார் ஆபீசிலிருந்து புறப்பட்டதுமே கிட்டியும் அவனுடைய நண்பர்களான கிளார்க்குகள் நாலுபேரும் தோள் மீது கோட் போட்டுக் கொண்டு சிரிப்பும் விளையாட்டுமாகக் கான்டீனை நோக்கி வந்தார்கள். கிட்டியும் மற்றவர்களோடு சிற்றுண்டியும் தேநீரும் அருந்தினான். பின்பகுதியில் உட்கார்ந் திருந்த வசந்தராவ் கிட்டிக்குத் தென்படவில்லை. சிற்றுண்டி முடிந்து கிட்டி தனியாக வீட்டை நோக்கி நடந்தபோது வசந்தன் தெரு நடுவில் குறுக்கிட்டு அவனுக்கு முன்னால் வந்தான்.

'என்னய்யா, பழைய நண்பர்களை இனிமேல் ஏன் பார்க்கிறீர்கள்?'

வசந்தனும் கிட்டியும் ஒரு மாதமாகச் சந்திக்கவில்லை. இவனோடு இவனுடைய அநாகரிகமும் கிட்டிக்குத் தெரியும். கிட்டி அவனோடு எப்போதும் அன்போடு பேசுவான்.

'நீங்கள், தேசாய், வீரர். நீங்கள் ஏழைகளை மறக்க முடியும். ஆனால் ஏழைகளான நாங்கள் எப்படி...?'

'அடே புளுகுணி! டீ சாப்பிடும்போது பின்னாலேயே உட்கார்ந்திருந்தேன், நீ பேசக்கூட இல்லை. பின்னால் பார்த்தால் பேச வேண்டுமே என்று முழங்கைகளை ஊன்றி முன்னால் முகத்தை வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தாய். சரி, இவன் குடுமியை ஆபீசில் ஏன் பிடிக்க வேண்டும், வெளியே வைத்துக் கொள்வோம் என்று எண்ணி இருந்துவிட்டேன். இவன்தான் துரை ஆகிவிட்டானே... இப்போது, கிட்டி, நீ இந்தத் துரைத்தன்மையை விட்டுவிட வேண்டும். என் தகப்பனார் உன்னை ஓயாமல் புகழ்ந்து கொண்டு இருக்கிறார். கிட்டி ஹோட்டலில் டீ சாப்பிட மாட்டான், சிற்றுண்டி சாப்பிட மாட்டான், சினிமா பார்க்க மாட்டான். பிருகு முனிவர் போல இருக்கிறான் என்று வாய் அலுக்காமல் சொல்கிறார். நீயோ திருட்டுப் பூனைபோல் எல்லாம் செய்கிறாய்.'

'அடே வசந்த், உன்னைப்போல் வீட்டில் சுகமாய்ச் சாப்பிடக் கிடைத்தால் இவை எல்லாம் தேவை இல்லை. வயிற்றுக்காக

இதை எல்லாம் செய்ய வேண்டியிருக்கிறது. விருப்பம் இல்லாவிட்டாலும் சில பழக்கங்களைச் செய்து கொள்ள வேண்டி இருக்கிறது.'

'உனக்கு என்ன குறைச்சல், திருட்டுப்பயலே, உள்ளுக்குள்ளேயே கறையான் போல அரித்துச் சேர்த்து வைத்துக் கொண்டு இருக்கிறாய். உன் தாயார் போதுமான அளவு சேர்த்து வைத்திருக்கிறாள். இன்றைக்கு சம்பாதிக்கிறாய், நாளைக்கு தாசில்தாரும் ஆவாய். உன்னுடைய இந்தப் பழைய அழுகல் கோட்டைத் தூக்கி விட்டெறி. இந்த சுஜாவுத்தௌலா மீசையை எடுத்துவிடு. துரை ஆனபிறகும் பட்டிக்காட்டுத்தனம் இன்னும் பாக்கி இருக்கிறது?'

'அது எங்கே போகும்?... அது பெரியவர்களின் கொடை ஆயிற்றே' — கிட்டி அவமானத்தில் மானத்தைக் காட்டுவதற்கு முயன்றான்.

'அடே, இப்படிப் பேசாதே. உன் தகப்பன் கொஞ்சத்தில் மூழ்கிவிட்டவன் அல்ல. நீ அவனையும் தாண்டிவிட்டாயே. எட்டு வயசிலேயே நீ தங்கம் திருடியவன் ஆயிற்றே.'

'அடேடே, என்ன சொல்கிறாய்?'

'சொல்ல வேண்டியதைச் சொல்லிவிட்டேன்.' வசந்தனை விட்டுப் பிரிந்ததும், 'போனதும் அம்மாவைக் கேட்க வேண்டும்' என்கிற தீவிரமான விருப்பம் கிட்டிக்குள் எழுந்தது. ஆனால் வீட்டை நெருங்கியதும் அவன் தன் எண்ணத்தை மாற்றிக் கொண்டான். ஏதாவதொரு சந்தர்ப்பத்தில் அம்மாவைக் கேட்கலாம் என்று முடிவு செய்து அவன் அதைப்பற்றி ஒரு வார்த்தையும் பேசவில்லை. ஆனால் அன்றைய அனுபவம் கிட்டியின் வாழ்க்கையில் பல சிறிய - பெரிய மாறுதல்களை உண்டாக்கியது. முதுகுக்குப்பின் ஓராயிரம் ரூபாய் இருக்கிறது என்ற விஷயத்தை அறிந்து அவனுக்குச் சற்றுத் தெம்பு கிடைத்தது. தாசில்தாரின் அறிவுரைப்படி சட்டம் விதிமுறைப் புத்தகங்களைப் புரட்டிப் பார்க்கலானான். அவனுக்கு அவற்றிலிருந்த பல விஷயங்கள் புரியத்தொடங்கின - இவை இதற்கு முன்பு அவனுக்குப் புரியாமல் இருந்தவை. அவனுடைய நடப்பில் சிறிது கம்பீரம் வரலாயிற்று. அலுவலகத்தில் தன்னம்பிக்கையோடு பணியாற்றலானான். இப்போது அவன் எல்லாரையும் மகிழ்விக்க வேண்டும் என்று முயற்சி செய்வதில்லை. சுயமரியாதையும் மிகுந்தது. எல்லாருடைய விஷயத்தையும் அறிய வேண்டும் என்ற எண்ணத்தைக் கைவிட்டான். செலவும் நன்றாகச் செய்யத் தொடங்கினான். உடலின் எடை கூடியது. வேலையில் யந்திரலாகவம் வந்தது.

# 10. வீட்டைக் கரைக்கும் வாழ்க்கை

பிந்தகோள ராகப்பா எப்போதும் 'ராகோபா பராரி' என்ற புனைபெயரால் பிரபலமாக இருந்தான். அந்தப் புனை பெயரில் அவனுக்குக் கர்வமும் இருந்தது. அவனுடைய புகழ் பல உருவங்களில் பரவி இருந்தது. அவனுக்குப் பத்துப் பன்னிரண்டு வயது ஆகும்போது, காந்திஜீயும் சிறியவராக இருந்தபோதே அவனுக்கு சத்தியாக்கிரக மந்திரம் தெரியும். தன்னுடைய நாலு தோழர்களைக் கூட்டிக்கொண்டு ஒரு பேகரிக்கு முன்னால் நின்று ஒரு மணிநேரம் வரை, 'பிரெட் வேண்டும்!' என்று முழக்கம் செய்துகொணடு இருந்தான் - இடையீடு இல்லாமல். பேகரி சொந்தக்காரன் அந்த முழக்கத்தால் துன்புற்று அவர்களுக்கு ஒரு டபிள் ரொட்டி கொடுத்து வணங்கி இன்னொரு தடவை அங்கே வரவேண்டாம் என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டான். பன்னிரண்டாம் வயதில் அவன் தன் தந்தையின் ஜேபியிலிருந்து ஐந்து ரூபாயை 'அபேஸ்' செய்து தன் வாழ்க்கையில் மற்றொரு படி மேலே ஏறினான். நாற்பது வயது ஆகும்வரை கிராமத்து எல்லா வேலைகளிலும் விழாக்களிலும் அவன்தான் முன் நிற்பான். ஒருகாலும் 'அவுட்' ஆகாத பாட்ஸ்மன் பென்ஷன் பெற்றுக் கொள்வதுபோல இவனும் தன்னுடைய சிங்காதனத்தை இந்தப் பத்துப் பன்னிரண்டு ஆண்டுகளில் மற்றவர்களிடம் ஒப்படைத்திருந்தான். ஆயினும் அடுத்த நாலு வருடங்கள் வரை புதிய இளைஞர் குழாம் ஒவ்வொரு காரியத்திலும் அவனுடைய யோசனையை நாடிப் பெற்றுவந்தது.

ராகப்பாவுக்கு நல்ல அதிர்ஷ்டம் இருந்தது. அவனுக்கு எந்த விதத்திலும் குறை இல்லை. அவனுடைய பிந்தகோள வாழ்க்கையின் எட்டு ஆண்டுகளும் அவனே தன் கிராமத்தின் தலைவன், கிஸான்கள் அவனிடம் அஞ்சி எந்தச் சந்தாவும் கேட்பதில்லை. சந்தா கேட்டால் சகோதரர்களுக்குள் சண்டை மூட்டிவிடுவது அவனுக்கு இடதுகை விளையாட்டு என்பது இவனைப் பற்றிப் பிரசித்தம்.

அவன் விவசாயம் செய்தால் பெரிய பெரிய விவசாயிகளும் வெட்கும்படியாகப் பெரிய காளைகளைக் கட்டுவான். அவற்றைக் கொண்டு நன்றாகச் சம்பாதிக்கவும் செய்தான். கொஞ்சகாலம் தேனீ வளர்த்தான், கொஞ்சகாலம் கோழிகளையும் வளர்த்துப் பார்த்தான். இவன் கடன் கேட்டால், 'இல்லை' என்று சொல்லும் துணிச்சல் கிராமத்தில் யாருக்கும் இல்லை. வைக் கோல் கட்டுகளில் நெருப்புப் பற்றிக் கொண்டால் அரைமணி

நேரத்துக்கு முன்பே ராகப்பாவுக்குத் தகவல் தெரிந்திருக்கும். கிராமத்தில் ஏதாவது சண்டை மூட்டி, ஜனங்கள் தங்களுக்குள் அடித்துக்கொண்டு கோர்ட்டில் போய் நிற்கும்படி செய்ய வேண்டும் என்று அவன் கிளம்பினால் ஐந்தாறுரூபாய் சேர்த்துக் கொண்டுதான் வீடு திரும்புவான். ஆனால், இந்த வேலைகளில் எல்லாம் பங்கேற்றுக் கொண்டாலும், கிராமத்துக்கு வெளியில் உள்ள ஹநுமானைப் போல் அவன் எதிலும் ஒட்டாமலே இருந்தான்.

அவன் தார்வாருக்கு வந்தது முதல் பிந்தகோளம் அமைதியாகவும் ஆனந்தமாகவும் இருந்தது. தார்வாரில் ராகப்பா ஒரு புதிய தொழிலைத் தொடங்கினான். பெரிய பெரிய மனிதர் களைப் பார்த்து அவர்களோடு நட்பு கொள்வதுதான் அது. குதிரை வளர்த்தால் நேர்த்தியான குதிரை, விவசாயம் செய்தால் அருமை யான விவசாயம், மிருகங்களை வளர்த்தால் கண்காட்சியில் வைக்கத் தக்கவையாக. இந்த எல்லா விஷயங்களிலும் புகழ்பெற்ற ராகப்பா புதிய தொழிலிலும் கூட ஒரே ஆண்டில் அபூர்வமான வெற்றி பெற்றான்.

அவனுக்கும் மஹபூப்ஜானுக்கும் தொடர்பு ஏற்பட்டு பன்னிரண்டு ஆண்டுகள் ஆகிவிட்டன. ஆரம்பத்து அறிமுகம் வெகு விரைவில் காதலாக மாறியது. தொடக்கத்தில் மூன்று நாலு வருடங்கள் இவ்விஷயம் ரகசியமாக இருந்தது. பிறகு, பரவிவிட்டது. பிந்த கோளத்தில் ஒரு தடவை வீட்டிலிருந்து கொஞ்சம் தங்கம் மறைந்துவிட்டது. களவு போய்விட்டது என்று கூறி ராகப்பா தேடலானான். கிராமத்தில் அதே தெருவில் இருந்த ஒரு கிழவன் தன் பிள்ளைகள் சொன்னதையும் கேளாமல் நேராகச் சம்பக்காவிடம் வந்து கூறினான்: 'அம்மா, உன் நன்மைக்காக ஒரு விஷயம் சொல்கிறேன். எஜமானர் கச்சேரி விஷயமாக அடிக்கடி ஹுப்ளிக்கு வருவதும் போவதுமாக இருக்கிறார். அங்கே ஏதாவது தப்பு வழியில் போகக்கூடும். தங்கம் வேறுஎங்கும் போக வில்லை. காணாமல் போகும்படி செய்தவர் அவர் தான், தேடுகிற வரும் அவர்தான். நீ கொஞ்சம் ஜாக்கிரதையாக குடும்பம் நடத்து.'

அடுத்த மூன்று ஆண்டுகள் வரை சம்பக்கா ஜாக்கிரதையாக நடக்கவில்லை. வீட்டைப் பிரமாதமான கலகத்தால் நிரப்பி விட்டாள். ஒரு தடவை குழந்தைகளோடு நாலு மாதங்கள் சகோதரன் வீட்டில் போய் இருந்துவந்தாள். பிறகு சகோதரன் சமாதானம் சொல்லித் திருப்பி அனுப்பினான். ராகப்பாவுக்குப் புத்தி சொல்லும் துணிவு பிந்தகோளக் கிராமத்தில் யாருக்கும் இல்லை. ஒரு முறை நகைளை எல்லாம் ஒரு டிரங்குப் பெட்டியில் வைத்து மூடி, உயிர் போவதானாலும் பெட்டிச் சாவியை அவரிடம் தருவதில்லை என்று உறுதி பூண்டு அவள் பெட்டி

யோடு பூஜைஅறையில் போய் உட்கார்ந்துவிட்டாள். கணவன் கையால் ஓர் அறை விழுந்ததும் அவளுடைய உறுதி காற்றோடு போயிற்று. அவள் அவனுடைய கால்களைப் பிடித்துக் கொண்டாள். பட்டினி கிடந்தாள், அருமை மகளை அவன் காலடியில் போட்டாள். அந்தக் கெடுபிடிகளுக்கு எல்லாம் ராகப்பா ஒரே பதில் சொன்னான்: 'நான் சம்பாதிக்கிறேன், நான் செலவு செய்கிறேன். என்றைக்காவது உங்களுக்குச் சாப்பிடு வதிலோ, உடுப்பதிலோ குறை ஏற்பட்டால், அன்றைக்கே நான் பிந்தகோளத்தின் நாற்சந்தியில் நின்று என் மூக்கையும் காதையும் அறுக்கச் செய்கிறேன். ஆண்பிள்ளைகளின் வேலையில் நீ ஏன் தலையிடுகிறாய்?' - சொன்னபடி இதுவரை நடந்து வந்திருக் கிறான் ராகப்பா. வீண்செலவு செய்தாலும் அவன் அழிந்து விடவில்லை. 'நான் எங்கே நாலடி எடுத்து வைத்தாலும் பையில் நாலுரூபாய் போட்டுக்கொண்டே திரும்புவேன்' என்று அவன் சொல்வது வார்த்தைக்கு வார்த்தை மெய் ஆயிற்று. அவன் சாப்பாட்டில் எந்தக் குறையும் வைக்கவில்லை. ஒரு காலும் கிழிசலைக் கட்டிக் கொள்ளவில்லை, வீட்டில் இருப்போரும் கட்டிக் கொள்ள விட்டதில்லை. எப்போதாவது அவன் சிறிது பணம் இழந்தால் சீட்டாடியோ, கோர்ட்டில் மத்தியஸ்தம் செய்தோ, ஏமாற்றியோ, இழந்ததை மீட்டுக் கொண்டே திரும்புவான்.

இவ்வாறெல்லாம் இருந்தும், தன் கணவனுக்கு நிகராக உலகத்தில் யாருமே இல்லை என்கிற முடிவுக்கு சம்பக்கா வந்துவிட்டாள். ஆகையால் அவள் மௌனமாகிவிட்டாள். ஒரு முறை கணவனைப் பற்றி நாலு பேரிடம் புகார் செய்தாள்; அதனால் அவளுடைய மரியாதைக்கே ஊனம் ஏற்பட்டது. அதனால் வீட்டுக்குள் நுழைந்தவள் ஒரு வருடகாலம் வெளியே அடிஎடுத்து வைக்கவில்லை.

இரண்டொரு ஆண்டுகளில் அவளுடைய சகோதரனுக்கு ஹுப்ளிக்கு மாற்றல் ஆயிற்று. எந்தக் கணவனிடம் அவள் தோற்றாளோ அவனை வெற்றிக்கொண்ட அழகியைத் தன் கண்களால் பார்க்க வேண்டும் என்ற அவளுடைய விருப்பம் வலுத்தது. ஹுப்ளிக்குச் சகோதரன் வீட்டுக்கு வந்தாள், மஹபூப்ஜானின் இருப்பிடத்தைத் தெரிந்து கொண்டாள். ஒரு நாள் தன் மகளை அழைத்துக் கொண்டு மஹபூப்ஜான் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தாள். அங்கே தன் மகளை அவளுடைய கால்களில் போட்டு, சேலைத் தலைப்பை விரித்து, அழுது, தன் துயரக்கதையைக் கூறிவிட்டு திரும்பி வந்தாள்.

ராகப்பாவுக்கு மனைவியும் குழந்தைகளும் இருக்கிறார்கள் என்ற விஷயமே தெரிந்திருக்கவில்லை. இந்தப் புதிய தகவல் தெரியவே அவள் மனம் உருகிவிட்டது.

மறுவாரம் ராகப்பா வந்ததும், 'வீட்டுக்குச் செல்லுங்கள்' என்று திருப்பி அனுப்பி விட்டாள். பிறகு ஒன்றரை ஆண்டுக் காலம் மஹபூபின் தரிசனம் அவனுக்குக் கிட்டவில்லை.

இந்தச் சமயம் சம்பக்காவுக்குப் புதிய கவலைகள் தோன்றத் தொடங்கின. ராகப்பா எங்காவது தப்பு இடங்களுக்குப் போய் அலைந்து தன் ஆரோக்கியத்தைக் கெடுத்துக் கொண்டு விடுவானோ என்று அவளுக்குப் பயம் ஏற்பட்டது. ஒரு நாள் சம்பக்காவே மஹபூப்ஜானின் வீட்டுக்குச் சென்று அவளிடம் ராகப்பாவின் பாரத்தை ஒப்படைத்தாள். அன்று முதல் மஹபூபின் இந்த வீட்டில் குலதேவி போல் மரியாதைக்கு உகந்தவள் ஆனாள். அப்போது முதல் 'யுகாதி'க்கும் தீபாவளிக்கும் சம்பக்கா மஹபூபை அழைத்து பிளவுஸ் முதிலியவற்றுக்கான துணி கொடுத்து அனுப்புவாள். மஹபூப்ஜானும் கொய்யா, மாம்பழக் கூடைகளை அவ்வப் பருவகாலத்தில் அனுப்பி வைப்பாள். இதனால் ராகப்பாவின் வாழ்க்கை முன்னைவிட இன்பகரமான தாயிற்று. இதற்கு முன் சம்பக்காவுக்கு மற்றோர் ஆண் குழந்தை பிறந்தது. அந்தப் பிரசவத்திலிருந்து தான் சம்பக்காவுக்கு நெஞ்சுக்குத்தும் ரத்தக்ஷய நோயும் ஆரம்பமாயின. அவள் ஆண்டில் மூன்று நான்கு மாதம் படுக்கையிலேயே கழிக்க லானாள். அவள் மீண்டும் கருத்தரிக்கலாகாது என்று டாக்டர்கள் யோசனை.

சம்பக்காவுக்கு நோய் தொடங்கிய காலத்தில், ஹுப்ளி ஆஸ்பத்திரிக்கு நாளுக்கு இருமுறை மஹபூப்ஜான் அவளைப் பார்க்க வருவாள். குழந்தைகளின் படிப்பைக் காரணம் காட்டி ராகப்பா தார்வாருக்குக் குடும்பத்தை மாற்றியது முதல் மஹபூப்ஜான் வீட்டுக்கு வருவதும் போவதும் இன்னும் மிகுந்து விட்டது. அவளும் வீட்டைச் சேர்ந்தவள் போல் ஆகிவிட்டாள். குழந்தைகள் அவளிடம் வரும் போதெல்லாம் பேடா, ஆடிகா (ஒரு காரபட்சணம்), பழங்கள் முதலியவை கொண்டு தருவாள்.

இப்போது ரத்னாவுக்குப் பதினான்கு வயதும் சாந்தாவுக்குப் பன்னிரண்டும் ஆகிவிட்டது. தார்வாரில் அவர்கள் தங்கள் நடத்தை, பழக்கங்கள் காரணமாக அந்த வட்டாரத்திலேயே எல்லாருடைய அன்புக்கும் பாத்திரம் ஆளாகிவிட்டார்கள். ரத்னா மணம் புரியத்தக்கவள் ஆகஆகச் சம்பக்காவின் கவலை அதிகமாகத் தொடங்கியது. கங்கவ்வாவும் கிட்டியும் எங்கே இருக்கிறார்கள் என்று அவருக்குத் தெரியும். ஆனால் அவர் அவர்களைப் பற்றி ஒருகாலும் அவளிடம் பேசியதில்லை. ஆனால், கிட்டி வளர்ந்து பெரியவனாகி தாசில்தார் ஆபீசில் ஊழியம் செய்யத் தொடங்கியதும் ராகப்பா அவனைப் பற்றி அவளிடம் வருணித்தார். தன் மகளைக் கிட்டிக்குக் கட்டிக் கொடுக்க வேண்டும் என்கிற ஆர்வம் அவனுக்கு இல்லை.

ஆனால் சம்பக்காவுக்கு தன் பெண்ணைக் கிட்டிக்கு மணம் செய்துவைத்து பழைய தொடர்பை மீண்டும் புதுப்பித்துக் கொள்ள வேண்டும் என்று விரும்பினாள். கிட்டியின் தந்தை சுவாமிராய் அவளுடைய திருமணம் விஷயமாகச் செய்த உபகாரத்தை அவள் இன்றுவரை மறக்கவில்லை. தன் பெண்ணை கொடுத்து தன் நன்றிக் கடனைத் தீர்க்க வேண்டும் என்பது அவளுடைய அந்தரங்கமான ஆசை. இவளுடைய வற்புறுத்தலின் பேரில்தான் ராகப்பா ஆபீசில் கிட்டியைச் சந்தித்ததும், பிறகு கங்கவ்வாவின் வீட்டுக்குச் சென்று கலியாண விஷயமாய்ப் பிரஸ்தாபித்ததும். கங்கவ்வா மறுத்ததால் ராகப்பாவின் உள்ளத்தி லிருந்த ஆட்டக்காரனுக்கு இவ்விஷயத்தில் சொக்கட்டான் ஆட்டம் ஆடவேண்டும் என்கிற அறைகூவல் எழுந்தது. ‘உன் கண்களுக்கு முன்னாலேயே உன் மகனை என் பையில் போட்டுக் கொள்கிறேன், பார்’ என்று மனத்தில் கறுவிக்கொண்டு அதற்கு ஏற்பத் தன் திட்டங்களை வகுக்கலானான். இதையன்றி மற்றொரு விஷயம் இருந்தது. ராகப்பாவுக்குத் தன் கலியாண விஷயமாக வருந்தும்படி ஒன்றும் இல்லை. ஆயினும் சுவாமிராயின் வசவுக்கு முன்னால் குனிய நேர்ந்த காரணத்தால் உண்டான குடும்பப் பகையும் வருத்தமும் இன்னும் அவன் மனத்தில் நிலைத்திருந்தன. தன் மகளைக் கிட்டிக்கு மணம் செய்து வைத்தால் அதற்கு ஓரளவு பதிலுக்குச் செய்ததாகும் என்று அவன் எண்ணினான்.

அதிர்ஷ்டவசமாக, ரத்னா மிக அழகி. அதனாலேயே பாதி காரியம் நடந்துவிடும் என்று ராகப்பாவின் நம்பிக்கை. ஆகையால் அவன் அடுத்த திட்டங்கள் போடலானான். விவாகம் முடி வானால் கையில் இரண்டு மூன்று ஆயிரம் ரூபாய் வேண்டும்.

தார்வாரில் பெரிய மனிதர்களோடு பழக்கம், அவர்களே திருமணத்திற்கும் வருவார்கள், ஆகையால் கலியாணம் தடபுடலாக நடக்க வேண்டும். ராகப்பாவுக்கு வீட்டுச் செலவு பற்றிக் கவலை இல்லை, ஆனால் தொகையாகப் பணம் வேண்டுமானால் நிலம் விற்பதைத் தவிர வேறு வழி இல்லை.

ராகப்பா இந்தக் கவலைகளில் மூழ்கி இருந்த போது பெண்களுக்கே உரிய பலவீனம் காரணமாகச் சம்பக்கா வேறொரு யோசனை செய்து கொண்டு இருந்தாள். மஹபூப்ஜான் என் தங்கை, என் குடும்பதேவி. இது உண்மையே. இதுவரை இந்த வீட்டிலிருந்து அவள் எட்டு பத்தாயிரம் அடைந்திருப்பாள். ரத்னா அவருடைய மகள் அல்லவா? மகளுக்காக அவள் தானாகவே இரண்டொரு ஆயிரம் தர வேண்டாமா? இந்த எண்ணத்தோடு சம்பக்கா மஹபூப்ஜானுக்கு அன்போடு ஞாபகப்படுத்திக் கொண்டிருந்தாள்.

இந்த விஷயத்தைத் தனக்குள் அடக்கமாட்டாமல் அவள் ஒரு முறை ராகப்பாவிடம் கூறிவிட்டாள். அவ்வளவுதான், ராகப்பா ஆத்திரமாய்க் கர்ஜித்தான்: 'இன்னொரு தடவை இந்த விஷயத்தை என்னிடம் பேசாதே. வேண்டுமானால் ஒரு நிலத்தை விற்பேன். இல்லாவிட்டால், ரத்னா ஒரு பிள்ளையைப் போல் வீட்டோடு இருப்பாள்'. அது முதல் அவனிடம் எதுவும் பேச அவளுக்குத் தைரியம் வரவில்லை. இந்த விஷயத்தையே பயன்படுத்திக் கொண்டு அவள் மற்றொரு தடவை மஹபூப்ஜானிடம் உரைத்தாள்: 'பார் தங்கை, உங்கள் எஜமானர் ரத்னாவின் கலியாணத்துக்காக மேகூர் நிலத்தை விற்கிற யோசனையில் இருக்கிறார்.'

கெட்டிக்காரியான மஹபூபுக்கு இந்த விஷயங்களின் பொருள் விளங்காமல் இல்லை. ஆனால் இம்மாதிரி விஷயங்களில் அவள் மௌனமாக இருந்து விடுவாள். முதலாவதாக, திருமண விஷயம் இன்னும் முடிவாகவில்லை. இரண்டாவதாக, அவள் தன் மருமகனுக்குப் பல சரக்குக் கடை வைத்துக் கொடுத்திருந்தாள், தன் கையிலிருந்த பணம் முழுவதையும் அவள் அதில் முடக்கி இருந்தாள்.

# 11. தேசாயின் கவலைகள்

தேசாய் கவலையோடு லக்ஷ்மி ஹைஸ்கூலுக்குப் போய்ச் சேர்ந்தார். அவர் தலைமை ஆசிரியர் அறையை நோக்கிச் செல்லுகையில், பேச்சு ஒலி எழுந்து கொண்டிருந்த எல்லா வகுப்புகளும் மௌனமுற்று ஆவலோடு அவரை உற்றுப் பார்க்கத் தொடங்கின. ஒரு வகுப்பில் விவகார ஞானம் இல்லாத ஓர் ஆசிரியர் பலமாய்க் கத்தினார்: 'டோன்ட் லுக் ஹியர் அண்டட் தேர், பி அடென்டிவ்!' (இங்குமங்கும் பார்க்காதீர்கள். கவனமாக இருங்கள்!) தேசாயின் கவலை மேலும் அதிகரித்தது. என்ன வேண்டுமானாலும் இருக்கட்டும், சண்டையோ, திருட்டோ, கொலையோ இருந்தாலும் சரி, அது ஒன்று மட்டும் இருந்துவிடக் கூடாது என்று பகவானைத் தொழுதபடி தேசாய் தலைமை ஆசிரியர் அறையில் நுழைந்தார். தலைமை ஆசிரியர் வழக்கம் போல் சிரித்தபடி பெருங்குரலில் அவரை வரவேற்கவில்லை. 'வாருங்கள்', என்று மட்டும் கூறி நாற்காலியின் பக்கம் சுட்டிக் காட்டினார்.

அங்கே அதுதான் நடந்திருந்தது. இதுவரை வசந்தராவைப் பற்றிப் பல புகார்கள் இருந்தன. வகுப்பில் சந்தடி செய்தது,

ஆசிரியர்களுக்கு எதிர்ப்பாகப் பேசியது, இஷ்டப்பட்ட போது ஸ்கூலுக்கு வருவது, — இவை எல்லாம் வசந்தராவிடம் முதல் வகுப்பிலிருந்தே இருந்த பழக்கங்கள். ஆனால் ஸ்கூல் கட்டும் போது நிதிஉதவிய போஷகர்களில் தேசாய் ஒருவர், திட்டக் குழு உறுப்பினர், இக் காரணத்தால் வசந்தனைப் பற்றிப் புகார் செய்வதைப் பற்றி ஆசிரியர்கள் யோசிப்பதே இல்லை. மெட்ரிக் தேர்வில் முதல் முறை பெயில் ஆனபிறகு, தந்தைக்குப் பிறகு தானே வாழ்நாள் முழுவதும் உறுப்பினன் ஆகப்போகிறவன் போல் வசந்தராவ் நடந்து கொள்ளலானான். வகுப்புப் பெண்கள் வீட்டுக்குப் போகும்போது, தன் காவாலி நண்பர்கள் நால்வரோடு பின்னாலேயே சென்று அவர்களைக் கேலி செய்வது, அவர்கள் வீட்டுக்குப் போய்ச் சேரும் வரை துரத்திக் கொண்டு செல்வது - இந்த விஷயங்கள் யாவும் பியூன் முதல் தலைமை ஆசிரியர் வரை எல்லாருக்கும் தெரியும். இதுவரை வசந்தராவ் இதற்கு மேல் அதிகப்படியாக எதுவும் செய்யவில்லை. பெண்களும் இந்த விஷயத்தில் பழக்கப்பட்டு இவன் பக்கம் கவனிக்காமல் தங்கள் வீடுகளுக்குத் திரும்பிவிடுவார்கள். போன ஆண்டு வசந்தராவ் மூன்றாம் முறை மெட்ரிக் எழுதினான். அந்த வருடம் 'மூவடியால் முவ்வுலகளந்தோன்' திரிவிக்கிரம உருவம் தரித்த வசந்தராவ் மூன்றாவது வழியைக் கடைபிடித்தான். இந்துமதி சுயம்வரத்தில் கலந்துகொண்ட அரசர்களையும் வெட்கமுறச் செய்யும் உபாயங்களைப் பின்பற்றினான். அவன் கன்னியரின் மென்மை யான கன்னங்களை வழவழப்பான பாக்கிற்குக் குறி ஆக்கினான். சிலசமயம் சண்பகமலரின் இதழ்களில் தன் பெயரையோ அல்லது யாராவது பெண்ணின் பெயரையோ எழுதி ஒவ்வொரு நாளும் வெவ்வேறு பெண்களின் கூந்தலில் செருகி பாரபட்சம் இல்லாத தன் காதலின் தன்மையை வெளிப்படுத்தினான். வகுப்பில் மிகுதியாக ஃபாஷன் செய்து கொள்ளுகிற நீளமான தலை மயிரோடு ஆண்பிள்ளை போல் இருக்கிற பெண்ணின் பால் வசந்தராவுக்குச் சிறிதும் பரிவு இல்லை. யாரோ ஒரு நல்லவர், தலையில் உப்பு தூவினால் தலைமயிர் கொட்டிவிடும் என்று எப்போதோ அவனிடம் சொல்லி இருந்தார். அதை நேரில் பரீட்சை செய்வதற்காக அவன் ஒரு நாள் ஸ்கூல் சுவர் மீது ஏறி நின்று கொண்டு அந்தப் பெண் தலையில் அரை சேர் உப்பைக் கொட்டினான். இதைக் கண்ட தலைமை ஆசிரியர் அவனைக் கூப்பிட்டு வன்மையாகக் கண்டித்தார். ஆனால் அவன் தலைமை ஆசிரியாரையும் வட்டமடிக்க வைக்கும் கலையில் கரை கண்டவன். கடுமையாகக் கண்டிக்கப்பட்டு ஒரு பட்டிக் காட்டான் போல் கெஞ்சிக் கூத்தாடி, 'இப்போது ஒரு தப்பு நடந்துவிட்டது.

ஐயா, என்னை உங்கள் பிள்ளை போல் எண்ணி மன்னித்து விடுங்கள்,' என்று கைகூப்பினான். இம்மாதிரி ஆட்களுக்கு எப்படி அறிவுறுத்த முடியும்? தலைமை ஆசிரியருக்கு எல்லா வற்றையும் விட இது ஒரு பெரிய பிரச்னை. பள்ளிக்கூடத்து மாணவர்களுக்கு இடையில் வசந்தராவின் கதைகள் புராணங் களின் புண்ணியக் கதைகளைப் போல் பரவி இருந்தன; அவை இரவும் பகலும் அவனுடைய புகழைப் பெருக்கிக் கொண்டி ருந்தன. அவன் எந்த மாணவனுக்கும் கெடுதல் செய்கிறவன் அல்ல, யாருடைய மனத்தையும் நோகவைப்பவன் அல்ல என்பது பிரசித்தம்.

அதே ஆண்டு இரண்டாம் பகுதியில் பூனாவிலிருந்து மாறுதலாகி வந்த சப்ஜட்ஜின் மகள் பள்ளியில் சேர்ந்தாள். இவள் உடைய வருகைக்குப் பிறகு, பெண் இனத்தாரிடை சமபாவத் துடன் பழகும் பற்றற்ற யோகேசுவார் கிருஷ்ணனின் பட்டம் பெற்ற வசந்தராவ் முற்றிலும் யோகப் பிரஷ்டனாகி அவளுக்கு ஆதரவாளன் ஆகிவிட்டான். இந்தப் பூனைக் கண் பெண்ணை வசந்தன் ஆட்டுக் கண்களால் நோக்கத் தொடங்கினான். இதுவரை விளையாட்டாகப் பேசிவந்த வசந்தன் தன் நண்பன் அப்துல் அஜீஜின் அறையில் சென்று தன்னுடைய உள்ளத்தைத் திறந்தான். அஜீஜிடம் கஜல்கள் கற்று ஐயோ! ஐயோ! என்று நீண்ட நீண்ட மூச்சுகள் விடலானான். கடைசியில் அவனுடைய உதவியோடு இந்தக் காதல் கடிதம் எழுதி அவள் கம்பாஸ் பெட்டிக்குள் ஒளிந்து வைத்துவிட்டான்.

*மிக அன்புள்ள லைலா (குமாரிகோட்)*

எல்லாம் சரி. நான் உயிருக்குயிராய் உன்னைக் காதலிக்கிறேன். நீயும் என்னைக் காதல் செய். நானும் நீயும் சினிமாவுக்குப் போவோம், பாக்ஸில் உட்காருவோம். நான் மோடார் ஸ்டாண்டில் மூன்று மணிக்கு உன்னை எதிர்பார்ப் பேன். சினிமா மூன்றரை மணிக்கு ஆரம்பமாகிறது. நீ வராவிட்டால் என் வாழ்க்கை பாழாகிவிடும். இப்போது அதிகமாக ஒன்றும் எழுத விரும்பவில்லை. பிற, சந்திப்பின் போது. எல்லாம் சரி.

*போ: தார்வார்*
*ஜில்லா : தார்வார்*

*உன்னுடைய மிக அன்புள்ள*
*மஜ்னு வசந்தராவ் கோபால*
*கௌடா தேசாய்*
*(பஹாதுர்)*

லைலா இந்தக் கடிததைத் தன் தாயாரிடமும், தாயார் தன் கணவரிடமும், கணவர் ஓர் அறிமுகக் கடித்துடன் தலைமை

ஆசிரியருக்கும் அனுப்பினார். இவ்வாறு வசந்தனின் காதல் கடிதம் மூன்று நாட்கள் பிரயாணம் செய்தது.

'இதென்ன பேத்தல் காதல் கடிதம்' என்று வாசகர்கள் சொல்லாதிருப்பார்களாக! ஏனெனில் இந்த நிகழ்ச்சி குறைந்தபட்சம் முப்பது ஆண்டுகளுக்கு முன்பு நிகழ்ந்தது. அக்காலத்துக் காதல் கடிதங்கள் இன்றைய காதல் கடிதங்களைப் போல் மலிவானவை அல்ல.

தலைமை ஆசிரியருக்கு முன்னிலையில் மிகச் சங்கடமான பிரச்னை. அப்பெண்ணின் தகப்பனார் சப்ஜட்ஜ் சட்டபூர்வமானது போன்ற ஒரு கடுமையான குறிப்பை அக்கடித்தோடு அனுப்பி இருந்தார்.

தலைமை ஆசிரியர் அவர்களுக்கு,

என்னுடைய மகளின் கம்பாஸ் பெட்டியில் எனக்குக் கிடைத்த கடிதத்தை இத்துடன் இணைத்திருக்கிறேன். இந்தக் காவாலிக்கு எதிராகத் தாங்கள் என்ன நடவடிக்கை எடுப் பீர்கள் என்பதை நான் அறிய விரும்புகிறேன். தயவு செய்து, கடிதம் கொண்டு வருபவனிடம் இரண்டு கடிதங் களும் கிடைத் ததை எழுதி அனுப்பவும். தங்கள்..... முதலியன, முதலியன.....

கடிதம் கொண்டு வந்த சேவகன் வவுச்சர் வாங்கிக் கொண்டு திரும்பினான்.

ஒரு விதத்தில் தலைமை ஆசிரியருக்கு மகிழ்ச்சியாக இருந்தது. இம்முறை எல்லாப் புகார்களும் எழுத்து வடிவத்திலேயே கிடைத்துவிட்டன. இந்தக் கடிதங்களைத் தேசாய்க்கு முன்னால் வைத்து, 'என்ன செய்வது?' என்று அவரையே கேட்பது என்று முடிவு செய்து கொண்டார்.

கடிதங்களைப் பார்த்ததும் தேசாய்க்கு வேர்வை பெருகத் தொடங்கியது. அவருக்கு வேர்த்துக் கொட்டுவதைக் கண்டு தலைமை ஆசிரியருக்கும் வேர்க்க ஆரம்பித்தது. சிறிது நேரம் மௌனம் நிலவியது. இதற்குள் சில பையன்கள் ஆசிரியர்களிடம் சிறுநீர் கழிப்பதற்கென்று விடுதலை பெற்று வெளியில் வந்து தலைமை ஆசிரியரின் அறையில் எட்டிக் குனிந்து பார்க்கலா னார்கள். தேசாய் ஐந்தே நிமிடத்தில் முடிவுக்கு வந்துவிட்டார்.

'ஹெட்மாஸ்டர் சார், நான் ஸ்கூலுக்கு டோனர் என்பதை மறந்து விடுங்கள், ஆனால் பையனின் தந்தை என்கிற முறையில் ஒரு வேண்டுகோள். அதுவும் சரியல்ல என்று தங்களுக்குத் தோன்றினால் தாங்கள் மறுதளிக்கலாம், கவலைப்பட வேண்டியதில்லை.'

தேசாய் என்ன சொல்லி வைப்பாரோ என்று தலைமை ஆசிரியருக்குக் கவலை ஆகிவிட்டது. சற்று கடுத்தவராய், 'சொல்லுங்கள்' என்றார்.

'என் பிள்ளையின் பெயரை நீக்கிவிடும்படி விண்ணப்பம் கொடுக்கிறேன். நீங்கள் அவன் பெயரை நீக்கிவிடுங்கள். இனி பள்ளிக் கூடத்தின் அக்கம்பக்கம் கூட அடிவைக்கக் கூடாது என்று நான் அவனை எச்சரிக்கை செய்கிறேன். இவ்வளவுக்குப் பிறகும் அவன் வழிக்கு வராவிட்டால் அது வேறு விஷயம், பியூனைக் கொண்டு அவனை நீங்கள் வெளியேற்றலாம். ஒருவனால் பள்ளிக்கூடத்திற்கே கெட்ட பெயர் உண்டாகிவிடக் கூடாது. ஸ்கூலும் ஒரு வகையில் என் குழந்தை தான்' தேசாய் தம் ஈரக் கண்களைக் கைக் குட்டையால் துடைத்துக் கொண்டு மேலும் கூறினார்: 'இந்த வெளியேற்ற உத்தரவு நோட்டீஸ் போர்டுக்கு வரக்கூடாது என்பது என் வேண்டுகோள். ரிகார்டிலும் வெளி யேற்றப்பட்டான் என்கிற வார்த்தையை எழுத வேண்டாம். வேண்டுமானால் அந்த ஜட்ஜுக்குப் பையனை வெளியேற்றி விட்டதாக எழுதிவிடுங்கள். நீங்கள் விரும்பினால் மன்னிப்பு வேண்டும் கடிதத்தை எழுதித் தருகிறேன்; ஆனால் ஸ்கூல் ரிகார்டில் அந்த வார்த்தையைக் கொண்டு வர வேண்டாம். இது என் வேண்டுகோள். நீங்கள் விரும்பினால் இதை நிறை வேற்றலாம்'

'புரோகிரஸ் புக் அனுப்பவில்லை, விளையாட்டுகளுக்கு என்று ஃபீஸ் வாங்கிக் கொள்கிறீர்கள், ஆனால் விளை யாடுவதற்கு ஒன்றும் தருவதில்லை' சாதாரணப் போஷகர் களிடமிருந்து இந்த மாதிரி விஷயங்களைக் காலை முதல் மாலை வரை தலைமை ஆசிரியர் கேட்பது வழக்கம். இப்போது தேசாய் இம்மாதிரி பேசக் கேட்ட தலைமை ஆசிரியருக்குச் செவிகளில் அமுதமாரி பொழிந்தாற் போலிருந்தது. நன்றிவுணர்ச்சியால் அவருடைய திறந்தவாய் திறந்தபடி இருந்துவிட்டது. தேசாய் இவ்வாறு கூறுவார் என்று அவர் எதிர்பார்க்கவில்லை. தேசாய் சொன்னதைக் கேட்டதும், எல்லா தரப்பாருக்கும் நியாயம் கிட்டிவிடும் என்று அவருக்குப் பட்டது. ஜட்ஜிடம் சிறிது பொய் சொல்ல நேரும், ஆனால் வெறும் ஜோடனையாலேயே இதிலும் ஓரளவு காப்பாற்றிக் கொள்ளலாம். இதைவிட அதிகமாக, ஸ்கூல் ரிகார்ட் பற்றித் தேசாய் காட்டிய சிரத்தையைக் கண்டு ஆசிரியரின் களைத்திட்ட மூளைக்கு அமைதி கிட்டியது.

தலைமை ஆசிரியர் வசந்தராவை அழைத்துவர ஆளனுப் பினார். அவன் இன்னும் தன் வகுப்புக்கு வந்து சேரவில்லை. அன்று நன்றாக அலங்கரித்து உடுத்திக் கொண்டு வசந்தராவ்

மத்தியானம் முழுவதும் நண்பன் அப்துல் அஜீஜின் அறையில் கழித்தான். அவனோடு ஹோட்டலில் நீண்ட ஆலோசனை நடத்தினான். இரண்டு மணிக்கு மோடார் ஸ்டாண்டுக்குப் போய் நின்று விட்டான். இரண்டு மணி நேரம் நின்ற பின்னரும் யாரும் வரவில்லை. மோடார் ஸ்டாண்டுக்கும் சினிமா தியேட்டருக்குமாக இவன் பத்து தடவை அலைந்துவிட்டான். இதற்குப் பிறகுதான் அவனுடைய காதலி அவனை விரும்பவில்லை என்று அவனுக்கு உறுதி ஆயிற்று. ஸ்கூல் விட்டதும் முதலில் அவளைச் சந்தித்து அவளிடம் தன் உள்ளத்து வேட்கையை உரைத்துவிட வேண்டும் என்று அவனுடைய இழிநெஞ்சு யோசனை கூறியது. நீண்டதூரம், ஆகையால் நேரத்தில் போய்ச் சேரமுடியுமா என்று அவனுக்குச் சந்தேகமாக இருந்தது. உடனே அவன் ஒரு தாங்கா அமர்த்திக் கொண்டான். தாங்கா கணகணவென்று ஸ்கூல் முற்றம் வரை விரைவாகச் சென்றது. இதுயாருடைய குதிரை என்று பார்க்க ஸ்கூல் பூராவும் திரண்டு வந்துவிட்டது. தலைமை ஆசிரியரும், யாராவது இன்ஸ்பெக்டர் வந்துவிட்டாரோ என்று எண்ணியவராகத் தம் அறையிலிருந்து வெளியே புறப்பட்டு வந்தார். அவருக்குப் பின்னாலேயே இரண்டு சேவகர்கள் ஓடினார்கள். இன்ஸ்பெக்டரோ என்கிற அச்சத்தால் காம்பவுண்டுக்குள் இருந்த மரங்களின் குருவிகளும் திகைத்துவிட்டன.

இந்தத் தருணத்தில் வசந்தராவ் மிக ஆடம்பரமாகத் தன் ஆடையை சுதாரித்துக் கொண்டு தாங்காவிலிருந்து இறங்கினான். தாம்பூலத்தால் அவனுடைய வாய் சிவந்திருந்தது. அவனுடைய கம்பளிக் கோட்டிலிருந்து வீசிய அத்தரின் நறுமணம் தோட்டத்து மலர்களின் மணத்தை அமுக்கிவிட்டது. கோட்டில் புது ரோஜா ஒன்று செருகப்பட்டிருந்தது. பையில் இரண்டு மூன்று வண்ணக் கைக்குட்டைகள் அலங்காரமாக எட்டிப் பார்த்தன. பாலிஷ் செய்யப்பட்ட செருப்புகள் பளபளத்தன. கழுத்தில் ஸ்கார்ஃப் சேஷ நாகம் போல் சுற்றிக் கொண்டு இருந்தது. தலைமயிரின் ஒரு குஞ்சம் நெற்றியில் விளையாடிக் கொண்டிருந்தது. அவனை மஜ்னூ ஆக்குவதற்காக அப்துல் அஜீஜ் அவனுடைய கண்களுக்கு மையும் இட்டிருந்தான். இந்த அலங்காரங்களை எல்லாம் சேர்த்துப் பார்க்க வசந்தராவ் இரண்டு நாடகப் பாத்திரங்களை ஞாபகப்படுத்தினான்: பாதி பீம சேனன், பாதி மூன்று மாதக்குழந்தை.

தலைமை ஆசிரியர் தம் செருப்புகளைப் பற்றிய நினைப்பும் அற்றவராய்க் குதிரை போல் ஓடியாடி வசந்தனுக்கு முன்னால் வந்து நின்றார். கூப்புவதற்காக எழுந்த கைகள் தலை சொரியலாயின. ஒரு நிமிடம் வரை என்ன செய்வது என்று தோன்றாமல் இப்படியும் அப்படியும் பார்த்தார். வகுப்புகளில்

மாணவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்துத் தம் சிரிப்பை அடக்கிக் கொண்டிருந்தனர். நாலாவது, ஐந்தாவது வகுப்பின் அதிகப் படிப்பு இல்லாத ஆசிரியரால் சிரிப்பை அடக்கிக் கொள்ள முடியவில்லை, அவருடைய வாயிலிருந்து ங்...என்ற ஒலி வெளிப்பட்டதும் வகுப்பு முழுவதும் 'ஹோ...ஹோ' சிரித்துவிட்டது. அவர்களுடைய நகைப்பொலி கேட்டு மற்றும் இரண்டு மூன்று வகுப்புகளில் சிரிப்பு பரவியது. இந்தச் சிரிப்புக்கு இடையில் தலைமை ஆசிரியர் சமாளித்துக் கொண்டு தம் கடமையைப் பற்றி எண்ணலானார்.

'என்னது?' என்றார் அவர் கம்பீரமாக.

'ஒன்றுமில்லை, சார். எங்கள் வீட்டில் திவசம். அதனால் வருவதற்கு நேரம் ஆகிவிட்டது'.

இந்தத் திவசத்தை இப்போதே தீர்த்துக் கட்டிவிட வேண்டும் என்று தலைமை ஆசிரியர் கருதினார். அவர் அவனைத் தம் அறைக்கு அழைத்துப் போனார். அவனுடைய காதல் கடிதத்தை அவன் கையில் கொடுத்து, 'இதை எழுதியது நீ தானா?' என்று கேட்டார்.

தன் ரத்தத்தால் எழுதப்பட்ட கடிதம் தன் கைகளிலேயே திணிக்கப்பட்டதும் அது தன் பகைவனாக அவனுக்குத் தோன்றியது. அவனே போட்ட கைஎழுத்து. மையும் அவனுடையதே. தவறாக எண்ணப்பட்டு விடக்கூடாது என்று அவனே கடைசியாக இணைத்த 'பஹாதுர்' என்ற வார்த்தை. இவ்விஷயங்கள் யாவும் வசந்தனைக் கட்டிவிட்டன. ஒன்றும் சொல்ல அவன் விரும்பவில்லை. பொய் வேகம் காட்டிச் சட்டத்தின் உதவியை நாடினான்.

'ஆம் ஐயா, நான்தான் எழுதினேன், ஆனால் நீங்கள் ஏன் படித்தீர்கள்?'

அப்போது தலைமை ஆசிரியர் ஜட்ஜின் கடிதத்தை அவனுடைய மூக்குக்கு முன்னால் நீட்டினார்: 'நாளை முதல் நீ ஸ்கூலுக்கு வரக்கூடாது' என்று முழங்கினார்.

அவருடைய சினத்தைக் கண்ட வசந்தராவ் சமாதான வழியைத் தேடினான்: 'சார், என்னை உங்கள் பிள்ளையாக எண்ணிக் கொள்ளுங்கள். இந்தத் தடவை மன்னித்துவிடுங்கள். இந்தத் தவறை நமக்குள்ளேயே வைத்துக் கொள்ளுங்கள்.'

ஆசிரியருக்கு வசந்தனின் இச்சொற்கள் புதியவை அல்ல: 'இதெல்லாம் நடக்காது. நாளை முதல் நீ ஸ்கூலுக்கு வரத் தேவை இல்லை. வந்தால்...?' என்று அவர் எச்சிலை விழுங்கினார்.

வசந்தனுக்கு இது ஒரு புதிய சங்கதி.

'வந்தால் என்ன செய்வீர்கள்?'

'இதைப் பாலப்பாவிடம் கேள்'.

பாலப்பா மணி அடிக்கிற பலசாலியான சேவகன். வசந்தனுக்குப் பெரும் கோபம் வந்தது. அவமானமாகவும் இருந்தது. கர்வத்தோடு திக்கியபடி கூறினான்: 'ஆம், பாலப்பா என்ன செய்துவிடுவான்? எங்கள் அப்பா கொடுத்த வேலை, இல்லாவிட்டால் அலைந்துகொண்டு இருப்பான். என்னை அவன் தொடட்டும், பார்க்கலாம்', என்று கூச்சலிட்டுக் கொண்டே முக்கிய விஷயத்துக்கு வந்தான்: 'நாளை முதல் நான் ஸ்கூலுக்கு வரக்கூடாதா? ஏன்? நான் ஃபீஸ் தரவில்லையா? கல்லா தருகிறேன்? ஃபீஸ் தருகிறேன், சார், ஃபீஸ்.'

'உன்னுடைய ஃபீஸூம் தேவை இல்லை, நீயும் தேவை இல்லை.'

'ஏன்? உங்களுக்குத் தேவையானால் வரவேண்டும் இல்லாவிட்டால் கூடாதோ? இந்த ஸ்கூல் உங்கள் அப்பன் சொத்தில்லை' - என்று வசந்தன் விசிக்கலானான். சேவகர்கள் அழுத்தமாக அவனைப் பிடித்துக் கொண்டார்கள். அவன் தரையில் அழுத்தமாக உட்கார்ந்து கொண்டான். தலைமை ஆசிரியர் தேசாய் மன்னிப்புக் கோரி எழுதிய கடிதத்தைப் படித்தவுடன் அவனுடைய காலடிப் பூமி நழுவிவிட்டது. இறுதியில் தலைமை ஆசிரியர், 'தேசாய் உன்னைப் பாலப்பாவைக் கொண்டு வெளியேற்றும்படி வாய்மொழியாக உத்தரவு போட்டிருக்கிறார். அவருக்கு உன் விஷயங்கள் எல்லாம் தெரியும்' என்றவர் மேலும் உரைத்தார்: 'உன் தகப்பனார் இன்னொரு விஷயமும் சொல்லி இருக்கிறார்: - நீ கோபம் கொண்டு நான் இரவில் வீட்டுக்குப் போகும்போது ஏதாவது செய்தால்...?' இவ்வளவும் சொன்ன பிறகு அவர் அவனிடம், 'நீ போகலாம்' என்றார்.

வசந்தன் பந்து போல் துள்ளி வெளியில் வந்தான். காசு கொடுக்காததால் தாங்கா வெளியில் இன்னும் நின்று கொண்டிருந்தது. வசந்தராவ் பாதி விசித்தவாறும் கைவிரல்கள் முறுக்கியவாறும் தாங்காவில் ஏறினான் - பிறகு கூறினான்: 'போகட்டும் போ, இந்த ரூமுக்கு எவன் வருவான்?' என்று தன் ஸ்கூலின் விரிப்பு மீது துப்பினான்.

## 12. வசந்தராவின் லங்கா தகனம்

பள்ளிக்கூடத்திலிருந்து வெளிப்பட்டு வசந்தராவ் நேராக நண்பன் அப்துல் அஜீஜின் ரூமுக்குப் போனான். அப்துல் அஜீஜுக்குத் தன் கலாவல்லபத்துக்கு உகந்த பரிசு கிடைக்கவில்லையே என்று மிகவும் வருத்தமாக இருந்தது. இந்தக் காதல் நேசத்தினால் உண்மையான துன்பம் அவனுக்குத்தான். லைலா மஜ்னூ கதையைப் படித்தே இளமைப்

பருவம் எய்திய அந்த நண்பனுக்குக் கவலை உண்டாகிவிட்டது, இந்த வசந்தராவ் அழிந்து போவானோ, மார்பில் அறைந்து கொள்வானோ, பைத்தியம் ஆகிவிடுவானோ என்று அவன் வசந்தனுக்கு ஆறுதல் கூறலானான்; ஆனால் வசந்துக்கோ காதல் சங்கதியே மறந்து போயிற்று. அவனுடைய தலையில் காதலுக்குப் பதில் ஸ்கூலில் ஏற்பட்ட அவமானத்தைப் பற்றின விஷயமே குமுறிக் கொண்டிருந்தது. ஸ்கூலுக்கு நெருப்பு வைக்கலாமா, தலைமை ஆசிரியரை இருட்டின பிறகு பிடித்துக் கைவரிசை காட்டலாமா என்பன போன்ற முரட்டு யோசனைகளில் இருந்தான். அப்துல் அஜீஜின் கஜல்களால் அவனுக்கு அமைதி உண்டாகவில்லை. அவன் 'தனியாகவே தீரச் செயல்கள் புரிய வேண்டும்' என்ற எண்ணத்தோடு இருட்டியபின் வீடு நோக்கிப் புறப்பட்டான். வீட்டை நெருங்கியதும், 'இங்கே ஏன் போக வேண்டும்?' என்று திரும்பினான். இம்முறை, சலிக்கும் உள்ளம் காரணமாகச் சுற்றி அலைந்து கொண்டிருக்க, மணி பத்து ஆகிவிட்டது. கடைசி முறை, தன் வீட்டுக் காம்பவுண்டுக் கம்பிகள் வழியாக இந்த உரையாடல் காதில் விழுந்தது.

'கிணற்றுக்குப் பக்கத்து வீட்டில் சீட்டாடிக்கொண்டு இருப்பான். அங்கே பார்த்தாயா?' என்று தேசாய் கேட்டுக் கொண்டிருந்தார்.

'அங்கேயும் இல்லை, எஜமான்'.

'அந்த முஸ்லீம்பையன் அறையில் பார்த்தாயா?'

'அங்கே இருந்துதான் வருகிறேன்.'

'இன்னும் அரைமணி நேரம் அவனுக்காகக் காத்திரு. அவன் வந்ததும் என்னை எழுப்பு...எங்கே போய் விடுவான்?...' அப்புறம் எல்லாரும் மௌனமாக இருந்தார்கள்.

இந்த உரையாடலைக் கேட்ட வசந்தனுக்கு அங்கிருந்து ஓடிவிட வேண்டும் என்ற விருப்பம் உண்டாயிற்று, ஆனால் கால்கள் வலிக்க ஆரம்பித்திருந்தன. அஜீஜின் அறையும் ரொம்ப தூரம். வேறு யார் வீட்டுக்காவது போனால் பல சிக்கல்கள் உண்டாகும். புரோகிதர் பாலமபட்டர் வீட்டுக்குப் போய் 'பட்டரே, நீங்கள் தான் சாப்பாடு பண்ணி வைக்கவேண்டும்' என்று சொல்ல முடியும், ஆனால் அங்கே படுப்பது கஷ்டம். அங்கு மூட்டைப் பூச்சிகள் ஏராளம். அவனுக்கு ஒரு யோசனை வந்தது. ஏதாவதோர் அறையின் பின்பக்கத்திலிருந்து முற்றத்தில் நுழைந்து பேசாமல் மேலே உள்ள தன் அறைக்குள் புகுந்துவிட வேண்டும்.

பின்பக்கம் முழுவதும் இருட்டு. வேலியைத் தாண்டி முள் குத்தாததால் மகிழ்ச்சியுற்று வீட்டுக்கருகில் வந்தான். இருட்டில்

வீடு வெள்ளைத் தேவன் போல் தெளிவின்றி நின்றது. தொப்பியை எடுத்துப் பையில் போட்டான், கோட்டைக் கழற்றித் தோள்களோடு இடுப்பில் கட்டிக் கொண்டான். செருப்புகளை மறைவான இடத்தில் பதுக்கினான். வேட்டியைத் தூக்கிக் கச்சையை இறுக்கிக் கட்டிக் கொண்டான். ஜன்னலில் கால்வைத்து அதன் கம்பிகளில் கால் கட்டைவிரலை ஊன்றி நட்டியபடி நகர்ந்து ஜன்னல் வளைவுக்கு நடுவிலுள்ள கல்லைப் பிடித்துத் தொங்கினான். அங்கிருந்து தாவி ஒரு சிறு கல் மீது காலூன்றி மண்டியிட்டு நடுவிலிருந்த கல்மேல் ஏறிவிட்டான். அரை அடி அகலமிருந்த அக்கல் மீது முழங்கால்கள் வலிக்க ஆரம்பித்தன. உள்ளங்கைகளின் உதவியால் சுவரைப் பிடித்துக் கொண்டு ஒரு முறை நின்றான். அங்கிருந்து மேலே கையை உயர்த்தினால் அவனுடைய விரல்கள் அவன் அறையில் ஜன்னலுக்கு அடியிலிருந்த கல்லைத் தொட்டன. ஜன்னல் கம்பிகள் வரை வசந்தனின் கைஎட்டினால் அவன் ஒரே தாவலில் தன் அறைக்குப் போய்ச் சேர்ந்திருப்பான். மறுபுறம் கையில் நீட்டினால் வராந்தா கம்பிகள் கைக்கு ஓரங்குலத் தூரத்தில் இருந்தன. வசந்தன் தன் உடம்பு முழுவதையும் குறுக்கிக் கொண்டு விரல்களில் பலத்தால் நின்று கொண்டான். அவனுடைய விரல்களுக்கள் ஜன்னலின் பாதிக் கல்லை மட்டும் பற்றிக் கொண்டன. அதன் மீது அவன் தன் முழுபாரத்தையும் எப்படி விட முடியும்?...

இத்தகையை ஏமாற்றம் வசந்தனுக்கு ஆயுளில் ஒரு காலும் ஏற்பட்டதில்லை. இதுவரை மறந்திருந்த உடல் களைப்பு மீண்டது. உடம்பு முழுவதும் களைத்து விட்டது. வேர்த்துக் கொட்டியது. கெண்டைக் கால்களில் இரும்பு முள் ஏற்றுவது போல் வலிக்கத் தொடங்கியது: உள்ளங்கால்களும் வியர்வையால் நனைந்தன. இன்னும் கொஞ்சம் அவனுடைய கவனத்தை நிராசையே ஈர்த்திருந்தால் அவன் அங்கே கூரையிலிருந்த விழுகிற பல்லியைப் போல் தரையில் விழுந்திருப்பான். அவன் தன்னைச் சமாளித்துக் கொண்டான்; காலைக் கீழேவிட்டுப் பார்த்தான். கீழே ஜன்னலின் கம்பிகள் காலுக்கு எட்டவில்லை. குதிப்பது ஒன்றுதான் வழி. தரை எவ்வளவு தூரத்தில் இருக்கிறது என்று இருட்டில் தெரியவில்லை. எங்கே விழுந்தாலும் கால்களின் பலத்தால் விழுவதே சரி என்று எண்ணிச் சற்றுப் பின்பக்கம் வளைந்து தாவிப் பாய்ந்தான். காற்றில் அரைகணம் தடையில்லாது யாத்திரை செய்தபின் ‘தொப்’ என்று தரையில் உட்கார்ந்து விட்டான். கண்கள் இருண்டதால் இரண்டு நிமிடங்கள் தலையைப் பிடித்துக் கொண்டு களைப்பாறினான். உலகம் முற்றிலும் சூன்யமாகப் பட்டது.

இதற்குள் மூலையிலிருந்து சரசரவென்று சத்தம் கேட்டது. இது மாட்டுக் கொட்டில். கொட்டில் வசந்தனுக்கு அழைப்பு விடுத்தது போலும். நகர்ந்தவாறு அங்கே சென்றான்; வைக்கோல் மீது புரண்டான். அங்கேயே தூங்கிப் போனான்.

இரவு பன்னிரெண்டு மணிவரை பையன் வீடு திரும்ப வில்லை, சினிமாவுக்குப் போயிருந்தாலும் இதற்குள் திரும்பி இருக்க வேண்டும். இதுவரை பேசாமலிருந்த வேணுபாய் துயரப் பட்டு அழத்தொடங்கினாள். கணவன், மனைவி இருவரும் அவ்விரவு சாப்பிடவில்லை. இரவு இரண்டு மணிவரை தேசாய் தெருத் தெருவாய் அலைந்தார். கடைசியில் ரயில்வே ஸ்டேஷனுக்குச் சென்றார்; வெய்டிங் ரூமில் உட்கார்ந்தார். அங்கே ஒருபக்கம் பரமாவையும், மறுபக்கம் யல்லாவையும் தேடிப் பார்க்குமாறு விரட்டினார். அவர்கள் லாந்டேன் எடுத்துக் கொண்டு ஒரு மைல் ஒன்றரை மைல்வரை தேடிவிட்டுத் திரும்பினார்கள். பெருமூச்சு விட்டபடி வீட்டுக்கு வந்தார்கள். வேணுபாய் தன் இளையபிள்ளை புருஷோத்தமனை மார்போடு அணைத்துக் கொண்டு கவலையோடு தெருவைப் பார்த்தவாறு படுத்திருந்தாள். சற்று காலடிச் சத்தம் கேட்டதும் விழித்துக் கொண்டாள், மறுபடியும் அழுவாரம்பித்தாள். அவளுக்குத் தைரியம் சொல்வதற்குள் சேவல் குரல் கொடுக்கத் தொடங்கியது. பொழுது விடிந்ததும் எல்லாருக்கும் தூக்கம் வந்துவிட்டது.

சுமார் ஏழு மணிக்கு சாணமும் குப்பையும் அள்ளுவதற்காக மாட்டுக் கொட்டிலுக்கு வந்த பரமா துரோணாவதாரம் போல் வைக்கோல்போரில் வசந்தனைக் கண்டான். தேசாய் அப்போதுதான் சற்று கண்ணயரத் தொடங்கினார். அவன் அவரை எழுப்பிவிட்டான். வேணுபாய் ஓடோடி வந்தாள், ஊமை போல் கண்களை அகலவிரித்து மகனைப் பார்த்தபடி இருந்துவிட்டாள். தேசாய் வேறொன்றும் பேசாமல் அவனை எழுப்பும்படி பரமாவுக்கு ஆணையிட்டார். வேணுபாய் தானே போய் அவனை மடியில் ஏந்தி எழுப்பினாள். வசந்தன் கண்களைத் தேய்த்துக் கொண்டே எழுந்து அமர்ந்தான். இங்குமங்கும் பார்க்க, உலர்ந்த சாணமும், புல் முதலியன தென்பட்டதும் வசந்தனுக்கு முன்னாள் நிகழ்ந்தவை யாவும் நினைவு வந்துவிட்டன.

அம்மா அவனை மார்போடு அணைத்துக்கொண்டு ‘வசந்து, வசந்து’ என்று அழுகை மண்டிய இடத்தில் கூப்பிட்டாள். மிகவும் அன்போடு ஒரு கோப்பை பால் அருந்தச் செய்தாள். தேசாய் எல்லாவற்றையும் மௌனமாகப் பார்த்தார். மகன் இவ்வாறு படுத்திருப்பதைக் கண்டு அவருடைய உள்ளமும் உருகிவிட்டது; ஆனால் அந்த உணர்ச்சியை வெளியில் காட்ட அவர் விரும்பவில்லை.

வேணக்கா வசந்தனை எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டினாள். ஆரத்திச்சுற்றி, திருஷ்டி கழித்துக் நெற்றியில் குங்குமம் பொட்டு வைத்தாள். சிற்றுண்டி உண்ண அழைத்துச் சென்றாள். பசி காரணமாக வசந்தன் நன்றாகச் சாப்பிட்டான். இதற்குப் பிறகு தாயார் மன்றாடிக் கூறினாள்: 'வசந்தா, என்னை விட்டு எங்கேயும் போய் விடாதேடா, குழந்தை. பார், உன்னால் நேற்று ராத்திரி ஒரு நொடி கண்களை மூடவில்லை. ராத்திரி பூராவும் இப்படியே உட்கார்ந்திருந்தேன். அவரும் இரவெல்லாம் உன்னைத் தேடித் தெருத் தெருவாக அலைந்தார். எப்படி களைத்துவிட்டார். வேண்டுமானால் பரமாவைக் கேட்டுப் பார். போ, குழந்தை, அவரிடம் மன்னிப்புக் கேள்: 'தப்பு செய்துவிட்டேன், அப்பா' என்று சொல். இதனால் அவருடைய மனப்பாரம் கொஞ்சம் குறையும்.'

ஆனால், வயிறு நிறைந்த பிறகு வசந்தன் தகப்பனாரை மன்னிக்கத் தயாராக இல்லை. அவர் அவனை ஸ்கூலிருந்து வெளியேற்றச் செய்தார். பியூனைக் கொண்டு வெளியேற்றும்படி தலைமை ஆசிரியரிடம் சொன்னார். இதை எல்லாம் நினைத்து அவன் தாயார் சொன்னதை ஏற்க அவன் தயாராக இல்லை.

வசந்தனின் விந்தையான பராக்கிரமத்தையும் அவனுடைய பழைய தவறுகளையும் மறந்துவிட்டு எல்லாரும் வீட்டில் வழக்கம்போல் வரவேற்றார்கள், ஆனால் மறுநாள் முதலே அவனைத் தார்வார் நகரமே கடிக்கத் தொடங்கினாற் போலிருந்தது. அவன் ஸ்கூலிருந்து வெளியேற்றப்பட்ட செய்தி நகரம் எங்கும் பரவி இருந்தது, அவனால் சந்துகள் வழியாகப் போவதும் கஷ்டமாக இருந்தது. நகரம் பூராவும் தனக்குப் பகை ஆகிவிட்டதாய் அவனுக்குப் பட்டது. தன் ஆத்திரத்தை மிஸ். கோட்டிடம் தான் காட்ட வேண்டும் என்று தீர்மானித்தான். இதனால் அவன் ஓரிரவு சந்தடி செய்யாமல் வீட்டிலிருந்து நழுவி, எல்லாப் பொது இடங்களிலும் அவளுடைய பெயரையும் சிருங்காரச் சொற்களையும் ஒரு கத்தியால் செதுக்கிவிட்டு வந்தான்.

இதைப்பற்றித் தேசாயிடம் மீண்டும் புகார் வந்தது. வசந்தன் வீட்டில் எல்லார் பேரிலும் ஆணையிட்டுக் கூறினான்: 'நான்தான் வீட்டைவிட்டு வெளியே புறப்படவில்லையே. நான் இம்மாதிரி வேலை செய்யவே இல்லை.' என்ன செய்வது என்று தேசாய்க்கு விளங்கவில்லை. கடைசியில் வேணக்காவின் வேண்டுகோளைக் காதில் வாங்கிக் கொள்ளாமல் அவனைக் கிராமத்துக்கு அனுப்பி விட்டார். அவனும் தார்வாரை விட்டுப் போகவே விரும்பினான். தந்தை, தார்வார் மக்களின் பார்வையிலிருந்து விலகி அவன் கிராமத்தை அடைந்ததும் இன்பப் பெருமூச்சு விட்டான்.

# 13. ஜார்ஜ் வாஷிங்டன் கம்பார் கணிவி

கச்சேரியில், மாறிவிட்ட தன் மனப்பாங்குக்கு ஏற்ற புதிய நண்பன் ஒருவன் கிட்டிக்குக் கிடைத்தான். அவன் பெயர் ஜார்ஜ் வாஷிங்டன் கம்பார் கணிவி.

பல நாட்கள் வரை ஜார்ஜின் நீளமான பெயர் காரணமாக ஒரு மந்திரவாதி போலக் கிட்டி தூரவிலகி இருந்தான். அவன் தன் காரியமே கண்ணாக இருப்பவன். ஏதாவது வேலை இருந்தால்தான் யாருடனும் பேசுவான். கிட்டிக்கோ அவன் வெறும் பெயர் மட்டிலுமே. கிட்டியின் சுபாவமே இக்காலத்தில் சற்றுமாறி இருந்தது. தாசில்தாரின் புத்திமதியைக் கேட்டு அவன் வீட்டில் சட்டபுத்தகங்களையும் சில கேஸ்களின் ஃபைல்களையும் படித்துக் கொண்டு இருந்தான். வேலையின் சூக்குமம் புரிந்துவிட்டதால் அவனுக்குப் பழைய நண்பர்கள் பிடிக்கவில்லை. தெரியாதவன் என்று கூறிக்கொண்டு அவர்களிடம் சென்று சிறிய-பெரிய விஷயங்களைப் பற்றி யோசனை கேட்பது தன் கௌரவத்திற்கு உகந்ததாய் அவனுக்குப்படவில்லை. அவன் தங்களிடம் யோசனை கேட்க வரவேண்டும் என்றே அவர்கள் மனத்திற்குள் விழைந்தார்கள். இப்போதெல்லாம் ஏதாவது ஒரு விஷயம் புரியாவிட்டால் அவன் நேராகத் தாசில்தாரிடம் சென்றுவிடுவான். இதனால் மற்றவர்களுக்குச் சந்தேகம் உண்டாகிவிட்டது. அவர்கள் முன்போல அவனோடு மனம் விட்டுப் பேசுவதை நிறுத்திக் கொண்டார்கள். கிட்டியைப் பற்றித் தாசில்தார் 'நல்ல ஊழியன்' என்றார். இவ்விஷயம் வெளியில் பரவிப் பொறாமைக்குக் காரணம் ஆயிற்று. எந்த வேலைக்காகவும் அவன் அவர்களை நாடாமல் போகவே அவர்கள் அவனைக் கிண்டல் செய்யாமல் இருப்பதில்லை. ஒரு முறை ஒரு சின்னஞ்சிறு வேலைக்காக அவன் ஜார்ஜோடு பேச நேர்ந்தது, அப்போது ஜார்ஜுடன் கொஞ்ச நேரம் பேசி அவனை நல்ல நண்பன் ஆக்கிக் கொண்டான். ஜார்ஜுடம் நட்பை வரவேற்கிறவன். அவனாக முன்சென்று யாரோடும் பழக அவன் விரும்புவதில்லை, ஆனால் அவனிடம் நட்புக்கரம் நீட்டுபவர்களிடம், அவர்கள் அவன் மனத்திற்குப் பிடித்துவிட்டால் தாராளமாய்ப் பழகுவான். சில நாட்கள் அவர்களுடைய நட்பு நெருக்கமாயிற்று. வெறும் பெயராக இருந்த ஜார்ஜ் ஜீவனுள்ள மனிதன் ஆனான்.

ஜார்ஜின் வாழ்க்கை தூக்கம் போன்றது. மௌனமே அதன் ரகசியம். ஆபீசில் மௌனமாக இருந்தே அவன் தன் செல்வாக்கைப் பெருக்கிக் கொண்டான். மற்றவர்கள் அவன் முதுகுக்குப் பின்னால் அவனுடைய பெயரைப் பற்றியும் மௌனத்தைப் பற்றியும் பரிகாசம் செய்து சிரிப்பது வழக்கம், ஆனால், கிட்டியைப் போல வசவுதின்னும் சந்தர்ப்பம் இதுவரை அவனுக்கு வந்ததே இல்லை. அவன் எப்போது தன் ஃபைல்களைப் படித்துக் கொள்கிறாள் என்று யாருக்கும் தெரியாது. ஆனால் அவன் எங்கு இருந்தாலும் அங்கு வேலை பாக்கி இருப்பதில்லை. வேலையிலேயே ஈடுபட்டிருப்பது, பிழைகள் செய்வது முதலிய விஷயங்கள் இல்லாத காரணத்தால் கச்சேரியில் அவனுடைய வேலைப் பற்றியும் யாருக்கும் தெரியாது. அவனை யாரும் 'நல்ல ஊழியன்' என்று கூறவில்லை. அவனுடைய வேலையைப் பற்றி யாரும் புகழ்ந்ததில்லை, ஏனெனில் மற்றவர்களைப் போல முயற்சி செய்து முன்னேற வேண்டிய தேவை அவனுக்கு ஒரு போதும் ஏற்படவில்லை. நன்றாக வேலை செய்கிறோம் என்று அவனுக்கே தெரியாது! கச்சேரி வேலையைப் பற்றின வரையில் அவனுடைய கண்ணோட்டம் இதுதான்: எல்லாரும் தத்தம் வேலையைச் செய்கிறார்கள், நானும் செய்கிறேன்.

தொடக்கத்தில் கிட்டிக்கு அவனிடம் விருப்பம் ஏற்படக் காரணம், அவனுக்கு வேறுயாரும் நண்பர்களில்லை என்பதல்ல, ஆனால், 'தடுக்கி விழுந்தாலும் பஞ்சுக் கடையில் விழவேண்டும்' என்கிற பழமொழியைப் போலக் கிட்டி விரைவிலேயே இந்தப் புதிய ஆளின் ஒழுக்கத்தால் ஈர்க்கப்பட்டான். எல்லாவற்றிலும் முதன்மையாகக் கிட்டி ஜார்ஜிடம் பிரியம் கொள்ளும்படி செய்த விஷயம், அவன் யாரை எப்படி பார்த்தானோ அப்படியே மதித்தான். அவன் கிட்டியின் தோற்றம் பற்றியோ, பேசும் விதம் பற்றியோ ஒருவார்த்தையும் பேசவில்லை. கிட்டியின் ஆடை, அவன் குடுமி, மீசை, கோட், தொப்பி பற்றி அவனுடைய நண்பர்கள் எப்போதும் ஏதாவது கேலி செய்வது வழக்கம். ஆனால், ஜார்ஜுக்கோ இவை எல்லாம் தென்படுவதே இல்லை போலும். கிட்டி எப்படி இருந்தானோ அப்படியே ஜார்ஜ் ஏற்றுக் கொண்டான்.

அவன் தன் வேலையில் சரியாக இருந்தான். அவனுக்கு வாழ்க்கையைக் குறித்துக் கற்பனையான ரொமான்டிக் விருப்பின்மை இருந்தது. அதை அகற்றுவதற்காக இரண்டு நாளைக்கு ஒரு முறை அவன் சினிமா பார்ப்பது வழக்கம். இதுவே ஜார்ஜின் வாழ்க்கைச் சாரம் போல் என்று கிட்டிக்குத் தோன்றியது. தன்னைப் பற்றி அவன் சிந்தித்ததே இல்லை, ஆனால்

அவனிடம் அநாவசியமான பணிவும் இல்லை. கிட்டிக்குத் தெரியாமலே அவனுக்கு ஜார்ஜ் ஓர் ஆதரிசபுருஷன் ஆகிவிட்டான். கிட்டி முயற்சி செய்து புகழ்பெற்றுக் கொண்டிருந்தான், ஜார்ஜிடம் இயல்பாகவே இக்குணங்கள் எல்லாம் இருந்தன. கிட்டி இதன் காரணம் பற்றி யோசிக்கத் தொடங்கி இருந்தான். இந்தச் சமயம் தான் தாசில்தார் அவனை 'நல்ல ஊழியன்' என்றார். ஆனால், ஜார்ஜ் பற்றி அவ்வாறு ஒன்றும் கூறவில்லை, அதனால் தன் வேலை ஜார்ஜின் வேலையைவிட நல்லது என அவனுக்குப்பட்டது. ஆனால், இதனாலும் அவனுக்கு முழு மகிழ்ச்சி உண்டாகவில்லை.

ஜார்ஜ் கிட்டியின் வாழ்க்கையில் சினிமா கொண்டு வந்தான். சினிமா இல்லாத வாழ்க்கை அவனுக்கு வறட்டு வாழ்க்கையாகத் தோன்றியது. குறைந்த பட்சம் இரண்டு மூன்று நாளைக்கு ஒரு முறை அவனுக்கு ஒரு சினிமா வேண்டும். இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு முன்பு பொழுது போக்குத் துறை அவனிடம் இருந்தது. இப்போது அது அவன் கையை விட்டுப் போய்விட்டது. ஆனால், சினிமாக்காரர்களிடம் அவனுக்கு இப்போதும் செல்வாக்கு இருந்தது. அவன் விரும்பினால் எவ்வளவு பேரை வேண்டுமானாலும் கட்டணம் இல்லாமல் அழைத்துச் செல்லலாம்.

அவனோடு கிட்டி முதன்முறை சினிமாவுக்குப் போனான். போகும்போது அவன் பயந்துகொண்டிருந்தான். ஜார்ஜின் வற்புறுத்தல் ஒரு பக்கம்; இரண்டாவதாக, நுழைவுக் கட்டணம் இல்லாத சினிமா. தன் காசை வீணாக்கவில்லை என்று அவனுக்கு ஆறுதல். அவனுக்கு சினிமா ஒரு புதிய அனுபவம். குழந்தைப் பருவத்தில் ஒரு பேசாப்படம் பார்த்து அவன் அலுத்ததுண்டு. அந்த ஒரே ஒரு அனுபவம்தான் கிட்டியின் கற்றுக்குட்டி மனசுக்கு சினிமா தியேட்டரின் இருட்டு, சந்தடி, வெம்மை ஆகியவற்றின் முதல் அனுபவம் ஆரம்பம் ஆயிற்று.

பின்னணி இசை நிகழ்ச்சிக்கு ஏற்ப அவனுடைய மனத்தில் ரசானுபவத்தை உண்டாக்கியது. சோகப் பாட்டானால் கிட்டிக்கு மிகவும் துயரமாக இருக்கும். மொழி ஹிந்தி ஆனதால், அவனுக்கு அர்த்தம் புரியவில்லை. மொழி தெரிந்த ஜார்ஜ் நடுநடுவில், 'இது பிலமோரியா, அது ஹுஸன்பானு' என்று சொல்லிக்கொண்டே போவான். இதனால் கிட்டியின் ரசஅனுபவத்துக்கு இடையூறாக இருந்தது. படத்தில் ஓரிடத்தில சில குண்டர்கள் ஒரு யுவதியைத் தொந்திரவு செய்து கொண்டிருந்தார்கள். கோஷ்டித் தலைவன் அவளுடைய கூந்தலைப் பற்றி இழுத்துக் கொண்டிருந்தான். அவனுடைய கூட்டாளிகள் அவளுடைய முகத்தருகில் தீவட்டி காட்டி எரித்துவிடுவதாக அச்சுறுத்தினார்கள். கிட்டிக்கு அவர்கள்

யார் என்று தெரியவில்லை. ஆனால் அந்தப் பெண்ணின் துக்கத்தைக் கண்டு அவன் உள்ளம் பற்றி எரிந்தது, மனம் பாகாய் உருகியது. அதற்கு மேலும் பார்க்கத் துணியாதவனாய்த் தலையைக் குனிந்து கொள்வான், மீண்டும் பார்க்க வேண்டும் என்னும் ஆவலால் உந்தப்பட்டு தலை நிமிருவான். அவன் கருணா ரசத்தில் மூழ்கி இருக்கும்போது, ஜார்ஜ் 'போரிங், போரிங்' என்று அவனுடைய அனுபவத்தைக் குலைப்பான்.

இடைவேளையின் போது இருவரும் வெளியே வந்தபோது ஜார்ஜ் 'பாட் பிக்சர்' என்று கூறி மறுபடியும் உள்ளே நுழைய மறுத்துவிட்டான். கிட்டிக்குப் பெரும் கவலை உண்டாகிவிட்டது. படம் முழுவதும் பார்க்க வேண்டும் என்று அவனுக்கு விருப்பம், ஆனால் அவன் ஜார்ஜின் அழைப்பு பேரில் வந்தவன். இறுதியில் வேறுவழி இன்றி அவனோடு வீடு திரும்பினான்.

இத்தகைய நிகழ்ச்சிகள் அடிக்கடி நிகழ்ந்தன. ஜார்ஜ் அலுத்துப் போய்ப் பாதிப்படத்தோடு எழுந்துவிடுவான், ஆனால், கிட்டியோ பின்பாதி நன்றாக இருக்கலாம் என்று கடைசி வரை இருப்பான். படம் நன்றாக இல்லாவிட்டால் 'போர்' அடித்து இரவு 10 மணிக்குத் திரும்புவான், தாயாரிடம் திட்டு வாங்குவான். தாயாருக்கு ஒன்றுக்கு இரண்டாகப் பதில் கூறுவான், பிறகு கடுகடுத்துக் கொண்டே படுப்பான். இம்மாதிரி அடிக்கடி நிகழும். சில நாட்களிலேயே படங்கள் எல்லாம் முழுமையாக நன்றாகப் புரியத் தொடங்கின; ஆனால் பாதிப்பாதிப் படத்தில் எழுந்து வரும் ஆசையை வெல்லுவதில் அவன் வெற்றி பெற முடியவில்லை. 'அம்மா வீட்டில் என்னை எதிர்பார்த்துக் கொண்டு தனியாக இருப்பாள், ஆகையால் நான் சினிமா போகமாட்டேன்' என்று அடிக்கடி முடிவு செய்தான், ஆனால் நேரம் வந்தால் அவனுடைய உறுதி குலைந்துவிடும். சில சமயம், சினிமாவுக்கு அழைக்கும் ஜார்ஜ் மீதும் கோபம் வரும், ஆனால் சற்று யோசித்த பிறகு தன்மீதே அவனுக்குச் சினம் உண்டாகும்.

இம்மாதிரி தருணங்களில் தனக்கும் ஜார்ஜுக்கும் இடையிலுள்ள பெரிய வேற்றுமை அவனுக்குத் தெளிவாகும். ஜார்ஜ் பற்றற்றவன். மனம் விழையாத இடத்திற்குப் போகாமல் அவன் தன்னைத் தடுத்துக் கொள்வான். இந்தக் கூர்மையான இச்சா சக்தி காரணமாக அவனுடைய வாழ்க்கையில் கவலைப் படும்படியான சந்தர்ப்பங்கள் குறைவாக வந்தன. 'ஆத்மனஸ்து காமாய ஸர்வே ப்ரியம் பவதி' (தனது ஆசைக்காகத் தானே யாவும் விரும்பப்படுகின்றன) என்கிற ஞானம் அவனுடைய ரத்தத்தோடு கலந்திருந்தது. இத்தகைய நிச்சயபுத்தியின் விளைவாக, தனித்தன்மையின் வேரிலிருந்து மலர்ந்த ஜார்ஜுக்கு இதே சிறப்பு இருந்தது. சூழ்நிலைக்கு ஏற்பக் கச்சேரி வேலைகளில் பணம்

எடுத்துக் கொள்வான், ஆனால் ஆசாமியிடம் தெளிவாகச் சொல்வதற்குத் தயங்குவதில்லை. 'இதுதான் புரோஃஸீஜர், நான் என்ன செய்ய முடியும்?' என்று வெளிப்படையாகக் கூறிவிடுவான். ஒரு தடவை, அவன் தெளிவாய்ச் சொன்ன பின்னரும் மேஜைமீது ஐந்து ரூபாய் நோட்டு ஒன்றை வைத்துவிட்டு ஓடிவிட்டான், சேவகனைப் பின்னாலேயே வெருட்டிப் பணத்தைத் திருப்பிக் கொடுத்துவிட்டு வரச் செய்தான். யாரிடமிருந்து எந்தக் காரணத்துக்காகப் பணம் வருகிறது என்பது நன்கு தெரியாதவரை அவன் ஒரு காசும் தொடுவதில்லை. அவனுக்குப் பணம் பற்றிக் கவலை இல்லை. வீட்டில் மணமகாத தமக்கை இருக்காள்; அவள் ஒரு ஸ்கூலில் டீச்சர். அவனும் சம்பாதித்து வந்தான். அடுத்த வருடம் தம்பி மெட்ரிக் பாஸ் செய்துவிட்டு வேலையில் சேரவிருந்தான். தகப்பனாருக்குச் சர்ச்சில் வேலை. தாயார் இல்லை. வீட்டில் ஒவ்வொருவரும் பொறுப்புள்ளவர்.

இந்த விருப்பின்மை கிட்டியின் சஞ்சல சுபாவத்தில் இல்லை. வீட்டில் எவ்வளவு பணம் வந்தாலும் நிறைவு ஏற்படுவதில்லை. சில சமயம் யார் பணம் கொடுத்தார்கள் என்பதே மறந்துபோகும். பல தடவை இருதரப்பாரிடமிருந்து பணம் வந்தாலும் யோசிக்காமல் வாங்கி ஜேபியில் போட்டுக் கொண்டுவிடுவான். மற்றவர்களும் இப்படியே செய்கிறார்கள் என்று சொல்லி மனத்தைத் தேற்றிக் கொள்வான், ஆனால் ஜார்ஜின் உதாரணத்தைப் பார்த்து மனம் அமைதி அற்றுவிடும். ஆனால், உண்மையில் கிட்டி ஹஸைனின் அன்புக்கு ஆளானவன். 'நான்தான் கிருஷ்ணன் சாரைத் தயார் செய்தேன்,' என்று அவன் எல்லாருக்கும் முன்னால் பீற்றிக் கொள்வான்.

பணம் பண்ணுகிறவர்கள் இரண்டு விதம். ஒருவன் அதிகார பலத்தால் பணத்தை எடுத்துக் கொள்கிறான், இதைத் தினசரி வேலை என்று எண்ணிப் பையில் போட்டு கொண்டே போகிறான். மற்றவன் எவ்வளவு வந்தாலும் வாங்கிக் கொண்டு மகிழ்ச்சியோடு குதிக்கிறான். முதல்வன் வாங்கும் பணம், கொடுப்பவனுக்கு உபகாரம் செய்வதுபோல. இரண்டாமவன் பணம் தருகிறவனுக்குத் தன் உழைப்பை விற்கிறான். முதல்வன் பணம் வாங்கிக் கொண்டு கொடுத்தவனை நன்றி உணர்ச்சி உள்ளவன் ஆக்குகிறான்; இரண்டாமவன் தானே நன்றி உள்ளவன் ஆகிறான். தானம் தருவோனின் கை எப்போதும் மேலேயே இருக்கும். இவ்விஷயம் இரண்டாம் வகை மனிதர்களுக்குப் பொருந்தும். தானம் வாங்கிய பிறகு மூக்கில் பொடி போட்டுக் கொண்டது போல் முதல்வனின் கை மேலேயே இருக்கிறது. கிட்டி யாருக்காவது காரியத்தை முடித்துக் கொடுத்தான் என்றால் அது உழைப்பு உருவத்தில் இருக்குமே அன்றி உபகார உருவீத்தில்

இராது; ஆனால் ஜார்ஜ் யாருடைய வேலையாவது முடித்துக் கொடுத்தால் அவன் ஜார்ஜை எப்போதும் ஞாபகத்தில் வைத்திருப்பான், பதிலுக்கு சேவை செய்யக் காத்திருப்பான். ஏன் அப்படி என்ற கேள்வி கிட்டியின் மனத்தில் எழும்.

ரிவென்யூ துறையில் மட்டும் அல்ல, அரசின் வேறு எந்தத் துறையைச் சேர்ந்தவர்களானாலும் ஒரு நாள் இல்லாவிட்டால் மற்றொரு நாள் பயன்படவே செய்கிறார்கள். ஆகையால் சினிமாக்காரர்களுக்கு மட்டும் அல்ல பெரிய, பெரிய நிறுவனத்தார்களுக்கும் அவர்களை மகிழ்ச்சியாக வைத்துக் கொள்ள வேண்டிய தேவை இருக்கிறது. இம்மாதிரித் துறைகளில் வேலை செய்யும் ஊழியர்கள் அதைத் தங்கள் உரிமை என்றே கருதுகிறார்கள்.

ஒரு ஞாயிற்றுக் கிழமை மனசு சரியாக இல்லாததால் சினிமாவுக்குப் போனான். பையில் காசு இருந்தது, ஆனால் டிக்கெட் விற்குமிடத்தில் ஐந்து நிமிடம் நிற்க விரும்பாததாலோ அல்லது செலவு செய்ய மனம் இல்லாததாலோ நேராக நுழைவாயிலில் வந்து நின்றான். எப்போதும் ஜார்ஜுக்கு சலாம் செய்யும் கேட்கீபர் தனக்கு சலாம் வைக்காவிட்டாலும் உள்ளே செல்ல அனுமதித்து விடுவான் என்கிற நம்பிக்கை அவனுக்கு இருந்தது. டிக்கெட் உள்ளவர்களை எல்லாம் உள்ளே போகவிட்டவன் கிட்டி உள்ளே செல்ல முயன்றதும் முன்னால் பாய்ந்து, 'டிக்கெட்' என்றான். கிட்டி சற்றுத் தடுமாறினான். ஜார்ஜின் பெயர் சொல்வது சரியாகத் தோன்றவில்லை. பையைத் துழாவிப் பார்த்து 'அட, எங்கோ விழுந்துவிட்டது,' என்று உளறியபடி திரும்பிவிட்டான். கேட்கீபரின் ஹூங்காரச் சிரிப்பு நெஞ்சைக் கீறிக்கொண்டு முதுகு வழியாக வெளிப்பட்டது. இன்னொரு முறை சினிமாவுக்குப் போவதில்லை என்று உறுதி செய்துகொண்டான். மறுநாளே ஜார்ஜ் கூப்பிட்டதும் போக வேண்டும் என்று ஆசை உண்டாயிற்று. இன்று அதே கேட்கீபர் என்ன செய்கிறான் என்று பார்க்கவும் விரும்பினான். இம்முறை கேட்கீபர் அவன் இருப்பதையே கவனித்ததாய்த் தெரியவில்லை. இதனால் அவனுக்குப் பெருத்த ஏமாற்றம்.

தேநீர், சிற்றுண்டி விஷயத்திலும் ஜார்ஜ் கட்டுப்பாட்டுடன் நடப்பவன். ஒவ்வொரு நாளும் கச்சேரியில் மாலை நான்கு மணிக்கு ஒரு முறை சா குடிப்பான். சிலசமயம் தேவைப்பட்டால் பிற்பகல் இரண்டு மணிக்கு ஏதாவது சாப்பிடுவான், இல்லாவிட்டால், அதுவும் இல்லை. கச்சேரிக்கு வருகிறவர்களோடு அவன் ஹோட்டலுக்குப் போவதே இல்லை. 'இது ஒரு நல்லபழக்கம்' என்று மற்றவர்கள் சொன்னார்கள். ஜார்ஜுக்கு இது ஒரு முடிந்த முடிவு அல்ல, ஒவ்வொருவரோடும் உட்காரும் விருப்பம் அவனுக்கு இல்லை.

அவர்களுடைய நட்பின் தொடக்க காலத்தில் கிட்டி தன்னோடு தேநீர் பருகுமாறு ஜார்ஜை வற்புறுத்தினான். அவன் அரைமணி நேரத்துக்கு முன் தேநீர் சாப்பிட்டாகி விட்டது, ஆகையால் தன் இயலாமையைக் கூறினான். உடன் வருமாறு கிட்டி வற்புறுத்தினான்; கான்டீனுக்கு இழுத்துச் சென்றான். அங்கே அவன் மறுத்தும் கிட்டி இரண்டு ஸ்பெஷல் டீ ஆர்டர் செய்தான். தேநீர் வந்துவிட்டால் ஜார்ஜ் மறுக்கமாட்டான் என்று கிட்டிக்கு நம்பிக்கை. சா வந்துவிட்டது, ஆனால் ஜார்ஜ் ஒப்புக்கொள்ளவில்லை. ஸ்பெஷல் டீ ஆனதால் வாபஸ் செய்யவும் கிட்டிக்கு மனமில்லை. இரண்டாவது கப்பைச் சாப்பிடாமல் காசு தரவும் விருப்பமில்லை. கடைசியில் இரண்டு கப் டீயும் கிட்டியே சாப்பிட்டான். ஜார்ஜின் பிடிவாத குணம் பற்றிக் கிட்டிக்குப் பலமுறை கோபம் வரும், கூடவே தானும் பிடிவாதமாக இருந்தால் முன்னேறலாம் அல்லவா என்றும் எண்ணிக் கொள்வான்.

நாவின் அடக்கமின்மை காரணமாக வீட்டில் சாப்பிடக் கஷ்டமாக இருந்தது. ஒவ்வொரு நாளும் கச்சேரியில் மூன்று நாலு தடவை தேநீர் சிற்றுண்டி; ஒவ்வொரு தடவையும் கிட்டி நறுவிசாகச் சிற்றுண்டியைச் சுவைத்தான். ஜார்ஜ் தனக்குக் கட்டுப்பாட்டை பற்றிக் கூறவேண்டும், அவனுக்குத் தன் கருத்தைச் சொல்ல வேண்டும் என்று கிட்டிக்கு ஆசை. ஆனால் ஜார்ஜ் அதைக் கவனிக்கவில்லையோ அல்லது இவ்விஷயத்தில் ஒவ்வொருவரும் தன் கொள்கைப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று எண்ணினானோ, ஜார்ஜ் இதைப்பற்றி ஒரு போதும் பேசவே இல்லை. கடைசியில் கிட்டி அலுத்துப் போய்க் கேட்டான். இதன் பேரில், 'டைஜஸ்டிவ் ஸிஸ்டம் கெட்டுப் போகிறது' என்று மட்டும் மறுமொழி உரைத்தான்.

கிட்டி இதற்கும் தானாகவே ஒரு சமாதானம் கண்டுபிடித்துக் கொண்டான்: 'வீட்டில் போன்ஸ் வாயி (ஒரு பட்சணம்) சாப்பிட்டு வருகிறான், இந்தச் சகலி சூடா (பட்சணம்) எப்படி பிடிக்கும்?'

ஞாயிற்றுக் கிழமை என்றால் கிட்டிக்குப் பிடிக்காது. அன்று கச்சேரி கான்டீன் மூடியிருக்கும், வரும்படியும் இல்லை, இலவச யோசனைகளும் இல்லை. ஒரு ஞாயிற்றுக்கிழமை தன் வீட்டுக்குப் பக்கத்தில் இருந்த, தெரிந்த ஒரு ஹோட்டலுக்குப் போனான். அன்று சப்ளையர் ஸ்பெஷல் டீ கொண்டு வந்து வைத்ததும் கிட்டி துரை 'ஒரு துண்டு சகலியும் கொண்டு வா,' என்றான். கிட்டி துரையானால் சப்ளையருக்கு என்ன? அவன் சற்று உரத்து, 'ஒரு பிளேட் சகலி கொண்டு வரட்டுமா?' என்றான். 'வேண்டாம்டா, டீயோடு சாப்பிட ஒரு துண்டு கொண்டுவா,' என்றான். சப்ளையர் நேராக ஹோட்டல் முதலாளியிடம் சென்று பெருங்குரலில், 'அந்த ஐயாவுக்குத் தேநீருடன் ஒரு துண்டு சகலி

வேண்டுமாம்,' என்று தெரிவித்தான். இருந்தவர்கள் எல்லாரும் கிட்டியின் பக்கம் பார்த்தார்கள். முதலாளி சிரித்தபடி, 'கொடுத்துவிடு' என்று அனுமதி தந்தார். கிட்டிக்கு எதிரில் சகலித் துண்டு வந்தது. அதனால் அதன் சுவையே கெட்டுப் போயிற்று.

இன்பம் வேண்டும் என்றால் வெட்கத்தை விட வேண்டும் என்கிற தத்துவத்தை நடைமுறையில் கொண்டு வருவது அவ்வளவு சுலபம் அல்ல.

ஜார்ஜுக்கு நண்பர்கள் குறைவு. அவர்களிலும் கிட்டியிடம் ஜார்ஜுக்குப் பிரியம் அதிகம். அவர்களுடைய நட்பு வளர வளர ஜார்ஜுக்குத் தன் காதலியைக் கிட்டிக்கு அறிமுகப்படுத்தி வைக்க வேண்டும் என்னும் ஆசை அதிகரிக்கலாயிற்று. மணம் செய்து கொள்ளும் முடிவு பற்றி அவன் கூறவில்லை, ஆனால் விருப்பம் மட்டும் இருந்துவந்தது. நட்பு வலுக்க இந்த விருப்பமும் வலுத்தது.

ஜார்ஜின் வாழ்க்கையில் அவனுடைய காதலி ஒரு பெரிய வெற்றி. சாரா ஒரு பாதிரியின் மகள். அந்த நகரத்தின் புராடெஸ்டன்ட் குடும்பங்களில் எல்லாம் அவளே அழகி. அவள் ஆறாம் ஸ்டான்டர்டில் படித்து வந்தாள். அடுத்த ஆண்டு மெட்ரிக் பாஸ் செய்து வேலை தேடிக் கொள்வாள் என்பதால் அவளுக்கு இரட்டை மதிப்பு. பல வரன்கள் அவளை வேண்டி அவள் தந்தையை அணுகினார்கள். இவர்களில் மங்களூர் பக்கத்து இளம் பாதிரி ஒருவன். ஆனால் அதே இடத்தில் வளர்ந்தவனாதலால் பாதிரியாருக்கு ஜார்ஜைப் பற்றி எல்லா விவரமும் முன்பே தெரியும். ஒரு நாள் அவர் ஜார்ஜைக் கூப்பிட்டுத் திருமணம் பற்றிய அவனுடைய கருத்துகளை அறிய விரும்பினார். கனவிலும் காணாத இந்த அரிய லாபத்தைக் கண்டு ஜார்ஜின் குடும்பத்தார் எல்லையில்லாத உவகை கொண்டனர். மங்களூர் பாதிரியின் கோரிக்கையை நிராகரித்துவிட்டு ஜார்ஜுக்கே அவர்தம் புதல்வியைக் கொடுக்க முன்வந்தது, அக்குடும்பத்தாருக்குக் கர்வம் தரும் விஷயம் அன்றி வேறு என்ன?

சாராவும் இத்திருமணத்திற்கு மகிழ்ச்சியோடு இசைவு தந்தாள். இத்தோடு ஏழைகளுக்கு அரிதான ஒன்றரை வருடக் கோர்ட்ஷிப்புக்கும் வசதி இருந்தது. ஜார்ஜுக்கு அவளுடைய அழகு பற்றிப் பெருமிதம். அவனுக்கு நண்பர்கள் குறைவு. கிட்டியோடு ஆழ்ந்த சிநேகம் இருந்த காரணத்தால் இவ்விஷயத்தை அவனிடம் சொல்ல மிக ஆவலாக இருந்தான். ஒரு நாள் அவன் தன்னை அடக்கிக் கொள்ள மாட்டாமல், அவன் கிட்டியிடம் மொழிந்தான்: 'எனக்கு அடுத்த வருடம் கல்யாணம் ஆகிவிடும். பாதிரியாரின் பெண்ணை எனக்கு முடிவு செய்திருக்கிறார்கள். அவள் நல்ல அழகி, ஒரு நாள் பாதிரியாரின் வீட்டுக்குப் போவோம், உனக்கு அவளை அறிமுகம் செய்து

வைக்கிறேன்,' என்று அழைப்பு விடுத்தான். கிட்டிக்கும் அந்த அழகியைப் பார்க்க வேண்டும் என்று மிகவும் ஆசையாக இருந்தது, ஆனால் முன்பின் தெரியாத பாதிரியாரின் இல்லத்துக்குச் செல்ல நாணமாக இருந்தது. இதைத் தவிரப் பல விஷயங்களில் கிட்டி மடியைக் கைவிட்டான் என்றாலும் ஒரு கிறிஸ்துவர் வீட்டில் உணவு கொள்வது என்றால் மிக அச்சமாக இருந்தது. ஜார்ஜின் வீட்டுக்குப் போனதும் அவன் மிகவும் வற்புறுத்தினால் தேநீர் மட்டும் அருந்துவது வழக்கம். இதையும், இரண்டு மூன்று முறை சாக்குபோக்கு சொல்லித் தப்பிவிட்டான்; ஆனால், ஜார்ஜ் மற்றொரு வழி கண்டுபிடித்தான்.

ஒருநாள் இருவரும் சினிமாவுக்குப் போனார்கள். அங்கு சாரம்மா இவர்களுடைய வருகையை எதிர்பார்த்து பெண்கள் சீட்டில் உட்கார்ந்திருந்தாள். இவர்களைக் கண்டதும் எழுந்து அருகில் வந்தாள். 'ரொம்ப நேரம் காத்திருக்க வேண்டிய தாயிற்று?' என்று ஜார்ஜ் கேட்டான். 'இல்லையே,' என்றாள் அவள். பிறகு ஜார்ஜ் அவளைக் கிட்டிக்கு அறிமுகம் செய்து வைத்தான். 'இவர் கிருஷ்ணா குல்கர்னி என் கொலீக், இந்த சாரா டிசூசா என் வருங்கால மனைவி.' கிட்டிக்கு மிகவும் வெட்கமாக இருந்தது. பூமி தன்னை விழுங்கிவிடப் போகிறது என்று அவனுக்குப் பட்டது. மூவரும் தேநீர்க் கடைக்குப் போனார்கள், சாவும் பிஸ்கோத்தும் சாப்பிட்டார்கள். சாராவிடம் அதற்குள் ஜார்ஜ் தன் நண்பனைப் பற்றிக் கூறிவிட்டான். சாராவுக்குப் பக்கத்தில் வந்ததும் என்ன பேசுவது என்று தோன்றவில்லை. அதற்கும் வழி கண்டான். சாரம்மாவின் கவனம் முற்றிலும் ஜார்ஜின் இந்த வெட்கும் நண்பன் மீதே இருந்தது. சாரம்மாவைப் பற்றி ஜார்ஜ் பல விஷயங்களைக் கிட்டிக்குச் சொல்ல வேண்டி இருந்தது. அவளுடைய தந்தையாரைப் பற்றி, பள்ளியில் அவளுடைய கெட்டிக்காரத்தனம் பற்றி, ஹவுஸ் கீப்பிங்கிலும் எம்பிராய்டரியிலும் அவளுக்குள்ள தேர்ச்சி பற்றி - எல்லாம் விவரமாய்க் கூறினான். அவன் அவளுடைய கையில் அணிவிக்கப்பட்ட நிச்சயதார்த்த மோதிரத்தைக் காட்டி அவன் அந்த ரத்தினத்தை எப்படி பெற்றான் என்பதையும் விவரித்தான். தானே அதன் டிஸைனை எப்படித் தேர்ந்தான், எங்கே அதைச் செய்யக் கொடுத்தான் முதலியவற்றை எல்லாம் வருணித்தான். இடையிடையில் சாரா கிட்டியின் பிளேட்டில் பிஸ்கோத்துகளைத் தள்ளிக் கொண்டிருந்தாள். அவள் கொடுப்பதைக் கௌரவிக்கும் பொருட்டு கிட்டி ஒன்றிரு பிஸ்கோத்துகள் எடுத்துக்கொண்டான்.

ஜார்ஜ் சொன்ன அளவு அழகை சாராவிடம் கிட்டி காணவில்லை. ஆரோக்கியத்தாலும் மகிழ்ச்சியாலும் அவளுடைய முகத்தில் ஓர் ஒளி இருந்தது உண்மை. உயரமாக இருந்த காரணத்தால் அவளுடைய முகத்தில் குழந்தைத் தன்மை

இன்னும் தென்பட்டது. அன்று அவள் மஞ்சள் நிற ஃபிராக் அணிந்திருந்தாள். தலையில் சிவப்பு ரிப்பன் கட்டி இருந்தாள், பத்து பன்னிரண்டு பின்களைக் கோணலும் மாணலுமாகத் தலைமயிரில் செருகியிருந்தாள். கேட்டதற்கு மட்டும் பதில் சொன்னாள், மற்ற நேரங்களில் ஜார்ஜ் சொல்வதை ஏற்பவளாய்ப் புன்னகை செய்பவளாய் உட்கார்ந்திருந்தாள்.

சினிமா போவதற்கு சாரா இசையவில்லை. அவளுடைய தகப்பனார் தேர்வுகள் தொடர்பாக வெளியூர் போக வேண்டி இருந்ததால் அவள் இராச் சமையலை விரைவில் முடிக்க வேண்டும். அவள்தான் வீட்டு எஜமானி. பாதிரியாரின் மனைவி காலமாகி ஆறு ஆண்டுகள் ஆகின்றன. மணமானபிறகு ஜார்ஜ் பாதிரியாருடனேயே வசிப்பதாக இருந்தான். சாராவை அப்போதே வீட்டுக்கு அனுப்ப விருப்பம் இல்லாத ஜார்ஜ் அவளை ஷாப்பிங் செய்விப்பதற்காக மார்க்கெட்டுக்கு அழைத்துப் போனான். இப்போது கிட்டிக்குச் சங்கடமாக இருந்தது.

இச்சமயம் அவர்களை விட்டுச் செல்வது அவனுக்கு உசிதமாகத் தோன்றவில்லை. அவர்களோடு போகவும் வெட்கமாக இருந்தது. ஆகையால், ஒரு கஜதூரம் இடைவெளி விட்டு அவர்களுக்குப் பின்னாலேயே நடந்தான். ஜார்ஜுக்கும் சாராவுக்குமோ தங்களுக்குள் என்ன பேசிக் கொள்வது என்று புரியவில்லை. கிட்டியைப் பேச்சுக்கு இழுப்பது இன்னும் கஷ்டமாக இருந்தது. ஆக, தெருவில் ஓர் ஊமை அபிநயம் நடப்பது போலத் தோன்றியது.

கடையில் சாராவுக்காக ரிப்பன், கைக்குட்டை, வேஸ், சீப்பு முதலிய சிறிய-பெரிய பொருள்களை வாங்கினார்கள். அவற்றை எல்லாம் ஓர் அட்டைப்பெட்டியில் வைத்து ரிப்பனால் கட்டி அதை வீட்டுக்குக் கொண்டு போக ஜார்ஜ் புறப்பட்டான். இனியும் இந்த ஊர்வலத்தில் இருக்கக் கூடாது என்று எண்ணிய கிட்டி காய்கறி வாங்க வேண்டும் என்று சாக்கு சொல்லிவிட்டு அவர்களை விட்டுப் பிரிந்தான்.

அன்று இரவு தூக்கத்தில் அவன் பல கனவுகள் கண்டான். ரத்னாவுடன் இம்மாதிரி ஊர் சுற்றினான், சினிமாவுக்குப் போனான், பூச் சூட்டினான், கடையில் வளையல்கள் வாங்கி அணிவித்தான், முதலியன, முதலியன. இந்த சாராவின் அழகில் பரவசம் ஆகியிருக்கும் ஜார்ஜ் ரத்னாவைப் பார்த்தால் என்ன கூறுவானோ?

அழகு என்ற சொல்லை ஜார்ஜ் எந்தப் பொருளில் பயன்படுத்தினானோ அதைப் புரிந்து கொள்ள கிட்டிக்கு இன்னும் அதிகக் காலம் தேவைப்பட்டது.

# 14. கிட்டியின் காதல்

ராகப்பாவின் வீடு கிட்டியின் வீட்டுக்கு அருகிலேயே இருந்தது.

வீட்டுக்கு வந்து சிற்றுண்டியும் தேநீரும் அருந்துவதற்குக் கிட்டிக்கு நிரந்தர அழைப்பு விடுத்து வைத்திருந்தான், ராகப்பா; ஆனால் அது அமுலுக்கு வரவே இல்லை. இதனால் தான் தீபாவளி வந்ததும் நரகசதுர்தசியன்று சிற்றுண்டிக்கு வந்தாக வேண்டும் என்று வற்புறுத்தி அழைத்தான். அன்று கிட்டியைத் தவிர வேறுயாரையும் அழைக்கவில்லை. ஆனால், அக்கம பக்கத்திலிருந்து பன்னிரண்டு பதின்மூன்று பெண்கள் ரத்னாவின் வருங்கால மணாளனைப் பார்ப்பதற்காக வந்து கூடியிருந்தார்கள். இந்த அல்லிராஜ்யத்தில் கிட்டிக்குப் பல இன்பகரமான அனுபவங்கள் கிட்டின. ரத்னாவின் திருமணம் முடிவாகி விட்டாற்போலவே அப்பெண்கள் நடந்து கொண்டார்கள். அவர்கள் அனைவரிலும் ஆரோக்கியமாக ஆண்பிள்ளைபோல் உயரமாகவும் சாதுரியமுள்ளவளாகவும் இருந்த ஒருத்தியால் கிட்டி மிகத் தொந்திரவுக்கு ஆளானான். அவன் கூடத்தில் அமர்ந்திருந்த போது இவள் கன்னியர் படையுடன் வாசலில் வந்து நின்று, இவனை வெறித்துப் பார்த்தவாறு, ஒருவரை ஒருவர் கிள்ளிக் கொண்டு ஜாடை காட்டிக்கொண்டு இருந்தாள். சதுரை கோதாவரி மற்றோர் அடி முன்எடுத்து வைத்தாள். தன்னுடைய மிகமிக நீளமான, ஆரோக்கியமான கைகளால் ரத்னாவைப் பரபரவென்று இழுத்து கூடத்து வாசலுக்கு அழைத்து வந்தாள். 'இவள் உங்களைச் சரியாகப் பார்க்கவில்லை. இதற்காகக் கோபித்துக் கொள்ள வேண்டாம். இதற்காகத்தான் இவளை இழுத்துக் கொண்டு வந்தேன்,' என்றாள். இந்த இழுபறியினாலும் கேலியாலும் ரத்னாவின் கன்னங்கள் சிவந்துவிட்டன. கண்கள் ஒளிர்ந்தன. கண்ணீர்த் துளி ஒன்றே ஒன்று விழிமுனையில் உருவாகித் தளும்பத் தயாராக இருந்தது. அவள் கிட்டியின் பக்கம் சஞ்சலத்துடன் ஒருமுறை நோக்கிவிட்டு, 'விடடி விடடி' என்று கைகளை உதறிவிடுவித்துக் கொண்டு ஓட்டம் பிடித்தாள். பதினாறு வயதாகியும் இந்த வாயாடி கோதாவரிக்கு மணமாக வில்லை. ஆனால் அதைப்பற்றி அவளுக்குக் கவலை இல்லை. அவள் இன்னும் தன் குழந்தைத்தனத்தை விடவில்லை. மற்ற வர்களின் கலியாணம் என்றால் அவளுடைய விஷமம் மேலும் மிகுந்துவிடும்.

எட்டரை மணி ஆகியும் கிட்டிக்காக ஏற்பாடு செய்யப் பட்டிருந்த ஆரத்தி இன்னும் நடந்தபாடில்லை. ராகப்பா

வந்ததுமே ஆரத்தி வேலை ஆரம்பம் ஆயிற்று. 'இங்கே வாடீ உன் கையாலேயே ஆரத்தி இறக்கவேண்டும்,' என்ற கோதாவரி கம்பீரமாக சபதம் செய்து, நாணி ஓடும் ரத்னாவைத் துரத்தினாள்.

ரத்னா மறுத்தாள், கோதாவரி கிள்ளினாள். உள்ளே அம்மாவும் மகளுடைய கட்சியில் சேராமல் கோபமாய்ச் சொன்னாள்: 'போடீ, சிநேகிதிகள் கூப்பிடுகிறார்கள், நீ வீட்டுப் பெண் அல்லவா?' வேறுவழி இல்லாமல் ரத்னா ஆரத்தி எடுத்துக் கொண்டு வந்தாள். கோதாவரியும் உடனிருந்தாள். ஆரத்திப் பாட்டு பாடும் பிரச்னை எழுந்ததும் கோதாவரி கன்னியர் படைக்குக் கடுமையாகக் கட்டளை இட்டாள். 'நீங்கள் யாரும் பாடக்கூடாது, ரத்னாதான் பாடுவாள்,' சுற்றிலும் மௌனம் குடிகொண்டது. 'இந்த மௌனம் நான் பாடவேண்டும்' என்பதற்காகத் தான் என்று எண்ணிய ரத்னா பாட வேண்டியதாயிற்று. அவள் மஹபூபிடம் கற்ற, 'கிருஷ்ணா நீனு பேகனே பாரோ' பாடினாள். மஹபூப் சொல்லிக் கொடுத்த பத்ததிப்படி அல்லது மூலபத்ததியை அநுசரித்து 'கிருஷ்ண' என்ற சொல்லின் முழுபிரயோகமும் பல்லவியில்தான். பிறகு 'ணா' எஞ்சி நிற்கும். பல்லவி ஆரம்பமானதும் 'என்னைத்தான் பாட்டு கூப்பிடுகிறது' என்று எண்ணிக் கிட்டி தலைகுனிந்தான். தோழிகள் அதன் அர்த்தத்தைப் புரிந்து கொண்டு கலகலவென்று நகைத்தார்கள். ரத்னா விளங்காமல் பாடிக்கொண்டே போனாள். இரண்டாவது பதம் இரண்டாவது முறை பாடும்போது அவளுக்கு இவ்விஷயம் புரிந்துவிடவே அவள் அஞ்சி, வெட்கத்தால் முகம் சிவந்து நடுங்கிய வண்ணம் தொடர்ந்தாள், ஆனால் இப்போது அவளால் பல்லவியும் பாடமுடியவில்லை. கிருஷ்ணாவில் ககாரத்தையும் முழுசாகச் சொல்ல இயலவில்லை. சிரித்தவாறு முகத்தைத் திருப்பிக்கொண்டாள். பெண்கும்பல் முழுவதும் விழுந்து புரண்டு சிரித்தது.

இச்சமயம் கிட்டி வெட்கமுற்றுக் கள்ளப்பார்வையால் கூடத்தின் மறுகோட்டில் பக்கம் பார்க்கலானான். அங்கேயும் புன்னகைக்கும் பேரானந்தக் கண்ணீர் மல்கும் ஒருமுகம் இந்தப் பக்கமே பார்த்துக்கொண்டு இருப்பதைக் கண்ணுற்றான். அவள் தான் சம்பக்கா.

சிற்றுண்டிக்காக அமர்ந்ததும் கோதாவரி பிறகு சோமாசி யையும் மற்ற வகையையும் கலந்து பரிமாறினாள். நகைப்புக்கு இடம் தரும் வாய்ப்புகளை வழங்குவதில் கருமித்தனம் காட்டாத கிட்டி மற்றொரு வாய்ப்பு அளித்தான்: 'அடே அப்பா, இந்தப் பெண்களிடம் ஏனோ வந்து மாட்டிக் கொண்டோம்,' என்று எண்ணினான் அவன்.

சிற்றுண்டிக்குப் பிறகு ராகப்பா கிட்டியிடம், 'இங்கேயே சாப்பிட்டுப் போக வேண்டும், இதோ வந்துவிட்டேன்,' என்று பாக்கு வெற்றிலையோடு ஏதோ வேலையாகப் போய் விட்டான், இந்த நிலையில் தன்னுணர்வு மறந்திருந்த கிட்டி முற்றிலும் மறுக்க மாட்டாத காரணத்தால் மௌனமாக இருந்தான். மனத்தில் மற்றொரு வேட்கையும் இருந்தது: ஒரு கால், ரத்னா மீண்டும் தென்படலாம். ரத்னா நாணத்தோடு இரண்டு பீடாக்கள் வைத்துவிட்டுப் போனாள். அவற்றில் பெரியதைக் கிட்டி கையில் எடுத்தான். அதிலும் மிளகாய் கலப்படம். பெண்கள் கும்பல் கடைசி தடவையாக மனமாரச் சிரித்த வண்ணம் தங்கள் வீட்டுக்குப் போய்விட்டனர். இப்போது ராகப்பாவை எதிர்பார்த்தபடி கிட்டி தனியாக உட்கார வேண்டியதாயிற்று.

கூடத்தில் ஒரு செய்தித்தாள் கூட இல்லை. அரைமணிநேரம் தனியாக இருந்தபிறகு கிட்டியின் பாதி உற்சாகம் இறங்கிவிட்டது. மனம் சஞ்சலப்படத் தொடங்கியது. வீடு, தாயார் ஞாபகம் வரலாயிற்று.

அன்று காலை கங்கவ்வா கிட்டியை ஐந்து மணிக்கு எழுப்பிவிட்டாள். பதினைந்து ஆண்டுகளாய்க் காப்பாற்றி வைக்கப்பட்டுள்ள அத்தர் சீசாவிலிருந்து இரண்டு துளி எண்ணையோடு கலந்தாள். தீபாவளி நாளன்று வீட்டில் கிட்டிக்கு ஆரத்தி இறக்குவது என்றால் அவளுக்கு மிகவும் மகிழ்ச்சி. சுவாமிராய் காலமான வருடம் வீட்டில் துக்கம் காத்த காரணத்தால் அவள் அவனைத் தேசாயின் வீட்டுக்கு அனுப்பிவிட்டாள், தீபாவளி ஆரத்திக்காக. அதே நடைமுறை இன்றுவரை நடைபெற்று வருகிறது. இம்முறை தேசாயின் அழைப்பைக் கௌரவிக்க வேண்டும். 'வேலையானதும் இவர்களுக்குக் கர்வம் வந்து விட்டது,' என்று சொல்ல அவர்களுக்கு வாய்ப்பு கொடுத்து விடக் கூடாது. அங்கு ஆரத்திக்கு அனுப்பவேண்டும், ஆனால் அதற்கு முன்னால் வீட்டிலும் சத்தம் இல்லாமல் ஆரத்தி இறக்கிவிட வேண்டும் என்று அவளுக்கு ஆசை. ஆகையால் அண்டைவீட்டுக் காசியின் தாயார், அவளுடைய ஆறு வயது மகன், அவளுடைய கணவன் ஆகியோரை ஏழு மணிக்குச் சிற்றுண்டிக்காக அழைத் திருந்தாள். அவர்கள் வந்தார்கள், அவர்கள் பாட்டும் பாடினார்கள். எண்ணையும் குங்குமமும் பூசி, கிட்டிக்கு ஆரத்தி சுற்றினார்கள். அன்று கங்கவ்வா ஏழைக் காசியின் தாயாருக்குக் கிட்டியின் கையால் ஆரத்தித் தட்டில் ஒரு ரூபாய் போடச் செய்தாள். பதினைந்து ஆண்டுகளுக்குப் பின் வீட்டில் இது முதல் ஆரத்தி. கங்கவ்வாவின் கண்களிலிருந்து கண்ணீர் பெருகி வண்ணம் இருந்தது. எல்லாருடைய உள்ளமும்

நிரம்பி வழிந்தது. சிற்றுண்டி சாப்பிடும் போது காசியின் தாயார் எவ்வளவு தேற்றியும் அடக்கிக்கொள்ள முடியாமல், கங்கவ்வா சமையலறை வாசலைப் பிடித்துக்கொண்டு பலமாக அழத் தொடங்கினாள். அவளைப் போலவே துயரமுள்ள காசியின் தாயாரும் சேலைத் தலைப்பில் முகத்தை வைத்துக்கொண்டு அழுதுவிட்டாள். காசியின் தாயுடைய கணவன் அரைப் பைத்தியம், 'அழாதே, அம்மா,' என்று தேற்றத் தொடங்கினாள். கிட்டிக்கும் மனம் கலங்கியது, ஆனால் கண்ணீரை அடக்கிக் கொண்டு மௌனமாக இருந்துவிட்டான்.

இதற்குப்பிறகு தேசாயின் வீட்டில் எப்போதும் போல் ஆரத்தி நடந்தது. இந்த விஷயத்தைக் கிட்டி அங்கே பாதி மறந்து விட்டான். மாலையில் ராகப்பா வீட்டின் ஆரவாரத்தில் முற்றிலும் மறந்துவிட்டான். இப்போது அரைமணி நேரம் தனியாக உட்கார்ந்ததும் காலையில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள்யாவும் கிட்டியின் கண்களுக்கு முன்னால் எழுந்தாடலாயின. உள்ளுக்குள்ளே அவனுக்கு அமைதி அற்றுப்போயிற்று. வீட்டிலும் பண்டிகை. அம்மா அவனுக்காகக் காத்திருப்பாள். சமைத்து வைத்துவிட்டு உட்கார்ந்திருப்பாள். கிட்டியினால் தன்னை அடக்கிக் கொள்ள முடியவில்லை. உள்ளே போய் சம்பக்காவிடம், 'வீட்டிலும் பண்டிகை, இங்கே சாப்பிட முடியாது,' என்று சொல்லிவிட வேண்டும் என்று தோன்றியது. அவன் சம்பக்காவின் அறைக்கு விரைந்து சென்றான்.

அறையில் சம்பக்கா இல்லை. ரத்னா தனியாக இருந்து சுவரில் பொருத்திய ஒரு பெரிய நிலைக் கண்ணாடியில் தன்னுடைய மெல்லிய பழுப்புநிறத் தலைமயிரின் குஞ்சங்களை ஒருமுறை வலது பக்கமும் மற்றொரு முறை இடதுப்பக்கமுமாகச் சுழற்றிய வண்ணம் தன் பண்வித எழிலினால் தானே கவர்ச்சிக்கப் பட்டு ஆனந்தித்துக் கொண்டு இருந்தாள். சிருஷ்டி கர்த்தாவைப் போலப் பிரயோகம் செய்தவாறு உட்கார்ந்திருந்தாள். அவளுடைய மென்மையான பழுப்புவண்ண அளகபாரம் மிக வசீகரமாக இருந்தது. ஒருமுறை தன்னைத் தானே முறுவலித்தபடி பார்த்தாள், ஒருமுறை கோணல் நோக்கால் பார்த்தாள்.

இந்த சௌந்தரிய சேவையைப் பார்க்கும் துணிவு கிட்டிக்கு இல்லை, ஆகையால் அவன் மெல்ல செருமினான். ரத்னா திரும்பிப் பார்த்தாள், திகைப்புண்டவளாய்த் தலைமயிரைத் திரட்டிக்கொண்டு ஒருபுறம் ஒதுங்கினாள். கிட்டி வெட்கத்தோடு கூறினான்.

'நான் சாப்பாட்டுக்கு வீட்டுக்குப் போகிறேன்.'

எவ்வளவுதான் நாணமுள்ள பெண்ணாலும் சாப்பிடுவதற்கு வற்புறுத்தாமல் மௌனமாக இருக்க முடியுமா?

'சாப்பிட்டுப்போகலாம்.'

'மிகவும் உரிமையோடு சொல்கிறாய்,' என்றான் கிட்டி கேலியாக. அந்தப் பதினைந்து வயது அறியாப் பெண்ணுக்கு இந்தக் கேலி புரியவில்லை.

'நம் வீட்டிலேயே நாம் சாப்பிடச் சொல்வதற்கு உரிமை இல்லையா என்ன?'

ஆனால், தான் சொன்னதன் பொருளை முற்றிலும் புரியவைக்காமல் கிட்டிக்கு அமைதி ஏற்படாது. 'உனக்கும் எனக்கும் கலியாணம் நடக்கப் போகிறது, தெரியுமா?'

'இவை எல்லாம் அவர்களுக்குத் தெரியும்,' என்றாள் ரத்னா அசுவாரசியமாக.

'வெற்றிலை பீடாவில் மிளகாய்ப் பொடி போடுகிறவளை எப்படி மணக்க முடியும்?'

'நான் போடவில்லை. கோதாவரி போட்டிருப்பாள். எனக்குத் தெரியவே தெரியாது.'

'யார் போட்டால் என்ன? என் வாய் எரிகிறது,' என்று கிட்டி அவளுடைய செவ்விதழ்களைக் கூர்ந்து பார்க்கலானான்.

'அதனால் தான் சாப்பிட்டுப் போகச் சொல்கிறேன். கரி கருபு (தித்திப்பு என் சோமாசி) செய்திருக்கிறது.'

'உன் அப்பா கலியாணத்துக்குச் சரி என்று கூறி விட்டார், நீ வேண்டாம் என்று விட்டால்?'

ரத்னாவுக்கு இப்போது அந்தக் கேலி புரிந்தது. சற்று யோசித்துக் கூறினாள். 'என் விஷயம் இருக்கட்டும். உங்கள் அம்மா என்ன சொல்லுகிறார்கள் என்பதை முதலில் கேட்டுக் கொள்ளுங்கள். அதுதானே உங்களுக்கு முக்கியம்.'

அம்மாவைப் பற்றின பேச்சு இங்கே எழும் என்ற எண்ணமே கிட்டிக்கு இல்லை. அவனுடைய முகம் சுண்டிவிட்டது. ரசனைமிக்க தன் சொற்களை ரசமற்றவை ஆக்கி உரைநடைத் தரத்திற்குக் கொண்டு வந்துவிட்ட அந்தக் காவிய ஒளி நிறைந்த சொற்களின் அடிவரை செல்ல அவனால் முடியவில்லை.

நல்லவேளையாகச் சம்பக்கா விக்கலோடு அங்கே வந்து சேர்ந்ததால் இந்த உரையாடல் அங்கேயே தடைப்பட்டது. கிட்டி சம்பக்காவிடம், 'இன்று பண்டிகை, வீட்டுக்கே சாப்பிடப் போய்விடுகிறேன்,' என்றான்.

'ஏன், இது வீடு இல்லையா என்ன?' சம்பக்கா கேட்டாள்.

'ஆம், வீடுதான். விஷயம் அது அல்ல. அம்மா காத்திருப்பாள். மறுபடியும் வருகிறேன்.'

இதற்குள் ராகப்பா வந்து சேர்ந்தான். அவனிடம் சம்பக்கா கிட்டியின் விஷயத்தைக் கூறினாள். கிட்டிக்குப் பேசுவதற்குச் சந்தர்ப்பமே தராமல் ராகப்பா, 'சேச்சே! கிட்டண்ணா, நான் வேறே உன் தாயார் வேறே இல்லை. உன் தாயாருக்கும் எனக்கும் என்ன வித்தியாசம்? இரண்டும் உன் வீடுதான். அத்திபூத்தாற் போல வந்திருக்கிறாய், சாப்பிட்டுவிட்டுத்தான் போக வேண்டும். எத்தனையோ தடவை டீ சாப்பிடக் கூப்பிட்டேன், அதற்கும் நீ வரவே இல்லை. மறுபடியும் எப்போது வருவாயோ? எப்படி நம்புவது? வா, உட்காரு.'

வேறு வழிகாணாமல் கிட்டி சாப்பிடுவதற்கு உட்கார்ந்தான். சாப்பிட்டுக் கொண்டே ராகப்பா பல விஷயங்களைக் கூறினான். கிட்டிக்கு அவை ரசப்படவில்லை. சாப்பிட்டு முடிந்ததும் விரைவாக வீட்டை நோக்கி நடந்தான்.

அவன் வீட்டை விட்டு வெளிப்பட்டதுமே ராகப்பா மனைவியின் பக்கம் திரும்பிப் புன்சிரிப்போடு உரைத்தான்: 'இன்று என் அடி கங்கா மீதும் விழும்'. இதைக் கேட்ட மனைவி விகாரப்படாத பாவத்தோடு மௌனமாக இருந்தாள்.

கிட்டி வீட்டுக்குப் போய்ச் சேரும் போது இரண்டு மணி ஆகிவிட்டது.

கங்கவ்வாவும் சோமாசி தயாரித்துவிட்டுக் காத்திருந்தாள். பல முறை வீட்டுக்கு அருகில் உள்ள நாற்சந்திவரை போய்ப் போய்த் திரும்பிக் களைத்து உட்கார்ந்துவிட்டாள். கிட்டி மூச்சுவாங்கியபடி வந்ததும், 'இவ்வளவு நேரமா! கிட்டண்ணா, சாப்பாடு வில்லிட்டுக் காய்ந்து கட்டை ஆகிவிட்டது,' என்றாள்.

'இல்லை. நான் சாப்பிட்டு விட்டேன். ஒரு சிநேகிதன் விடவே இல்லை. கட்டாயப்படுத்தி சாப்பிட்ட பிறகுதான் விட்டான். நீ சாப்பிடு, அம்மா.'

இதன் பேரில் கங்கவ்வா வருத்தத்தோடு சொன்னாள்: 'அடே, கிட்டண்ணா வந்து கொண்டு இருப்பான், வந்து விடுவான். இதோ வந்துவிடுவான் என்று இவ்வளவும் தயார் செய்து வைத்துக் கொண்டு காத்திருக்கிறேன். நீ சாப்பிட்டு வந்துவிட்டாயா? ஏன், யார் உன்னைச் சாப்பிடக் கூப்பிட்டார்கள்? அடுத்தவர்கள் வீட்டிலும் பண்டிகை இருக்கிறது என்று அவர்களுக்குத் தெரியாதா? உன் சிநேகிதர்கள் ரொம்ப நல்ல சிநேகிதர்கள். (சற்று ஞாபகம் வரவும்) கிட்டி, நிசமாகச் சொல்லு. எங்கே போயிருந்தாய்? ராகூவின் வீட்டுக்குப் போயிருந்தாய் அல்லவா?''

இதுவரை அம்மாவிடம் பரிவு இருந்தது, கடைசிச் சொற்களால் அது நடைகட்டிற்று.

வறண்ட குரலில், 'ஆம்', என்றான்.

'சரி, நடப்பது நடக்கட்டும். அழுவதற்கு என்றே பகவான் பெண்பிறவியைச் சிருஷ்டித்திருக்கிறான். சரி, அநுபவிக்கிறேன்' என்றவள் உள்ளே சென்று ஒன்றும் சொல்லாமல் சாதம் பரிமாறினாள். கூர்மையான துயரத்தால் தலை சுற்றிக்கொண்டு இருந்தது. இரண்டு கவளம் விழுங்குவதற்குள் நாலு கிளாஸ் தண்ணீர் பருக வேண்டி இருந்தது. இன்னும் இரண்டு கவளம் வாயில் எறிந்து விட்டு எழுந்து சாக்கடைக்கு ஓடினாள். சாப்பிட்டதெல்லாம் வெளியே வந்துவிட்டது. வாய் முழுவதும் கசந்துவிட்டது.

அம்மாவின் யோசனையற்ற துயரத்தால் கடுப்புற்ற கிட்டி அவள் அரைகுறையாகச் சாப்பிடும்போதே எழுந்திருப்பதைக் கண்டு வருத்தமுற்றான். இதுவரை மௌனமாக இருந்தவன், இப்போது எழுந்து உள்ளே சென்று வற்புறுத்திக் கூறினான். 'அம்மா, நீ ஒரே வேளை, சாப்பிடுகிறவள். மறுபடியும் சாப்பிடு, ராத்திரிதான் நீ சாப்பிட மாட்டாயே.' (கைம்பெண்கள் ஒருவேளை உணவு கொள்ளும் பழக்கம்)

கிட்டியின் வாயிலிருந்து இம்மாதிரி கரிசனமான வார்த்தைகளை அவள் கேட்டு இரண்டு ஆண்டு ஆகிறது, கேட்டதுமே அவள் மனம் இளகிவிட்டது.

'அதெப்படி முடியும், குழந்தை! நான் ஒரு வேளைதானே சாப்பிடலாம். பசியாக இருந்தால் ராத்திரி ஒரு பிடி சூடா சாப்பிடுகிறேன்,' என்றவள் எச்சல் பாத்திரங்களைத் தேய்ப்பதற்காக எழுந்து உட்கார்ந்தாள்.

சாம்பல் சூட்டில் வைக்கப்பட்டிருந்த சோமாசி நிரம்பிய பித்தளைப் பாத்திரத்தைப் பார்க்க அவளுக்குக் கோபம் கோபமாக வந்தது.

# 15. தேசாயின் முயற்சி

கங்கவ்வா இம்முறை தேசாயிடம் ஒரு பெரிய பொறுப்பை ஒப்படைத்திருந்தாள். நடந்ததைத் தொடக்கம் முதல் இறுதி வரை அவரிடம் சொன்னாள். பண்டிகை நாளன்று கிட்டியை வீட்டில் சாப்பிடவிடாமல் ராகப்பா அவள் மனத்தினுள் புண்படுத்தி விட்டான். ஆனால் நடந்தது நல்லதற்குத்தான். அதனால் காலத்தில் எச்சரிக்கை கிடைத்தது. விஷயம் முற்றிக் கைமீறுமுன் கிட்டிக்கு வேறு இடத்தில் பெண் பார்த்துவிட வேண்டும் என்று எண்ணினாள்.

'வேலை கிடைத்து நாலு நாள் தானே ஆகிறது, கொஞ்சம் ஸ்திரப்பட்டதும் கலியாணம் செய்யலாம் என்று எண்ணி இருந்தேன். ஆனால், போகிற போக்கைப் பார்த்தால் ராகூவின் யோசனை பலித்துக் கொண்டு இருப்பதாய்த் தோன்றுகிறது. விருந்து போடவும் அவனால் முடியும். அண்ணா, உண்மையில் எனக்குப் பயமாக இருக்கிறது. கிட்டி என் பிள்ளை தானே என்று நினைத்து இருந்தேன். சரி, அது போகட்டும். எப்படியாவது அவனுக்கு ஒரு பெண் பாருங்கள். என்ன ஆனாலும் பேசி முடிவு செய்துவிட்டால் நிலைமை சரியானதும் கலியாணம் செய்துவிடுவோம்.'

தேசாயிடம் கிட்டிக்குப் பெண் கொடுக்கப் பலர் வந்தார்கள். ஆனால் கங்கவ்வா பேச்சே எடுக்கவில்லை. ஆதலால் அவர் பேசாமல் இருந்தார். அவர்களில் அவருடைய ஏழை நண்பர் துந்தூரு சிவப்பாவின் பதினைந்து வயதுப் பெண் அவருக்குப் பிடித்திருந்தது. கொஞ்சம் கறுப்பானாலும் பெண் தலை முதல் கால் வரை நல்ல அழகு, ஆரோக்கியம். வீட்டு வேலைகளில் கெட்டிக்காரி. கங்கவ்வாவுக்கு நிம்மதி தரக்கூடிய பெண். அவளைப் பார்த்ததும், எப்படியாவது சம்பந்தத்தை முடிவு செய்துவிட வேண்டும் என்று தேசாய் எண்ணினார். இதனால் ஏழை நண்பருக்கும் உபகாரம். தேசாய் கங்கவ்வாவிடம் சிவப் பாவின் மகளைப் பற்றி விரிவாகச் சொன்னார். கேட்டு கங்கவ்வாவுக்கு நாக்கில் நீர் சொட்டியது. ஆனால் துந்தூரு சிவப்பா பிடிவாதமுள்ள, காரியமே குறியான பிராமணன். ஏழை ஆனாலும் வறியவன் அல்ல. தவிர, தாராள குணம் உள்ளவன். வீட்டில் அக்கினி ஹோத்ரம் செய்வான், அவனே வேதாந்தியும் கூட. இதையெல்லாம் கேட்டு கங்கவ்வா மிகவும் மகிழ்ச்சி யுற்றாள். தேசாயிடம் இருந்த ஜாதகத்தையும் பார்த்தார்கள்; பொருத்தமாக இருந்தது.

கங்கவ்வா தேசாயிக்கு முன் நின்று, பெண்ணைக் காட்டு வதற்குக் குடும்பத்தோடு புறப்பட்டு வருமாறு துந்தூரு சிவப் பாவுக்குக் கடிதம் எழுதச் சொன்னாள்.

ஞாயிறன்று காலை முதலே கங்கவ்வா பல நடை தேசாயின் வீட்டுக்குச் சென்று வந்துவிட்டாள். அறியாக் கிட்டிக்கு இதன் ரகசியம் விளங்கவில்லை. ஆனால், பத்து மணிக்குத் தேசாயின் வீட்டிலிருந்து அழைப்பு வந்தது. தேசாயின் வீட்டிலிருந்து அழைப்பு வந்தால் கங்கவ்வா துள்ளி வருவது வழக்கம். ஆனால் இன்று ஒன்றும் தெரியாதவள் போல் அடுக்களையில் பாத்திரங் களை உருட்டிக்கொண்டு இருந்தாள். தேசாயின் வீட்டுக்குப் போவதும் வருவதும் கிட்டிக்குப் பெரும்பாலும் விட்டுப் போய் விட்டது. அண்மையில் அவர் அழைக்காமல் அவருடைய வீட்டுக்கு அவன் போனதில்லை. தீபாவளியன்றும் எல்லா

ஆண்டுகளையும்போல அவன் ஆரத்திக்காக அவருடைய வீட்டுக்குப் போயிருந்தான். ஆனால் தேசாய் அவனிடம் விசேஷமாக ஒன்றும் பேசவில்லை. வசந்தராவைப்பற்றின பேச்சு எழுந்துவிடுமோ என்று அஞ்சித் தேசாய் மற்றவர்களோடு அதிகமாய்ப் பேசுவதில்லை. இப்போது அவர் அழைக்கக் காரணம் என்ன என்று யோசித்தவாறே, கிட்டி செருப்பை மாட்டிக் கொண்டு வெறும் தலையாகவே அவருடைய வீட்டை நோக்கிச் சென்றான். இதற்குள் கங்கவ்வா சமையலறையிலிருந்து வெளியே ஓடிவந்தாள். 'ஏன் கிட்டி, தேசாயைப் பார்க்கப் போகும்போது தொப்பி வைத்துக்கொண்டு போகவில்லையா?' என்று ஞாபகப் படுத்தினாள்.

சிவப்பா இன்னும் பூஜையும் பாராயணமும் முடிக்கவில்லை. கூடத்தில் தனியாக உட்கார்ந்திருந்த தேசாய் கிட்டியைக் கம்பீரமாகவும் மரியாதையோடும் வரவேற்றார். ஏதேதோ சற்றுப் பேசியபின் விஷயத்துக்கு வந்தார். 'துந்தூரு சிவப்பா என்பவர் என் பழைய நண்பர். நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவர். பெண்ணும் நல்லவள். அவளுக்கும் உனக்கும் மணம் செய்துவைக்க வேண்டும் என்று எனக்குப் பலநாளாக ஆசை...'

கிட்டி இடைமறித்தான். 'ஆனால், கல்யாணம் செய்துகொள்ளும் எண்ணம் இன்னும் எனக்கு வரவில்லையே.'

'உங்களுக்கு எல்லாம் இருப்பதில்லை. கலியாணம்பற்றி நீங்கள் எல்லாம் யோசிக்கவும்படாது. அது பெரியவர்கள் பொறுப்பு. பெண்ணைப் பார்த்துப் பிடிக்கிறது என்று சொல்ல வேண்டியதுதான் உங்கள் வேலை.'

'ஆனால் கோபண்ணா சார்! வேலை காயம் ஆகும்வரை மணந்துகொள்வதில்லை என்ற என் எண்ணம்...'

'ஆம், அது சரி; கலியாணம் என்றால் எல்லா விஷயங்களைப் பற்றியும் யோசிக்க வேண்டியதுதான். ஆனால், பெண்ணைப் பார்த்து முடிவு செய்து கொள்வதற்கு என்ன தடை? கொஞ்ச காலத்தில் வேலை காயமாகிவிடும்..'

'இப்போதே பார்ப்பதால் என்ன லாபம்?.'

கிட்டி முதன்முறையாகத் தேசாயிடம் இவ்வாறு பேசிக் கொண்டு இருக்கிறான். அவனுக்கு இவ்வளவு உறுதியான எண்ணம் இருக்கக்கூடும் என்று தேசாய் இதுவரை அநுபவ பூர்வமாக அறிந்ததில்லை. அவர் சிறிது சினத்தோடு சொன்னார்.

'உனக்கு விருப்பம் இல்லை என்றால் பார்க்காதே. ஏழைப் பிராமணன் ரயில் செலவு செய்துகொண்டு வந்திருக்கிறானே, பெண்ணைப் பார்த்துவிட்டால் ஒரு வேலை முடிந்துவிடுமே என்று எண்ணினேன். அப்புறம் உங்கள் இஷ்டம்.'

தேசாயின் அதிருப்திக்கு முன்னால் வாய் திறக்கக் கிட்டிக்குத் தைரியமில்லை. ஆயினும் தனக்குள் முணுமுணுப்பவன் போல், 'நீங்கள் சொன்னால் பார்க்கிறேன்' என்றான்.

எப்படியோ காரியம் நடக்கட்டும் என்று எண்ணித் தேசாய் நிம்மதியாக மூச்சு விட்டார்.

இதற்குள் பூஜை பாராயணம் முடித்துக்கொண்டு விபூதி அலங்காரத்தோடும் வெற்றுடலோடும் வெளியில் வந்த சிவப்பா கூடத்தில் ஜமுக்காளம் இல்லாத ஒரு மூலையில் சுவரோடு முதுகைச் சாய்த்துக்கொண்டு உட்கார்ந்தார். தேசாய் வெற்றிலைப் பெட்டியிலிருந்து இரண்டு வெற்றிலை, பாக்கு, புகையிலை டப்பிகளை அவன் இருந்த மூலைப்பக்கமாக — எங்கே தீட்டுப் பட்டுவிடுமோ என்று அஞ்சியபடி உட்கார்ந்திருந்தவர் பக்கமாக —நகர்த்தினார். கையில் பூஜை மோதிரம், நெற்றியில் திரிபுண்டம், கழுத்தில் ருத்திராக்ஷம் அணிந்த குள்ள சரீரம். இவற்றை எல்லாம் பார்த்துக் கிட்டிக்கு அவரிடம் மரியாதை ஏற்பட்டது. ஆனால் அவரை மாமனராக ஏற்பதற்குப் பல குறைகள் அவரிடம் காணப்பட்டன. இந்தத் திரிபுண்டதாரிக்குத் தாசில்தாரைத் தெரிந்திருக்க முடியாது. அதிகபட்சம், அவருடைய குலதெய்வம் வரை அவர் அறிந்திருக்கலாம். உச்சிக் குடுமியும் கௌபீனமுமாக உள்ள இந்தக் கார்வண்ண மேனியருடன் தெருவில் போவதென்றால் கஷ்டமாக இருக்கும்... இவரே இப்படி இருந்தால் இவருடைய பெண் எப்படி இருப்பாள்? இவர் எங்கே, மான்செஸ்டர் வேட்டி கட்டிக் கொள்கிறவரும் வெண்மை யாக ஆறடி உயரமுள்ளவருமான ராகப்பா எங்கே? இதுபோன்ற பல குறைபாடுகள்.

தேசாய் சுருக்கமாக அறிமுகம் செய்து வைத்தார். சிவப்பாவுக்கு சம்பந்தமில்லாத வெறும் பேச்சு பிடிக்காது. நேராக விஷயத்துக்கு வந்துவிட்டார்: 'பாருங்கள், யாருக்காவது சாப்பாடு பண்ணிவைக்க வேண்டுமானால் சொல்லுங்கள், அவள் ஒருத்தியாகவே தயார் செய்து விடுவாள். பாக்கி விஷயம் நீங்களே தெரிந்து கொள்ளலாம்,' என்றவர் வேறொன்றும் சொல்லாமல் கைதட்டி, 'கிருஷ்ணா, இங்கே வா அம்மா கொஞ்சம்,' என்று கூப்பிட்டார்.

—

தாயாருக்கும் சகோதர சகோதரிகளுக்கும் பின்னால் கிருஷ்ணா வந்தாள். சிவப்பாவுக்கு மற்றொரு விஷயம் பற்றி மிகவும் கர்வம். 'பாருங்கள், எங்கள் வீட்டில் எல்லாருமே கறுப்பு. எல்லாருக்கும் அதற்கு ஏற்றாற் போல நான் பெயரும் வைத்திருக்கிறேன். இவள் கிருஷ்ணா, இவளுக்குச் சின்னவன் காளிங்கன். அடுத்தவள் சியாமளா, அவளைவிடச் சின்ன இந்த

மடிக்குழந்தை கனசியாம். எல்லாரிலும் கிருஷ்ணா தான் குறைவான கறுப்பு.'

அதே வரிசையில் சிவப்பாவின் குழந்தைகள் ஜமுக் காளத்தின் மேல் உட்கார்ந்தார்கள். கனசியாமும் அவன் பெயர் சொல்லப்பட்டதும் தாயின் மடியிலிருந்து தந்தையிடம் போகக் கையை நீட்டினான். ஆனால் தகப்பனாரின் ஆசாரம் பற்றிய அச்சத்தால் சியாமளா அவனைத் தூக்கிக்கொண்டாள். மாதர் கும்பல் ஒன்று கதவுக்குப் பின்னிருந்து எட்டிப் பார்த்துக் கொண்டு இருந்தது. அவர்களுக்குத் தலைமை வேணுபாய். கிருஷ்ணா குமாரியும் ஒரு சுவருக்கு அருகில் முழங்காலைத் தழுவித் தலைகுனிந்தபடி உட்கார்ந்து கொண்டாள்.

வேணுபாய் தன் இடத்தில் இருந்தபடியே கூறினாள்: 'அம்பி, நீ கிருஷ்ணன், இவள் கிருஷ்ணா. எங்களுக்கு எல்லாம் இந்த ஜோடி மிகவும் பிடித்துவிட்டது. உன் தாயார் காலையிலேயே பார்த்து மகிழ்ந்து போய்விட்டாள்.' இதற்குக் கிட்டி யாதொரு மறுமொழியும் கூறவில்லை.

எல்லாத் தரப்பிலும் மௌனம் நிலவியது. தேசாய் தாம் இரண்டொரு கேள்விகள் கேட்கும் சடங்கைத் தொடங்கினார்.

உன் பெயர் என்ன, என்ன படித்திருக்கிறாய், பாட வருமா — முதலியன. அவள் ஒரு பஜனைப் பாட்டை ஸ்வரத்தோடு பாடினாள். குரல் மிகவும் இனிமையாக இல்லாவிட்டாலும் ஸ்வரத்துக்குக் கட்டுப்பட்டதாக இருந்தது. தேசாய் மேலே ஒன்றும் கேட்காமல் கிருஷ்ணாவை உள்ளே அனுப்பிவிட்டார். வேலை நல்லபடி நிறைவேறி விட்டதாக எல்லாரும் எண்ணினார்கள். சிவப்பா கிட்டிக்குக் கேட்கும்படியாகத் தேசாயிடம் மேற்கொண்டு ஆக வேண்டியதைப் பற்றிப் பேச்செடுத்தார்: 'பாருங்கள், என் தகுதிப்படி எல்லாம் செய்கிறேன். ஆயிரம் ரூபாய் வரதட்சிணையாகத் தருகிறேன்...'

'சரிதான், ஆனால் எனக்கு இப்போது கலியாணம் செய்துகொள்ளும் நோக்கம் இல்லை' அவன் இதை மிக மெதுவாய்ச் சொன்னான். தேசாய் மட்டும் அதைக் கேட்க முடிந்தது. இச்சூழலில் பேச்சைத் தொடருவது அவருக்கு உசிதமாகப் படவில்லை. கதவருகில் நின்ற கங்கவ்வாவை சைகையால் கூப்பிட்டுச் சிற்றுண்டி பரிமாறச் சொல்லி அன்றைய வேலையை முடிவுக்குக் கொண்டு வந்தார். இதற்குப் பின் கிட்டிக்கு வீட்டுக்குப் போக அனுமதி கிடைத்தது.

கிட்டி பரபரப்போடு வீட்டுக்கு வந்து பூட்டைத் திறந்துகொண்டு தன் நாற்காலியில் உட்கார்ந்தான். தன் தாயும் தேசாயும் சேர்ந்து செய்த சூழ்ச்சி இது என்று அவனுக்குப்பட்டது.

*அம்மாவோ முட்டாள், ஆனால் தேசாயுக்குமா விஷயம் புரியவில்லை? அவர் எப்போதோ ஒருமுறை உதவி செய்தார் என்பதற்காகத் திருமண விஷயத்திலும் நான் பேசாதிருக்க வேண்டுமா? உடனே நன்கு யோசித்துத் தேசாய்க்கு ஒரு கடிதம் எழுதி அனுப்புவது என்று எண்ணினான். காசியின் தாயாருடைய பிள்ளையிடம் கடிதம் கொடுத்துத் தேசாயின் கையில் தான் தரவேண்டும் என்று சொல்லி அனுப்பினான்.*

*உயர்திரு,*

மதிப்புக்குரிய கோபண்ணா அவர்களின் திரு முன்னர் சிரஞ்சீவி கிருஷ்ணனின் சாஷ்டாங்க நமஸ்காரம். எனக்கு மணம் செய்து வைக்கவேண்டும் என்று கருத்து தெரிவித்தீர்கள், அதற்கு நான் பெரிதும் கடமைப்பட்டவன். ஆனால் இவ்விஷயமாகத் தாங்கள் செய்யும் முயற்சி பயன்படாது என்பதுபற்றி மிகவும் வருந்துகிறேன். ஆகையால் தயவுசெய்து தாங்கள் இனி எவ்விதப் பிரயாசையும் மேற்கொள்ள வேண்டாம். எனக்கு மணம் செய்து கொள்ளவேண்டும் என்று விருப்பம் உண்டாகும்போது நான் தங்களிடம் சொல்கிறேன்.

தங்கள் பணிவுள்ள சிறுவன்,
**கிருஷ்ணன்.**

முக்கியக் குறிப்பு: இது தொடர்பாக நானாகவே உங்களைச் சந்திப்பேன்.

கிருஷ்ணன்.

*கடிதத்தின் உருவத்தைப் பார்த்த தேசாய் தாம் அவமதிக்கப் பட்டதாய்க் கருதினார். அதை யாருக்கும் காட்டாமல் இரும்புப் பெட்டியில் வைத்துப் பூட்டினார், ஒன்றுமே நடவாததுபோல.*

*சிவப்பாவை மட்டும் இரண்டு நாள் வீட்டில் வைத்துக் கொண்டு அவரைக் கொண்டு கிரக சாந்தி செய்வித்தார். கிராமத்துக்குப் புறப்படும்போது அரைசந்தேகத்துடன் கல்யாணம் பற்றிச் சிவப்பா கேட்டதற்குத் தேசாய், 'அட விடப்பா, இந்தச் சாக்கு வைத்துக்கொண்டு நீ ஒருமுறை என் வீட்டுக்கு வர முடிந்ததே, அதுவே மகிழவேண்டிய விஷயம். சும்மா கூப்பிட்டால் நீ வருகிற ஆளா? உன் பூஜையையும் பாராயணத் தையும் விட்டுவிட்டு எங்கே வரப்போகிறாய்?' என்று மழுப் பலாய்ச் சொல்லி அனுப்பிவிட்டார். அவர் கங்கவ்வாவிடனும் இதைப் பற்றி அதிகமாய்ப் பேசவில்லை.*

*கங்கவ்வா வீட்டில் இரண்டு மூன்று நாட்கள் கிட்டியை நன்கு தொந்திரவு செய்தாள். 'இம்மாதிரி நாலு வருடம் போனால் பெண்ணே கிடைக்காது உனக்கு,' என்று அவனைப்*

பயமுறுத்தவும் முயன்றாள். இத் தாக்குதலிலிருந்து தப்புவதற்காக அவன் இரவில் நேரம் கழித்து வீடு வரலானான். அவள் சொல்வதற்கெல்லாம் அவனுடைய ஒரே பதில்: 'இப்போது எனக்குக் கலியாணம் செய்துகொள்ளும் எண்ணம் இல்லை. வேலை காயமானபின் பார்க்கலாம்.'

# 16. மீண்டும் தேசாயின் முயற்சி

கிட்டி மிகவும் குழம்பி இருந்தான். ராகப்பா ஒருதடவை தாயாருக்கு முன்னால் கலியாணம் பற்றிப் பேசியபிறகு மறுபடியும் அதைப்பற்றின பேச்சையே எடுக்கவில்லை. ஆனால் அவனைச் சுற்றி கண்ணுக்குத் தெரியாத வலை விரித்திருந்தார். கிட்டி எப்போதாவது ராகப்பா இருக்கும் தெருப்பக்கம் அசதிமறதியாகப் போனாலும் அக்கம்பக்கத்துப் பெண்கள் அவன் பக்கம் சுட்டிக்காட்டி, 'இவன்தான் ரத்னாவின் வரன்,' என்று சொன்னார்கள். தீபாவளியின்போது இவ்வளவு எல்லாம் நடந்தும் ராகப்பா இதைப் பற்றி ஒரு வார்த்தையும் பேசவில்லை. நாட்கள் கழியலாயின. ராகப்பா தாசில்தாருக்குத் தெரிந்த மாவட்ட அதிகாரியின் நட்பு, ஜாகிர்தார் சுவீகாரப்பிள்ளையை ஏற்றது முதலிய விஷயங்களைப் பற்றி டம்பமாகப் பேசினானேயன்றி, ரத்னாவைப் பற்றிப் பேசுவதே இல்லை. ரத்னாவும் தீபாவளி வைபவத்துக்குப் பிறகு அறியாப்பருவம் கடந்துவிட்ட காரணத்தாலோ அல்லது தாயாரின் ஆணையாலோ கிட்டிக்கு முன்னால் மீண்டும் நின்றுகூடப் பேசவில்லை. இவ்வாறு காதல் மறைந்ததால் கிட்டிக்கு வருத்தமாக இருந்தது. நாளுக்குநாள் ரத்னாவின் அழகு கூடிக்கொண்டிருந்தது; ஆடை ஆபரணங்களால் மட்டும் அல்ல, உடலின் ஒவ்வோர் அங்கத்தினாலும். அன்று கிட்டியோடு பேசியபோது இருந்த துணிச்சல் காற்றோடு போய்விட்டது. அவனைக் கண்டாலே வெட்கித் திரைக்குப்பின் பதுங்குவாள். இதிலும் பல சிறிய - பெரிய மாறுதல்கள் கிட்டிக்குப் புலப்பட்டன. அவளுடைய உதடுகளில் முன்பு இருந்த குழந்தைப் பருவத்து வெண்மை மறைந்து இப்போது கனிந்த கனியின் இனிமை தென்பட்டது. கண்களில் ஒரு புத்தொளி. கன்னங்களிலும் கழுத்திலும் யானைத் தந்தம் நிகர்த்த வெண்மை வந்துவிட்டது. கண்களுக்குத் தொலைவில் இருந்தபோதிலும் அவள் கிட்டியின் உள்ளத்தில் விளக்கமாகப் புலப்பட்டாள். பல நாளாய்க் கிட்டியின் அமைதி இழந்த மனம் ஏதாவது ஒரு காரணம் தேடிக்கொண்டு இருந்தது. ஆனால் அதைச் செயல்படுத்தும் துணிவு அவனுக்கு இல்லை. தேசாயின் வீட்டில் பெண் காட்டும் நிகழ்ச்சி நடந்தபின் அவனுக்கு இந்தக் காரணம்

கிடைத்துவிட்டது. ஒருமுறை தெருவில் ராகப்பாவைச் சந்தித்த போது, 'தேசாய் ஒரு பெண்ணை மணக்கும்படி வற்புறுத்துகிறார்,' என்றான்.

'எந்தத் தேசாய்?' என்றான் ராகப்பா, முக்கியக் கேள்வியை ஒருபுறமாக ஒதுக்கிவிட்டு.

'எங்கள் வீட்டுக்குப் பக்கத்துவீடு, பகதூர் தேசாய், வெள்ளைக் கட்டிடம் இருக்கிறதே, அதன் சொந்தக்காரர்.'

'அப்படியா?...'

அவன் மௌனமாக இருந்தான். பிறகு கூறினான்:

'இப்போது எனக்குக் கலியாணம் செய்துகொள்ளும் எண்ணம் இல்லை என்று அவரிடம் சொல்லிவிட்டேன்.'

'அப்படியானால் எப்போது செய்துகொள்வதாக உத்தேசம்?.'

'இல்லை, இல்லை. அவர்களிடம் அப்படி சொன்னேன்,' என்றான் கிட்டி வெட்கத்துடன்.

'அப்படியானால் நான்...' ராகப்பா தொடர்ந்து என்ன சொல்ல விரும்பினானோ தெரியவில்லை. ஆனால் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டிருந்த கிட்டிக்கு இந்த அரைகுறைப் பேச்சு காரணமாக பேசுவதற்கு வாய்ப்பு கிடைத்துவிட்டது.

'இல்லை, இல்லை, நீங்கள் கவலைப்படக் காரணம் ஒன்றும் இல்லை. மறுமுறையும் அவர் வற்புறுத்தினால், உங்கள் பெண்ணைத் தவிர வேறு யாரையும் கட்டிக்கொள்ள மாட்டேன் என்று சொல்லிவிடுவேன். ஆனால், அவர் பெரியவர் ஆயிற்றே என்று பேசாமல் இருந்துவிட்டேன்..'

ராகப்பா இத்தனை நாட்களாக இந்த வார்த்தைகளைத் தான் எதிர்பார்த்துக் கொண்டு இருந்தான். அவனுடைய முகத்தில் மகிழ்ச்சிப் புன்னகை படர்ந்தது.

'இது உறுதிதானே?' என்று கேட்டான் ராகப்பா.

'ஏன், உங்களுக்குச் சந்தேகமாக இருக்கிறதா?.'

'இல்லை. கங்கவ்வாவுக்கு இதைப்பற்றி என்ன அபிப்பிராயம்?.'

'இதைப் பற்றியும் நான் யோசித்து வைத்துவிட்டேன். அம்மா தேசாய் சொல்வதைத் தள்ளமாட்டாள். முக்கியமான எந்த விஷயத்திலும் தள்ளமாட்டாள். தேசாயை ஒப்புக்கொள்ளும்படி செய்ய வேண்டியதுதான் முக்கியம். அவர் ஒப்புக்கொண்டு விட்டால் அம்மா ஒப்புக்கொண்டாற் போலத்தான்.'

ராகப்பா சற்றுநேரம் ஆழ்ந்து யோசித்தான். அப்பால் தேசாயின் இருப்பிடம், சுபாவம், நண்பர்களைப்பற்றி எல்லாம்

முழுவிவரங்களையும் தெரிந்துகொண்டு அவன் அடுத்த வேலைக்கு ஆயத்தமானான்.

ராகப்பாவின் அடுத்த பிரச்னை நுட்பமானது. அவனுக்கும் தேசாயுக்கும் நேர்ப்பழக்கம் கிடையாது. தேசாய்க்குத் தெரிந்த யாரையாவது அழைத்துக் கொண்டு போகலாம். தனியாகவும் போகலாம்; ஆனால் கங்கவ்வா அவரிடம் தன்னைப்பற்றி ஏதாவது சொல்லி இருப்பாள் என்ற அச்சம் அவனுக்கு இருந்தது. யாரையாவது உடன் அழைத்துச் சென்றால் கங்கவ்வாவைப் பற்றின பழைய விஷயங்கள் எல்லாம் வெளிப்பட்டு அவனுடைய மரியாதை மண்ணாகிவிடும். இவ்வாறு பலவிதமாக யோசித்தபின் தனியாகவே செல்வதென்று முடிவு செய்தான். கிட்டியின் ஆபீஸ் நேரத்தைக் கவனத்தில் வைத்துக்கொண்டு ஒருநாள் பிற்பகல் மூன்று மணிக்கு தேசாய் வீட்டுக் கதவைத் தட்டினான்.

கிட்டத்தட்ட அதே சமயத்தில் தேசாய் தூக்கம் கலைந்து எழுந்து முகம் கழுவிக்கொண்டு, செய்தித்தாளை இரண்டாம் முறை பார்க்க ஆரம்பித்திருந்தார். அவர் எழுந்து கதவைத் திறந்தார். 'வாருங்கள்; நீங்கள் யார்?' என்றார். மறுமொழி ஒன்றும் கூறாமல் ராகப்பா அவர் கால்களில் விழுந்து கும்பிட்டான். இவையெல்லாம் நாடகபாணியாக அவருக்குத் தோன்றினாலும், இவ்வாறு வணங்கப்படும் அநுபவம் அவருக்கு நிறைய இருந்தது. கிராமத்துக் குடியானவர்கள் மட்டும் அல்ல, வேலைக்காக உதவி கோருவோரும், கடன் கேட்க வரும் பண்பாடுள்ள துர்ப்பாக்கியவான்களும்கூட அவரை இப்படி சாஷ்டாங்கமாய் நமஸ்கரிப்பதுண்டு. அவர் நன்கு குனிந்து ராகப்பாவைத் தூக்கியபடி, 'அட, இப்படி ஒவ்வொருத்தர் காலில் விழுந்து கும்பிடுவதா?' என்று கூறினார். ராகப்பா விசிப்பவன் போல நாடகமாடியவாறு கூறினான்: 'நீங்கள் பெரியவர்; என்னைச் சங்கடத்திலிருந்து காப்பாற்ற உங்களால்தான் முடியும். ஆகையால் உங்களிடம் புகல் தேடி வந்திருக்கிறேன். என் பெயர் பிந்தகோள ராகப்பா. உங்கள் அண்டைவீட்டுக் கங்கவ்வா என் தமக்கை. (தேசாய் முகம் சுளிப்பதைக் கண்டும் காணாதவன்போல் அவன் தொடர்ந்து பேசினான்.) அவளுக்கும் எனக்கும் மனஸ் தாபம் ஏற்பட்டுப் பத்து வருடம் ஆகிறது. ஆனால் பகவானுடைய லீலையைப் பாருங்கள். நானும் என் அக்காவும் மறுபடி ஒன்று சேருவதற்கு உங்களைப் போன்ற பெரியவர்களின் கால்களைப் பிடிக்க எனக்குச் சந்தர்ப்பம் கிடைத்தது. பிந்தகோளத்தில் இருந்த வரை, இப்படி ஒரு நிலைமை வரும் என்று கனவிலும் நினைக்க வில்லை. கிராமத்தைவிட்டுக் குழந்தைகளுக்கு இரண்டு எழுத்து சொல்லித் தரலாம் என்று இங்கே வந்தேன், இது என் தலையில் விழுந்தது' — என்று அவன் நீண்ட பெருமூச்சு விட்டான்.

தேசாயின் கண்களுக்கு முன் இருந்த திரை விலகியது. விஷயம் என்ன என்று அவர் தெரிந்து கொண்டார். சாதாரணமான லௌகிக விஷயத்திற்கு இவ்வளவு நாடகம் ஆடவேண்டிய தேவை இல்லை. இறுதி விளைவைக் கவனத்தில் வைத்துக் கொண்டு முடிந்தவரை எல்லாவற்றையும் கேட்டுக் கொள்வது என்று தீர்மானித்தார். இக்காரணத்தால் இந்த நாடகத்தைப் பொறுத்துக் கொண்டார்.

'ஏன், இப்போது என்ன நடந்தது?'

'இங்கே வந்த பிறகு தற்செயலாய் நம் கிட்டண்ணாவைச் சந்தித்தேன். ரத்த உறவு, என்ன இருந்தாலும் மனசு கேட்கிறதா, பாருங்கள். கங்கவ்வா பெண்பிள்ளை, பிடிவாதத்தை விட மறுக்கிறாள். பிள்ளையோடாவது முன்னைப்போல உறவு இருக்கட்டுமே என்று மூன்று நாலு தடவை சிற்றுண்டிக்காக வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போனேன். கங்கவ்வாவுக்குக் கோபம் வரும் என்று தெரியும், இருந்தும் அழைத்துக் கொண்டு போனேன். ஏனெனில் எனக்குப் பிள்ளை இல்லை. கிட்டியைப் பார்த்ததுமே மனசு என்னவோ செய்கிறது. ஆனால் என்னவோ செய்யப்போய் எப்படியோ முடிந்துவிட்டது. என்ன நடந்தது என்று இப்போது சொல்வதால் என்ன பயன்? கங்கவ்வா விட்டுக்கொடுக்கிறவளா என்ன? ஆனால் உங்களைப் போன்ற மஹாநுபவர்கள் நடந்தது எல்லாம் நன்மைக்கே என்று சொல்வார்கள். இந்தக் கிட்டண்ணா என் மூத்த பெண் ரத்னாவைக் கட்டிக்கொள்ள வேண்டும் என்று பிடிவாதம் பிடிக்கிறான்... அவனுக்குப் பெண்தர எனக்கு மனசு இல்லாமல் இல்லை, தேசாய் சார். ஆனால் கிட்டண்ணா இப்படிப் பிடிவாதம் பிடிப்பான் என்று நான் கனவில்கூட எண்ணவில்லை. இது கிட்டண்ணா விஷயம். இது தெரு முழுவதும் பரவிவிட்டது. என் ரத்னாவை அவளுடைய சிநேகிதிகள், 'இவன்தான் உன் கணவன் என்று பரிகாசம் செய் கிறார்கள். அடிக்கடி சொல்லிச் சொல்லி இந்த விஷயம் அவள் மூளையில் திணிக்கப்பட்டு இருக்கிறது.

'பார்க்கப் போனால், எல்லாருமே மிகவும் சந்தோஷமாக இந்தக் கலியாணத்தை ஒப்புக்கொள்ள வேண்டும். ரத்த சம்பந்தம், சுவாமி. ஆனால் கங்கவ்வாவுக்கு என்னைப்பற்றிச் சந்தேகம். ஏன்? எனக்கு ஒன்றும் தெரியாது. நம் கங்கவ்வா அப்படி இவ்வளவு கடூரமானவள் அல்ல. அவளுக்கு எவ்வளவு தாராளமான மனசு என்று எனக்குத் தெரியாமல் இல்லை. என் கலியாணத்தில் மிகவும் உற்சாகமாய் விருந்து ஏற்பாடுகளை எல்லாம் கவனித்துக் கொண்டாள். பிராமணர்களுக்குத் தக்ஷிணை கொடுத்தாள்... ஆனால் அதிர்ஷ்டம் பொல்லாதது, அவளுக்குத் துரதிர்ஷ்டம், எங்களுக்கும்தான். அவளுடைய காலம் கெட்டபின்

அவளுக்கு எல்லார்மீதும் ஒரு விசித்திரமான சந்தேகம் உண்டாகி இருக்கிறது. இவர்களால்தான் எங்கள் குடும்பம் நொடித்தது என்று. இதை அவளுடைய தவறு என்று நான் எண்ணவில்லை. பெரிய பெரிய மீசை வைத்திருப்பவர்கள்கூட கைப்பணம் இழந்த தால் பைத்தியம் பிடித்தவர்கள் போல் ஆகிவிடுகிறார்கள், அவளோ ஆதரவு இல்லாத பெண்பிள்ளை தானே, ஆறு மாதத்தில் சொத்து போயிற்று, கட்டியவனும் போய்விட்டான் என்றால் — அவளை எப்படிக் குறை சொல்லமுடியும்? உறவினர்கள் என்றால் அவளுக்குப் பிடிக்கவில்லை. சரி, விதியின் முன்னால் யார் என்ன செய்யமுடியும்?

'என் நிலைமையையே இப்போது பாருங்களேன். இங்கே கிட்டி என் உயிரை வாங்குகிறான். நீங்கள் ஒரு பெண்ணைக் காட்டியதாக அவன் சொன்னான். உங்களைப் போன்ற பெரிய வர்கள் அவனுடைய நன்மைபற்றி யோசிப்பது நியாயம். இதை எண்ணியே உடன்பிறந்த தமக்கையிடம் போகாமல் உங்களிடம் வந்தேன். அங்கே அந்தப் பைத்தியக்காரப் பெண் ரத்னா... இதுவரை சரி. ஆனால் இந்தக் காலத்துப் பெண்கள் சினிமா பார்த்துப் பார்த்துக் காபி அடிக்கிறார்கள். நாளைக்குக் கங்கவ்வா வினாலோ வேறு காரணத்தினாலோ இவன் கலியாணம் செய்து கொள்ள மறுத்துவிட்டால் ரத்னா தன் சிநேகிதிகளுக்கு முன்னால் எப்படி உயிரோடு இருக்க முடியும்? நாலு பேரை எப்படி முகம் கொடுத்துப் பார்ப்பாள்?... இத்தோடு பெண்ணின் மென்மையான மனம், இளம் வயது, உணர்ச்சிமயமான சுபாவம், பெரிய ஆபத்து. இம்மாதிரி நெருக்கடியான வேளை வந்திருக்கிறது, பகவான்தான் காப்பாற்ற வேண்டும்...

'இதுகூடப் பெரிய விஷயம் அல்ல, சுவாமி. நான் இதை எல்லாம் எப்படியாவது சமாளித்து விடுவேன். முக்கியமான விஷயம், நீங்கள் ஒன்று கவனிக்க வேண்டும்... கிட்டியின் பொறுப்பை நீங்கள் ஏற்றுக்கொண்டு இருக்கிறீர்கள். ஆகையால் என் பெண்ணை உங்களுக்கு ஒருமுறை காட்டுகிறேன். எப்படி வேண்டுமானாலும் அவளைப் பரீட்சை செய்து பாருங்கள். உங்கள் மனசுக்கு திருப்தியாக இருந்தால்மட்டும் இந்த சம்பந்தத்துக்கு சரி என்று சொல்லுங்கள். இன்னொரு விஷயம். ரத்தபந்தம் ரத்தபந்தம் தான். கங்கவ்வா என்னைப்பற்றி எப்படி விஷம் கக்கினாலும் சரி, கிட்டியைப் பார்த்தாலே என் மனசு நிறைகிறது... என் ரத்னா ரத்தினத்தைப் போன்றவள் என்பது மட்டும் அல்ல... நானே...'

இந்நேரத்தில், கதவருகில் நின்று எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டிருந்த வேணுபாய் மீது ராகப்பாவின் பார்வை விழுந்தது. ராகப்பா ஒருகணம் பேச்சை நிறுத்தி ஒருமுறை இங்கும்

ஒருமுறை அங்கும் பார்த்துவிட்டு மீண்டும் தன் பேச்சைத் தொடர்ந்தான். கணவன் அந்த வாயாடி சொல்வதை எல்லாம் வாய் பிளந்தபடி கேட்டுக்கொண்டு இருப்பதை அவளால் பொறுக்க முடியவில்லை. இடையிலேயே அவள் கூறினாள்:

'நமக்கு என்ன சுவாமி, விடுங்கள். கிட்டி யாரை வேண்டுமானாலும் கலியாணம் செய்து கொள்ளட்டும். நமக்கு என்ன அதனாலே? ஆனால் பாவம் கங்கவ்வா மிகவும் துக்கப்பட்டவள். பிள்ளையின் பெயரை எடுத்தாலே உயிரை விடுகிறாள். அவள் பட்ட கஷ்டங்களை நாங்கள் எங்கள் கண்களால் பார்த்திருக்கிறோம். எவ்வளவோ துணிச்சலாக இவ்வளவுக்கு வந்திருக்கிறாள். அவளுக்குக் கொஞ்சம் சுகம் கிடைக்கட்டும் என்பதே எங்கள் ஆசை.'

இது சரி என்று தேசாயின் மனத்துக்குப்பட்டது. முடிந்தவரை அந்த வேலையில் தலையிடக்கூடாது என்ற எண்ணத்தால் வேணுபாயின் 'எங்கள் ஆசை' என்னும் கடைசிச் சொற்கள் அவருக்குப் பிடிக்கவில்லை. 'எங்களுக்கு இதில் ஆசையோ சுயநலமோ இல்லை,' என்றார்.

'அப்படி யாராவது கேட்டால் கங்கவ்வா எங்களுக்கு என்ன சொந்தம், கிட்டி என்ன சொந்தம்? நாங்கள் இந்த விஷயத்தில் தலையிடவே விரும்பவில்லை. நீங்கள் கங்கவ்வாவைப் பார்த்துப் பேசுங்கள். கலியாணத்தின் போது வேண்டுமானால் ஆசீர்வாதம் செய்யக் கட்டாயம் வருகிறோம்.'

'சுவாமி, உண்மையாக அந்தப் பையனுக்கு நல்லது செய்கிறவர் நீங்கள்தான். நீங்கள் இல்லாவிட்டால் ஏழைக் கங்கவ்வாவால் என்ன செய்திருக்க முடியும்?' — தேசாய் நடுவில் எழுந்து வெளியே போய்விட்டார். ராகப்பா வேணுபாயிடம் தொடர்ந்து பேசினான்.

'நீங்கள் அந்தப் பையனுக்காக என்ன என்ன செய்திருக்கிறீர்கள் என்று அவனே சொல்லி இருக்கிறான், மற்றவர்களும் சொல்கிறார்கள், உலகமே சொல்கிறது. பையன் உங்கள் பேரில்தான் நம்பிக்கை வைத்திருக்கிறான்.'

தேசாயினால் அதற்குமேல் தாங்க முடியவில்லை. எழுந்து இரும்புப் பெட்டியைத் திறந்தார், கிட்டி எழுதி அனுப்பிய கடிதத்தை எடுத்து, ராகப்பா பேசி முடித்ததும் அவனுடைய மூக்கடியே நீட்டினார்.

கடிதத்தைப் பார்த்து ராகப்பா கொஞ்சம் தயங்கினான். ஆனால் பின்குறிப்பைப் பார்த்ததும் அவனுக்குத் தைரியமாக இருந்தது. மறுபடியும் கூறினான்:

'ஆம், ஆம், கிட்டியும் சொல்லிக்கொண்டு இருந்தான். 'எனக்காகப் பெண் பார்க்க தேசாய் மிகவும் கஷ்டப்படுகிறார். ஆனால் என் மனம் ரத்னாவின்பால் இழுக்கப்படுகிறது. அவரிடம் இதைச் சொல்ல எனக்குத் தைரியம் இல்லை. எப்படியும் திடப்படுத்திக் கொண்டு இந்த விஷயத்தில் அவருடைய ஆசீர்வாதத்தைக் கட்டாயம் பெறுவேன்' என்றான். உங்களிடம் இவ்வளவு மரியாதையும் பயமும் அவனுக்கு.'

குழந்தைகளைப் போன்று மகிழ்விக்க முயலும் இந்தத் தந்திரம் தேசாய்க்குத் தெரியும். ஆனால், விளைவை எண்ணி சினத்தை விழுங்கினார்.

'இந்தக் கடிதத்தின் கருத்து எதுவாக இருந்தாலும் சரி... கங்கவ்வா சுகமாக இருக்கவேண்டும் என்று எல்லாரையும் போல நானும் நினைக்கிறேன்,' என்றார் அவர்.

'ஏன் இருக்கமாட்டான், சுவாமி. பகவான் என்னைப் பொய்யாக அழைக்கவில்லை. நான் கங்கவ்வாவிடம் எப்படி நடந்து கொள்கிறேன் என்பதை நீங்கள் பார்ப்பீர்கள். அவனுடைய உபகாரங்களின் பாரம் என்மேல் இருக்கிறது. என்ன செய்வது, வேறு வழியில்லாததால் பேசாமல் இருக்கிறேன். ஒரு விஷயம் உங்களிடம் மட்டும் சொல்கிறேன்... எனக்கு இரண்டு பெண்கள் மட்டும்தான் இருக்கிறார்கள். பெரியவளைக் கிட்டிக்குக் கொடுத்துக் கங்கவ்வாவை அருகில் கொண்டுவர விரும்புகிறேன். இது என் முதல் அபிப்பிராயம். இரண்டாவது பெண்ணுக்கு வயதுவர இன்னும் ஐந்தாறு வருடம் ஆகும். மூன்று நாலாயிரம் செலவு செய்து அவளுக்கு நல்ல இடத்தில் கலியாணம் செய்து வைக்கவேண்டும் என்பது இரண்டாவது அபிப்பிராயம். மூன்றாவதாக, கிட்டண்ணாவை சுவீகாரம் எடுத்துக்கொள்ள வேண்டும்... என்பது என் அந்தரங்கமான விருப்பம்... கங்கவ்வாவுக்கு ஒரே பிள்ளை என்பது மெய்தான். ஆனால் *'த்வாயமுஷாயண' (1)*

ஸ்வீகாரம் எடுத்துக் கொள்ளலாம். பலபேர் இம்மாதிரி சுவீகாரம் எடுத்துக்கொண்டு இருக்கிறார்கள். பகவான் சாட்சியாகச் சொல்கிறேன். கொஞ்சமும் ஏமாற்ற மாட்டேன். என் ரத்தத்துக்கு எப்படி துரோகம் செய்வேன்?... எனக்கு வருடத்துக்கு ஆயிரம் ரூபாய் வருமானம் இருக்கிறது. இந்தக் கலியாணங்களில் கொஞ்சம் நிலம் கைவிட்டுப் போனாலும் குறைந்தபட்சம் எழுநூறு எண்ணூறு வருமானம் இருக்கவே செய்யும். இதைக்

1 பெற்ற தந்தை, ஸ்வீகாரத் தந்தை ஆகிய இரு தந்தையருக்கும் சிரார்த்தம் செய்யும் அதிகாரமுள்ள ஸ்வீகாரம்.

கிட்டண்ணாவிடம் ஒப்படைத்துவிட்டு பகவானின் பெயரைச் சொல்லிக்கொண்டு கொஞ்சகாலம் வாழ்வோம், கிட்டண் ணாவின் குழந்தைகளை ஊட்டி வளர்த்துவிட்டுக் கண்களை மூடுவோம் என்பதுதான் என் மனைவிக்கும் எனக்கும் ஆசை... நல்ல குணமுள்ள பையன். நம் பிள்ளை இல்லையா செத்தபின் இவன் கையால் பிண்டம் கிடைக்கும் என்று நம்பிக்கை இருக்கிறது. இவை என் அந்தரங்க விஷயங்கள். உங்களிடம் மனம் திறந்து சொல்லி விட்டேன். இங்கே கத்தி இருக்கிறது, அங்கே கர்பூஜா பழங்கள். என்ன வேண்டுமானாலும் செய்யுங்கள், எல்லாம் உங்கள் கையில் இருக்கிறது.' ஆழ்ந்த மௌனம் பரவிவிட்டது. இதைக் கண்ட ராகப்பா இறுதித் தடையை அப்புறப்படுத்த முனைந்தான்.

'இதை எல்லாம் நீயே உன் தமக்கையிடம் சொல் என்று நீங்கள் சொன்னால் நான் இந்தப் பதில்தான் சொல்வேன்... இப்படி சொல்வதற்குப் பதிலாக, 'ராகப்பா, நீ நல்லவனில்லை, உன் பெண் எங்களுக்குப் பிடிக்கவில்லை. பிண்டம் வைக்க ஆளில்லாமல் செத்துப் போ' என்று சொல்லி என்னை வீட்டைவிட்டு வெளியேற்றி விடுங்கள். நீங்கள் அப்படி செய்தாலும் எனக்கு சந்தோஷமே, ஆனால், அக்காவிடம் பேசி சமாதானம் செய் என்றால் அது என்னால் ஆகக்கூடிய காரியம் அல்ல. அது உங்களைப் போன்ற பெரியவர்கள் வேலை. சகோதர சகோதரிகளுக்குள் சண்டை ஏற்படுவதில்லையா என்ன? உங்களைப் போன்ற பெரியவர்கள் தலையிட்டு அதைத் தீர்த்து வைப்பதில்லையா என்ன?... எத்தனையோ பேருக்கு எவ்வளவோ நல்லது செய்கிறீர்கள், என்னை மட்டும் வெறும் கையாக அனுப்பினால் அதை என் துர்ப்பாக்கியமாக எண்ணுவேன்.'

ராகப்பாவின் தர்க்க சக்கரத்தில் சிக்கிக்கொண்டு தேசாய் தவித்துப் போனார். தமக்கே சோதனைக்காலம் வந்துவிட்டதாக அவருக்குத் தோன்றியது. துந்தூர் சிவப்பாவின் பெண் என்றால், அந்த விஷயமே வேறு. இப்போது ஒருபக்கமாக முடிவு செய்ய வேண்டி இருக்கும். இதில் கிட்டியின் நலன் பற்றியும் கவனம் வேண்டும். கிட்டி மடத்தனம் செய்திருக்கிறான் என்றால் நான் என் விவேகத்தை இழந்துவிடக்கூடாது. இந்தக் காரியம் என்னால் நிறைவேறும். இவர்கள் எல்லாரும் என்னிடம் வந்து என் உயிரை ஏன் எடுக்கிறார்கள்? என் துன்பங்கள் எனக்குப் போதாதா? என்று எண்ணித் தமக்குள் சலித்துக் கொண்டவராய் அவர் கடைசி வேலைக்குத் தயாரானார். கங்கவ்வாவை அழைத்து வருமாறு பரமாவை அனுப்பினார்.

# 17. கங்கவ்வா - ராகப்பா

பரமாவிடமிருந்து கிடைத்த குறிப்பிலிருந்து, ராகப்பா தான் வந்திருக்கக்கூடும் என்று ஊகித்துக் கொண்ட கங்கவ்வா விரைந்து சென்று தேசாயின் அறையின் அருகில் வெளியிலேயே சுவரோடு சாய்ந்து உட்கார்ந்து கொண்டாள். 'கங்கவ்வா, உள்ளே வா' என்று வேணுபாய் கூப்பிட்டாள். அவள் அங்கேயே உட்கார்ந்திருந்தாள். ராகப்பா வாய் திறந்தான்: 'கங்கவ்வா, உள்ளே வா. வெளியிலேயே ஏன் உட்கார்ந்து விட்டாய், சின்னப் பெண்களைப் போல்?'

'நான் இங்கே இருப்பதுதான் சரி, அம்பி. யார் எங்கே இருக்க வேண்டுமோ, அங்கே இருப்பதுதான் சரி.' ராகப்பாவின் தந்திரம் மிக்க சொற்கள் கங்கவ்வாவின் நேரடித் தாக்குதலில் தோற்றுப் போகும். உலகத்தை வெற்றி கொண்ட ராகப்பாவுக்கு தமக்கையிடம் ஏனோ கொஞ்சம் அச்சம் உண்டாகிக் கொண்டு இருந்தது. அகழியில் நின்று போராடும் வீரனைவிட, மேட்டு மறைவில் நிற்கும் வீரனின் தாக்குதல் அதிகச் சேதம் விளைவிப்பதுபோல், கங்கவ்வா சுவருக்குப் பின்னால் இருந்த தால் அவளுடைய தாக்குதல் மிக ஆழமாக இருந்தது. தேசாய் கூறியதையும் ஏற்காமல் அவள் இருந்த இடத்திலேயே உட்கார்ந்திருந்தாள். எதிரில் வந்து உட்காரவும் அவள் தயாராக இல்லை. அவளுக்கு மற்றொரு பயம் இருந்தது. தம்பியைப் பார்த்து மனம் இளகிவிட்டால் என்ன செய்யமுடியும்? அவன் உடைய அழகான சொல் வலையில் அவள் இனி சிக்கப் போவதில்லை. இந்த உறுதியோடுதான் அவள் வீட்டிலிருந்து வந்திருந்தாள். ஆகையால் சுவருக்குப் பின்னால் இருப்பதே சரி என்று அவளுக்குப்பட்டது.

தேசாய் முறைப்படி பேச்சைத் தொடங்கினார்: 'கங்கவ்வா, உன் தம்பிக்கும் எனக்கும் அதிகப் பழக்கம் இல்லை. ஆனால் இந்த ஒரு மணிநேரத்தில் நாங்கள் ஏதேதோ பேசினோம், குடும்ப விஷயங்களும் நிறையப் பேசினோம். அவருடைய மகளை கிருஷ்ணாவுக்குக் கலியாணம் செய்ய விரும்புகிறார். முந்தாநாள் சிவப்பாவின் பெண்ணைக் காட்டினோம். இதைக் கேள்விப்பட்டு இவர் இங்கே வந்திருக்கிறார். உன் அபிப்பிராயம் தெரியாமல் நாம் ஒன்றும் சொல்ல முடியாது. ஆகையால், உனக்குச் சொல்லி அனுப்பினேன்.'

ராகப்பா இடையிலேயே, 'சேச்சே, கங்கவ்வாவின் ஆசீர்வாதம் இல்லாமல் இது எப்படி நடக்கமுடியும்?' என்றான்.

கங்கவ்வா கடுமையாகப் பேசினாள்: 'என் ஆசீர்வாதம் எதற்கு? நீ தான் அவனைக் கட்டுப்படுத்தி வைத்திருக்கிறாயே?.'

'அந்தப் பேச்சை விடு, கங்கவ்வா. என்ன இருந்தாலும் நீங்கள் கூடப்பிறந்தவர்கள். இன்று சண்டை போடுவீர்கள். நாளைக்கு ஒன்று சேர்ந்து கொள்வீர்கள். இனி நீங்கள் உங்கள் மனஸ்தாபத்தை மறந்துவிட வேண்டும். நடக்கவேண்டிய விஷயத்திற்கு வாருங்கள். நீ பெண்ணைப் பார்க்க விரும்பு கிறாயா?'

'கோபண்ணா, ஏன் அர்த்தம் இல்லாமல் பேசுகிறீர்கள்? நான் அந்தப் பெண்ணைப் பார்க்க விரும்பவில்லை, அவளுடைய அப்பனையும் பார்க்க விரும்பவில்லை. அவளையும் கூடத்தான். இவர்களைப் பார்த்துப் பார்த்து எனக்கு களைத்துப் போய்விட்டது. எப்போதடா கண்ணை மூடுவோம் என்று இருக்கிறது.'

தேசாய் தலைகுனிந்து கொண்டார். நான் பேச வேண்டிய நேரம் வந்துவிட்டது என்று எண்ணிய ராகப்பா எழுந்து நின்றான். துப்பட்டாவைச் சரிசெய்தபடி சொன்னான்.

'கங்கவ்வா, நடந்தது நடந்துவிட்டது. நடந்ததை மறந்துவிடு. நான் உன் தம்பி என்பதை எண்ணி என்பக்கம் பார். எவ்வளவு காலம் கோபமாக இருப்பாய்? காரணம் இல்லாத இந்தத் துவேஷம் ஏன்? கல்லும் உருகிவிடுகிறது, பார்.'

'ஆம் அம்பி ராசு, எனக்குக் கல்நெஞ்சு. உன் சொத்தைப் பார்த்து, உன் வைபவத்தைப் பார்த்து, உன் வைப்பாட்டிகளைப் பார்த்து என் மனம் உருகவே இல்லை. நான் இவ்வளவு காலம் கஷ்டப்பட்டுக் கிட்டியை ஊட்டி வளர்த்தேன். இவ்வளவு பெரியவன் ஆக்கினேன். நான் ஒண்டிக்கட்டை, ஒத்து ஒத்தாசைக்கு யாரும் இல்லாமல், ஒருத்தர் கால்களிலே விழுந்து வேலை பண்ணிவைத்தேன், ஒருத்தரை சங்கடப்படுத்தினேன், ஒருத்தரிடம் மன்றாடிக் கெஞ்சினேன், என்ன தான் செய்யவில்லை. அப்போது உனக்கு என் ஞாபகம் வந்ததா? உடன்பிறப்பு போல் ஏதாவது பேசினாயா? அக்கா எப்படி இருக்கிறாய் என்று என்றைக்காவது கேட்டிருப்பாயா? உன் வீட்டில் சாப்பாட்டுக்கு ஒன்றும் இல்லையா? ஒரு நாளாவது... இப்போது அவனுக்கு வேலையான பிறகு என் நினைவு வந்திருக்கிறது. அப்போது உன் நெஞ்சில் ஈரம் இல்லையா?'

'கங்கவ்வா, நீதான் வேட்டை நாய்போல் நம்மை வீட்டை நெருங்கவிடவில்லையே? எச்சல் இலைகளைக் கூடப் பார்க்கவில்லையே. நீதான் தீண்டத்தகாதவர்களைப் போல் எங்களை ஒதுக்கி வைத்திருந்தாயே...'

'அடே அம்பி, நீ எதுக்குத் தீண்டத்தகாதவன் ஆக வேண்டும்? தீண்டத்தகாதவர்கள் நாங்கள். நாங்கள் பணம் தோற்றவர் களாயிற்றே. பணம் இருந்தால்தான் சொந்த பந்தம் எல்லாம். பணம் இல்லாவிட்டால் யாரும் பக்கத்திலும் வரமாட்டார்கள். உலக வழக்கம் இதுதானே?'

'நீ ஒப்புக்கொண்டாலும் சரி, ஒப்புக் கொள்ளாவிட்டாலும் சரி, பிறத்தியாருடைய பணம் எனக்குத் துரும்புக்குச் சமானம். இதுவே என் தீர்மானமான முடிவு.'

இதைக் கேட்டதும் கங்கவ்வா துடிதுடித்துப் போனாள். இதுவரை பேச்சு குற்றச்சாட்டு, எதிர்குற்றச்சாட்டு என்கிற அளவோடு இருந்தது. இப்போது கங்கவ்வா கோபத்தால் மெய்மறந்தாள். சுவரருகில் இருந்து எழுந்து வாசலில் உட்கார்ந்து கொண்டு கத்தினாள்.

'பிறத்தியார் பணம் உன்னிடம் எப்போது பணம் இருந்தது? எனக்குத் தெரியாதா என்ன? நிலமெல்லாம் அடகில் இருந்தது. நாங்கள் நாசமாய்ப் போன பிறகு உன் நிலம், உன் கைக்கு வந்தது. அடே, இந்த டம்பத்தை விட்டுவிடு.'

'கங்கவ்வா, ஏன் இப்படிப் பேசுகிறாய்? உங்கள் பணத்தை நான் திருடிவிட்டேனா, கொள்ளை அடித்தேனா? ஒவ்வொரு விஷயமாகப் பார். உங்களுக்குக் கஷ்டம் வந்ததால் எனக்கு வருத்தமில்லை என்று சொல்ல விரும்புகிறாய், இல்லையா?'

'என்னை நாசம் செய்தவனே நீ தான். எங்களை ஜாமீன் தரச்சொன்னவன் நீ தான். அந்த அயோக்கியன் வெங்காவை வீட்டைவிட்டுத் துரத்தியவனும் நீதான். அக்காவின் கழுத்தில் தான் தூக்குக் கயிறு விழும் என்று அப்போது உனக்குத் தெரியாதா? உன்னால் தான் எங்கள் வீட்டுத் தங்கம் எல்லாம் மண்ணோடு போயிற்று. என் கணவரை நீதான் விழுங்கினாய். அட, உலகத்தில் பங்காளிகள் இருக்கிறார்கள், ஆனால், உன்னைப் போல ஒருத்தன் விளக்கை வைத்துக் கொண்டு தேடினாலும் கிடைக்கமாட்டான்.'

'கொஞ்சம் நிறுத்து, கங்கவ்வா. மறுபடியும் நாம் எப்போதாவது சந்திப்போமா, மாட்டோமா என்று தெரிய வில்லை. இம்மாதிரிப் பேச்சுகளை நான் கேட்டு ரொம்பக் காலம் ஆகிவிட்டது. இப்போது தேசாயும் சாட்சி. நீ சொல்கிற ஒவ்வொரு விஷயத்துக்கும் என்னிடம் பதில் இருக்கிறது. ஒருமுறை இருவருடைய மனத்தில் இருப்பதையும் வெளிப்படையாகப் பேசிவிடவேண்டும். இவற்றை மனத்தில் போட்டு அழுக வைக்கத் தேவை இல்லை. முதலாவதாக கங்கவ்வா! வெங் கோடிக்கு ஜாமீன் தர சுவாமிராய் மறுத்தாரா? நான் பின்னால்

இருந்து கொண்டு சுவாமிராயை முன்னால் விட்டேனா என்ன? இல்லை, யார் முன்வந்தார்களோ அது பகவானின் சித்தம். இதில் என் தப்பு என்ன? ஜாமீன்தர நான் முன்வந்தேன். ஆனால் வக்கீல், 'உன் நிலம் வில்லங்கப் பட்டிருக்கிறது. நீ ஜாமீன் தரமுடியாது,' என்று கூறிவிட்டார். இதன் பேரில் சுவாமிராய் ஒரு வீரனைப் போலப் பேசினார், 'நீங்கள் ஏன் கவலைப்படுகிறீர்கள்? நான் ஜாமீன் தருகிறேன்' உனக்கு அது நினைவில்லையா? குடும்ப கௌரவத்துக்காக, அந்த அரைப்பைத்தியத்துக்கு ஜாமீன் கொடுக்க முன்வந்தான். அந்த நல்ல மனுஷ்யன். காலையில் துதிக்கப்பட வேண்டியவன். அவர் உயிரோடு இருந்தால் உனக்கு லட்சக்கணக்கில் நஷ்டம் ஏற்பட்டிருந்தாலும் சரி, என்மீது நீ இப்படி விஷமாய்க் கக்கமாட்டாய். போனதைப் பற்றிப் பேசுவதால் என்ன பயன்? விடு, நான் பகவானைத் தான் நொந்துகொள்ள வேண்டும். என் அதிர்ஷ்டமே அப்படி பொல்லாதது.'

'டேய் அம்பி, இப்படிப் பெண்பிள்ளைகளைப் போல் பேசுவதை நிறுத்து... இப்படிப் பேசிப் பேசி எத்தனையோ பேரை விழுங்கிவிட்டாய், ஓர் ஏப்பம்கூட விடவில்லை. கிராமம் பூராவும் அப்படி சொல்லுகிறது, நான் என்ன சொல்வது? இந்தப் பசப்பு வார்த்தைகளைக் கேட்டு மயங்குகிறவள் நான் இல்லை.'

'கொஞ்சம் இரு. நான் பூராவும் சொல்லி முடித்து விடுகிறேன். இன்று வெளிப்படையாகப் பேசிவிடுவோம். நான் சொல்ல வேண்டியதை உன்னிடம் சொல்லிவிடுகிறேன். அப்புறம் நீ தம்பி என்று ஏற்றாலும் சரி, விட்டாலும் சரி. உங்களை நாசமாக்கவேண்டும் என்பதற்காக நான் வெங்காடியைத் துரத்தி விட்டேன் என்று உனக்கு ஒரு பிரமை. அவனைத் துரத்திவிடு வதால் எனக்கு என்ன கிடைக்கும்?.. நான் ஏன் அவனைத் துரத்த வேண்டும்? அவனோ ஓர் அரைப்பைத்தியம். யார் செய்த பாவமோ, அவன் பைத்தியமானான். அன்று இரவு அவன் எங்கள் வீட்டில் தூங்கினான் என்பது மெய்தான். இதற்கு அர்த்தம், இருபத்து நாலு மணி நேரமும் நான் காவல்காக்க வேண்டும் என்பதல்ல அல்லது அவன் தோளில் கயிறு போட்டுத் தூணோடு கட்டிப் போட வேண்டுமா? இரவு பத்து மணி ஆகிவிட்டது. கொஞ்சம் தான் சாப்பிட்டான். 'கொஞ்சம் சுற்றிவிட்டு வருகிறேன்,' என்றான். அப்புறம் திரும்பவில்லை, போய் விட்டான். அப்புறம் என்ன நடந்தது தெரியுமா? அவனைத் தேடிப் பிடிப்பதற்காக சுவாமிராய் நூறு ரூபாய் பணம் கொடுத்து அனுப்பினார். நான் வெங்காடியை வெருட்டிவிட்டேன் என்று உன் அகத்துக்காரருக்குச் சந்தேகம் இல்லை. உன் மூளைக்கு இப்படி ஏன் தோன்ற வேண்டும்? எனக்கு ஒன்றும் புரியவில்லை. சுவாமிதாஸ் என் சகோதரன் மானம் காத்தார். அப்படி சொல்லப்

போனால், கங்கவ்வா, வெங்காடி எனக்கும் சகோதரன், உனக்கும் சகோதரன். உன் சகோதரன் என்பதால் தான் சுவாமிராய் ஜாமீன் தந்தார் என்று நான் சொன்னானோ? சுவாமிராய் எனக்கு என்ன விரோதியா? என் கண்களுக்கு முன்னாலேயே சுவாமிராய் ஜாமீன் பத்திரத்தில் கையெழுத்து போட்டார். வெங்காடி ஓடிவிட்டால் அவர் மாட்டிக் கொள்வார் என்று எனக்குத் தெரியாதா என்ன?... அவருக்கு ஏதாவது நேர்ந்தால் என் தமக்கையின் உயிர் போய்விடும் என்று எனக்குத் தெரியாதா?'

கங்கவ்வாவுக்கு இந்த விவரங்கள் இவ்வளவு விரிவாகத் தெரியாது. அவளுடைய வாழ்க்கையின் நினைவுகளில் இப்பகுதி மிகவும் துயரம் நிறைந்தது. வெங்காடி ஓடிப்போன பிறகு பலர் பல இடங்களில் அலைந்துவிட்டு வந்தார்கள். அவன் அகப் படவில்லை என்றதும், ஒரு மாதத்துக்குள்ளேயே எல்லோரும் ராகப்பாவைச் சந்தேகிக்கலாயினர். ராகப்பாவின் வாழ்க்கை பற்றி வீட்டுக்கு வெளியே பலவிதமாய்ப் பேசிக்கொண்டார்கள். ஆனால் வீட்டில் ஒற்றுமை இருந்தது. ஆகையால் அப்பேச்சுகளின் எதிரொலி வீட்டில் கேட்பதில்லை. வீடு பாழாயிற்று. பிறர் பேசுவது கங்கவ்வாவின் காதுகளுக்கும் எட்டியது. ஏராளமான பேச்சு, கேட்டு 'வெங்காடியை ஓடவிட்டவன் அவனே' என்ற எண்ணம் அவள் மனத்தில் பதிந்து விட்டது. எவ்வித ஆதாரமும் இல்லாமலே அவள் அதை நம்பியும் விட்டாள். ஆறேழு மாதங் களுக்குப்பிறகு, கணவன் இறந்த பிறகு, அவளுடைய இந்த நம்பிக்கை இன்னும் ஆழ்ந்துவிட்டது. ராகப்பா, அவன் மனைவி, குழந்தைகள் பெயரால் கங்கவ்வா தர்ப்பணம் செய்துவிட்டாள்.

விஷயம் தெளிவுபடவே அவளால் பதில் கூறமுடியவில்லை. தர்க்கபலம் இல்லாவிட்டாலும் துவேஷம் துக்கத்தின் உருவத்தில் உருகிவிட்டது. இப்போது அதிகமாய் வாதாட அவளால் இயலாமல் போய்விட்டது. பழைய நினைவுகள் பொங்கி வழியவே அவள் கண்ணீர் பெருக்கியவாறு, 'அவருடைய உயிரை வாங்கிவிட்டுத்தான் நீ ஓய்ந்தாய்,' என்று மட்டும் சொன்னாள்.

ராகப்பா விவகாரத்தை முடியவிடவில்லை. இன்னொரு விஷயம் பாக்கி இருந்தது. பல நாட்களாக அவன் கூற விரும்பிய விஷயம்.

'கங்கவ்வா, நீ பேசுவது பற்றி எனக்குக் கோபம் வரவில்லை. ஏனென்றால் நானும் இதைப்பற்றி நிறைய யோசித்தேன். அதைத் திரும்பச் சொல்வதால் பயன் இல்லை, ஆனால் பேச்சு வந்துவிட்டதால் தெளிவாகச் சொல்லி விடுகிறேன். சுவாமிராயினால் பெரிய துக்கம் உனக்குத்தான் என்பது உண்மை, ஆனால் என்னைப் பற்றியும் கொஞ்சம் சொல்கிறேன். நீயோ வீட்டுப் பெண், வெங்காடிக்கு நான்தான் ஜாமீன் கொடுத்திருக்க வேண்டும். அவன் ஓடிப்போனதும் என் வீட்டிலிருந்து. அவன்

ஓடியதால் தான் என் தமக்கையின் குடும்பம் அழிந்தது. ஆகையால், ஏதாவது ஒருவிதத்தில் என் தமக்கையிடம் பட்ட கடனைத் தீர்க்க விரும்பினேன். அப்போதே சுவாமிராய் காலமானார். அவரைக் கொன்றவன் நான். இந்தப் பச்சாத் தாபத்தில் நான் தெருத்தெருவாக அலைந்தேன். பகவானே, என் உயிரை எடுத்துக்கொள், அவரைத் திருப்பித் தா... இந்த விஷயங்கள் எல்லாம் உனக்குத் தெரிந்திருந்தால்... சரி, போகட்டும் விடு, உனக்கு அவை எப்படித் தெரியும்? சகிக்க முடியாத உன் துக்கமே உனக்கு ஏராளம். அதில் உன் மேல் என்ன தவறு? ஆனால், தேசாய் சுவாமி, நான் சொல்வது இவ்வளவு தான்- நம்மை அறிகிறவர்களும் இருக்கிறார்கள். குறைந்தபட்சம் நமக்குத் துக்கம் தருகிற பகவான் அறிவார்.'

இறுதியில் வார்த்தைகளின் வேகம் ஏறஏற ராகப்பாவின் குரல் உயர்ந்து கொண்டே போயிற்று. அவனுக்கும் அந்நாட்களின் நினைவு வந்தது. அந்நிகழ்ச்சிகள் துயரம் நிறைந்தவை, யாருடைய உள்ளத்தையும் உலுக்கக் கூடியவை. அவனே அவற்றில் தன்னை இழந்தான். அவன் பேசி முடித்த போது வெளியிலிருந்த கங்கவ்வா அழுகின்ற சத்தம் கேட்டது. தேசாய் சட்டென எழுந்து வெளியில் வந்தார். ராகப்பாவும் ஈரமான கண்களைத் துடைத்தபடி வெளியில் வந்தான். இதுவரை அழுகையை அடக்கிக் கொள்ள முயன்று கொண்டிருந்த கங்கவ்வா தேசாய் வந்ததும் தலையை மூடியிருந்த சேலைத்தலைப்பை மோவாய் வரை இழுத்துவிட்டுப் பலமாக விக்கிவிகசித்துப் புலம்பி அழத்தொடங்கினாள். அக்காட்சியைக் கண்ணுற்ற ராகப்பாவும் இளகிவிட்டான். அவனுடைய கண்களிலும் நீர் திரண்டுவந்தது. அவனுடைய ஆண்தன்மையிலும் பலவீனம் வந்துவிட்டது. இரண்டு மூன்று தடவை அவனிடமிருந்து விசிப்புச் சத்தம் வந்தது. இவ்வாறு அழுது அரற்றும் இரண்டு நிமிடங்களிலேயே ராகப்பாவின் விவகாரபுத்தி மீண்டும் முற்றிலும் விழித்துக் கொண்டது. 'எவ்வளவு நல்ல வாய்ப்பு!' என்று எண்ணிய அவன் மறுபடியும் தன் நாடகத்தைத் தொடங்கினான். அவன் தொப் பென்று தரையில் சப்பணமிட்டு உட்கார்ந்தான், துப்பட்டாவைக் கீழே விரித்துக் கூறினான்: 'கங்கவ்வா, நான் என்ன தவறு செய்திருந்தாலும் மன்னித்துவிடு. நடந்ததை எல்லாம் மறந்து விடு. அம்பி என்று உன் வாயால் என்னைக் கூப்பிடு.'

பழைய விஷயங்களில் மெய்மறந்திருந்த கங்கவ்வா சகோதரனின் சொற்களைக் கேட்டுக் கொஞ்சம் இளகிவிட்டாள்; ஆனால் ராகப்பாவின் இந்தப் புதிய தந்திரத்தால் அவள் மீண்டும் நிகழ்காலத்திற்குத் திரும்பி விட்டாள். தம்பியின் இந்த லீலைகள் அவளுக்குத் தெரியும். ஆகையால் அவளுடைய விவேகமும் முற்றிலும் திரும்பி வந்தது. அவள் தன் உணர்ச்சிகளை அடக்கிக்

கொண்டாள். ஒரே கணத்தில் அவள் தன்னுடைய அழுகை, நடுக்கம், மகளிருக்கே உரிய தழுதழுக்கும் குரல் எல்லா வற்றையும் அமுக்கிவிட்டுச் சடாரென்று எழுந்து உட்கார்ந்தாள், பேசாமலே விரைவாய்க் கதவைத் தாண்டித் தன் வீட்டை நோக்கி நடந்தாள்.

மீண்டும் கங்கவ்வாவுடன் முக்கியமான விஷயங்களைப் பற்றிப் பேசுவதாய்த் தேசாய் ஆறுதல் கூறியதைக் கேட்டுக் கொண்டு ராகப்பாவும் அங்கிருந்து நழுவினான். அன்று தேசாய் மௌனமாக வீற்றிருந்ததால் அவனுக்குப் பாதி வெற்றி கிடைத்தது. வார்த்தையாடுவதில் அவன் வல்லுநனாக இருந்தாலும் தேசாயின் தலைமை இல்லாமல் தான் வெற்றிபெற முடியாது என்பதை அவன் உணர்ந்தான். முன் ஒருமுறை தனி யாகப் போய் அசடு மாதிரி குட்டு வாங்கிக்கொண்டு திரும்ப வில்லையா என்ன?

கங்கவ்வா இவ்விஷயங்களில் எதைப் பற்றியும் கிட்டுவிடம் பேசவில்லை. ஆனால் நடந்தது யாவும் கிட்டிக்குத் தெரிந்து விட்டது. ஆபீஸ் மூடப்படும் நேரத்தில் ராகப்பா தாங்காவில் போனான். நடுவழியிலேயே கிட்டியைச் சந்தித்து முக்கியமான விஷயங்களை எல்லாம் உரைத்தான்; அத்தோடு, கங்கவ்வாவோ தேசாயோ கேட்டால், 'ராகப்பாவின் பெண்ணைக் கட்டிக்கொள்ள முடியவில்லை எனில் கலியாணமே செய்து கொள்ளப் போவது இல்லை' என்று அடித்துச் சொல்லும்படி கிட்டிக்கு அறிவுறுத்தினான். கிட்டி அப்படிக் கூறாவிட்டால் அவனுடைய சொல்லுக்கு மதிப்பு இருக்காது. இந்தக் கலியாணமே நடைபெற முடியாது.

மறுநாள் அதிகாலையிலேயே கங்கவ்வாவுக்கு அழைப்பு வந்தது மறுபடியும். முன்னாளின் உணர்ச்சிமயமான சூழ்நிலை ஆற்றுவதற்காக சகஜமான முறையில் கங்கவ்வாவிடம் சொல்ல வேண்டியதை நேரடியாகச் சொன்னார்: 'கங்கவ்வா, இம்மாதிரி விஷயங்களில் நம்மைப் போன்றவர்களை நடுவில் இழுக்கக் கூடாது. நமக்கு முன்னால் இவ்வளவும் நடந்தபிறகு நாம் ஒன்று உன்னிடம் சொல்கிறோம். சரியென்று உனக்குத் தோன்றினால் யோசனை செய். உனக்கும் உன் தம்பிக்கும் சண்டை ஏன் ஏற் பட்டது. எப்படி ஏற்பட்டது, எந்த அளவு ஏற்பட்டது என்பதற்கும் நமக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. நம்மைப் போல் நடுவில் வந்தவர்களுக்கு, கிருஷ்ணனுக்கு எப்படி நன்மை உண்டாகும், அவனோடு நீ எப்படி சுகமாக இருக்கலாம் என்பதைப் பற்றி யோசனை. உனக்குச் சரி என்று படாவிட்டால், நீ ஒப்புக்கொள்ள வேண்டாம், அதனால் நமக்கு வருத்தம் இல்லை... உங்கள் ராகப்பாவுக்கு ஆண்குழந்தை இல்லை என்பது

உண்மைதானா?' கங்கவ்வா தலையாட்டி 'ஆம்' என்றாள். தேசாய் விஷயத்தைத் தொடர்ந்தார்: 'அவன் கிட்டிக்குப் பெண்கொடுத்து அவனைத் தத்து எடுத்துக் கொள்ள விரும்புகிறான். அப்படித் த்வாமுஷ்யாயண சுவீகாரம் எடுத்துக் கொள்ளும் வழக்கம் உண்டு. சாதாரணமாக வருடத்துக்கு ஏழு, எட்டு நூறு வருமானம் தரும் நிலம் தனக்கு இருப்பதாக அவன் சொன்னான். அதைப்பற்றி நாம் விசாரித்துத் தெரிந்து கொள்ளலாம் - அது பின்னால் நடக்கவேண்டிய விஷயம்.'

'இரண்டாவது, ராகப்பா எப்படிப்பட்டவன் என்பதைப்பற்றி எனக்கு அக்கறை இல்லை. அவனுடைய பெண் எப்படி என்பதுதான் முக்கியம். அதைப்பற்றி விசாரிப்போம். ஆனால், ஒரு விஷயம். குழந்தைகள் பெரியவர்களாக வளர்ந்த பிறகு அவர்கள் நம் இஷ்டப்படி நடக்கவேண்டும் என்றால் அது நடக்காது, கங்கவ்வா. இக்காலத்துக் குழந்தைகளிடம் நமக்கு அந்த அளவு உரிமை இல்லை. இந்தப் பெண்ணைத்தான் கட்டிக்கொள்வேன் என்று பிடிவாதம் பிடிப்பதாய்க் கேள்விப் பட்டேன். அவன் உன்னிடம் ஏதாவது சொன்னானா?'

'சீச்சீ, இதெல்லாம் ராகூவின் வெட்டிப்பேச்சாக இருக்கும்.'

'எப்படி இருந்தாலும், நாம் கிருஷ்ணனை அழைத்து உண்மை தெரிந்து கொள்கிறோம். ஆனால் அது எனக்கு அவசியம் என்று படவில்லை' என்றுகொண்டே தேசாய் மூக்குக் கண்ணாடிப் பெட்டியில் இருந்த கிட்டியின் கடிதத்தை எடுத்துப் படித்துக் காட்டினார். கங்கவ்வா அகலத் திறந்த கண்களால் பார்த்தப்படி ஆதரவற்றவள் போல் மௌனமாக அமர்ந்திருந்தாள். இந்தக் கடிதத்துக்காக என் மகனை மன்னித்துவிடுங்கள் என்று தேசாயிடம் கூற நாக்கு முயன்றது, ஆனால் கூற மனம் வரவில்லை.

தேசாய் தொடர்ந்தார்: 'எப்படி இருந்தாலும், ராகப்பா சொல்வது மெய்யானால் நமக்கு இந்த விஷயத்தில் அதிக சுதந்திரம் இல்லை. பெண் சுமாராகச் சரியாக இருக்கிறாள். வீட்டு வேலைகளைச் செய்து குடும்பத்தை நடத்த முடியும் என்றால் நீ அதிகத் தகராறு செய்யாமல் சரி என்று சொல்லிவிடுவதுதான் உனக்கு நல்லது என்பது என் அபிப்பிராயம். இல்லாவிட்டால் நாளைக்குக் கிருஷ்ணன் நீ சொல்வதையோ நான் சொல்வதையோ கேட்டு மறுக்கலாம். தன் மனம் போன போக்கில் செய்யலாம்; அப்படி நேர்ந்தால், உனக்குக் கஷ்டமாக இருக்குமா, இருக்காதா? இதுமட்டும் அல்ல, எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டித் தொட்டிலில் போட்டு உறங்கவைக்கும் சின்னக் குழந்தை அல்ல கிருஷ்ணன். இதையும் யோசனை செய். நாம் யார்? அதெப்படி இருந்தாலும் அந்நியர்கள். பாரம் தூக்குகிறவள் நீ. ஆகையால்

நன்றாக யோசித்துக் கொள்... இப்போது லௌகிக விஷயங் களையும் எடுத்துக் கொள்.... அவன் ஏதாவது வரதட்சிணை தரமாட்டானா? தத்து எடுத்துக்கொள்ள ஆசைப்படுகிறான்.'

'கோபண்ணா, நீங்கள் சொல்வது எனக்கும் சரி என்று தோன்றுகிறது. ஆனால் இந்த ராகூவின் பேச்சை என்னால் நம்ப முடியவில்லை.'

'எதைப்பற்றி நம்பிக்கை உண்டாகவில்லை? அதைச் சொல்லு. அதற்கு ஒரு வழிகண்டு பிடிக்கலாம். எப்படி வேண்டு மானாலும் இருக்கட்டும். நான் சொன்னது உனக்கு சம்மதமா இல்லையா?'

'இன்று தத்து எடுத்துக் கொள்கிறேன் என்கிறான். நாளைக்கு வேறு யாரையாவது எடுத்துக் கொண்டால்? அவன் சொல்கிற சொல்லில் உறுதியாக இருப்பதில்லை. பிறருக்கு இடையூறு செய்கிற மனுஷ்யன் அவன்.'

'அவன் செய்கிறானோ?... சரி, செய்யட்டும். நாம் என்ன வளையலா போட்டிருக்கிறோம்? கலியாணம் நிச்சயம் செய்யும் போது தத்தாத்ரேயர் கோயிலில் நாலு பேருக்கு முன்னால் உறுதி வாங்கிக் கொள்கிறேன். அவன் சொன்னதை நிறை வேற்றாவிட்டால் அவனை நேர்ப்படுத்துகிறவர்கள் கிராமத்தில் இருக்கிறார்கள். தூணோடு கட்டிவைத்துச் சவுக்கால் அடிக்கச் செய்வேன். அவன் தன்னைப்பற்றி என்னதான் நினைத்துக் கொண்டிருக்கிறான்?' என்றார் தேசாய் படபடப்போடு.

மேலே என்ன சொல்வது என்று கங்கவ்வாவுக்கு விளங்கவில்லை. அவள் பெரிதும் சோர்ந்து விட்டாள். சற்றுநேரம் பேசாதிருந்தபின் வெட்கத்தோடு, 'நீங்கள் என்ன வேண்டுமானாலும் சொல்லுங்கள், கோபண்ணா, எல்லாம் செய்து கொண்ட பிறகு அவன் கிட்டண்ணாவைத் தன் பிடியில் பிடித்துக் கொள்வான் என்ற பயம் போகவே இல்லை,' என்றாள்.

'இங்கே பார், கங்கவ்வா, உன் பிள்ளை சின்னப் பாப்பா இல்லை. இந்தக் கலியாணம் நடக்கிறதோ நடக்கவில்லையோ, கிட்டி ராகப்பா சொல்கிறபடியே நடப்பேன் என்று எண்ணி விட்டால் நாம் அவனைத் தடுக்க முடியுமா? கொஞ்சம் யோசனை செய்துபார். கிருஷ்ணனுக்கே விரைவில் மணம் செய்து கொள்ள வேண்டும் என்ற ஆசை இருப்பதாக எனக்குப் படுகிறது. அவனுக்கு நாம் இப்போது நிபந்தனை விதிக்க வேண்டும். கலியாணம் ஆனபிறகு அல்லது தத்து எடுத்துக் கொண்டபின் கிருஷ்ணன் ராகப்பாவின் வீட்டில் இருக்கக்கூடாது. தன் வீட்டில் தன் தாயாரோடும் தன் அகத்துக்காரியோடும் இருக்க வேண்டும். அவனிடம் இப்படி உறுதிபெற வேண்டும். அவன் நாணயமான

பிள்ளை, சொந்தக் கால்களால் நிற்கிறான். நீ இந்தக் கல்யாண விஷயத்தை ஒப்புக்கொண்டால் உனக்கு மானமும் கௌரவமும் இருக்கும். அவனுக்கும் மகிழ்ச்சி, சொல்லை மீற மாட்டான். இல்லாவிட்டால், அவரவர் செய்ததை அவரவர்களே அநுபவிக்க வேண்டும். வேலையைச் சுளுவாக்க வேண்டியது நம்வேலை.'

இறுதியில் தேசாயின் முயற்சி வெற்றி பெற்றது. கங்கவ்வா தன் பிறந்தகத்து நிலம் நீச்சு, வீடு வாசல் எல்லாம் பார்த்துப் பல ஆண்டுகள் ஆகிவிட்டன. தான் பிறந்த இடம், எந்த மண்ணில் விளையாடினாளோ அந்த மண், எந்த நிலத்தில் விளைந்த அன்னத்தை உண்டாளோ அந்த நிலம் எல்லாவற்றின் நினைவும் வர அவள் மனம் கலங்கியது. உள்ளுக்குள் ஒருவிதக் களிப்பு உண்டாயிற்று. எந்த விஷயத்தைப் பற்றி அவள் ஐயம் கொண்டிருந்தாளோ அதனுடைய வேர்கள் வலுவற்றுவிட்டதாய் அவளுக்குத் தோன்றியது.

தேசாய்க்கும் இன்னும் திருப்தி ஆகவில்லை. கங்கவ்வாவின் மனப்போராட்டத்துக்கும் ஒரு வழி கண்டார்.

'இவ்வளவு காலத்துப் பகைமை உணர்ச்சியை எப்படி கைவிடுவது என்று நீ யோசிக்கலாம். அதைக் கைவிட்டே ஆகவேண்டும், அதில் அப்படி ஒரு பந்தம் இல்லை. உன் நாட்டுப்பெண் வீட்டுக்கு வந்தபிறகு அவளிடம் அன்பாக இருக்க வேண்டும். இது உன் கடமை. அவளுடைய அப்பன்மேல் இருக்கிற கோபத்தை அவளிடம் காட்டக் கூடாது. நீ அப்படிச் செய்தால் நாம் உன்னை ஆதரிக்க மாட்டோம். இது நம் நிபந்தனை. ராகப்பாவுடனும் அப்படியே நடந்துகொள்ள வேண்டும் என்று நாம் நிபந்தனை போடவில்லை. உனக்குப் பிடிக்கவில்லை என்றால் அவன் முகத்தை நீ பார்க்க வேண்டாம், அவன் வீட்டுக்குப் போக வேண்டாம், அவனை உன் வீட்டுக்கு அழைக்க வேண்டாம். இவற்றை எல்லாம் அவ்வப்போது நாம் சொல்கிறோம். அவ்வப்போது பிள்ளையும் மருமகளும் அவர்கள் வீட்டுக்குப் போய் வருவதோடு உன் வேலை முடிந்தது என்று எண்ணிக்கொள்.'

இதைக் கேட்டுக் கங்கவ்வா முற்றிலும் மறுமொழி அற்றுப் போனாள். தேசாயின் பொருள் செறிந்த பேச்சுக்குப்பிறகு மேலும் பேசுவதற்கு என்ன இருந்தது?

வீட்டுக்குத் திரும்பிய பின் கிட்டியிடம் வேடிக்கையாக அவள் கேட்டாள்: 'ஏனடா, ரத்னாவைத் தவிர வேறு யாரையும் மணக்க மாட்டேன் என்று நீ ராகப்பாவிடம் சொன்னதாய்க் கேள்விப்பட்டேன். அது நிசமா?'

கிட்டி, 'ஆம்', என்று தெளிவாகப் பதிலளித்தான்.

தேசாயின் அருளால் எவ்வளவு பெரிய சிக்கலிலிருந்து தப்பினோம் என்பதை அவள் உணர்ந்தாள். அன்று தெய்வ சந்நிதியில் மற்றொரு நெய் விளக்கை ஏற்றினாள், பகவானே, கோபண்ணாவுக்கு நீண்ட ஆயுள் கொடு என்று பிரார்த்தனை செய்தாள்.

## 18. திருமண ஆயத்தம்

திருமணத்துக்குத் தேவையான பொருள்களை வாங்குவதற்கான ஜாபிதா தயாரிக்கும் வேளையும் நெருங்கிக்கொண்டு இருந்தது. இந்த வேலை தன்னிடம் திணிக்கப்பட்டது போலவும், தனக்கும் அதற்கும் யாதொரு தொடர்பும் இல்லை போலவும் கங்கவ்வா நடந்துகொண்டாள். பெண்ணைப் பார்க்கவும் அவள் இணங்கவில்லை. 'யார் பார்க்க வேண்டுமோ அவன் பார்த்தாகி விட்டது. எனக்கு என்ன?' என்று கூறிவிட்டாள். கிட்டியுடன் அவள் கலியாணம் பற்றிப் பேசவே இல்லை. ஆனால் தேசாயிடம் என்ன பேசுவது என்று யோசித்து விட்டாள். 'கலியாணத்தில் இருதரப்பாரின் செலவையும் ராகப்பா ஏற்கவேண்டும், அதை நாலு பேருக்கு முன்னால் அவன் உறுதியாகக் கூறவேண்டும்; கிட்டி எந்தக் காரணத்தினாலும் மாமனார் வீட்டில் இருக்கக் கூடாது, தன் வீட்டிலேயே இருக்கவேண்டும். வரதட்சிணையாக ராகப்பா ஆயிரம் ரூபாய் தரவேண்டும்' என்பதே அவள் யோசனை.

தன் விவாகம் இத்தனை சுளுவாக நடைபெறும் என்று கிட்டி கனவிலும் நினைக்கவில்லை. இதற்கு முன் அவன் தன்னைப்பற்றி நினைத்திருந்தது எல்லாம் முற்றிலும் வேறு. அவனுக்கு உலக வழக்கு தெரியாது; மனிதனுக்கெனவே ஏற்பட்ட இன்பங்களையும் அவன் கண்டதில்லை. தன் தனித்தன்மையை அறியாமல் பெற்றவளின் குடைநிழலில் அவன் வளர்ந்தவன். யார் அவனைக் கண்டாலும், 'நீ கெட்டிக்காரன்' என்று அவனிடம் கூறுவதில்லை, மாறாக, 'உன் தாயார் மிகவும் சிரமப்பட்டு உன்னை வளர்த்திருக்கிறாள்' என்று சொல்வது வழக்கம். இவ்வாறு சொல்லிச் சொல்லி அன்னையின் உதவிக்குக் கீழே அவனை அமுக்கிவிட்டார்கள். ஆகையால் சிங்கம்போல இருந்தும் ஆட்டுக்குட்டி போல் வளர்ந்தவன். (ஹுசைனைக் கேட்டால், 'கிட்டி சிங்கமே, மெய்யாக' என்று கூறுவான்) தாயின் உதவி மிகப் பெரிது என்பது உண்மை, ஆனால் அந்தச் சுமையை இறுதிவரை சுமக்க வேண்டுமா?... பெற்ற குழந்தையை வளர்க்காத தாய் உண்டா? இவ்வளவு அன்பாக இருக்கிற அம்மா என் கடைசி விருப்பத்திற்கு ஏன் முட்டுக்கட்டையாக

இருக்கிறாள்? இவ்வளவு அன்பு உள்ளவள் ஆனால், தேசாயிடம் கிடக்கும் ஆயிரம் ரூபாயிலிருந்து ஒரு நூறு ரூபாய் எடுத்து என் துணிமணிகளுக்கென்று ஏன் செலவு செய்யவில்லை? இவ்வளவு அன்பு இருந்தால் பத்துவருடப் பள்ளி வாழ்க்கையை இரண்டு கமீஸ்கள், இரண்டு நிக்கர்களோடு கழித்திருக்க வேண்டாம், காக்கி நிக்கர் அணிந்துகொண்டு போய் ஆபீஸில் பியூன்களும் பரிகாசம் செய்யும் நிலைமை எழுந்திராது. வேலையில் சேர்ந்த பிறகும் எனக்கு வேட்டி போதுமான அளவு இல்லை என்பது தெரிந்தும், இவ்வளவு அன்புள்ள அம்மா ஏன் பேசாமல் பார்த்துக்கொண்டு இருக்கிறாள்? அந்த ஆயிரத்திலிருந்து ஓர் ஐந்து ரூபாய் எடுத்து செலவு செய்திருந்தால் எனக்கு ஒரு ஜோடி நேர்த்தியான வேட்டி வந்திருக்காதா? ஒரு விதத்தில் என் வாழ்க்கை வீணாகவில்லையா? வேலையில் சேர்ந்தபிறகு நான் மனிதன் ஆகவில்லையா? கச்சேரியில் நான் எவ்வளவோ ஓடியாடி இரண்டு காசு சம்பாதித்துக் கொண்டு வருகிறேன். இதைக் கவனித்திருந்தும் அவனைப் பொம்மைபோல் ஆட்டிவைத்துத் தன்னுடைய அஹத்தையே எல்லாரிடமும் காட்டிக் கொண்டு திரிகிறாள்... இத்தகைய தன்னுரைகளால் அவனுடைய மனம் நிரம்பி இருந்தது... அம்மா, உன் உதவி பெரிது, ஆனால் எனக்கு என்று ஒரு தனித்தன்மை இல்லையா? இன்னும் நான் உன் மடிப்பிள்ளையா? என்னுடைய எதிர்பார்ப்புகளுக்கும் விருப்பங்களுக்கும் ஒரு விலை கிடையாதா என்ன?... உனக்கு என்மேல் நிசமான அன்பு இருந்தால், நீ இப்படித் தடை போடமாட்டாய். என்னைவிட உன் துவேஷம்தான் உனக்கு முக்கியம், என்னுடைய வாழ்க்கை பற்றி உனக்குக் கவனம் இல்லை... 'நான் உன்னை ஊட்டி வளர்த்தேன்,' என்று தண்டோரா அடிக்க விரும்புகிறாய்.

.... இம்மாதிரியான, இலக்கண வழுவில்லாத, கீழுணர்ச்சியுள்ள நாடகபாணி வாக்கியங்களையும் சொற்களையும் ஒத்திகை பார்க்கிறவன்போல் பிதற்றிக் கொண்டிருப்பான். ஆனால் அவற்றை வெளியிடும் தருணமே வாய்க்கவில்லை. எளிதில் திருமணம் முடிவானபின் இத்தகைய தன்னுரைகள் யாவும் சிறுகச்சிறுக முடிவு கண்டன. இத்தனை எளிதாக எல்லா வேலையும் ஆவதைக் காண அவனுக்கு ஆனந்தம் கலந்த ஆச்சரியம் மட்டும் ஏற்படவில்லை. மாமாவின் செயல்திறனைப் பற்றி ஒரு மரியாதையுணர்வு உண்டாயிற்று. அம்மாவும் சிலநாட்களுக்குத் தேவியாகவே தென்பட்டாள். கிட்டி நன்றி காட்டவேண்டும் என்று அவள் எதிர்பார்த்தவள் அல்ல; எது வந்தாலும் பொறுத்துக் கொள்வேன் என்று எண்ணி, ஒன்றும் பேசாமல் தன் தினசரி வேலைகளில் அவள் ஆழ்ந்திருந்தாள்.

எல்லாத்தரப்புப் பேச்சுகளையும் கேட்ட கிட்டிக்குப் புதிய கவலை ஆரம்பமாயிற்று. அட! எனக்குக் கலியாணமா?... வீட்டுக்கு ஒரு வீட்டுக்காரியைக் கொண்டுவரப் போகிறேன். இம்மாதிரி நாரீரத்தினத்தை இந்த வீட்டுக்கு அழைத்து வருவது வெட்கக்கேடு அல்லவா? அவள் என் ஏழ்மையைக் கண்டு ஏளனம் செய்தாலோ? என் கணவர் உத்தியோகத்தில் இருந்து சம்பாதிக்கிறவர் என்று பிறரிடம் வருணித்துவிட்டு வருகிறவள் வீட்டில் உடைந்த பாத்திரங்களைப் பார்த்துத் துன்புறுவாளா? அவளுடைய துணிமணிகளுக்காக என்ன செலவாகும்? அம்மாவின் மனசை வெல்ல வேண்டும் என்று முதலிலேயே அவளிடம் கூறிவிட வேண்டும். அவள் முட்டாள் அல்ல. கொஞ்ச நாளிலேயே அம்மா மனசை ஜெயித்துவிடுவாள். தத்துப்பிள்ளை ஆவேன் என்ற நம்பிக்கையால் திருமணத்துக்கு இசைவு தந்த அம்மா அவளுடைய அழகைப் பார்த்து எவ்வளவு மகிழ்ச்சி அடைகிறாளோ! இன்று நாலு பேருக்கு நடுவில் 'இவன் என் பிள்ளை' என்று என்னைக் காட்டிக் கர்வப்படுகிறாள் அல்லவா, அதுபோல மருமகளையும் காட்டமாட்டாளா?

சிலசமயம், கிட்டியின் மிகுதியான பாசம் பயங்கரமான உருவம் காட்டி அவனைப் பயமுறுத்தும். அவன் யோசனை செய்வான்: 'அட, நான் இப்படிப் பிடிவாதமாக ரத்னாவை மணக்க விரும்புகிறேனே, இது சரியா? பிடிவாதம் பிடித்துப் பெற்ற பொருள் நல்லதல்ல என்று ஏற்பட்டுவிட்டால் எவ்வளவு கேலிக்கு இடமாகாது! நன்கு, ஆழ்ந்து யோசித்து நான் ஒரு பிடிவாதம் பிடித்தால் நன்றாக இராதா? நான் அவளை நன்றாகப் பார்த்தது நரக சதுர்தசியன்றுதான். பிறகு எப்போது பார்த்தாலும் ஓடி ஒளிந்து கொள்வாள். இப்படி உணர்ச்சிவசப்பட்டுச் செய்யும் ஒரு காரியத்தின் விளைவு நாளை எப்படி இருக்குமோ? சரி நடப்பது நடக்கட்டும்.'

'மிஷ்டான்னமிதரே ஜனா:' மணம் செய்து கொள்கிறவனுக்குத்தான் மணத்தின் சங்கடம் தெரியும். மற்றவர்களுக்கு விருந்து பற்றித்தான் கவலை.

தத்துப்பிள்ளையாகப் போவதுபற்றிக் கிட்டிக்கு மிக மகிழ்ச்சி. மாமாவுக்கு அந்த எண்ணம் இருந்ததை அவன் ஏனோ இதுவரை அறியவில்லை. மாமாவும் மாமியும் தன்னைப் பிள்ளையாகப் பாவித்து வருகிறார்கள் என்பதை நினைத்து அவன் புளகமுற்றான். நரகசதுர்தசியன்று ராகப்பா, 'இங்கே சாப்பிட்டுப் போ' என்று வற்புறுத்தியது, இது உன் வீடு இல்லையா என்று கேட்டது, விழுந்து விடுபவள் போல வந்து சம்பக்கா நெய்க்கிண்ணத்தை உற்சாகமாக நிரப்பியது — இவை எல்லாம் அவனுக்குப் புதிய பொருளோடு தோன்றலாயின.

கிட்டிக்கு இப்போது இரண்டு பெரிய வேலைகள் இருந்தன. ஒன்று, திருமணச்செலவு விஷயம். இரண்டு, ரத்னாவுக்கு இறுதி அறிவுரை. இரு தரப்புச் செலவுகளையும் மாமா மீதே கங்கவ்வா சுமத்தியது அவ்வளவு சரியல்ல என்று கிட்டிக்குப் பட்டாலும்கூட, தானே செலவு செய்யாமல் ஹோட்டலில் சாப்பிட்ட பழக்கம் இருந்ததால், எல்லாமாக மொத்தத்தில் சரியென்றே பட்டு விட்டது. இதைத்தவிர, ராகப்பா அவனைத் தன் மகன் என்று எண்ணிச் சந்தோஷமாகச் செலவை ஏற்பான் என்று அவனுக்கு நம்பிக்கையும் உண்டாகிவிட்டது. ஆயினும் கலியாணச் செலவுக்கு என்று ஆறேழு நூறு ரூபாய் வேண்டியிராதா? துணிமணிகள், தங்கம், பெண் வீட்டாருக்குத் தரவேண்டிய சேலைகள், நண்பர்களுக்குத் தேநீர், பியூன்களுக்கு இனாம் — இப்படி எத்தனையோ செலவுகள். வரதட்சிணையோ கலியாண நாளன்றுதான் கிடைக்கும். அதுவரை செலவு எப்படி நடக்கும்? அம்மாவோ மௌனம் சாதிக்கிறாள். உண்மையில் இப்போது, பகையை மறந்து, இப்பிரச்னைகளுக்குத் தீர்வு அவள் எனக்குக் கூறி இருக்கவேண்டும். ஆனால், என்னைக் காக்நிக்கரோடு ஆபீசுக்கு அனுப்பியவள் இப்போது மாறிவிடுவாளா என்ன?... இந்த விவாகத்தில் அவனுக்கு அவமானமே ஏற்பட்டாலும் அவளுக்கு என்ன? நான் தான் முற்பட்டு இந்த விவாகத்தை வெற்றிகரமாக நடத்திக் காட்டவேண்டும். அவள் திருமணத்திற்கு அநுமதி வழங்கிவிட்டாள் என்று எண்ணி வெறும் கையனாகப் பிறரைச் சார்ந்து அடுத்து நடக்க வேண்டியவற்றைப் பற்றி யோசியாமல் விவாக மண்டபத்தில் சென்று நான் அவமானப்படக் கூடாது. நான் ஏமாளி ஆகிவிடக்கூடாது. நான் புத்திசாலி ஆகிவிட்டேன்' என்று அம்மா அறியும்படி செய்யவேண்டும்...

இதை எல்லாம் நினைத்து அவன் அம்மாவிடம் கேட்டான்:

'அம்மா, கலியாணச் செலவு பற்றி ஏதாவது யோசித்தாயா?'

'உன் மாமா ஏன் செய்யமாட்டான், பெண் தருகிறானே,' என்றாள் கங்கவ்வா.

'சரி, ஆனால் எவ்வளவுதான் செய்வான்? மாப் பிள்ளைக்காகத் துணி எடுக்கலாம். விருந்துச் செலவு செய்யலாம். துணிமணிகள், தங்கம் முதலிய எத்தனையோ செலவுகள் இருக்கின்றன, அதைப்பற்றி நாம் யோசிக்க வேண்டாமா?'

'இதைப் பற்றி எல்லாம் கலியாணம் செய்து கொள்கிறவன் யோசிக்க வேண்டும்.'

'ஆம், அப்படிச் சொல்லு. உனக்குச் செய்ய இஷ்டமில்லை என்று வெட்டவெளிச்சமாகச் சொல்லேன். செய்ய வேண்டியதை நான் செய்து கொள்கிறேன்.'

'இதை என்னிடம் சொல்லவேண்டிய அவசியம் என்ன?... கண்களால் உனக்குப் பார்க்க முடியவில்லையா? நான் எங்கிருந்து செய்வேன்? சம்பாதிக்கிறாய், செய்?'

சற்றுநேரம் மௌனம் நிலவியது. கடைசியில் எச்சிலை விழுங்கிவிட்டுத் தைரியமாய்க் கேட்டான்: 'தேசாயிடம் உன்னுடைய பணம் ஆயிரம் ரூபாய் இருக்கிறது என்று கேள்விப்பட்டேன்.'

'ஆயிரம் ரூபாய் எங்கிருந்து வந்தது? உனக்குப் பித்தம் தலைக்கு ஏறிவிட்டதா?... எங்கிருந்து வரும் ஆயிரம் ரூபாய்? ஆயிரம் ரூபாய் இருந்தால் இம்மாதிரி சேலை ஏன் கட்டுகிறேன்?...' கங்கவ்வா தன் சிவப்புச் சேலையிலிருந்த தையல்களைக் காட்டினாள்.

அன்று கிட்டி கண்களுக்கு முன்னிருந்து மறைந்தவுடனேயே கங்கவ்வா தேசாயின் வீட்டுக்குப் போனாள். தனக்கும் கிட்டிக்கும் இடையில் நடந்த கேள்வி - பதில்களை எல்லாம் அவரிடம் தெரிவித்தாள். கிட்டி அவரிடம் கேட்டால், 'உன் தாயார் என்னிடம் பணம் ஒன்றும் கொடுத்து வைக்கவில்லை' என்று கூறுவதாய் அவரிடம் உறுதி பெற்றுக்கொண்டாள்.

கிட்டி தன் எதிர்கால மனைவியைப் பார்க்கிற சாக்கில் ஐந்தாறு தடவை மாமா வீட்டுக்கு வந்தான். வருகிறபோது எல்லாம் தேநீர் சிற்றுண்டி கொடுத்தார்கள், ஆனால், ரத்னாவைத் தனிமையில் சந்திக்க முடியவில்லை. போகிறபோக்கில் மின்வெட்டுபோல் பார்க்க முடிந்தது. இப்போது ரத்னா சேலையைக் கச்சை எடுத்துக் கட்டத் தொடங்கி இருந்தாள். ஒருமுறை மஹபூப் ஜான் கந்தர்வக் கச்சையாக உடுக்கக் கற்றுக் கொடுத்தாள். ஆனால் அநுபவம் இல்லாத காரணத்தால் அமமாதிரி சேலையைச் சரியாக உடுக்க ரத்னாவுக்கு வரவில்லை. அவள் கன்னாபின்னாவென்று சேலையைச் சுருட்டித் தூக்கிக் கொண்டு நடந்ததால் அவள் நொண்டியோ என்று கிட்டிக்குச் சந்தேகம் ஆகிவிட்டது. அவனுக்கு நெஞ்சில் திக் என்றது. ஆனால் முழுவிவரம் தெரிந்தபின் சந்தேகம் அகன்றது. ஒருமுறை அவளுக்குக் கொஞ்சம் செவிடோ என்று தோன்றியது. பேச்சுக்கு இடையில் அவளுக்குத் திக்குவாய் என்று பட்டது. அவளுடைய அழகைப் பற்றிக்கூட அவனுக்குச் சிற்சில சமயம் சந்தேகம் உண்டாயிற்று. இச்சமயம் விவாகம் முடிவான மகிழ்ச்சியில் அவளுடைய உடல் கொஞ்சம் பருத்துவிட்டது, கௌரியைப் போல் அழகாகத் தோற்றம் அளித்தாள். ஆனால், அவளுடைய உடல் வண்ணம் உண்மையா, பூச்சா என்று கிட்டிக்கு ஐயம் ஏற்பட்டது. இதில் மஹபூப்ஜானின் கற்பித்த வித்தையின்

விளைவு இருக்குமோ? கடைசியில் தன் சந்தேகங்களுக்காகத் தன்னைத் தானே நொந்துகொண்டு, நடப்பது நடக்கட்டும் என்று மனத்தைக் கட்டுப்படுத்தினான்.

இறுதியில் அவளைத் தனியாகச் சந்திக்கும் வாய்ப்பு ஒருமுறை கிட்டியது. கிட்டி வட்டமிடுவதன் கருத்தைப் புரிந்துகொண்ட ரசிகன் ராகப்பா தன் மனைவியிடம் ஜாடையாகச் சொன்னான். இம்மாதிரி விஷயங்களில் சம்பக்காவுக்கு மிகவும் பயம். கிட்டி தூரத்தில் வரும்போதே சம்பக்கா ரத்னாவிடம் கூறினாள். 'உன் அகத்துக்காரனுக்கு உன்னிடம் ஏதோ சொல்ல வேண்டும்போல் இருக்கிறது, நான் கொஞ்சம் பின்பக்கம் இருக்கிறேன். நீ பயப்பட வேண்டாம். அதிகமாக ஒன்றும் பேசாதே, அதிகமாய் ஒன்றும் செய்யாதே' — மேலும் காதில் சொல்ல வேண்டியவற்றைச் சொல்லிவிட்டுப் பின்பக்கம் சென்றுவிட்டாள். ரத்னா செய்தித்தாளை எடுத்துக்கொண்டு முற்றத்துக்கு அருகில் இருந்த அறையில் போய் உட்கார்ந்தாள்.

இவ்வாறு செய்தித்தாளில் மூழ்கியிருந்த மனையாளை ஏகாந்தத்தில் பார்த்ததும் கிட்டிக்கு நம்பிக்கையாலும் அச்சத்தாலும் வேர்வை வெள்ளமாய்ப் பெருகியது. ரசனையுள்ள சொல் எதுவும் நினைவுக்கு வராமற்போக அவன், 'அப்பா இல்லையா?' என்று கேட்டான்.

அப்போதுதான் அவனைப் பார்த்தவள் போல் படபடத்து எழுந்த ரத்னா, 'இல்லை,' என்றாள்.

'அம்மா எங்கே?'

'பின்னால் வேப்பிலை பறிக்கிறாள்.'

தனிமையால் இருவரும் அதைரியம் அடைந்தனர். இக்காரணத்தால் சிறிதுநேரம் மௌனம் பரவி இருந்தது.

'நீ என் தாயாரைப் பார்த்திருக்கிறாயா?'

'இல்லையே.'

'உன் பெற்றோர் என்ன வேண்டுமானாலும் சொல்லட்டும். ஆனால் என் தாயாருக்குள்ள தாராளகுணம் உலகத்தில் இன்னொருத்திக்கு இருக்க முடியாது.'

'ஒவ்வொருத்தருக்கும் தன் தாயாரைப்பற்றி அப்படித்தான் தோன்றுகிறது.'

'இல்லை, இல்லை, என் தாயார் தேவப் பிறவி. இந்தக் கலியாணத்துக்கு ஒப்புக் கொண்டாள். இது எவ்வளவு பெரிய விஷயம் என்று உன்னால் கற்பனை செய்ய முடியுமா?'

'முடியாது.'

'வீட்டுக்கு வந்தபிறகு அவளைச் சந்தோஷமாக நீ வைத்துக் கொள்ள வேண்டும். நீ அவளுக்கு சேவை செய்தால் எனக்கும் சந்தோஷம்.'

'அப்படியானால் உங்களுக்கு யார் சேவை செய்வது?'

'எனக்கும் செய்ய வேண்டும், அம்மாவுக்கும் செய்ய வேண்டும். ஆனால், அவளுக்குத்தான் முக்கியம். அவளை நீ மகிழ்ச்சியாக வைத்துக் கொண்டால் எனக்கும் மகிழ்ச்சி.'

'என்னால் முடிந்தவரை செய்கிறேன்.'

'செய்வாயா, எனக்கு ஆறுதலாக இப்படிச் சொல்கிறாயா?'

'நாட்டுப்பெண்ணைத் தொந்திரவு செய்து அழவைக்க வேண்டாம் என்று அவருக்கும் சொல்லுங்கள்.'

கிட்டி சற்று பிரமிப்புற்றான். சிறிது சினத்தோடு கொஞ்சம் குரலை உயர்த்திக் கூறினான்: 'ஆம், அவருக்கு சேவை செய்கிறேன் என்று தெளிவாகச் சொன்னால் உனக்கு என்ன நஷ்டம் உண்டாகிவிடும்?'

'ஆம், சேவை செய்கிறேன்,' என்று ரத்னா விசிக்கலானாள். கண்ணீர் கண்களிலிருந்து கன்னங்கள் வரை வந்துவிட்டன. சேலைத்தலைப்பால் துடைத்துக் கொள்ளலானாள்.

'இல்லை, இல்லை, உன் மனசு நோவதற்காக நான் இதைச் சொல்லவில்லை. உன்னுடைய நன்மைக்காக...?'

'ஏன்?... மாமியாருக்கு சேவை செய்ய வேண்டாம் என்று சொல்லிக் கொடுத்து என்னைப் பெற்றவர்கள் அனுப்பமாட்டார்கள்?' என்று சொல்லிக்கொண்டே மீண்டும் ஒருமுறை விசிக்கத் தொடங்கினாள்.

கிட்டிக்குத் திருப்தி ஆகிவிட்டது, ரத்னா சேவை செய்யத் தயாராக இருக்கிறாள் என்று அவனுக்குப் பட்டது. நான் தான் சந்தேகத்தால் முட்டாள்தனமான ஒரு கேள்வியைக் கேட்டுச் சூது இல்லாத அவள் மனத்தை அவமதித்து விட்டேன்... இந்த மகிழ்ச்சிப் பெருக்கில் அவன் அவளுடைய கண்ணீரைத் துடைக்கக் கையை நீட்டினான்.

அம்மா காதில் கிசுகிசுத்த விஷயம் அவளுக்கு நினைவு வந்தது. அவள் பின்னால் நகர்ந்து உள்ளே போய்விட்டாள். கிட்டியின் விரல்களில் அவளுடைய சூடான கண்ணீர்த் துளிகள் விழுந்தன. அவன் அவற்றைத் தன் உதடுகளோடு சேர்த்துக் கொண்டான்.

கிட்டி தன்னுடைய அடுத்த ஏற்பாட்டில் முனைந்தான். அம்மா உற்சாகம் காட்டாவிட்டாலும் கலியாணத்தின் ஆடம்பரத்தில் குறைவு ஏற்பட்டுவிடக் கூடாது என்று அவன் முடிவு செய்தான். ஒரு மாதத்துக்கு முன்பு தான் அவனுக்கு ஒரு வியாபாரியோடு பழக்கமாயிற்று; அவருக்குத் தரகு மண்டி. அவருடைய ஒரு வேலையில் அவனுக்கு இருபது ரூபாய்

கிடைத்தது. கிட்டி நேராக அவருடைய கடைக்குப் போனான். அவர் அவனை மரியாதையோடு வரவேற்றார். அவர் பாதி கவனத்தைத் தம் வேலையிலும், பாதி கவனத்தை அவன் சொல்வதைக் கேட்பதிலும் வைத்துக்கொண்டு திண்டு மீது சாய்ந்தபடி உட்கார்ந்தார். கிட்டி உடனே விஷயத்துக்கு வந்தான், ஆயிரம் ரூபாய் கடன் கேட்டான். ஆயிரம் கேட்டால் ஐநூறு ஆறுநூறாவது தேறும் என்று அவன் எண்ணம். ஸெட்டியோ அவன் கழுத்தைக் கட்டிக் கொண்டான்: 'என்ன சார், வெல்லம் டிரான்ஸ்போர்டுக்கு நீங்கள்தான் லைசென்ஸ் கொடுத்தீர்கள். கையில் இருந்த பணத்தை எல்லாம் அதிலே போட்டுவிட்டேன். ஒரு மாதம் பொறுத்துக் கொள்ளுங்கள். ஒன்றும் இல்லா விட்டாலும் இரண்டு, நூறோ, நானூறோ தருகிறேன்' என்றவர் தொழிலில் உள்ள துன்பத்தை விவரிக்கலானார். கிட்டிக்கு அவமானமாக இருந்தது. ஆனால் ஸெட்டி மற்ற உபசார மரியாதைகளில் குறை வைக்கவில்லை. டபிள் ரொட்டி, வெண்ணெய், டீ எல்லாம் வந்தன. அவன் புறப்பட்டபோது ஸெட்டி கேட்டார்: 'கலியாணத்துக்கு நம்மை அழைப்பீர்களள் அல்லவா?' கிட்டி அதற்கு, 'நீங்கள் இல்லாமல் நம் கலியாணம் நடக்குமா?' என்று பதில் கூறினான். 'கூப்பிட்டால் ஏதாவது பரிசு அளித்துவிட்டு வருவேன், இல்லாவிட்டால் ஆபீஸில் பரிசு இருக்கவே இருக்கிறது,' என்ற தரகர் சிரித்தார். கிட்டிக்கு மர்மஸ்தானத்தில் அடிபட்டது.

மற்றும் இரண்டு இடங்கள் இருந்தன. அவர்களும் ஸெட்டியைப் போல் கைவிரித்து விட்டால் என்ன ஆகும் என்று எண்ணி அங்கே போவதைத் தள்ளிப் போட்டான். மனத்தில் பணவிஷயம் ஒரு சுமை ஆகிவிட்டது. ஒருநாள் தன் கவலையால் அயர்ந்து தேசாயிடம் வந்தான், அவரிடம் தன் கஷ்டங்களை விவரித்தான்.

தேசாய் கூறினார்: 'அட, ஆமாம்... பண விஷயத்துக்கு என்ன ஏற்பாடு ஆயிற்று? அதைத் தெரிந்து கொண்டு உன்னைக் கூப்பிடலாம் என்று இருந்தேன். சாமான்கள் ஜாபிதா தயாராகட்டும் என்று பேசாமல் இருந்தேன்.'

முக்கியமான பே[illegible]சை எடுப்பதைத் தவிர வேறு வழி இல்லை என்று கண்ட கிட்டி கூறினான்: 'கோபண்ணா, இப்போதாவது அம்மா இந்தத் துவேஷத்தைக் கைவிட வேண்டாமா?... கலியாணச் செலவு பற்றி அவள் ஒன்றும் பேசவில்லையா என்ன? ஒன்றும் பேச வேண்டாமா?'

'அவள் கேட்காவிட்டால் நீ கேட்க வேண்டும். ஏன், அம்மாவிடம் கேட்க உனக்கு வெட்கமாக இருக்கிறதா என்ன?'

'கேட்டேன். தன்னிடம் ஒரு காசும் இல்லை என்று சொல்கிறாள். இப்போது இந்த நிலைமையில் அவள் இப்படிச் சொல்வதைக் கேட்டால் எனக்குச் சந்தேகம் உண்டாகிறது. அப்பா காலத்தில் ஏராளமாய் செல்வமும் சொத்தும் இருந்ததாய் எல்லாரும் சொல்கிறார்கள். அது எல்லாமே போய்விட்டதா என்ன?... ஒன்றுமே மிஞ்சவில்லையா? குறைந்தபட்சம், ஓராயிரமாவது...'

தன் யதார்த்தமான முகத்தைச் சிறிதும் மாற்றாமலே உரைத்தார்: 'உன் தாயாரைக் கேள். இருந்தால் தருவாள். உனக்கு வேண்டும் என்றால் இருநூறோ நானூறோ நான் கொடுக்கிறேன். வரதட்சிணை வந்த பிறகு திருப்பித் தரலாம்.'

'உங்களைப் போன்ற பெரியவர்களின் துணைதான் இருக்கிறது எனக்கு. இந்தத் தைரியம் எனக்கு இருக்கிறது. ஆனால் நம் வீட்டில் ஒரே கலியாணம் தான் நடக்க இருக்கிறது. அதற்காக அம்மா செலவு செய்யவில்லை என்றால் எனக்கு வருத்தமாக இருக்கிறது. பார்க்கப் போனால், அவள்தான் மிகுந்த உற்சாகம் எடுத்துக் கொள்ள வேண்டும். 'என்னிடம் ஒரு காசும் இல்லை,' என்று அவளே சொல்கிறாள். எவ்வளவோ இருந்தது, இன்று ஆயிரம் ரூபாய்கூட மிச்சம் இல்லையா? இதை என் கெட்ட அதிர்ஷ்டம் என்றே சொல்ல வேண்டும்.'

'ஏதாவது மிச்சம் இருக்கிறதா என்று உன் தாயாரையே கேளேன். கேட்பதற்கு என்ன வெட்கம்? நீ துரை ஆகிவிட்டாய் என்றால், அது ஆபீசில்?'

'என் தாயார் உங்களிடம் ஏதாவது பணம் கொடுத்து வைத்திருக்கிறாளா, என்ன?' — இந்தக் கேள்வி கிட்டியின் நாமுனைக்கு வந்தது; ஆனால் கேட்பதற்கு அவனுக்குத் துணிவு வரவில்லை. தவிர, இத் திருமணம் தேசாயின் வாயிலாகவே உருவாகிக் கொண்டிருக்கிறது. அவருடைய முகத்தில் அறைவதுபோல் இப்படிப் பேசுவது முறை அல்ல.

கிட்டி புறப்பட்டதும் தேசாய் தலையணை மேல் மேலும் கொஞ்சம் சாய்ந்தவாறு சொன்னார்: 'சொல்லப்போனால் நீ தானே பெண்ணைத் தேர்ந்து கொண்டாய், நீயே பணம் செலவு செய்துகொள் என்று நாம் சொல்ல முடியும். ஆனால், நம்முடைய பிள்ளை, இனியும் அப்படியே இருப்பான் என்கிற பாசம் இன்னும் பாக்கி இருக்கிறது. நீ அப்படியே நடந்து கொள்வாயா?' என்று இறுதிவாக்கியத்தை அழுத்தமாக முடித்தார்.

தேசாய்க்கு இவ்வளவு குரூரபுத்தி இருக்கும் என்று கிட்டிக்குத் தெரியாது. பணவிஷயம் என்றால் உலகம் முழுவதும் ஒரே மாதிரிதான். 'அட, எங்கள் வீட்டுப்பணத்தையே நான் பிறரிடம் கேட்க நேர்ந்ததே,' என்று கவலைப்பட்டான்.

செலவுப் பட்டியலை இருதரப்பாரும் கூடித் தயாரிக்கும் போது, பெண்ணைக் காட்டும் சடங்கும் தேசாயின் வீட்டில் நிறை வேறியது. அந்தத் தெருவிலிருந்த நான்கு குடும்பக் காரர்களும் வந்தார்கள். பெண்ணைப் பார்க்க மாட்டேன் என்று அழும்பு செய்து கங்கவ்வா அறைக்கு வெளியிலேயே உட்கார்ந்திருந்தாள். ஆனால், ரத்னா வந்து நமஸ்காரம் செய்தபோது கள்ளப் பார்வையால் பார்த்துவிட்டு முகத்தைத் திருப்பிக் கொண்டாள். அந்த நிமிடமே கௌரியைப் போன்று அழகான ரத்னாவின் எழில் உருவம் அவள் உள்ளத்தில் பதிந்துவிட்டது. 'பார்க்க அழகாக இருக்கிறாள், நல்லவளாகவும் தெரிகிறாள், நல்லபடியாகவே இருக்கிறாள்,' என்று அவளுக்கு ஆறுதல் உண்டாயிற்று.

தேசாய் விதித்த நிபந்தனைகளை எல்லாம் ராகப்பா புன்னகை செய்தவாறு ஏற்றுக்கொண்டே போனான். தேசாய் தத்து எடுத்துக்கொள்ளும் பேச்சை எடுத்ததும் அவன் குலதெய்வமான வெங்கடேசப் பெருமாள் பெயரால் வாக்குறுதி அளித்தான். தத்துப்பிள்ளை ஆன பிறகு தனிக்குடித்தனம் வைக்காமல், தன் தாயாரோடேயே இருப்பதாய்க் கிட்டியும் நாலுபேருக்கு முன்னால் வாக்கு அளித்தான். தெருக்காரர்களுக்கு முன்னால் குடும்பத்தின் ரகசிய விஷயங்களை மிக விரிவாகப் பேசியதாலும், அவன் மேல் நம்பிக்கை இல்லாமல் வாக்குறுதி கேட்டதாலும் கிட்டிக்கு அவமானவுணர்வு ஏற்பட்டது. இந்த வேலைகள் அநாவசியம் அல்ல, ஒருவாறு முடிந்ததே என்று திருப்தியும் அடைந்தான்.

நாளாக ஆக, பணக்கவலை மிகுந்தது. சஞ்சல சுபாவமும், உறுதியற்ற குணமும் உள்ளவனும், இன்னும் குழந்தைப் பிராயத் தைக் கடக்காதவனும், கோழையுமான இந்தத் துரைக்கு இத்தனை பெரிய தொகை கொடுக்க எந்தப் பார்ட்டியும் முன்வரவில்லை. ஆகையால் ஏதாவது சாக்கு சொல்லித் தட்டிக் கழித்தார்கள். தவிர, அவன் சினமுற்றால் டபிள் ரொட்டியும் வெண்ணெயும் கிருஷ்ணப்பா தோசையும் வாங்கிக் கொடுத்துச் சமாதானம் செய்து விடலாம் என்று அந்தப் பிரமுகர்களுக்கு நம்பிக்கை உண்டாகி விட்டது. இது அவர்கள் அநுபவத்தால் அறிந்த உண்மை. இவ்வாறு, ஆபீசில் கிடைக்கும் மாமூலுக்கு மேல் அதிகப்படி யாகக் கிட்டிக்கு ஒரு காசும் கிடைக்கவில்லை.

திருமணத்துக்கு இரண்டொரு வாரங்களே இருந்தன. ஒருநாள் கிட்டி ஆபீஸ் மேஜை மேல் முழங்கைகளை ஊன்றி, உள்ளங்கைகளில் முகத்தை வைத்துக்கொண்டு உட்கார்ந் திருந்தான். அவனை ஜார்ஜ் தேநீர் அருந்தக் கூட்டிச் சென்றான். ஒருநாளும் நாலு மணிக்கு முன்னால் சாய் பருகாத ஜார்ஜ்

இந்நேரத்தில் தானாகவே கூப்பிடுகிறானே என்று கிட்டிக்கு வியப்பாக இருந்தது. கான்டீனுக்குப் போகும் வழியில் கிட்டியின் கழுத்தில் கைபோட்டு ஜார்ஜ் கேட்டான், கிட்டி ஏன் இவ்வாறு கவலையாக இருக்கிறான் என்று.

கிட்டியின் கண்களிலிருந்து கண்ணீர் பெருகிப் பலநாள் ஆகிறது. அவன் துயரமாக இருந்தான், பொறுத்துக் கொண்டு இருந்தான், உதை வாங்கிக் கொண்டு இருந்தான், கால்களைப் பிடித்துக் கொண்டு இருந்தான் — ஆனால், இவ்வளவு ஆண்டுகளாக ஒருபோதும் அவன் கண்களில் கண்ணீர் வரவில்லை. ஓர் ஆங்கிலக் கவிஞனின் கூற்று: 'அழுவதற்கும் ஆண்டவன் அருள் வேண்டும்.'

அன்றே ஜார்ஜ் அவனை அழைத்துச் சென்று ஐநூறு ரூபாய் கடன் வாங்கிக் கொடுத்தான்.

# 19. மங்கலப் பேச்சுகளில் ஓர் அபஸ்வரம்

கலியாண வீட்டில் மஹபூப்ஜானுக்குப் பல அசௌகரியங்கள் இருந்தன. அவளை அன்போடு பார்த்தவன் வீட்டுத் தலைவன் மட்டுமே. சிலசமயம் கனமான புடவையைச் சுமந்து நொண்டியபடி இங்குமங்கும் நடமாடும் சம்பக்கா வந்து அவளை விசாரிப்பாள். வலுவற்ற அவள் உடல் கலியாணத்தின் இந்த அலைச்சலில் மேலும் சோர்ந்துவிட்டது. ஆகையால் அவள் சின்னச் சின்ன விஷயங்களுக்கும் அவள் எரிந்து விழுந்தாள். மஹபூபுக்கு முன்னால் அவள் யாரையாவது திட்டினால், தன்னைத்தான் அவள் பேசுகிறாள் என்று மஹபூபுக்குப் பட்டது. மணவீட்டில் தனக்கும் நிம்மதி இராது, தன்னால் யாருக்கும் ஆதாயமுமில்லை என்று எண்ணிய அவள் ஊர்வலத்தின் போது வருவதாக எஜமானனிடம் கூறினாள், ஆனால் ராகப்பாவா ஏற்பான்? அவன் பிடிவாதம் செய்து, சினந்து, பாக்கு வெற்றிலைகூட வாங்கிக் கொள்ளாமல் ஊடல் செய்து, கலியாணத்திற்கு நாலு நாளைக்கு முன்னாலேயே வருவதாக அவளிடம் இசைவு பெற்றுவிட்டான். தன்னால் திருமண வீட்டில் எல்லாருக்கும் இடையூறாக இருக்கும் என்று அவள் ஊகம் செய்துவிட்டாள். ஆனால், நாளுக்கு நாள் அவள் எதிர்பார்த்ததை விட மிகுதியாகக் கஷ்டம் அதிகரித்து வந்தது. ஒவ்வொரு நாளும் தீட்டு, மடி என்ற பேச்சு, சாப்பிட்ட இலையை அவளே எடுத்து

எறியவேண்டி இருந்தது. சாப்பிட்ட இடத்தைச் சாணத்தால் மெழுக வேண்டும். ஏதாவது ஒரு சாமான் வேண்டுமானால் மணிக்கணக்கில் வீட்டுப் பெண்களின் முகத்தைப் பார்த்தபடி காத்திருக்க வேண்டும். இதனால் அவளுக்கு அலுப்பு தட்டிவிட்டது. தீட்டு பாராட்டுகிற பெண்கள் அவளை வெறுப்போடு பார்த்தார்கள். மண்டபத்தில் குறும்புக்கார இளம்பெண்கள் அவளிடம் பாக்கு வெற்றிலை வாங்கி, எஜமானன் பெயரைச் சொல்லிச் சொல்லி அவளைக் கிண்டல் செய்தார்கள். மஹபூப் ஜானுக்கு நாளுக்கு இருபதுமுறை சாய் பருகிப் பழக்கம். ஆனால், இந்தக் கூட்டத்தின் சந்தடியில் இரண்டு மூன்று தடவை கிடைப்பதே அரிதாக இருந்தது. எஜமானர் வரும்போது அவளுக்கு ஒரு டீ நிச்சயம் கிடைத்துவிடும். அவளாகவே டீ கேட்க முடியாது. ஆகையால் டீ ஆசையைப் புகையிலையால் அவள் நிறைவேற்றிக் கொள்ள வேண்டியதாயிற்று. இதையன்றி, காலை முதல் மாலைவரை அவளுக்கு ஒரு வேலையும் இல்லை.

விவாகத்தில் அவளுக்கு ஏற்ற பணி ஒரே நாளில் முடிந்துவிட்டது... விவாக மண்டபத்தைத் தயாரிக்கும் பணிதான் அது. அவளே நேரில் தன் மேற்பார்வையில் அந்த மண்டபத்தை அலங்கரிக்கச் செய்தாள். ஆறு ஏழு ஆண்டுகளுக்கு முன்னால் அவள் சேஷசாயி நாடகக் கம்பெனியில் பணியாற்றினாள். இப்போது அக் கம்பெனி தார்வாருக்கு வந்திருந்தது. இதைக் கேள்விப்பட்டதும் அவள் ஒரு தாங்காவில் அங்கே போனாள். கம்பெனி முதலாளி பரமேசுவர பட்டரைச் சந்தித்துக் கம்பெனியின் சில படுதாக்களை வற்புறுத்திக் கேட்டு வாங்கிக்கொண்டு வந்தாள், அவற்றை வைத்து மண்டபத்தை நாடக அரங்கு போன்று அலங்கரித்தாள். அவர்களிடமிருந்தே வண்ணக் காகித லேஸ் வாங்கி வந்தாள். சின்னாரெட்டி என்ற கலைஞரையும் அழைத்துவரச் செய்தாள். அவருக்குச் சுவையான சிற்றுண்டியும் தேநீரும் கொடுத்து வண்ணத் துணியில் 'நல்வரவு' என்று எழுதச் செய்தாள். விவாக மண்டப வாயிலில் இரண்டு தூண்களுக்கு இடையில் கட்டச் செய்தாள். அவளே எதிரில் நின்றுகொண்டு காகிதப் பூச்செண்டுகள், பந்துகள், லேஸ்கள், தோரணங்களை அலங்காரமாய்க் கட்டச் செய்தாள். நாடக மேடை அலங்காரம் அவளுக்கு நீண்டகாலமாய்ப் பழக்கம். எனினும் விவாக மண்டபத்தை அலங்காரம் செய்ய அவளுக்குத் தெரிய வில்லை. ஆகையால் விவாக மண்டபத்தையே நாடக அரங்கம் போல் அலங்கரித்து விட்டாள். எஜமானனும் அவளுடைய விருப்பத்தை எதிர்க்கவில்லை. திருமணத்துக்கு ஒருநாள் முன் பிருந்தே தெருவோடு போகிறவர்களும் உள்ளே வந்து மண்டபத்

தைப் பார்த்துவிட்டுப் போனார்கள். மண்டபத்தின் அழகைப் பார்த்து எல்லாரும் மஹபூபைப் பாராட்டினார்கள். இரண்டொரு நாளில் கலியாணத்துக்கு வருகிற விருந்தாளிகளின் கூட்டம் மிகுந்துவிடவே, தீண்டாமைப் பிரச்னைகள் எழுந்து அவளுக்குத் தொல்லை ஆகிவிட்டது. மண்டபம் மறந்துவிட்டது, அவளுடைய பெருமையும் குன்றிப் போயிற்று.

இதற்குப் பிறகு, மஹபூபுக்கு ஏற்ற பணி, மணமகளுக்கு அலங்காரம் செய்தல், ரத்னாவுக்கு அவள் நாடகமுறையில் வேளைக்கு ஏற்றபடி வெவ்வேறுவித சேலைகளை அணிவித்தாள், தலையைப் பின்னிவிட்டாள், விதவிதமாய்க் குங்குமப் பொட்டு இட்டாள், இவ்வாறாகத் தன் கலைத்திறனைக் காட்டினாள். இந்த விஷயங்கள் வீட்டுக் கிழவிகளுக்குப் பிடித்தமில்லை, ஆனால் மஹபூப் இல்லாமல் ரத்னாவின் அலங்காரம் நடப்பதே இல்லை. யார் என்ன திட்டினாலும் சரி, ரத்னா மஹபூபக்காவிடம் சென்று தான் ஜரிகைப் புடவை கட்டிக் கொள்வாள். ஆகையால் முற்றத்து இடதுபக்க அறையை விடுத்து எங்கேயும் போகக்கூடாது என்று மஹபூபுக்கு ரத்னா கண்டிப்பான கட்டளை இட்டிருந்தாள். அவள் வந்ததும் மஹபூபுக்குத் தானும் திருமணத்தில் கொஞ்சம் வேலை செய்வதாகத் தோன்றும். ரத்னா அப்பால் சென்றதும் அவளுக்கு எங்கும் வெறும் வெறுமையாகத் தோன்றும். பாக்கு வெற்றிலையும் அவளுக்குச் சுவையாக இல்லை. அவள் தன் வெள்ளிப் பெட்டியைத் திறந்து, வெற்றிலையின் நரம்புகளைக் கிள்ளிச் சுண்ணாம்பு தடவி, புகையிலையை எடுக்கும்போது அவளைச் சுற்றிலும் பத்துப் பதினைந்து குழந்தைகள் அவளைச் சூழ்ந்து கொள்வார்கள். அவர்களின் தாய்மார்கள் அவர்களை அடித்து இழுத்துச் செல்வார்கள்.

மற்றொரு சிக்கலும் இருந்தது. தூங்குகின்ற இடம் பற்றின பிரச்னை அது. முதல்நாள் எல்லாருமே களைத்துப் போய்க் கிடைத்த இடத்தில் கிடந்துவிட்டார்கள். தூங்குமிடம் பற்றிக் கேட்க மஹபூபுக்கு வெட்கம். கடைசியில், புழைக்கடையின் ஒரு மூலையில் வேலைக்காரி ஒருத்தி தூங்குவதைக் கண்டாள். அங்கேயே தன் விரிப்பைப் போட்டு, பச்சைநிற சால்வையைப் போர்த்துக்கொண்டு படுத்து விட்டாள். அதிகாலையில் கண் விழித்த ராகப்பா அந்தச் சால்வையைப் பார்த்து அவளைத் தெரிந்து கொண்டான். அவன் ஆத்திரமுற்று மனைவியிடம் சீறினான். ஒரு விதத்தில் பார்த்தால், புழைக்கடை முற்றம் சௌகரியமாகவே இருந்தது. ஆனால், ராகப்பாவின் கடுமையான கட்டளை காரணமாக, அவள் எல்லாப் பெண்களும் உறங்கும் ஹாலிலேயே ஒரு மூலையில் தூங்கவேண்டியதாயிற்று. அங்கே எல்லாருடைய கிண்டலையும் அவமரியாதையையும் பொறுக்க நேர்ந்தது.

மற்றொரு பெரிய பணிக்காக அவள் இதை எல்லாம் பொறுத்துக் கொண்டாள். மணமானபின் மணப்பெண் புகுந்தகத்தில் பிரவேசம் செய்யும் சடங்கும் ராகப்பாவின் வீட்டிலேயே நடப்பதாக இருந்தது. கிட்டியின் வாடகை வீடு மிகச் சிறியதாக இருந்ததால், தேசாய் தம் வீட்டிலேயே கிருகப் பிரவேசம் வைத்துக் கொள்ளும்படி கூறினார். ஆனால், ராகப்பா பிடிவாதமாக வற்புறுத்தியதால் அவனுடைய வீட்டிலேயே ஏற்பாடு செய்வதென்று முடிவாயிற்று. அன்று மணமக்களின் கட்டில் மலர்களால் தானே அலங்காரம் செய்யவேண்டும் என்று மஹபூபுக்கு அந்தரங்கமான விருப்பம். அந்த நாளை அவள் ஆவலோடு எதிர்பார்த்தாள். சோபன அறைக்கு மணம் கூட்ட அவளே 'ஸ்பெஷல்' ஊதுவத்தி தயாரித்துப் பெட்டியில் பத்திரமாக வைத்திருந்தாள். அந்த நாளுக்காகவே அவள் கஷ்டங்களை எல்லாம் பேசாமல் பொறுத்து வந்தாள்.

ஊர்வலம் புறப்பட இன்னும் ஒரு மணிநேரம் இருந்தது. அவள் ரத்னாவின் பின்னலில் பதினொரு வகைப் பூக்களால் பிறைவடிவ மாலை ஆக்கிச் சூட்டினாள். மற்ற அலங்காரங் களையும் செய்தாள், ரத்னாவைக் கொஞ்சம் நடக்கச் சொல்லிப் பார்த்தாள். பிறகு அடுத்த சடங்குகளைப் பூர்த்தி செய்வதற்காக அவளை அனுப்பி வைத்தாள். அவள் தன்னுடைய வெள்ளிச் சுண்ணாம்பு டப்பியை எடுத்தாள். சுற்றிலும் இருந்த சந்தடியில் அவளுடைய கவனம் இல்லை. வெளியே ஷெனாய்க்காரன் தோடிராகம் வாசித்துக் கொண்டிருந்தான். தார்வாரிலேயே மிகச் சிறந்த ஷெனாய்க்காரர்களை ராகப்பா பேசியிருந்தான், ராக ஆலாபனை மிக அழகாக ஆரம்பம் ஆகியிருந்தது. மஹபூப் வெளிச்சுவரைக் கடைக்கண்களால் பார்த்தபடி வெற்றிலைக்குச் சுண்ணாம்பு தடவியவாறு மெய்மறந்தவள்போல ஷெனாய் கேட்டுக்கொண்டு இருந்தாள். மெதுவான ஸ்வரத்தில் மென்மை யான ஆலாபனை மெதுமெதுவாக ஆற்றின் அலைகளைப் போல் பரவிக்கொண்டு இருந்தது... 'இதென்ன அபஸ்வரம், அட!' — மஹபூப் ஜான் வியப்புற்றவளாய் பாக்கு இல்லாமலே வெற்றிலையை வாயில் திணித்தாள்... மண்டபத்தில் பல குரல்கள் ஒலித்தன. ஷெனாய் வாசிப்பதை நிறுத்தும்படி யாரோ கோபமாய்ச் சொன்னார்கள். ஷெனாய் வாசிப்பதை நிறுத்தி திவிட்டதால் சந்தடி தெளிவாய்க் கேட்கத் தொடங்கிவிட்டது.

சோம்பலாக மஹபூப் ஜான் சுண்ணாம்பு டப்பியை டிரங்குப் பெட்டியில் வைத்து, கழுத்திலிருந்து தொங்கிய சாவியால் பூட்டிவிட்டு, புகையிலை போடாமலேயே பெட்டிமீது முழங்கையை ஊன்றி எழுந்தாள், தலைமீது பாதி முட்டாக்கை இழுத்து 'அல்லா' என்றவாறு, விக்கலுடன் வெளியே வந்தாள்.

எல்லாரும் கூட்டமாய் மண்டபத்தின் ஒருபுறம் நின்று கொண்டிருந்தார்கள். எல்லாருமே நின்றதால் மஹபூபுக்கும் ஒன்றும் தெரியவில்லை. அருகிலிருந்த பெண்களிடம் 'என்ன விஷயம்?' என்று கேட்டதற்கு அவர்களில் ஒருத்தி வாய்மீது விரல் வைத்து 'உஷ்ஷ்' என்றாள். மற்றவர்களுக்கு ஒன்றும் தெரிய வில்லை. இதற்குள் கூட்டத்தை விலக்கிக் கொண்டு சினத்தால் முகம் சிவந்த விதவை ஒருத்தி வெளியே வந்து மண்டப வாசல் பக்கம் நடந்தாள். மஹபூப் அவளைப் புரிந்துகொண்டாள். முதல் நாள் யாரோ அவளைக் கங்கவ்வா என்று கூப்பிட்டதை மஹபூப் கேட்டாள். இதனால் 'இவள் மணமகனின் தாய்' என்று அவளுக்குத் தெரிந்தது. இந்த நல்மனசுக்காரிதான் சம்பக்காவின் பெயரால் தர்ப்பணம் செய்தவள். இவளுக்குப் பின்னாலேயே ராகப்பா ஜனங்களை விலக்கிக் கொண்டு ஓடிவந்தான், கங்கவ்வாவைத் தடுத்துத் தலைப்பாகையை அவளுடைய கால்மீது வைத்தான். மணமகனும் ஓடிவந்து, 'அம்மா, போகாதே' என்று கெஞ்சத் தொடங்கினான். மஹபூபுக்கு என்ன விஷயம் என்று விளங்கவில்லை. பின்னாலிருந்து மற்றொரு ஜரிகைத் தலைப்பாகைக்காரன் வந்து அங்கேயே நின்று கொண்டான். கங்கவ்வா அந்த ஆளைப் பார்த்துக் கையைத் தூக்கித் தூக்கி உரக்க ஏதோ சொல்லலானாள். கூட்டத்தின் கூச்சல் காரணமாக அவளுடைய குரல் கேட்டதே தவிர என்ன சொல்கிறாள் என்று தெரியவில்லை. சிறிது நேரத்தில் அவளுடைய கோபமும் கூக்குரலும் தணிந்தன. கங்கவ்வா வீட்டுக்கு வெளியே இருந்த மேடைமீது உட்கார்ந்தாள். அவளைச் சுற்றிக் கிசுகிசுத்தபடி ஸ்திரீகள் நின்று கொண்டார்கள். அவள் யாரையும் கவனியாமல் மௌனமாக உட்கார்ந்து விட்டாள். ராகப்பாவும் அந்த ஜரிகைத் தலைப்பாகைக்காரரை உடன் அழைத்துக்கொண்டு முற்றத்துக்கு அருகில் இருந்த அறைக்குள் போய்விட்டான்.

அந்தக் கும்பலிலிருந்து பெரும் பல்லுக்காரப் பட்டர் ஒருவன் இப்பக்கமாக வந்தான். மஹபூப் அவனை அடையாளம் கண்டு கொண்டாள். நேற்றுத்தான் அவளிடம் புகையிலை வாங்கிக் கொண்டு வேடிக்கையாகப் பேசிவிட்டுப் போனான். அவனைத் தடுத்து நிறுத்தி, 'என்ன நடந்தது?' என்று கேட்டாள்.

'என்ன நடக்க வேண்டும்?... எல்லாம் உன் எஜமானனின் சாமர்த்தியமானவேலைதான்.'

'ஏன், என்ன நடந்தது? விவரம் சொல்லுங்கள். புகையிலை தருகிறேன்.'

'என்ன நடக்க வேண்டும்? எல்லாருக்கும் தெரிந்த சங்கதி. ஆயிரம் ரூபாய் வரதட்சிணை தருவதாக உன் அகத்துக்காரன் எழுதிக் கொடுத்திருக்கிறான். ஊர்வலம் புறப்பட ஒரு மணிநேரம்

இருக்கிறது, இந்நேரத்தில் வந்து 'இப்போது ஐநூறு வாங்கிக் கொள்ளுங்கள், அடுத்த மாதம் ஐநூறு தருகிறேன்,' என்கிறான். அடுத்த மாசம் எங்கே இருந்து கொடுத்து விடுவான்? இது ராகோபா பராரியின் வேலை?'

அந்தக் கிழப் பிராமணனுக்குப் புகையிலை கொடுத்தபடி வேறு பல விஷயங்களையும் அவள் தெரிந்து கொண்டாள். கலியாணத்தில் செலவு மிகுதியாகி விட்டதால் வரதட்சிணைக் கென்று வைத்திருந்த பணத்திலிருந்து செலவு செய்து விட்டான் வீட்டு எஜமானன். எதிர்பார்த்த வேறு பணமும் வரவில்லை. இப்போது பெட்டியில் ஏழு எட்டுநூறு ரூபாய்கள்தான் எஞ்சி இருக்கின்றன. வேறு செலவுகளுக்காகப் பணத்தைக் கொஞ்சம் வைத்துக்கொண்டு, சம்பந்தி அம்மாளிடமும் தேசாயிடமும் ஐநூறு வாங்கிக் கொள்ளும்படி வற்புறுத்திக் கொண்டு இருக்கிறான். 'தத்து எடுத்துக் கொள்வதாய் வாக்கு கொடுத்து விட்டேன், ஆகையால் சொத்து பூராவும் உங்களுடையது தானே? ஒரு மாதம் பொறுத்தால் என்ன?' என்று அவன் சொல்கிறான். ஆனால், முன்பே மனஸ்தாபம் இருந்ததாலும், இவ்வளவு நேரம் மௌனமாக இருந்துவிட்டு, ஊர்வலம் கிளம்ப ஒரு மணிநேரம் இருக்கும்போது இதைச் சொன்னதால் அவர்களுக்கு இன்னும் சந்தேகமாகிவிட்டது. ஆகையால் கங்கவ்வா ஊசி அளவும் விட்டுக் கொடுக்கத் தயாராக இல்லை. 'ஆயிரத்தை எண்ணி இப்போதே கீழே வைத்தால்தான் ஊர்வலம் புறப்படும், இல்லா விட்டால் இல்லை' என்று அவள் பிடிவாதமாக இருக்கிறாள். அசடு கிட்டி தாயாரை சமாதானம் செய்ய வரவே, அவளுக்குக் கோபம் அதிகமாகிவிட்டது. 'என்னை விட்டுவிட்டுக் கலியாணம் செய்துகொள்' என்று மண்டபத்திலிருந்து தனியாகப் புறப்படத் தயாராக இருக்கிறாள். தேசாய் இவ்விஷயமாகப் பேசுவதாய்க் கூறியதன் பேரில் வெளியே போய் உட்கார்ந்திருக்கிறாள். வீட்டு எஜமானனும் தேசாயும் அறையில் பேசிக் கொண்டு இருக்கிறார்கள். என்ன அவிவேகம்... ராகோபா பராரி... கலியாணத்தில் தடை... அவமானம், அவமானம், முதலியன, முதலியன.

தன் மூலதனம் முழுவதையும் மருமகனின் பலசரக்குக் கடையில் போட்டுவிட்டு மஹாபூப் மணமகனுக்குப் பரிசு வழங்க நூறுரூபாயும் தன் செலவுக்கு இருபத்தைந்து ரூபாயும் எடுத்துக் கொண்டு வந்திருந்தாள்.

அறையில் எதிரில் தேசாயை உட்கார வைத்துக்கொண்டு ராகப்பா சொல்லிக் கொண்டு இருந்தான்:

'சுவாமி, கங்கவ்வா எனக்கு அந்நியமா என்ன? கிட்டண்ணா அந்நியனா என்ன? அக்காவை ஏமாற்ற வேண்டும் என்ற எண்ணம் எனக்குக் கொஞ்சமும் இல்லை. இது கலியாண விஷயம் என்று உங்களுக்குத் தெரியும். நம் ஒற்றைப்பல் ஹனுமந்தபட்டன் நேற்று சொல்லிக் கொண்டு இருந்தான் - ராகோபா, உன் வீட்டுக் கலியாணத் தடபுடலைப் பார்க்க ஜமகண்டி மகாராஜாவின் கலியாணம் ஞாபகம் வந்துவிட்டது... என்ன செய்வேன்? செலவு என்னை மீறி நடக்கிறது. நேற்று ராத்திரி பெட்டியில் கையிட்டுப் பணத்தை எண்ணுகிறேன். எண்ணூற்றுப் பத்து ரூபாய் மட்டும் இருக்கிறது. அட, திருடு போய்விட்டதோ என்று கணக்குப் பார்த்தேன், ஆனால் கணக்கு சரியாகத்தான் இருந்தது. ஒரு காசும் வித்தியாசம் வரவில்லை. எனக்குப் பல பெரிய மனிதர்களோடு பழக்கம். நல்ல காரியம் ஆயிற்றே என்று தாராளமாகச் செலவு செய்துவிட்டேன், ஆனால் செலவு மிகவும் அதிகமாகிவிட்டது. நேற்று இரவே உங்களிடம் வர விரும்பினேன். பத்து மணி ஆகிவிட்டது; ஆகையால் உங்கள் தூக்கத்தை ஏன் கெடுக்க வேண்டும் என்று பேசாமல் இருந்துவிட்டேன். காலையில் வந்ததும் உங்களிடம் உண்மை நிலவரம் சொல்லிவிட்டேன். எதையும் மறக்கவில்லை.'

'நீங்கள் சொல்லுவது எல்லாம் சரி, ராகப்பா. உங்களுக்கும் கங்கவ்வாவுக்கும் மனஸ்தாபம் இருக்கிறபோது கலியாணத்தை இவ்வளவு ஆடம்பரமாகச் செய்யாமல் சொன்ன சொல்லைக் காப்பாற்றுவதில் நீங்கள் கவனமாக இருந்திருக்க வேண்டும். இந்த விவகாரத்தில் கங்கவ்வாவிடம் ஒரு குறையும் நான் காணவில்லை.'

'சுவாமி, நிப்பண்ணாவைப் பிந்தகோளத்துக்கு அனுப்பி இருக்கிறேன்... ஹனுமந்த கோளத்திற்கு அருகில் இருக்கும் ராயப்பா ஸெட்டியிடம் ராமனை விரட்டி இருக்கிறேன். இந்த ஒன்பது மணி முகூர்த்தம் தவறினாலும் பதினொன்றே காலுக்கு மற்றொரு நல்ல முகூர்த்தம் இருக்கிறது. இந்த இரண்டுமணி நேரத்தில் பணம் சேர்க்க நான் உயிரைக் கொடுத்து முயற்சி செய்வேன். ஆனால் அப்போதும் என்னால் முடியவில்லை என்றால் பதினொன்றே கால்மணி முகூர்த்தத்தை நிறுத்த வேண்டாம். மற்றும் ஒரு தடவை என்னை நம்புங்கள். உங்கள் காலில் விழுகிறேன். இன்னும் கொடுத்தல், வாங்கல் விஷயம் இருக்கவே இருக்கிறது. பெண் புக்ககப் பிரவேசச் சடங்கு பாக்கி இருக்கிறது. பெண் வீட்டாரின் மூக்கணைக் கயிறு பிள்ளை வீட்டாரின் கையில் எப்போதும் இருக்கவே இருக்கிறது. இச்சமயம் பெரிய பெரிய மனிதர்களுக்கு முன்னால் என் மானத்தைக் காப்பாற்றுங்கள். இந்த மானக்கேட்டிலிருந்து

எப்படியாவது என்னைக் கரை ஏற்றுங்கள். சுபகாரியங்களில் உங்களைப் போன்ற பெரியவர்கள்தான் முன் நின்று எங்கள் கௌரவத்தைக் காப்பாற்ற வேண்டும்.'

ராகப்பாவைப் பற்றித் தேசாயின் மனத்தில் மிகுந்த அவநம்பிக்கை உண்டாகிவிட்டது. 'நான் கொடுத்து விடுகிறேன்,' என்று கூறிவிட ஒருமுறை அவருடைய மனம் எண்ணியது. ஆனால் அவருக்குச் சந்தேகமாக இருந்தது. கிட்டிக்குத் தருவது வேறு விஷயம், ராகப்பாவுக்குத் தருவது வேறு விஷயம். கையில் பணம் வைத்துக்கொண்டு ராகப்பா நாடகம் ஆடிக் கொண்டிருக்கக்கூடும்.

இப்பக்கம், ராகப்பா சொன்னதில் பொய் பாதி; கொஞ்சம் மெய்யும் இருந்தது. அவனிடம் எண்ணூற்றுப் பத்து ரூபாய் மட்டும் எஞ்சி இருந்தது என்பது மெய்; இரண்டொருவர் சொல்லை நம்பி அவன் கையை அகல விரித்து விட்டான் என்பதும் மெய். செலவு அதிகம் ஆகிவிட்டது என்று பதினைந்து நாளுக்கு முன்னரே அவனுக்குத் தெரியும். ஹநுமந்த கௌடாவின் விஷயமாக எப்போதோ அவன் மத்தியஸ்தம் செய்திருந்தான். அவனிடமிருந்து கொஞ்சம் பணம் கிடைக்க வேண்டி இருந்தது, அவன் மேல் நம்பிக்கையும் இருந்தது, ஆனால் இப்போது அது கைக்கு வருவதாக இல்லை என்று தோன்றியது. கலியாணத்திற்கு இரண்டு மூன்று நாட்களே இருந்தன; தேசாயிடம் கங்கவ்வா பணம் கொடுத்து வைத்திருக்கும் செய்தி கிட்டியின் வாயிலாக அவனுக்குத் தெரிந்துவிட்டது. இதைக் கேட்டபின், சரியான தருணத்தில் பணம் இல்லை என்று சொல்லிவிடுவது என்கிற யோசனை அவனுக்கு வந்தது. முடியுமானால் உடனே ஐநூறு குறைக்கச் சொல்வேன். கிட்டி நல்ல பிள்ளைதான்; ஆனால் ஆயிரத்துக்குத் தகுதியான பிள்ளை அல்ல என்பதை எல்லாரும் ஒப்புக்கொள்ள வேண்டி இருக்கும். கங்கவ்வா அழும்பு செய்தால், பிறகு தருகிறேன் என்று சொல்லி அவளையே கேவலப்படுத்திக் காட்டுவேன். எல்லாப் பக்கங்களிலிருந்தும் அவளை ஏசட்டும். முடியுமானால் தேசாயை நடுவில் இழுத்து, உடனடியாகப் பத்துப் பதினைந்து நாளில் திருப்பித் தருவதாகச் சொல்லி அவரிடமே ஐநூறு ரூபாய் கடன் வாங்கிக் கொடுத்து விடுவேன். தேசாய் கிட்டியின் ஆயிரம் ரூபாயைத் திருப்பித்தர மறுத்தால் அப்போது அவருடைய நரம்பைப் பற்றி இழுக்க இந்த ஐநூறு பயன்படும்.

திருமண ஆரவாரத்தில் மூழ்கியிருக்கிற ஜனங்களுக்கு உள்ளே நடக்கும் பேச்சுகளைப்பற்றி ஐயம் ஏற்பட வழி இல்லை. ஆனால் கங்கவ்வாவின் மனத்தில் காரணம் இல்லாமலே சந்தேகம்

வந்துவிட்டது. அவள் ஊர்வலத்துக்கு ஒருநாள் முன்பே தேசாயின் வீட்டிற்குப் போய் இந்தப் பேச்சைத் தொடங்கினாள்.

'கோபண்ணா, வரதட்சிணையில் அவன் ஏதாவது குறைத்தால் நான் பேசாமல் இருக்கப் போவதில்லை. இப்போதே சொல்லிவிட்டேன்.'

'கங்கவ்வா, கலியாண ஏற்பாடுகள் நடக்கிற விதத்தைப் பார்த்தால் அவன் ஆயிரம் ரூபாய் கொடுப்பதில் மாறுதல் ஒன்றும் செய்யமாட்டான் என்று படுகிறது.'

'அவனுடைய பெருமை எனக்குத் தெரியாதா கோபண்ணா? எல்லாம் இருக்கிறது, செய்ய வேண்டுமே, வேண்டுமானால் வைப்பாட்டிக்காகவே பணத்தைத் தூக்கி எறிவான். ஆனால் நம்மிடம் நாணயமாக நடந்து கொள்வான் என்று எனக்கு நம்பிக்கை இல்லை. என்னை அவமானப்படுத்த வேண்டும் என்று அவன் எப்போதும் குறிபார்த்துக் கொண்டு இருக்கிறான். கிட்டியை சுவீகாரம் எடுத்துக் கொள்கிறேன் என்றதும் கங்கவ்வா குளிர்ந்துவிட்டாள் என்று அவன் டம்பமாகப் பேசிக்கொண்டு அலைகிறான். நான் அவமானத்தைப் பொறுக்கத் தயாராக இல்லை. எந்த விஷயத்திலாவது குறைவு இருந்தால், 'கிட்டி, நீ உண்மையாக என் பிள்ளையானால் மண்டபத்தை விட்டு என்னோடு வா,' என்று நறுவிசாகச் சொல்லிவிடுவேன். இதற்கும் அவன் வரவில்லை என்றால் நான் எழுந்து வந்துவிடுவேன். நான் இல்லாமலே கலியாணம் நடக்கட்டும்.'

கங்கவ்வா கூறியது போலவே எல்லாம் நடந்தன. இந்த உரையாடல் காரணமாகவே தேசாய் தாமே கடன் தரும் விஷயத்தை எழுப்பவில்லை. அவர் ராகப்பாவுக்கு வெட்டொன்று துண்டிரண்டாகப் பதில் கூறினார்.

'ராகப்பா, இந்த விவகாரத்தில் என் பொறுப்பு தீர்ந்துவிட்டது.'

விவகாரம் கையிலிருந்து நழுவுவதை ராகப்பா கண்டான். ஆகையால் அவன் ஜாடைமாடையாகக் கடன் விஷயத்தை ஆரம்பித்தான். 'சுவாமி, நீங்கள் விஷயம் தெரிந்தவராக இருந்தும் இப்படி பேசக்கூடாது. இருவரும் சேர்ந்து ஒரு வழி கண்டுபிடிப்போம். இரண்டு இடத்துக்கு பணத்துக்காக ஆட்களை அனுப்பியிருக்கிறேன். ஆனால், இந்த சுபகாரியத்தில் விக்கினம் ஏற்பட வேண்டாம் என்று பிரார்த்திக்கிறேன். நான் எப்போதும் உங்கள் கைப்பிடியிலேயே இருக்கிறவன். உங்களைத்தவிர நமக்கு வேறு யார் இருக்கிறார்கள்? ஏதாவது வழி சொல்லுங்கள்.' இந்தத் தெளிவான ஜாடைப் பேச்சால் தேசாய் மனத்தைக் கல்லாக்கிக் கொண்டார். கேட்டும் கேட்காதவர் போல் மௌனம் சாதித்தபடி

உட்கார்ந்துவிட்டார். ராகப்பா வேறுவழி இல்லாததால், தமக்கையை வற்புறுத்தி முற்றத்தில் உட்காரச் செய்தான். அவள் பதினொன்றரை மணி முகூர்த்தம் வரை காத்திருக்க இணங்கினாள்.

திருமணத்துக்கு அழைக்கப்பட்டவர்கள் நேரத்தில் வரத் தொடங்கிவிட்டார்கள். கிட்டிக்கு அம்மாவின் பிடிவாதம் அவமானமாகப் பட்டது. சினம்கொண்டு ஜார்ஜோடு ஒரு டீக்கடையில் போய் உட்கார்ந்தான். வந்திருந்தவர்களை உட்கார வைத்து அவர்களுக்காகத் தேநீர் ஏற்பாடு செய்யச் சமையலறைக்கு ஓடினான் ராகப்பா. அங்கே அழுதுகொண்டிருந்த சம்பக்கா அவன் மேல் பொழிந்து தள்ளினாள். வெளியே வந்தபோது விருந்தாளிகள் பேசிக்கொண்டு இருப்பதைக் கேட்டு ராகப்பாவின் மனம் சுண்டிவிட்டது. இதற்குள் ஜாயப்பா ஸெட்டியிடம் போன ஆள் ராமன் சைக்கிளை ஓட்டிக்கொண்டு வந்தான். உரத்த குரலில் ஸெட்டி கூறியதைத் திரும்பக் கூறினான்: 'அவன் தனியாக ஐநூறு ரூபாய் கடன் கேட்க எப்படி ஆளை அனுப்பினான்? முந்தாநாள் தானே முந்நூறு வாங்கிக்கொண்டு போனான்? குழந்தைகள் விளையாட்டா என்ன?' இதற்குப் பிறகு, 'ஸெட்டி உங்களையே வரச் சொன்னார்,' என்றான்.

தன்னுடைய வலையில் தானே சிக்கிக் கொண்டதாய் ராகப்பாவுக்குத் தோன்றியது. ஹநுமந்த கௌடாவிடம் அனுப்பப்பட்ட திப்பண்ணாவுக்கு மோட்டார் கிடைத்தால் திரும்பிவர ஒரு மணி நேரமாகும். ஜாயப்பா ஸெட்டி அவனைத் திட்டுவதற்குத்தான் கூப்பிட்டிருப்பான் என்பது உண்மை. தேசாய் வலையில் சிக்கவில்லை. இந்தச் சந்தடியிலிருந்து பத்து நிமிஷம் வெளியே போனால் ஏதாவது யோசனை மூளையில் தோன்றக்கூடும் என்று நினைத்து ஜாயப்பா ஸெட்டியிடம் போவதென முடிவு செய்து அவன் கோட்டும் தலைப்பாகையும் அணியலானான்.

ராகப்பா மண்டபவாசலை விடுத்து வெளியே வருவதற்கும், எதிரில் ஒரு தாங்கா வந்து நிற்பதற்கும் சரியாக இருந்தது. அதில் மஹபூப் ஜான் இருந்தாள். தன் கனமான உடலை லகுவாக இயக்கி 'அல்லா' என்றவாறு கீழே இறங்கினாள். அவள் நிமிர்ந்தபோது ராகப்பாவே எதிரில் வந்தான்.

'எங்கே போகிறீர்கள்?' என்று அவள் ஆவலோடு கேட்டாள்.

அவளிடம் தன் அவமானத்தைக் கூற ராகப்பாவுக்கு மனம் வரவில்லை. அவள் தாங்காவிலிருந்து இறங்குவதைக் கண்டதும் தன் அவமானக் கேவலத்தின்போது அவள் அங்கே இல்லை என்னும் ஆறுதல் உண்டாயிற்று. பேச்சை மாற்றுவதற்காக, 'நீ எங்கே போயிருந்தாய்?' என்று மட்டும் கேட்டான்.

மஹபூப், 'கொஞ்சம் உள்ளே வாருங்கள்,' என்றாள். அவனுடைய பதிலை எதிர்பாராமலே உள்ளே சென்றாள். வேலையாகப் போகிறேன் என்று ராகப்பா சொல்வதற்கு முன் அவள் உள்ளே போய்விட்டதால் அவனும் உள்ளே போக வேண்டியதாயிற்று.

மஹபூப் நேராகத் தன் அறைக்குப் போய்த் தன் சிறிய பெட்டியைத் திறந்தாள், அதிலிருந்து பத்து பத்து ரூபாய் நோட்டுகளை வெளியில் எடுத்தாள். தன் பிளவுஸிலிருந்து ஒரு காகிதப் பாக்கெட்டை வெளியில் எடுத்து அதைப் பிரித்து ஒருமுறை பார்த்துக் கொண்டாள். பத்து ரூபாய்க் கட்டையும் அதனோடு சேர்த்து வைத்துவிட்டு ராகப்பாவை எதிர்பார்க்கத் தொடங்கினாள். அவன் உள்ளே வந்ததும், 'கொஞ்சம் தங்கையையும் கூப்பிடுங்கள்,' என்றாள்.

ராகப்பா சிறிது பொறுமை இழந்து, பக்கத்தில் நின்ற குழந்தைகளிடம், 'டேய், அவளைக் கூட்டிக்கொண்டு வாருங்கள்,' என்று கட்டளை இட்டுவிட்டுச் சந்தேகத்தோடு கேட்டான்: 'மஹபூப் ஏன்... என்ன செய்துவிட்டு வந்தாய்?'

மஹபூப் அவனுக்குப் பதில் உரைக்கவில்லை. சம்பக்காவை எதிர்பார்க்கலானாள். 'கொஞ்ச நாளுக்கு முன் சம்பக்கா ஜாடையாகச் சொன்னதை நிறைவேற்றிக் கடனிலிருந்து விடுதலை பெறும் நாள் வந்துவிட்டது' என்று அவள் எண்ணினாள்.

சம்பக்கா உள்ளே வந்ததும் அவளுடைய கைகளில் பாக்கெட்டைத் திணித்து, 'என் கலியாணப் பரிசை வைத்துக் கொள்ளுங்கள்,' என்றாள். சம்பக்கா பாக்கெட்டைப் பிரித்துப் பார்த்துத் தொப்பென்று தரையில் உட்கார்ந்து விட்டாள். அதில் நான்கு நூறு ரூபாய் நோட்டுகளும் பத்து பத்து ரூபாய் நோட்டுகளும் இருந்தன.

மஹபூப், ராகப்பாவின் பக்கம் திரும்பி மிகப் பத்திரமாக வைத்திருந்த ஊதுவத்திப் பாக்கெட்டை அவனிடம் கொடுத்தாள். அவள் கண்களில் கண்ணீர் நிறைந்திருந்தது.

'மஹபூப், நிசமாகச் சொல்லு, என்ன செய்துவிட்டு வந்தாய்?' என்றான் ராகப்பா தழுதழுக்கும் குரலில்.

கெட்டிக்காரி மஹபூப் கூறினாள்: 'ஏன், நான் கலியாணப் பரிசு கொடுத்திருக்கிறேன், பரிசை மறுப்பீர்களா?'

ஒன்பது அடிக்கப் பத்து நிமிடமே இருந்தது. அதிகமாய் விசாரிக்க ராகப்பாவுக்கு நேரமில்லை. அவனுடைய மனம் ஊமை வேதனையால் நிரம்பி இருந்தது. பேராசை படைத்த சம்பக்காவின் வாயிலிருந்து நன்றிச் சொற்கள் வெளிவந்து கொண்டிருந்தன.

ஆனால் அந்த ஆழ்ந்த சூழ்நிலைக்குச் சொற்களைவிட மௌனமே அழகூட்டுவதாக இருந்தது.

'ஒன்பது மணிக்கு ஊர்வலம்!' என்று உரத்து அறிவித்தான் ராகப்பா, பந்தல் முழுவதும் அது ஒலித்தது. தேசாயிடம் ஆயிரம் ரூபாய்கள் எண்ணி வைக்கப்பட்டன. டீக்கடையிலிருந்த கிட்டி அழைக்கப்பட்டான். தேநீருக்காக வைக்கப்பட்ட வெந்நீர் சமையலறையிலேயே இருந்துவிட்டது. மணமேடைக்கு அருகிலிருந்து மந்திர உச்சாடணம் கேட்டது. கூட்டம் மண மேடையைச் சூழ்ந்து கொண்டது. அந்தச் சந்தடியில், ஊதுவத்தியை ஏன், எதற்காகக் கொடுத்தாள் என்று மஹபூபைக் கேட்க ராகப்பாவுக்குச் சந்தர்ப்பமே கிட்டவில்லை.

அந்தச் சந்தடியில் மஹபூப் மணமேடையிலிருந்து எட்டியே இருந்தாள். மணமக்கள் மீது ஆசீர்வாத அட்சதை தூவவேண்டும் என்று அவளுக்கு மிகவும் ஆசை. அட்சதை நேராக அவ்விருவர் மீதும் விழுந்தால்தான் அவளுடைய மனப்பூர்வமான நல் வாழ்த்துக்கள் பலிக்கும் என்று அவளுக்கு உறுதியான நம்பிக்கை. ஆனால், இந்தக் கூட்டத்தில் புகுந்து முன்னால் செல்ல, அவளுடைய சுக சரீரத்தால் இயலவில்லை என்பதுடன் தீண்டாமைப் பிரச்னைபற்றிய பயமுமிருந்தது.

இறுதியில், கூட்டம் குறைந்தபின் அருகில் சென்று அட்சதை போடலாம் என்று முடிவு செய்தாள். இதற்குள் பிராமணர்கள் மந்திர முழக்கத்துக்குப்பின் இறுதி மந்திரமான 'ஸுமுகூர்த்தம் ஸமாதான'வை மொழிந்தார்கள். இதைக் கேட்டு எல்லாரும் மணமக்கள் மீது அட்சதை தூவினார்கள். எல்லாரும் தூவிவிட்டதாலும் கடைசி மந்திரம் சொல்லி ஆகிவிட்டதாலும் கூடவே வாத்தியங்கள் முழங்கியதாலும் அவள் தன் முடிவை மறந்து கையிலிருந்த அட்சதையைக் கைப்பலம் கொண்ட மட்டும் விசையாக மணமக்கள் மீது எறிந்தாள். அந்த அட்சதை பக்கத்தில் நின்ற குறும்புக்காரச் சிறுவர்கள் மேல் விழுந்தது. முன்பே வருத்தமாக இருந்த மஹபூப் மேலும் வருத்தமுற்றாள். தான் கொடுத்த ஊதுவத்தியை சாந்திமுகூர்த்தக் கட்டிலுக்கு அருகில் ஏற்றி வைக்குமாறு எஜமானனிடம் சொல்லிவிட்டுப் போய்விட வேண்டும் என்று அவள் விரும்பினாள். ஆனால், எஜமானனோ கூட்டத்தில் சிக்கிக் கொண்டு இருந்தான். தாங்காக்காரன் வெகுநேரமாய்க் காத்திருந்தான். அட்சதை தூவியானதும் அவன் தலையை உள்ளேவிட்டு அவளைத் தேடத் தொடங்கி விட்டான். தன்னுடைய பெட்டி படுக்கையைத் தூக்கிக் கொள்ளும்படி அவனிடம் சொல்லிவிட்டு அவள் புறப்பட்டு விட்டாள். கலியாணச் சந்தடியில் யாருக்கும் அது தெரியாது.

*அவள் போன அரைமணி நேரத்துக்குப் பிறகு, சிற்றுண்டி அருந்துவதற்காக அவளை வீடு முழுவதும் தேடினாள் சம்பக்கா.*

*அன்று மாலை திருமண வீட்டின் ஷெனாய் இசைக்கும் மேலே முழங்கும் பாண்ட் கோஷ்டி ஒன்று அவ்வீட்டு வழியாகச் சென்றது. வெளியே மேடை மேல் ஒற்றைப் பல் ஹநுமந்த பட்டன் உட்கார்ந்து அரட்டை அடித்துக் கொண்டு இருந்தான். அவனுடைய கையில் ஒரு நோட்டீஸ் இருந்தது. அதைப் படித்ததுமே அவன் பரபரவென்று உள்ளே சென்று அதை ராகப்பாவின் கையில் செருகினான். ராகப்பா சற்று அலட்சியமாக அதன் முதல் பகுதியைப் படித்தான். ஆனால், கடைசிப்பகுதியைப் படிக்கும்போது அவனுக்கு வேர்த்துவிட்டது.*

'ஸ்ரீ குலதேவதை துணை'

ஸ்ரீ சேஷசாயி நாடகக் கம்பெனி ஹுப்பளிள முகாம் தார்வார் கம்பெனியார் உளவி பசவேசுவரர் திருவிழாவின் போது கீழ்க்கண்ட நாடகங்களை உங்களுக்கு முன்னிலையில் காணிக்கை இடுகிறார்கள்.

*இன்று முதல் மூன்று நாள் வரை: வெங்கடேச பாரிஜாதம்*
*பிறகு : குலேபகாவலி*
*: ருக்மிணி ஹரணம்*
*: காந்திக் குல்லாய் ஸிங்கிள் டீ*
*: 'உடன் இருப்பேன்'.*

(முக்கிய குறிப்பு: (1) இதில் மாற்றம் இருக்கலாம். (2) அடுத்த நிகழ்ச்சிநிரல் பிறகு அறிவிக்கப்படும். (3) ஒன்ஸ் மோர் பாடுவது பாடகரின் விருப்பத்தைப் பொறுத்தது.)

இந்தத் திருவிழாவுக்கென்று பிரத்யேகமாக ஹுப்பளிள வின் புகழ்பெற்ற பாடகி மஹபூப் ஜான் மிரஜ்கர் இந்த எல்லா நாடகங்களிலும் முக்கியமான கதாநாயகியாக நடிப்பார். ஆறு ஆண்டுகளுக்குப் பிறகு தார்வார் ரசிகப் பெருமக்களைத் தம் இனிய கானத்தால். மகிழ்விப்பார். கலையன்பர்கள் இத் தருணத்தைத் தவறவிட வேண்டாம்.

*இடம் : பசவேசுவரர் கோயிலுக்குப் பின்னால் நம் சொந்தக் கூடாரத் தியேட்டர்.*
*பரமேசுவர பட்டர், சேஷசாயி நாடகக் கம்பெனி உரிமையாளர்.*

*ராகப்பா வியர்வையில் நனைந்துவிட்டான். அவன் இதை எதிர்பார்க்கவில்லை.*

மஹபூபுக்கு வயதாகிக் கொண்டு இருந்தது. உடம்பும் பருத்து வந்தது. விக்கல் வியாதி வேறு. நாடகத்தின் உழைப்பைத் தாங்கும் வலிமை அவளுக்கு இல்லை. நாடகத்தில் நடிக்க வேண்டாம் என்று அவளை ராகப்பா தடுத்ததற்குக் காரணம் ஒன்று மட்டும் அல்ல. ஆறு ஆண்டுகட்கு முன்னால் அவள் இதே கம்பெனியில் பணியாற்றிக் கொண்டு இருந்தாள். அப்போது ஹுப்ளிள விலங்குகளின் சந்தையின் போது தொடர்ச்சியாகப் பத்து பதினொரு நாட்கள் தூக்கமும் ஓய்வும் இல்லாமல் நாடகங்களில் ஆடியும் பாடியும் ஒருநாள் நாடகம் முடிந்தபிறகு வாயில் எடுத்து மயங்கி விழுந்துவிட்டாள். அதனாலேயே டைபாய்டு வந்து ஒரு மாதம் படுக்கையில் கிடந்தாள். நாடக உரிமையாளர் பரமேசுவர பட்டனிடம் ஒரு பழக்கம். அவன் தாராளமாய்ப் பழகும் குணம் உடையவன், நன்றாக உணவும் அளிப்பான். அவனிடம் நல்ல கலைஞர்கள் அவனிடம் அகப்பட்டு விட்டால் அவர்களை நன்றாக உண்ணச் செய்வதோடு வலுக்கட்டாயமாய்க் குடிக்கவும் வைப்பான். நாடகம் முடிந்ததும் எல்லாரையும் கூட்டி வைத்துக் கொண்டு அரைமணி நேரம் அவர்களோடு வெட்டிப் பேச்சு பேசியபடி அவர்களைக் குடிக்க வைப்பான். இது அவன் பழக்கத்தால் செய்யும் வேலை. நல்ல கலைஞர்கள் தன்னிடம் நீடித்து இருக்க வேண்டும் என்பதற்காகவோ அல்லது தூக்கம் கெட்டாலும் மறுநாள் உற்சாகமாய் நாடகங்களில் கலந்து கொள்ள வேண்டும் என்பதற்காகவோ, அல்லது வேறு என்ன காரணத்திற் காகவோ அவன் இவ்விஷயத்தில் மிகவும் வற்புறுத்துவான். மஹபூபுக்கும் கொஞ்சம் குடிக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படும். சிலசமயம் வற்புறுத்தலின் பேரில் அதிகமாய்க் குடித்து விடுவாள், அக் காரணத்தாலேயே அவளுக்கு மூச்சு தடுமாறி விக்கல் வரத் தொடங்கும். இந்த விவரங்கள் தெரிந்துதான் ராகப்பா தன் ரசிகத் தன்மையை ஒருபுறம் ஒதுக்கிவிட்டு மஹபூப் ஜானை நாடகத்தில் நடிக்க வேண்டாம் என்று தடுத்துவிட்டான். இதற்குப் பின் ஆறு வருடங்கள் கழிந்துவிட்டன. மஹபூப் முன்னைவிடப் பருத்து விட்டாள், முன்னைப் போல் கஷ்டப்பட்டு உழைக்கவும் முடியாது. விக்கலும் இருந்து கொண்டிருந்தது. இந்நிலையில், அவனுக்காக ஐநூறு ரூபாய் தயாரிப்பதற்காக அவள் தன் உயிரைப் பணயம் வைக்க வேண்டுமா?

ராகப்பா வேலைகளை எல்லாம் அப்படி அப்படியே போட்டுவிட்டு உடனே தாங்காவில் கிராண்ட் ஹோட்டலுக்குச் சென்று கம்பெனி முதலாளி பரமேசுவர பட்டனைச் சந்தித்தான். பட்டன் மஹபூபை எதிரில் உட்கார வைத்துக்கொண்டு பத்மாவதி பார்ட்டைக் கேட்டுக் கொண்டு இருந்தான். பல முறை அவள் ஆடிய நாடகம்தான் இது, ஆனால் ஆறு நீண்ட ஆண்டுகள் கழிந்து விட்டதால் பார்ட்டில் கொஞ்சம் 'முன்பின்' ஆகிக்கொண்டு

இருந்தது. ஒரே சொல் கொண்டு ஆரம்பமாகும் இரு உரையாடல்கள் ஒன்றின் இடத்தில் மற்றொன்றை மாற்றிச் சொன்னாள். அடுக்குச்சொல் வாக்கியங்களில் உச்சரிப்பில் பிசகு செய்தாள். இதை பிராம்ப்டரின் உதவி கொண்டு சரிசெய்து விடலாம். பார்ட்டைப் பாடம் பண்ணுவதில் மஹபூப் முட்டாள் அல்ல, ஆனால் அவளுக்குப் பொருள் புரிவதில்லை. ஆகையால் ஒரு சொல்லின் இடத்தில் மற்றொரு சொல்லைப் பயன்படுத்துவாள். இதை அறிந்திருந்த பரமேசுவர பட்டன், ஓர் அநுபவஸ்தர் என்கிற முறைமையில், ஆங்காங்கு சுட்டிக்காட்டியபடி அவளுடைய மென்குரலைக் கேட்டுக் கொண்டு இருந்தான். அநுபவமுள்ள கலைஞன் ஒத்திப் பேச வேண்டிய தேவை இல்லை. இந்த மூன்று நான்கு மணி நேரத்தில் அவள் எவ்வளவோ திருத்திக் கொண்டு விட்டாள். கோணல் வகிடு எடுத்து, பூப்போட்ட சேலை கட்டிக்கொண்டு இருந்த மஹபூபின் முகத்தில் நாடக அரங்கத்துப் பத்மாவதியின் பாவங்கள் நன்கு புலப்படத் தொடங்கி இருந்தன.

ராகப்பா நேராக அறையில் நுழைந்து விட்டான். பரமேசுவர பட்டன் ராகப்பாவிடம் மிகவும் மரியாதை உள்ளவன், அச்சமும் உடையவன். அவன் மஹபூபிடம் காகிதங்களில் கையெழுத்து வாங்கிக் கொண்டு விட்டான் என்பது சரி, ஆனால் ராகப்பா அவளிடம் 'வீட்டுக்குப் போ' என்று சொல்லி விட்டானானால் கதை அங்கேயே முடிந்துவிடும். தேவையானால் கோர்ட்டுக் கச்சேரிக்குப் போகவும் அவனுக்குத் தெரியும், தடையும் செய்ய முடியும். ஆகையால் பட்டன் அவனை வரவேற்று உட்காரும்படி கேட்டுக் கொண்டான். ராகப்பா நின்றவாறே கர்ச்சித்தான்: 'அடே பட்டா, நான் உன்னோடு பேச வரவில்லை. இப்போது மஹபூப் உன் கையில் சிக்கி இருக்கிறாள். சரி. இவளை நீ குடிக்க வைத்தால் இரண்டே நாளில் உன்னை இந்த ஊரிலிருந்து விரட்டி விடுவேன். உன் கூடாரத்தையும் பிடுங்கி எறிந்து விடுவேன், ஜாக்கிரதை!'

சென்ற தடவை மஹபூப் நோய்வாய்ப்பட்டதும் ராகப்பா யார் யாரையோ பிடித்து பட்டனின் லைசன்ஸை ரத்து செய்ய வைத்துவிட்டான். இப்போது மஹபூப் ஜானை இழுத்துக் கொண்டு போய் நாடகத்தை நாசமாக்காமல் இத்தோடு விட்டானே, இதுவே நல்ல அதிர்ஷ்டம் என்று பட்டன் மகிழ்ச்சி அடைந்தான். அவனே எழுந்து, 'அடடா ராகப்பண்ணா! என்ன இப்படி எல்லாம் பேசுகிறீர்கள்! மஹபூப் ஜான் உங்கள் உடைமை. உங்கள் உத்தரவுப்படி நடந்து கொள்கிறேன். அவள் கேட்டாலும் கொடுக்கக்கூடாதா? உங்கள் இஷ்டப்படி உத்தரவிடுங்கள்,' என்றான்.

'அவள் கேட்கிற அளவு மட்டும் கொடு. ஆனால், நீ எதிரில் உட்கார்ந்து வற்புறுத்திக் குடிக்க வைத்ததாய் தெரிந்தால் எப்போதும் ஞாபகம் இருக்கும்படிச் செய்துவிடுவேன்.'

மஹபூபுடன் பேசுவதற்கும், கண்கள் கலப்பதற்கும்கூட ராகப்பாவுக்குத் தைரியம் இல்லை. பட்டனை எச்சரித்துவிட்டு அவன் திரும்பி வந்துவிட்டான்.

மஹபூப் இருந்ததால் திருமண வீடு நிறைந்தாற்போல் இருந்தது.

அவள் போனபின் கலியாண வீட்டின் அழகே குன்றிவிட்டது. ரசிகன் பட்டனுக்கும் விஷமக்காரர்களான வாலிபர்களுக்கும் கேலி செய்ய யாரும் இல்லை. மகளிருக்குத் தங்கள் ஆத்திரத்தைக் கொட்டுவதற்கான பொருள் கண்களுக்கு முன்னால் இருந்து மறைந்துவிட்டது. தீண்டாமை பயிலும் கைம்பெண்களும், 'அவள் இருந்தபோது பந்தலே நிறைந்தாற்போல் இருந்தது, இப்போது வெறிச்சோடிக் கிடக்கிறது, பாவம்!' என்று கூறலானார்கள்.

மணமக்களுக்கோ ஆடை கட்டும்போதெல்லாம் அவளுடைய ஞாபகம் வந்தது. மஹபூப் தாராளமாய்ப் பழகும் குணம் வாய்ந்தவள் என்று பெண்கள் சொன்னால் சம்பக்காவுக்குத் தான் அவமதிக்கப்படுவதாய்ப் பட்டது. ராகப்பாவின் உற்சாகமோ மிக இறங்கிவிட்டது. என்னவோ எண்ணி என்னவோ நடந்து விட்டதே என்று அவன் துயரமாக இருந்தான். மஹபூப் அவனுடைய அன்புக்கும் கர்வத்திற்கும் நிலைக்களன். அவள் போய்விட்டதால் அவனுடைய ஜீவசக்தியே வலுவற்றது. இரவில் நல்லபடி தூக்கம் வரவில்லை. கலியாணப் பந்தலின் களையே மறைந்துவிட்டது.

# 20. கிட்டியின் இல்லறம்

மருமகள் வீட்டுக்கு வந்துவிட்டாள். வீடு நிறைந்துவிட்டது.

கங்கவ்வா அவளை அன்போடு வரவேற்றாள். முடிந்தவரை தன் ஊக்கமின்மையை அவள் காட்டிக் கொள்ளவில்லை. தேசாய் கூறியவாறு நடந்துகொள்ள அவள் முயன்றாள். நாட்டுப் பெண்களின் தவறுகள் ஏதாவது தென்பட்டால், 'ராகப்பா மீது எனக்குள்ள ஆத்திரத்தால் அவனுடைய பெண்ணிடம் எனக்குக் குறை காணப்படுகிறதோ?' என்று அவள் ஆரம்பத்தில் தன் மனத்தையே சோதித்துக் கொண்டாள். ஆனால், நாளாக ஆகச் சூழ்நிலையின் மாறுதல் காரணமாகக் கங்கவ்வா தன்

கவலைகளைக் கைவிட வேண்டியதாயிற்று. தொடக்கத்தில் கங்கவ்வாவுக்குச் சற்று வருத்தமாக இருந்தது... கிட்டி மூன்று நான்கு ஆண்டுகளாய் அவளைப் பற்றிக் கவலைப்படவே இல்லை. வீட்டுக்கு வந்தால் அதிகம் பேசுவதில்லை. மனைவி வந்ததும் அவனுடைய நாக்கு அவிழ்த்து விடப்பட்டு விட்டது. அவளோடு தாராளமாகப் பேசினான், ஆனால் தாயாரைப் புறக்கணித்தான். கங்கவ்வாவுக்கு இது புதிய அநுபவம். இரண்டு மாதங்களிலேயே மகன் மீது மருமகளின் செல்வாக்கு பதியத் தொடங்கியது. மருமகள் காரணமாகவே கிட்டி வீட்டில் வாய்திறந்து பேசத் தொடங்கினானோ என்று அவளுக்குச் சந்தேகம். இந்தப் புதிய நிலைமைக்கு ஏற்ப வளைந்து கொடுக்க அவளுக்குக் கஷ்டமாக இருந்தது. ஏதோ பறிகொடுத்தவள் போல், வாழ்க்கை அவளுக்குச் சூன்னியமாகப்பட்டது. அவளுடைய மனத்தில் பல தீய எண்ணங்கள் வந்தன அல்லது பயங்கரமான சூன்னியம் எதிர்ப்பட்டது. மருமகளோடு சமரசமாய்ப் போக அவள் மற்றொரு யோசனை செய்தாள். அவளைக் கூட்டிக் கொண்டு போய்ப் பழைய சிநேகிதிகளுக்குக் காட்டிவிட்டு வந்தாள். இரண்டு மூன்று நாள். பிறகு அதிலும் இயற்கையான குறைபாடு தெரியத் தொடங்கியது. அவளுடைய தந்தையைப் பற்றிக் கேட்டால் ரத்னா அதைத் தவறாகப் பொருள்படுத்திக் கொண்டு தன் கோபத்தை வெளிப்படையாகக் காட்டிக் கொண்டாள். இரண்டொரு தடவை வாசலைத் தாண்டியதுமே 'நாட்டுப்பெண் கோபக்காரி,' 'நாட்டுப் பெண் அழுத்தக்காரி,' என்று அவர்கள் குறை கூறுவதைக் கேட்டபின் ரத்னா இன்னும் வேகம் கொண்டாள். இப்படியே, பல சிறிய, பெரிய அநுபவங்கள் கங்கவ்வாவின் மனச் சூன்னியத்தை வலுப்படுத்தின. சிறிய வீடு, பல அசௌகரியங்கள், ஒரே அறையும், சமையல் அறையும் உள்ள வீடு. ஈரம் காக்கும் சமையல் அறையில் மூன்று பலகைகளைப் போட்டுத் தனக்குப் படுக்கை ஆக்கிக் கொள்வாள். ஆனால் நாட்கள் கழியக்கழிய, கிட்டியின் அறைக்குப் பக்கத்தில் படுப்பதையே அவளால் பொறுக்க முடியவில்லை.

வீட்டில் எதற்கெடுத்தாலும் சச்சரவு உண்டாக ஆரம்பித்தது. தன் தாயிடமிருந்து கங்கவ்வாவைப்பற்றி வர்ணம் மிக்க வருணனையைக் கேட்டிருந்த ரத்னா மாமியாரைப் பற்றிப் பல பயங்கரமான கற்பனைகள் செய்து வைத்திருந்தாள். அவளுடைய மனத்தில் கங்கவ்வாவின் விகாரமான சித்திரம் உருவாகியிருந்தது. அவளிடம் ரத்னாவுக்கு அச்சம் பாதி, பகைமை பாதி. ஐநூறு ரூபாய்க்காகத் திருமணத்திற்கு முட்டுக்கட்டை போட்ட இந்த அவலட்சணமான கிழவியைப்பற்றி இந்த நவயுவதியின்

உள்ளத்தில் வேறு என்ன கற்பனை எழமுடியும்? ஆரம்பத்திலேயே, அவளுடைய நலனுக்காகக் கங்கவ்வா கூறிய அறிவுரைகளுக்கு விபரீதமாக அர்த்தம் செய்துகொண்டு மனத்தில் புழுங்கிக் கொண்டு இருந்தாள். ஆனால், எதிரில் வாய் திறப்பதில்லை. ஏனெனில் புக்ககம் போகப் புறப்பட்டபோது சம்பக்கா கண்ணீர் நிறைந்த கண்களோடு, 'மாமியார் என்ன சொன்னாலும் நீ பதில் சொல்லக்கூடாது,' என்று உபதேசித் திருந்தாள். தாயின் இந்த அறிவுரையை மறக்க ஒரு மாதம், ஒன்றரை மாதம் வேண்டியிருந்தது. முதன்முதலில் கங்கவ்வா நல்லுரைகள் சொன்னாலும், 'இதில் ஏதாவது கிண்டல் இருக்குமோ' என்று ரத்னா யோசிப்பாள். அதில் ஏதோ மறைபொருள் இருக்கும் என்று எண்ணி மனத்துக்குள் பொருமிக் கொண்டு இருப்பாள். அதில் கிண்டல் இருப்பதாகத் தெரியா விட்டாலும், 'மிக ஆழமான பேச்சு, எனக்குத் தெரியவில்லை,' என்று நினைத்துக் கொள்வாள். அதனால் அச்சம் மிகுந்து போகும், கங்கவ்வாவோடு எப்போது பேசினாலும், தன்னைக் காத்துக் கொள்ள வேண்டும் என்கிற விழிப்புடனேயே பேசுவாள்.

'ரத்னா, புதுசேலை கட்டிக்கொண்டு ஆசாரமான சமையலறையில் பாத்திரம் தேய்க்க வேண்டாம்.'

'கிழிந்த சேலை கட்டிக்கொண்டு வெளியே பாத்திரம் தேய்க்க வேண்டுமா, சரி, நாளையிலிருந்து அப்படியே செய்கிறேன்.'

'ரத்னா, உப்பை இப்படி வைக்காதே.'

'நீங்கள் வைக்கச் சொல்கிற இடத்தில் வைக்கிறேன், நடுவில் தள்ளி வைக்கிறேன்.'

'ரத்னா, அடுக்களையில் தலை வாராதே, சாப்பாட்டில் தலைமயிர் வரும்.'

'வெளியே அவர் உட்கார்ந்திருக்கிறார். அங்கேயே வாரிக் கொள்ளச் சொன்னால், செய்கிறேன்.'

இத்தகைய உரையாடலின் மகிழ்ச்சி தராத கிண்டலும் சந்தேகமும் மெள்ள மெள்ள ஆரம்பமானதால் மாமியாருக்கும் மருமகளுக்கும் இடையில் வேற்றுமை வளரலாயிற்று. தொடக்கத்திலேயே கங்கவ்வா, 'என்னை அம்மா என்று கூப்பிடலாம்,' எனக் கூறியிருந்தாள். ஆனால், ரத்னா ஒருமுறையாவது அம்மா என்றோ, அத்தை என்றோ கூப்பிடவில்லை. கூப்பிடவேண்டிய தேவை ஏற்படும்போது அவள் பக்கத்தில் போய் நின்றுகொண்டு, 'வெண்டைக்காய் நறுக்கட்டுமா, வேறு என்ன செய்ய?' 'அடுப்பு ஏற்றட்டுமா?' என்றெல்லாம் செவிடர்களிடம் பேசுவது போல் உரக்கக் கத்திக் கேட்பாள்.

இவ்வாறு, மறைமுகமாகப் பெருகியோடிக் கொண்டிருந்த நச்சு ஆறு, யாரும் விரும்பாமலே யாரும் தடுக்க முடியாத வகையில் இப்படி வெளிப்பட்டது.

ஒருநாள் கங்கவ்வா சகஜமான முறையில் சொன்னாள்: 'கிட்டண்ணா, பசுமையான பீர்க்கங்காய் பஜாரில் வந்திருக்கிறது. கொண்டுவா, கறி செய்யலாம்.'

இதைக் கேட்டதும் கணவனும் மனைவியும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்தார்கள்.

முன்னாள் இரவு ரத்னா இதையே கிட்டியின் காதுகளில் சொல்லி இருந்தாள். 'அப்பா வீட்டில் பீர்க்கங்காய்க் கறி செய்தார்கள், நாமும் செய்யலாம். மிகவும் சுவையாக இருக்கும்,' என்றெல்லாம் அவள் விரிவாய்ச் சொல்லி இருந்தாள்.

கங்கவ்வாவுக்குக் கிட்டி பதில் ஒன்றும் கூறவிலை. சமையலறையில் ஜன்னல் இல்லாவிட்டாலும், புழுக்கமாக இருந்தும்கூட அறைக்கதவுக்குத் தூரமாக அடுப்புக்கு அருகில் படுத்து வந்தாள். ஆனால், இவ்வளவு தூரம் இருந்தும் அவர்களுடைய கிசுகிசுப்பு அன்று இரவு அவளுடைய காதில் விழுந்துவிட்டது: 'மெதுவாய்ப் பேசுங்கள். கதவு இடுக்கிலிருந்து கேட்டுக்கொண்டு இருக்கிறார்கள்.'

இரவு முழுவதும் அவளுக்குத் தூக்கம் வரவில்லை. மறுநாள், அடுக்களையில் புழுக்கம் அதிகமாக இருப்பதாய்க் கூறிப் பலமாகத் தகராறு செய்துகொண்டு தன் படுக்கை மூட்டையைக் காசியின் தாயார் வீட்டில் வைத்துவிட்டு வந்தாள். 'இவள் இரவில் மட்டும் நான் வெளியேறும்படி செய்துவிட்டாள். இனி பகல் நேரத்திற்காக என்ன கலகம் செய்கிறாளோ,' என்று வருந்திய கங்கவ்வா தேசாய் சொன்னதை எண்ணி மவுனமாக இருக்கத் தொடங்கினாள். மனத்தைத் தேற்றிக் கொண்டாள். நகங்களிலிருந்து சதையைப் பிரிக்க முடியுமா?

ரத்னாவிடம் தாயாரின் சாத்விகக் குணங்களோடு தந்தையின் சில குணாதிசயங்களும் இருந்தன. சாதாரணமாக அவளுடைய நடத்தையில் அவை வெளிப்படாவிட்டாலும், தேவை எழும்போது அந்த ரகசிய ஆயுதங்களை அவள் வெளியில் எடுப்பாள். அன்று இரவு அவள் தந்திரமாகவே பேசினாள். அவள் வைத்த குறி கணவனுக்குப் புரியாவிட்டாலும் சரியான இடத்தில்தான் பாய்ந்தது. ஆகையால் அவள் உள்ளுக்குள் மகிழ்ச்சி அடைந்தாள். மாமியாரை எதிர்க்கத்தக்க துஷ்டபுத்தியையும் ஆண்டவன் தனக்கு அளித்திருக்கிறானே என்று அவள் கர்வமும் கொண்டாள். கங்கவ்வாவும் பல வீட்டு மருமகள்களைப் பார்த்திருந்தாள், ஆகையால் அவளுக்குப் புதியதாக ஒன்றும் தெரியவில்லை. மற்ற நாட்டுப்

பெண்களைப்போலவே நம் மருமகளும் இருக்கிறாளே என்றுதான் அவளுக்கு வருத்தமாக இருந்தது. இந்தச் சிக்கலை அவளே சீராக்க வேண்டும். வாயைத் திறப்பதால் பயனில்லை.

காசியின் தாயார் வீட்டில் தூங்கத் தொடங்கியது புதிய கஷ்டங்கள் தோன்றலாயின. கங்கவ்வா காலையில் ஐந்து மணிக்கு எழுந்திருப்பது வழக்கம். கூப்பிட்டுக் கூப்பிட்டுக் கதவு திறப்பதற்குள் அரைமணி நேரம் ஆகிவிடும். இவ்வளவு காலையில் எழுப்புவதற்காகக் கிட்டி முணுமுணுப்பான். இத்தோடு அவள் கதவைத் தட்டும்போது, அதே நேரத்தில் விழித்துக்கொள்ளும் அக்கம்பக்கத்துப் பெண்மணிகள் அவளைப் பார்ப்பார்கள், சிரிப்பார்கள். சில சமயம் பரிகாசம் செய்வார்கள். இதைக் கங்கவ்வாவினால் பொறுக்க முடியவில்லை. கள்ளம்கபடம் இல்லாத லட்சுமுபாய் ஸதாபாய், 'கங்கவ்வா, மருமகள் வந்தால் மாமியாரின் கதி இதுதான், தெரிந்து கொள்,' என்பாள். இதனாலும் கங்கவ்வாவின் கர்வம் குலையவில்லை. உண்மையில் மருமகள் அவளுடைய கையில் இருந்தால் அவளும் அவர்களோடு சேர்ந்து மகிழ்ந்திருப்பாள், உண்மை யாருக்குத் தெரியும் என்று. கங்கவ்வாவுக்கு இப்போது ஆத்திரம்தான் பொத்துக் கொண்டு வந்தது.

கடைசியில் அவள் கிட்டியிடம் சொல்லிவிட்டுச் சமையலறைக் கதவைப் பூட்டிச் சாவியைத் தன்னோடு எடுத்துக்கொண்டு படுக்கப் போகலானாள். சில நாட்கள் அமைதியாகக் கழிந்தன. ஆனால் ஒருநாள் சாவி எங்கோ விழுந்துவிட்டது. தேடித் தேடிக் கங்கவ்வா களைத்துப் போனாள். வேலை தடைப்பட்டது. சாவி கிடைக்கவே இல்லை. கடைசியில் அந்த ரயில்வே பூட்டை உடைக்க நாலுமணி நேரம் ஆயிற்று. ஏற்கனவே மனம் நொந்திருந்த கங்கவ்வாவை, ரத்னாவுக்கு முன்னால் கிட்டி நாலுவார்த்தை காரமாகப் பேசினான். அதனால் அவள் கண்களில் கண்ணீர் நிரம்பியது.

மருமகளோடு உள்ளுக்குள் நடக்கும் வார்த்தைகள் தடித்து சச்சரவாக உருவெடுத்தன. ரத்னா பக்கம் உண்மை இருந்தால் பதில் சொல்வாள், இல்லை எனில் அழுதுகொண்டே மூலையில் ஒதுங்கிவிடுவாள். அண்மையில், ரத்னா மத்தியானம் தந்தை வீட்டுக்குப் போய் மாலையில் வீட்டுக்குத் திரும்பினாள். ஒருநாள் இதைக் கிட்டியிடம் சொல்ல வேண்டும் என்று எண்ணினாள் கங்கவ்வா. ஆனால் அன்று மாலையே கிட்டி மனைவியோடு தாங்காவில் சிரித்தபடி வந்து சேர்ந்தான். இவ்வாறு அவளுக்குப் பிறந்த வீட்டுக்குப் போகும் உரிமை கிடைத்துவிட்டது. கணவனின் துணையோடு ரத்னா இப்படியே ஒவ்வொரு விஷயத்திலும் ஜயிக்கத் தொடங்கினாள். வீட்டில் பண்டிகை,

திருநாள் என்று வந்தால் அக்கம்பக்கத்தில் இருப்பவர்களை அழைக்கவும் மறுக்கலானாள். ஒருநாள் கிட்டி வற்புறுத்தி அவளை மஞ்சள் குங்குமம் கொடுக்க வேணுபாயைக் கூப்பிடும்படி தேசாய் வீட்டுக்கு அனுப்பினான். அங்கே வேணுபாய் ஒளிவுமறைவு இல்லாமல், 'ஏண்டி அம்மா, நீ மாமியாரோடு எதிர்த்துப் பேசுகிறாய். இது சரி இல்லை. அவள் ரொம்பவும் கஷ்டப்பட்டவள், அவளை நீ தாயாரைப் போல வைத்துக் கொள்ளவேண்டும்' என்று கூறிவிட்டாள். இதைக் கேட்டு, சம்பாதிக்கும் கணவனின் மனைவியான ரத்னாவுக்கு அவமானமாக இருந்தது. அடுத்த தடவை வேணுபாய் ரத்னாவுக்கு தாம்பூலமும் பூவும் தர அழைத்தபோது கிட்டி சொல்லியும் அவள் அங்கே போகவில்லை. அண்டை அயலில் உள்ள யாரோடும் அவள் பேசுவதில்லை. கிட்டி ஏதாவது சொன்னால் தன் தாயார் கூறியதையே திரும்பக் கூறினாள். 'இந்த இடம் நல்லதாக இல்லை. சம்பாதிக்கிறவனாக இருந்தும் இப்பேர்ப்பட்ட வீட்டில் இருப்பதால் எல்லாரும் சிரிக்கிறார்கள். நம்மை அல்பமாக மதிக்கிறார்கள். வேறு எங்காவது வீடு பாருங்கள்.'

ஒருநாள் ரத்னா வரம்பு மீறிப் போய்விட்டாள். 'புருஷனும் பெண்டாட்டியும் பிரியமாக இருப்பதைப் பார்த்து எல்லாருக்கும் வயிற்றெரிச்சலாக இருக்கிறது' என்று சொல்லி விரல்களைச் சொடுக்கினாள். அன்று இரவு கங்கவ்வா பலகாரம் சாப்பிடவில்லை. கிட்டி மனைவியை அடித்தான். அவள் இரவு முழுவதும் அழுதுகொண்டு இருந்தாள். கணவன் தேற்றியபோது அவள் கூறினாள்: 'நான் புருஷனை மயக்கிவிட்டேன் என்று அத்தை சொன்னார்கள். நான் பதிலுக்கு அப்படி சொன்னது நிசம்தான்.' இம்மாதிரி சண்டையில் எப்படி தீர்ப்பு செய்வது என்று கிட்டிக்குக் கஷ்டமாக இருந்தது. இருவரும் எதிரெதிரான சுபாவத்தோடு நடந்து கொண்டார்கள், ஒருவரும் ஓரங்குலமும் பின்வாங்க விரும்பவில்லை. கங்கவ்வா தன் மகனிடம் சொல்லிச் சொல்லி தொண்டையை வற்ற வைத்துக் கொள்வாள். ஆனால் ரத்னாவோ நறுக்குத் தறித்தாற்போல மறுமொழி உரைப்பாள்: 'நான் பிந்தகோள ராகப்பாவின் பெண் அல்லவா, நான் சொல்வதை எப்படி நீங்கள் நம்புவீர்கள்?' என்று தன் அழுகைப் பலத்தால் வென்றுவிடுவாள். யாதொரு தீர்ப்பும் சொல்ல முடியாத கிட்டி முட்டாள் ஆகிவிட்டான். தாயார் தனக்குச் செய்துள்ள உதவிகளைப் பற்றி ஒரு சொற்பொழிவு ஆற்றினான். அதற்கு ரத்னா அளித்த பதில் இது: 'என் பெற்றோரின் பழைய விஷயங்களை வைத்துக்கொண்டு என்மேல் நெருப்பாய்ப் பொழிகிறார். உங்கள் அம்மா கையால் என் உயிரை வாங்குவதற்கு நீங்கள் என்னைக் கலியாணம் செய்து

கொண்டிருக்கிறீர்கள். அத்தை ஏன் இப்படி செய்ய மாட்டார்கள்? நீங்களும் அவரோடு சேர்ந்து கொண்டு நான் குளத்திலோ கிணற்றிலோ விழுந்து சாகும்படி செய்யாதீர்கள்.'

இந்தச் சண்டை சச்சரவுகளுக்கு இடையில் கங்கவ்வா ஒரு கடுமையான விரதம் மேற்கொண்டு இருந்தாள். ஒவ்வொரு நாளும் அதைப்பற்றி நினைத்துத் தன் புத்தியைத் திடப்படுத்திக் கொண்டாள். அந்த விரதத்தின் பெருமையால் ஒவ்வொரு நாளும் அவளை எதிர்கொள்ளும் மனப்பிணக்கு, பொய், வஞ்சனை, துயரம், சங்கடம் ஆகியவை அனைத்தும் கடல்மேல் அலைகள் என அற்பமாகத் தோன்றும். அந்த விரதம் இதுதான்: 'என்ன நடந்தாலும் கிட்டியை விட்டுப் பிரியக்கூடாது. மருமகள் எவ்வளவு துஷ்டையாக இருந்தாலும் சரி, அவளை வீட்டைவிட்டு வெளியேற்ற எப்படி வலை விரித்தாலும் சரி, வீட்டை விட்டுப் போகக்கூடாது. வீட்டைவிட்டுக் கிட்டியைப் பிரிந்து இருந்தால் மானம் என்ன ஆகும்?... ஒரு தடவை குழந்தையை மடியில் ஏந்திய பிறகு அது துள்ளிக் குதியாட்டம் போடுவதைக் கண்டு நட்டாற்றில் விட்டுவிடுவார்களா என்ன?... தவிர, ராகப்பா தத்து எடுத்துக் கொள்ளும் விஷயம் இருக்கிறது. இப்போது ராகப்பா பழைய வஞ்சம் தீர்த்துக்கொள்ள விரும்பலாம். அவனுடைய திட்டம் நிறைவேற வாய்ப்பு தரக்கூடாது. என்ன அவமானம் நேர்ந்தாலும் சரி, எவ்வளவு கஷ்டம் பொறுக்க நேர்ந்தாலும் சரி, அந்தப் பலவீனமான புத்திரனுக்கு என்னால்தான் நன்மை உண்டாகும். ஆகையால் அவனை விட்டு எட்டிச் செல்லக்கூடாது. இன்று நான் அவனை விட்டுப் பிரிந்தால் ராகப்பா நாளையே அவனை விழுங்கிவிடுவான்.'

## 21. தேசாயின் சுக துக்கங்கள்

தேசாயின் மூத்தமகன் பி.காம். படிக்கப் பம்பாய்க்குச் சென்று இரண்டு ஆண்டுகள் கழிந்துவிட்டன. எல்லாரிலும் சிறியவனான புருஷோத்தமன் சிறுவன். ஆங்கிலப் பள்ளியில் இப்போதுதான் ஐந்தாம் வகுப்பு படித்துக் கொண்டிருந்தான். இந்தப் பையன் மிகக் கூர்மையான அறிவு படைத்தவன். இவனுக்காகவே மேலும் இரண்டு வருடங்கள் தார்வாரில் இருக்கத் தேசாய் முடிவு செய்திருந்தார். ஆனால் கிராமத்திலிருந்து வந்த செய்திகளால் இந்த எண்ணத்தை மாற்றிக் கொள்ள வேண்டியிருக்குமோ என்று யோசித்துக் கொண்டு இருந்தார். 'புருஷோத்தமனை பம்பாயில் இருக்கும் அச்சுதனிடம் அனுப்பிவிட்டு, அவர் கிராமத்துக்குப் போய் இருந்துவிட்டால்

என்ன' என்றும் சிந்தித்தவாறு இருந்தார். இந்த யோசனை களிலேயே நாட்கள் கழிந்து கொண்டு இருந்தன. நகரில் வசித்துப் பழகியபின் முற்றிலும் அதைவிட்டுப் போவது இயலாத காரியம். கிராமத்தில் வசந்தனைப் பற்றித் தீர்வு காண வேண்டிய நேரம் வந்துவிட்டது. கூடவே புதிய புதிய தகவல்களும் கிடைக்கத் தொடங்கின.

பத்துப் பதினைந்து நாளுக்கு ஒருமுறை வசந்தனைப் பற்றித் தேசாய்க்கு ஏதாவது தகவல் வந்துகொண்டே இருக்கும்; ஆயினும் அவருடைய காதுகளுக்கும் எட்டாத பல விஷயங்கள் இருந்தன. அவற்றைத் தேசாய் அறிவார். செய்தி கொண்டுவரும் கிராமத்துக் கிழக் குடியானவர்கள் தந்தைக்கு முன்னால் சொல்லத் தகுந்த தகவல்களை விரிவாகவே சொன்னார்கள். தேசாய் தம் மரியாதைக்குகந்த விவரங்களைச் சொல்வதற்கு அவர்களுக்கு அவகாசம் தந்து, கேட்கிற தகவல்களைத் தம் கற்பனா சக்தியால் பூர்த்தி செய்துகொண்டு, தாமே பொருளும் காண்பார். வசந்தன் சோதாப் பயல்களைச் சேர்த்துக்கொண்டு சீட்டாடி வெட்டிப் பொழுது போக்குவதாய்க் குடியானவர்கள் கூறினார்கள். வசந்தனின் தோழர்கள் பெயர்களைக் கேட்டபோது அவனுக்குச் சிறிது குடிப்பழக்கமும் ஆரம்பமாகி இருக்கும் என்று அவர் ஊகம் செய்து கொண்டார். கிராமத்துக்குப் போன சில நாட்களுக் குள்ளேயே கிராமவாசிகளின் இன்பதுன்பங்களைப்பற்றி அவர் களைவிட அதிகமாய் அக்கறை காட்டலானான். பொதுவாக, கிராம மக்களுக்குத் தங்கள் காளைமாடுகளைப் பற்றிக் கர்வம் இருக்கும். அவர்களுடைய கண்களுக்கு முன்னாலேயே வசந்தனும் காளை மாடுகளிடம் மிகவும் அன்பாக இருந்தான். அவற்றுக்குப் பதினைந்து நாளைக்கு ஒருமுறை தார்வார் லாயன்பஜார் பேடாக்களைத் தின்னக் கொடுப்பான். இந்தத் தீனி அவன் தருகிற பிரத்தியேகத்தீனி. அவனுடைய மூளையில் தோன்றியது அது. கூடவே வயல்கள் மீதும் மிகுந்த அக்கறை காட்டினான். அறுவடைக் காலங்களில் வயல்களிலேயே சில சமயம் தூங்கச் செல்லலானான். ஒருநாள் அதிகாலையில் அவனுடைய வயலுக்கு அண்டைவயலின் பையன் இந்த வயலிலிருந்து நாலைந்து சோளக் கதிர்களை ஒடித்துவிட்டான். இதற்காக அவனைச் சந்திக்கு இழுத்துவந்து சவுக்கால் அடித்தான். வசந்தனின் உற்சாகம் காரணமாகக் கிராமத்தில் பகைமையும் கலகமும் சிறிதுசிறிதாக வளர்ந்தன. இச் செய்தி தேசாய்க்கும் எட்டியது. ஆனால், இச் சமயம் வசந்தனைப் பற்றி வந்த மெய்யான தகவல்கள் காரணமாகத் தேசாய் அஞ்சத் தொடங்கி யிருந்தார். தகவல்கள் யாவுமே உண்மை எனத் தெரிந்தால் அவரால் அவற்றைப் பொறுத்துக்கொள்ள முடியுமா? இந்த அச்சத்தாலேயே வசந்தனை அப்படியே விட்டுவிட்டார்.

அவனைத் திருத்தவோ, அவனுடைய தீச்செயல்களின் தீய விளைவுகளைக் குறைக்கவோ அவர் போகவில்லை. தமக்குத் தெரிந்த உண்மைச் செய்திகளில் கொஞ்சம் மனைவியிடம் சொன்னார். உண்மையில் பத்தில் ஒரு பங்கைக்கூட அவளால் தாங்கமுடியாது என்பதை அவர் அறிவார். ஆகையால், 'கானமண்டலி' ஏற்படுத்தியிருந்தான் என்கிற செய்தியை 'நாலு புதிய நண்பர்களோடு சேர்ந்திருக்கிறான்' என்றும், வயல் காவல் வேலை செய்யும்போது யாரையோ சவுக்கால் விளாசிவிட்டான் என்பதை 'வயலைக் கவனிக்கிறான்' என்று மட்டும் அவளிடம் கூறினார். அந்தச் சொற்களைக் கேட்டு ஆத்மதிருப்தியுற்ற வேணுபாய் மகனைப் பற்றி அழகான கனவுகள் காணத் தொடங்கினாள்.

அண்மையில் வந்த தகவல் இன்னும் கவலை தருவதாக இருந்தது. வசந்தன் வீட்டில் இருந்த தானிய மூட்டைகளை விற்றதோடு களஞ்சியத்தையே காலி செய்து விட்டான். சகுனிபோன்ற நண்பர்கள் வீட்டில் நிரம்பி இருந்தார்கள். கிராமத்தைச் சேர்ந்த சில கண்ணியமானவர்கள் தேசாயைப் பற்றின பயத்தால், விலை குறைவாக இருந்தும் வாங்கவில்லை. வசந்தன் அவர்கள்மீது நச்சு உமிழலானான். இத்தகவல் தேசாயிக்கு எட்டாமல் இல்லை. தேசாய் மனைவியிடம் இதைப்பற்றி எல்லாம் ஒன்றும் உரைக்காமல், வசந்தனைக் கண்டு முதல் எப்படி இருக்கிறது என்று பார்த்து வருகிறேன் என்று கிராமத்திற்குப் போனார்.

வெளியில் இருப்போருக்குக் கவலை தருவதான இந்தச் சூழலைப்பற்றித் தெரியாது. ஆனால் வசந்தனை நெருங்கியிருந்து பார்த்திருந்த தேசாய் உடனே புரிந்து கொண்டார். கிராமத்தில் கட்சி கட்டிக்கொண்டு இருந்தார்கள். ராம் கௌடா ஒரு பெரிய விவசாயி. அவனுடைய மூத்த மகன் ராச்சியத் தேர்வு பாஸ் செய்தவன், அவனுக்கும் மெட்ரிக் பாஸ் செய்யாத வசந்தனுக்கும் பெரும்பகை மூண்டிருந்தது. இருவருமே நாலு புத்தகம் படித்தவர்கள். இருவருமே பணக்காரர்கள். இருவருமே பெரிய விவசாயிகள். முதலில் போட்டியில் தொடங்கிய பேச்சு பகைமை யாக மாறிவிட்டது. அவன் தன் தெருவாசிகளைத் திரட்டிக் கொண்டு 'பைலாட்'[1] ஆட ஏற்பாடு செய்ததும் வசந்தனின் காவாலி நண்பர்கள் அவனையும் தூண்டிவிட்டார்கள். 'ஆகையால் கௌடா பைலாட் ஆடினால் நான் நாடகம் போடவேண்டும்' என்று முடிவு செய்து கிராம எல்லையிலிருந்த பாடகர் குழு தலைவனைக் கிராமத்திற்கு அழைத்து வந்து தன் வீட்டிலேயே ஆயத்தங்கள் செய்யலானான். பாகவதர்

1 மைசூரில் புகழ் பாடுவதற்காக ஏற்பட்ட ஒரு வித்தை

அப்பண்ணா பட்டசாரி நாடகத்தில் பங்கு கொள்ளுவோருக்குச் சங்கீதம் கற்பித்தான். வீட்டில் இரவும் பகலும் தினதா தைதை. இராத்தூக்கம் கெட்டது. ஆனால், துவேஷத்தில் பிறந்த இந்த ஆர்வம் பல வடிவங்களில் வளர்ந்தது.

தேசாய் கிராமத்திற்கு வந்ததும் வீட்டில் சந்தடி அடங்கிவிட்டது. அத்தோடு, வசந்தனும் தனக்குள்ளேயே ஒடுங்கி விட்டான். அவன் வீட்டிலேயே இருந்தான், ஆனாலும் தந்தைக்கு முன் வராமல் தப்பிக்கொண்டான். தேசாய் கொல்லைப் பக்கம் போனால் அவன் வெளிப்பக்கம் வந்துவிடுவான். அவர் வெளியே வந்தால் அவன் கொல்லைப்பக்கம் போய்விடுவான். இவ்வாறு 'யா நிசா ஸர்வபூதாநாம்' (அனைத்துயிர்களுக்கு எது இரவோ) மூதுரையை நிறைவேற்றி வந்தான். அச்சத்தினால் நாடகக்கார நண்பர்கள் அனைவரும் வீட்டிலிருந்து ஓடிவிடவே, இந்த ஆட்டம் இத்தோடு ஓய்ந்துவிடும் என்று தேசாய் கருதினார். ஆனால் இரண்டு மூன்று நாளிலேயே, தெருக்கோடியில் 'பூதம் காக்கும் வீடு' என்று பெயர் பெற்ற வீட்டில் தங்குதடையின்றி பயிற்சி நடைபெறுவதாய்த் தெரிந்தது. தேசாய் வசந்தனைக் கூப்பிடும்போது எல்லாம் அவன் வராமல் தப்பிக்கொண்டு இருந்தான். கூப்பிடச் செல்லும் வேலைக்காரர்களிடம் கர்வத்துடன், 'வரவில்லை என்று போய்ச் சொல்லு,' என்று கூறுவான். ஆனால் வேலைக்காரர்கள் தேசாயிடம் உள்ள பயத்தாலோ அல்லது தங்கள் புத்தியாலோ, திரும்பி வந்து, 'இதோ வருகிறேன் என்று சொல்லிவிட்டுப் போனார், எஜமான்,' என்றோ 'அவரைக் காணோம்' என்றோ கூறிவிடுவார்கள். பிடித்து இழுத்துவரச் சொல்லலாமா என்று தேசாய் யோசித்தார். நாளைக்கு வசந்தனே இங்கே எஜமானனாக இருக்கப் போகிறவன், ஆகையால் இவ்வளவு கடுமையான நடவடிக்கை எடுக்கக்கூடாது என்று அடக்கிக் கொண்டார்.

அவர் இப்போது வேறொரு வழி கண்டார். அவனோடு 'கண்ணாமூச்சி' ஆடுவதைக் குறைத்துக் கொண்டார். அவர் பாகவதர் அப்பண்ணா பட்டனைக் கூப்பிட்டு அவன் கையில் பதினைந்து ரூபாய் கொடுத்து, கிராமத்தைவிட்டு வெளியே போகுமாறு கட்டளை இட்டார். அப்பண்ணா பட்டன் ஓடிவிட்ட செய்தியைக் கேட்டு ராமண்ணா கௌடா வீட்டில் ஒரே கொண்டாட்டம். வசந்தனுக்கோ அவமானம். அவனுக்கு மிக வருத்தமாக இருந்தது. தந்தையைக் காண வந்தான். தேசாய் அவனைக் கடிந்துகொண்டு புத்தி சொன்னார்: 'இனி ஒருகாலும் அவரிடம் சொல்லாமல் தானியம் விற்கக்கூடாது' என்று. அப்பண்ணா பட்டனை அழைத்துக் கொள்ள அனுமதி அளித்தார். தானிய விற்பனை செய்த பணத்தில் கொஞ்சம் அவனிடம் எஞ்சி

இருந்தது. அதையும் அவனே வைத்துக்கொள்ள அநுமதி கொடுத்தார். தம் ரயத்துகளைக் கூப்பிட்டு, வசந்தனைக் கண்காணிக்கும்படி கூறினார். அவர்களிடம் முடிந்தவரை பாக்கி வசூல் செய்துகொண்டு பதினைந்து நாளில் திரும்பிவிட்டார்.

தார்வாரில் அவரை ஒரு கடிதம் எதிர்பார்த்துக் கொண்டு இருந்தது.

நலம் ஸ்ரீ　　　　　　　　புதன்கிழமை தேதி 23,
பம்பாய்.

தீர்த்த வடிவான சரணாரவிந்தங்களில் சி.அச்சுதனின் சாஷ்டாங்க நமஸ்காரம். இப்போது நான் காமர்ஸ் காலேஜை விட்டுவிட்டேன். வேறு படிப்பு தொடங்கி இருக்கிறேன். கல்லூரிப் படிப்பால் யாதொரு ஆதாயமும் இல்லை என்று எனக்குப் பட்டது. அதனால்தான் அதை விட்டுவிட்டேன். இதுவரை தங்களுக்குத் தெரிவிக்காததுபற்றி மன்னிக்கவும். வேறு வேலை கற்க ஆரம்பித்திருக்கிறேன். புதிதாய்த் தொடங்குவதால் பணக் கஷ்டம் ஏற்பட்டுவிட்டது. ஆகையால் தயவுசெய்து கீழ்க்கண்ட முகவரிக்கு நூறு ரூபாய் அனுப்பவும். தாமதிக்க வேண்டாம்.

மற்றபடி நலம். திருநிறை தாயாரின் திருவடிகளில் என் சாஷ்டாங்க நமஸ்காரம். அவருடைய நலத்துக்கும் சிரஞ்சீவி தம்பிகள் நலத்துக்கும் எழுதவும். சுபம்.

அச்சுதன்

முகவரி:

தேசாய்க்கு இக்கடிதத்தின் கருத்து விளங்கவில்லை. இவன் கல்லூரியை ஏன் விட்டான்?... ஆர்ட்ஸ் படிப்பதால் பயன் இல்லை என்று அவனாகத் தானே காமர்ஸுக்குப் போனான்? இப்போது காலேஜ் படிப்பே பயனற்றுப் போனது ஏன்? புதிய வேலை என்னவாக இருக்கும்? இந்தப் புதிய முகவரி எது? மாவு மில்லில் அவனுக்கு என்ன வேலை? அங்கு வேறு ஏதாவது முட்டாள்தனம் செய்து விட்டானோ? பம்பாயைப் பற்றிச் செய்தி ஏடுகளில் ஏராளமான செய்திகள் வருகின்றன. 'நேரில் போய்ப் பார்ப்பதே நல்லது' என்று அவர் எண்ணினார். தந்தியில் பணம் அனுப்பிவிட்டு, அச்சுதனைப் பார்க்கப் போகிறேன் என்று வீட்டில் சொல்லிவிட்டு, இரண்டு மூன்று நாளில் பம்பாய்க்குப் பயணமானார்.

போர்பந்தரில் இறங்கியதும் லால்பாக் போகும் எண்ணத்தை மாற்றி, முதலில் காமர்ஸ் காலேஜ் ஹாஸ்டலுக்குப் போவதென்று ஒரு விக்டோரியா அமர்த்திக் கொண்டார். அங்கே ஹாஸ்டல்

சூபரின்டென்டென்டைச் சந்தித்தார். சந்தித்ததுமே அச்சுதனின் அறிவீனம் பற்றிய தகவல் கிடைத்தது.

உப்பு சத்தியாக்கிரகம்.

இரண்டு தோழர்களோடு அச்சுதன் கல்லூரிக்கு முன்னால் ஒரு தடவை பிக்கெடிங் செய்த காரணத்துக்காக கல்லூரி அதிகாரிகள் அவனுக்கு எச்சரிக்கை செய்தார்கள். மறுநாள் அவன் சூபரின்டென்டிடம் வந்து கிராமத்துக்குப் போக விரும்பு வதாய்க் கூறினான். அவருக்கு அவன் மேல் சந்தேகம் ஏற்பட்டது. அவனை விசாரித்தார். அவர் அறிவுரை வழங்குவதற்கு வாய்ப்பு தராமல், 'வீட்டுக்குத்தான் போகிறேன், வேறு எங்குமில்லை' என்று அடித்துச் சொல்லிவிட்டான். ஹாஸ்டலை விடுத்து வெளியேறினான், சத்தியாக்கிரகத்தில் பங்கு கொண்டான். அவனுடைய இரண்டு நண்பர்கள் மூன்றுநாள் வரை சிறையில் இருந்தபின் மன்னிப்பு கோரியதால் விடுதலை அடைந்தார்கள். அவர்கள் மீண்டும் கல்லூரியில் சேர்த்துக் கொள்ளப்பட்டனர், ஹாஸ்டலிலும் அவர்களுக்கு இடம் கிடைத்துவிட்டது. அச்சுதன் மன்னிப்பு கேட்கவில்லை, ஆகையால் அவன் ஒரு மாதம் சிறைவாசம் செய்ய நேர்ந்தது. சிறையிலிருந்து வெளிவந்ததும் அவன் கல்லூரிக்கு வந்தான். ஆனால் அவனைச் சேர்த்துக் கொள்ளக்கூடாது என்று அவன் வருமுன்பே அரசாங்கம் அறிக்கை அனுப்பியிருந்ததால் கல்லூரியில் அவனுக்கு இடம் கிடைக்க வில்லை. ஹாஸ்டலிலிருந்து தன் பெட்டி படுக்கைகளைக் கட்டிக்கொண்டு அவன் வெளியேறிப் பதினைந்து நாளாகிறது. தேசாய் அச்சுதனின் இரண்டு நண்பர்களையும் வரவழைத்து அவர்களிடமிருந்து விவரங்கள் எல்லாம் அறிந்து கொண்டார். கதை முற்றிலும் அஃதே. அவர்கள் எவ்வளவோ வற்புறுத்தியும் சிறையில் அவன் மன்னிப்பு கேட்கவில்லை, தன் பிடிவாதத்தில் உறுதியாக இருந்தான். இப்போது அவன் எங்கே இருக்கிறான் என்று அவர்களுக்கே தெரியாது. தவிர, அவருக்குக் கடிதம் எழுதவேண்டாம் என்று நண்பர்களை அவன் கண்டிப்பாய்த் தடுத்துவிட்டதாகவும் தெரிந்துகொண்டார்.

தமக்கு ஏன் கடிதம் எழுதவில்லை என்று மிகவும் பணிவாக அவர் சூபரின்டென்டைக் கேட்டார். அவர் சொன்னார்: 'எழுதியதாகத் தெரிகிறது. நான் டிராப்ட் செய்தேன். பிரின்ஸ்பாலும் கையெழுத்திட்டார்.' பிறகு அவர் வெளியே செல்லும் கடிதங்களின் ரிஜிஸ்தரைப் பார்த்தார், அதிலிருந்து அரசாங்க அறிக்கை வந்ததுமே கடிதம் எழுதப்பட்டதாய்த் தெரிந்தது. கடிதம் ஏன் தேசாய்க்குக் கிடைக்கவில்லை? அவரும் ஆர்வத்தோடு ரிஜிஸ்தரைப் பார்த்தார். அதில் அவருடைய பெயர்

சரியாக இருந்தது. ஆனால் கிராமத்தின் பெயர் தார்வார் என்பதற்குப் பதிலாக 'தாரிவால்' என்று எழுதப்பட்டிருந்தது. ஆக, கடிதம் தாரிவாலைச் சுற்றிவிட்டு இந்நேரம் டெட் லெட்டர் ஆபீசுக்குப் போய்ச் சேர்ந்திருக்கும் என்று அவர் புரிந்து கொண்டார்.

இப்போது யாரையும் குறைகூறும் மனநிலையில் தேசாய் இல்லை. 'இப்போது மன்னிப்பு கேட்டால் காலேஜில் சேர்த்துக் கொள்வார்களா?' என்று அவர் வினவியதற்கு சூபரின்டென் டென்டுக்கு நேராகப் பதில் சொல்லத் தைரியம் வரவில்லை. அரசாங்க அறிக்கை சந்தேகத்துக்கு இடமின்றி அவனுக்கு விரோத மாக இருந்தது. எனினும் சூபரின்டென்டென்டும் பிரின்சிபாலும் அச்சுதன் ஒரு நல்ல மாணவன் என்று பெருமைப்பட்டார்கள். 'கொஞ்சம் இருங்கள்,' என்ற சூபரின்டென்டென்ட் பிரின்சி பாலுடன் டெலிபோனில் பேசியபின் உரைத்தார்: 'அவன் வராத நாள் அதிகமாகிவிடும். மன்னிப்பு வேண்டியபின் மீண்டும் மாணவர்கள் கிளர்ச்சியில் கலந்து கொண்டதால் இப்போது அரசாங்கம் இந்த விவகாரத்தில் மிகவும் கண்டிப்பாக இருக்கிறது. அச்சுதனைப்பற்றி எங்களுக்கு மிக நல்ல அபிப்பிராயம் இருக்கிறது. ஆகையால் ஸ்பெஷல் ரிகம்மென்டேஷன் செய்து அவனைச் சேர்த்துக்கொள்ள முடியும். ஆனால் கிளர்ச்சியில் மீண்டும் கலந்து கொள்ளவில்லை என்று அவன் எழுதித்தர வேண்டியிருக்கும்.'

அச்சுதன் கல்லூரியில் எல்லாருடைய அன்புக்கும் பாத்திரம் ஆகியிருக்கிறான் என்பதை அறியத் தேசாயுக்கு மகிழ்ச்சியும் கர்வமும் உண்டானதோடு கவலையாகவும் இருந்தது. அவன் சிறை சென்ற செய்தி இன்று அல்லது நாளை தார்வாரில் பரவினால் என்ன ஆகுமோ என்று அவர் அஞ்சினார். அவன் மன்னிப்பு கேளாததால், உண்மையான பஹாதுர் (வீரன்) தேசாய் என்பதை எண்ணி அவருடைய நெஞ்சு பூரித்தது. சிறை காரணமாக அவருக்கு அவமானத்தோடு பயமும் ஏற்பட்டது...

இவ்வளவு சிறந்த மாணவனுடைய வாழ்க்கை வீணாவதைக் காணத் தமக்கும் பிரின்சிபாலுக்கும் மிக வருத்தமாக இருக்கிறது என்று கூறி தேசாயிக்கு விடை கொடுத்த சூபரின்டென்டென்ட், 'நீங்கள் மன்னிப்புக் கடிதம் கொண்டு வாருங்கள், மற்ற விஷயங்களை நான் கவனித்துக் கொள்கிறேன்,' என்று ஆறுதலும் கூறினார்.

அதற்கு மறுமொழி தராமல் அங்கிருந்து தேசாய் லால் பாகுக்குப் போய்ச் சேர்ந்தார். லால்பாகில் ஒரு தாங்காவை அமர்த்திக் கொண்டு தேவிதாஸ் ஃபீப்ளவர் மில்லைத் தேடினார். பிற்பகல் ஒரு மணி ஆகிவிட்டது. லால்பாகில் வீடு தேடுவது ஒரு

கஷ்டமான வேலை. அரை மைல் தூரம் வரை மாவு அரைக்கும் இயந்திரப் பட்டறைகளின் காம்பவுண்டுச் சுவர்களே தென்பட்டன. கடைசியில் கோணல்மாணலான வீடுகளும் குடிசைகளும். ஒரு வழியாகத் தபால்காரரின் உதவியால் அவர் தேவிதாஸ் ஃப்ளவர் மில்லை அவர் கண்டுபிடித்தார்.

அது குடிசையொத்ததொரு வீடு. வெளியே பெரிய பெரிய குஜராத்தி எழுத்துகளில் தேவிதாஸ் ஃப்ளவர் மில் என்று எழுதப்பட்டிருந்தது. தகரக் கூரை. பக்கத்திலேயே பஞ்சு வியாபாரமானதால் தகரச் சுவர்கள் பஞ்சு இழைகள் ஒட்டிக்கொண்டு இருந்தன. எல்லாமே பழையன, ஒரே அழுக்கு. உள்ளே கிராக்கிகள் யாரும் இல்லாததால் ஈ ஓட்டியபடி ஒரு விந்தை மனிதன் உட்கார்ந்திருந்தான். முக்கோண நெற்றியும், கிளி மூக்கும், குன்றிமணி போன்று செக்கச் செவேலென்று சிவந்த பெரிய பெரிய கண்களும், தலையில் புடைத்துக் கொண்டிருந்த பெரு நரம்புகளும் — எல்லாம் கூடி அவன் விசித்திரமாய்க் காட்சி தந்தான். அவனை எங்கோ பார்த்திருப்பதாய்த் தேசாய்க்குத் தோன்றியது. அவன் கிழக்கத்தி 'பையாக்'களைப் போல் கையில்லாத சொக்காயும், முழங்கால்கள்வரை அரை வேட்டியும் அணிந்திருந்தான். ஆனால் அவனுடைய ஆடையில் எள்ளளவும் தூசு இல்லை. பம்பாயில் இத்தகைய அசுத்தமான இடத்தில் மாவரைக்கும் இயந்திரங்களுக்கு இடையில் அவனுடைய இம்மாதிரி தூய்மையான ஆடையைக் காணத் தேசாய்க்கு வியப்பாக இருந்தது. அவனுடைய விசித்திரங்களில் இதுவும் ஒன்று. இக்காரணத்தால் அவன் முற்றிலும் 'பையா'வாகத் தோற்றம் அளிக்கவில்லை. தேசாயைப் பார்த்து அவனுக்கும் ஆச்சரியமாக இருந்தது. அவரைப் பார்த்து வறண்ட குரலில் கேட்டான்: 'என்னது?'

'இங்கே பஹாதுர் தேசாய் என்று பெயருள்ள யாராவது இருக்கிறார்களா?'

'நீங்கள் யார்? அவருடைய பெரியவர்களா?' — திடீரென்று அவன் கன்னடத்தில் பேசவே அவருக்குத் தூக்கிவாரிப் போட்டது. அவனுக்கு வேகமாய்ப் பேசிப் பழக்கம் போலும்.

'ஆம், எங்கே அவர்?'

'இப்போதுதான் போனார்... இப்போதுதான் இதோ போனார்... இதுவரை இங்கேயே இருந்தார்... இப்போதுதான் இந்த வில்லையை மராமத்து செய்தார்... செய்துவிட்டுப் போய்விட்டார்.'

'எங்கேபோனார்?'

'பிரஸ்ஸுக்குப் போயிருக்கிறார். ஒன்பது முதல் பன்னிரண்டு வரை நம்மோடு இருப்பார். பன்னிரண்டு முதல் இரண்டு வரை பிரஸ்ஸில்.'

'எந்தப் பிரஸ்ஸில்?'

'நமக்கு இதெல்லாம் தெரியாது.'

அவனுக்குச் சினமூட்டுவதால் பயனில்லை என்று கண்ட தேசாய் அவனை மகிழ்விப்பதற்காகச் சொன்னார்.

'உங்கள் பெயர் என்ன? எங்கே இருக்கிறீர்கள்?'

'அதெல்லாம் நமக்குத் தெரியாது'- அவனுக்கு இன்னும் அதிகக் கோபம் வந்து விட்டதாய்த் தோன்றியது.

'அவரை எப்போது சந்திக்கலாம்?'

'ராத்திரி ஒரு மணிக்கு வாருங்கள். ஒரு மணிக்கு இல்லை, இல்லை, ஏழரை மணிக்கு.. அதற்குள் அவர் வந்துவிடுவார். நம் வீட்டில் தான் படுக்கிறார்.'

மகனைப் பற்றி இந்த அளவு சரியான தகவல் கிடைத்தது. மாலையில் மறுபடியும் வரலாம் என்று எண்ணித் தேசாய், 'சரி, நான் வருகிறேன்', என்று அங்கிருந்து புறப்பட்டார். ஆனால் அந்த ஆள் அவரை இதற்குள் விடவில்லை.

'மாலையில் வாருங்கள்... வந்து சந்தித்துவிட்டுச் செல்லுங்கள். படுப்பதற்கு அவருக்கு மட்டும்தான் எங்கள் வீட்டில் இடம் இருக்கிறது. வேறு யாருக்கும் இடவில்லை. நீங்கள் படுப்பதற்கு நீங்களே ஏற்பாடு செய்து கொள்ள வேண்டும். நீங்கள் இடம் தேடிக் கொள்ள வேண்டியிருக்கும்...'

அவனுடைய நறுக்கான பேச்சைக் கேட்டுத் தேசாய்க்குச் சிரிப்பு வந்துவிட்டது. ஆனால், அவர் அங்கிருந்து நழுவிவிட்டார். மாலையில் தான் சந்திக்கப் போகிறோமே என்று நம்பிக்கை. அச்சுதன் வசந்தனைப் போல் ஓடி ஒளிந்து கொள்வான் என்ற அச்சம் அவருக்கு இல்லை. இதுவரை கவலை காரணமாக அவருக்குப் பசி நினைவே இல்லை, இப்போது ரொம்பவும் பசிப்பதாய்ப்பட்டது. தேசாய் பஸ்ஸில் ஃபோர்டுக்குப் போனார், அவர் தங்கியிருந்த ஹோட்டலுக்குப் போய் உணவு கொண்டார். இரண்டு மணிநேரம் நன்றாகத் தூங்கிவிட்டு மீண்டும் மாலையில் லால்பாகில் ஆஜரானார். ஏழுமணிக்குத் தேவிதாஸ் ஃப்ளவர் மில்லுக்குப் போய்ச் சேர்ந்தார். அதற்கு எதிரில் ஓர் ஈரானி ஹோட்டல் இருந்தது. அங்கே போய், டீ வரவழைத்து, ஒரு வாய்கூடப் பருகாமல் வாசலில் விழிகளை வைத்துக்கொண்டு உட்கார்ந்து விட்டார்.

சுமார் ஏழரை மணிக்கு கதர் பைஜாமாவும் தொப்பியும் அணிந்து கொண்டு, அறுந்துவிட்ட செருப்பை இழுத்துக் கொண்டே வேகமாக மில்லில் நுழைந்தான் அச்சுதன். தேசாய் அடையாளம் கண்டுகொண்டாலும் அவன் மிகவும் மாறிவிட்டதாகத் தோன்றியது. தந்தையின் அகக்கண்கள், அந்தத் தொள தொளா சட்டைக்குள் இருந்த உடம்பு மிகவும் இளைத்துவிட்டது என்பதைக் கண்டு கொண்டது. உடை காரணமாக உடல் பாதியாகத் தென்பட்டது, ஆனால் உண்மையான நிலைமை ஒரே பார்வையில் அவருக்குத் தெரிந்துவிட்டது. அவர் அவனுக்குப் பின்னாலேயே நடந்தார். அவருக்குக் கீழ்கண்ட உரையாடல் கேட்டது.

'வில்லை சரியாக வேலை செய்கிறதா என்ன?'

'உ... உ... உ...உங்கள் அப்பா வந்திருக்கிறார்.'

'யார்?'

தேசாய் பின்னாலிருந்து அவனுடைய தோளைத் தடவிக் கொடுத்தார்.

சௌபாத்தி மணலில் உட்கார்ந்து தந்தையும் மகனும் நீண்ட நேரம் பேசினார்கள். மன்னிப்பு கேட்கும்படி சொல்லவேண்டும் என்று பன்முறை அவர் மனத்தில் தோன்றியது, ஆனால் வாய் எழவில்லை. தொடக்கம் முதல் இறுதிவரை அவன் சொல்வதையே கேட்டுக்கொண்டு இருந்தார். அச்சுதனுக்குத் தன் பிரதாபத்தைப் பற்றிப் பேச வெட்கமாக இருந்தது. தந்தையோ எவ்விதக் கோபமும் காட்டாமல் கேட்கத் தயாராக இருந்தார். நாட்டுப்பற்று நிறைந்த சூழ்நிலையில் அச்செய்திகளையன்றி வேறுஎதைப் பற்றியும் பேச அச்சுதனுக்குத் தோன்றவில்லை. வெட்கத்தோடு எல்லாவற்றையும் அவன் கூறினான்.

'காந்திஜீயின் உப்பு சத்தியாக்கிரகம், பற்றின தகவல்கள், அவருடைய தண்டி யாத்திரை பற்றின செய்திகள் எல்லாம் செய்தி ஏடுகளில் வரவர மக்களுக்கு இடையில் கோபம் பரவிவந்தது. அவனுடைய கல்லூரி மாணவர்களுக்கும் அதிக ஆர்வம் இருந்தது. அரசியல் கிளர்ச்சியோ, அறக்கொண்டாட்டமோ, மாணவர்களே முன் வருகிறார்கள். எல்லாக் காலேஜ்களையும் போலக் காமர்ஸ் காலேஜ் முன்னாலும் ஒரு நாள் பிக்கெடிங் நடந்தது. ஒரு நாள் பலமாய்ப் பிக்கெடிவ் நடந்தது. அதில் கலந்து கொள்ளும்படி ...மையான அறிக்கை விடப்பட்டதும் கட்டுப்பாடு குலைந்துவிட்டது. காமர்ஸ் காலேஜ் போன்ற சிறிய காலேஜ்களில் ஒருவர் மற்றொருவர் மீது புகார் கூறுவது இயற்கைதான். இதன்பேரில் கிளர்ச்சி உள்ளுக்குள்ளேயே வலுத்தது.'

கல்லூரியை மூடவைக்க நாள்தோறும் செய்யப்படும் வீண்முயற்சி அச்சுதனுக்குப் பிடிக்கவில்லை. கல்லூரியிலிருந்து வெளிப்பட்ட மாணவர்கள் சினிமாவுக்குப் போவதும், தங்கள் வீடுகளுக்குச் சென்று விடுவதும் அவனுக்கு உறுத்தின. இக்காரணத்தால் உப்பு சத்யாக்கிரகத்தில் நேராகப் பங்கு கொள்ளுமாறு அவன் மாணவர்களுக்கு இடையில் பிரசாரம் செய்யத் தொடங்கினான். தேசபக்த மாணவர்கள் இதை எதிர்த்தார்கள், 'காந்திஜீயே மாணவர்கள் சத்தியாகிரகத்தில் கலந்துகெள்ள வேண்டாம் என்று கூறியுள்ளார்' என வாதாடினார்கள். பின்னால் சச்சரவு செய்யும் கோழை மாணவர்களையே காந்திஜீ சத்தியாக்கிரகத்தில் கலந்துகொள்ள வேண்டாம் என்று கூறியிருப்பதாகவும், நல்லறிவால் சத்யாக்கிரகத்தின் பெருமையை உணரும் மாணவர்கள் அதில் கலந்து கொள்ளலாம் என்றும் அச்சுதனுக்குத் தோன்றியது. காமர்ஸ் காலேஜில் இரண்டொரு மாணவர்களே இம்முறையில் முன் வந்தனர், ஆனால் மற்ற கல்லூரிகளிலிருந்து நூற்றுக்கணக்கான மாணவர்கள் சத்யாக்ரகம் செய்வதற்காகக் கூட்டம் கூடி கடற்கரைக்குச் செல்லும் வீதியில் ஊர்வலமாய்ச் சென்றார்கள், உப்புக் கவர்ந்தார்கள். அவர்களில் சிலர் சிறையில் மன்னிப்பு கோரி விடுதலை பெற்றார்கள். ஆனால், சிறையில் இருந்தோருக்கும் குறைச்சல் இல்லை. அவர்களுக்கு இன்றைய கல்வி முறையில் நம்பிக்கை இல்லை.

'இதோ பார், ஒரு முறை டிக்ரி வாங்கிவிடு. பிறகு எவ்வளவு வேண்டுமானாலும் அரசியலில் கலந்து கொள். படிப்பைவிட்டுவிட வேண்டும் என்பதா உன் கருத்து?'

'காலேஜில் மறுபடியும் சேர்த்துக் கொண்டால் இந்தக் கோர்ஸ் பூர்த்தி செய்கிறேன்.'

'அவர்கள் சேர்த்துக் கொள்ளத் தயார். காலையில் சூபரின்டென்டென்டைச் சந்தித்தேன்.'

'அப்படியானால்...'

'ஆம், மன்னிப்பு கோரும் கடிதம் தர வேண்டி இருக்கும்.'

'எதற்காக மன்னிப்பு கோர வேண்டும் அப்பா?' மேலே பேச அச்சுதனுக்கு வெட்கமாக இருந்தது. தன்னுடைய நண்பர்களுக்கு முன்னிலையில் தேசபக்தித் தத்துவஞானம் பற்றி உரையாற்ற அவனுக்குத் துணிவு வரவில்லை. தந்தையின் அரைகுறைப்படிப்பு ஆனால் ஒழுக்க வலிமைக்கும் ஆளுமைக்கும் முன்னால் தன்னுடைய புலமை நொண்டத் தொடங்கி விடுகிறது என்பதை அவன் எப்போதுமே உணர்ந்திருந்தவன். தார்வாரில் வீட்டில் இருக்கும்போது அவன் தந்தையோடு மிகவும் குறைவாகவே

பேசுவான். அன்னை தான் அவனுக்குச் சிநேகிதி. நீண்டகாலத்திற்குப் பிறகு சந்தித்தாலும், சிறிது வளர்ந்து விட்டதாலும், சிறைக்குச் சென்று வந்ததாலும், அவனுடைய தனித்தன்மை வளர்ச்சியுற்றதாலும், வெளியூரில் இருந்ததாலும் அவன் இந்த அளவு தந்தைக்கு முன் பேசிவிட்டான். இப்போது அவனுடைய பேச்சைக் கேட்டும், அவனுடைய மீசை, அவனுடைய காந்தி குல்லாய், அவனுடைய உற்சாகமான முகம் ஆகியவற்றைப் பார்த்தும் தேசாய், 'பையன் பெரியவன் ஆகிவிட்டான்' என்று உணர்ந்தார். இதற்குள் அச்சுதன் தன் தலையைத் தாழ்த்திவிட்டான். அவனுடைய இந்த நிலையை உணர்ந்த தேசாய், 'உன் மனம் ஏற்கவில்லை என்றால், வேண்டாம்,' என்றார்.

சற்று நேரம் மௌனம் பரவியது.

'மேலே என்ன செய்வதாய் யோசனை?'

'இப்போது பாம்பே கெசட் பத்திரிகையில் வேலை செய்கிறேன். புதிய செய்தித்தாள். ஜெயிலில் அதனுடைய உதவி ஆசிரியர் ஒருவரோடு பழக்கமாயிற்று. அங்கே மூன்று மணிநேரம் வேலை செய்கிறேன்.'

'என்ன வேலை.'

'உதவி ஆசிரியர் வேலை, அவர் இருபத்தைந்து ரூபாய் தருகிறார். இரண்டு மணியிலிருந்து ஐந்துமணி வரை இந்த வேலை. பக்கத்திலேயே அத்தாளின் அச்சகம் இருக்கிறது. அங்கே அச்சகம் நடத்துவதைப் பற்றியும் கற்றுக் கொள்கிறேன்.'

'மாவு மில்லில்?'

'அங்கே வேலை ஒன்றும் இல்லை. அந்த ஆளோடு பழக்கம். அவனுடைய அறையில் தங்கி இருக்கிறேன். எப்போதாவது மில் வேலையும் கவனித்துக் கொள்கிறேன். ஒரு தடவை மெஷீன் வெறி பற்றிக்கொண்டால் அவ்வளவுதான்...'

'இதை எல்லாம் கற்க இன்னும் எத்தனை நாளாகும்?'

'உங்கள் அபிப்பிராயம் என்ன?... இங்கேயே இருந்து செய்தித்தாளில் வேலையும் செய்யலாம், அது நம் சொந்தப் பத்திரிகை போல. வேலை என்பது சும்மா பெயருக்குத்தான். அங்கே வேலை செய்கிறவர்கள் எல்லோரும் அப்படியே நினைக்கிறார்கள்' என்று கூறி அச்சுதன் மௌனமானான். தேசாயும் அதே முறைமையில் மறுமொழி கூறினார்.

'சரி, நீ இங்கேயே இருந்தால் வீடு, நிலம், நீச்சு எல்லாவற்றையும் யார் கவனித்துக் கொள்வது? அந்த அநுபவமும் உனக்கு ஆகவேண்டாமா?'

'அப்படியானால் நான் என்ன செய்வது?'- தன் மனத்தில் இருப்பதைப் பெற்றவரின் வாயாலேயே கேட்க விரும்பினான் அவன்.

தேசாய் சிறிது சிந்தித்துச் சொன்னார்: 'நீ இங்கே கற்க வேண்டியதைக் கற்றுக் கொண்டு தார்வாரிலிருந்து ஒரு பத்திரிகை நடத்தலாமே?'

'அந்த எண்ணத்தோடு தான் நான் அச்சக வேலையைக் கற்கிறேன்.'

'அச்சக வேலைக்கு எவ்வளவு பணம் தேவைப்படும் என்று யோசித்தாயா?'

'புதியதானால் மூன்று அல்லது மூன்றரை ஆயிரம் வேண்டும். ஆனால் புக்வொர்க்கிங்குக்காக எங்கள் பிரஸ்ஸில் ஒரு சிறிய பிரஸ் வைத்திருக்கிறார்கள். அந்த புக் ஒர்க்கிங்கால் லாபம் ஏதும் இல்லை என்று நம் ஆசிரியர் சொல்கிறார். அதை விற்றுவிடக் கூடுமா என்று ஃபோர்மனைக் கேட்டேன். அதிகமாய்ப் போனால் அதன் விலை ஆயிரம் ரூபாய் ஆகும் என்று அவன் சொன்னான்.'

'கெட்டுப் போனது இல்லையே?'

'இல்லை, பழையது என்றாலும் நன்றாக வேலை செய்கிறது.'

தேசாய் அப்போதே முடிவு செய்தார். 'சரி, நீ இப்படிச் செய். இரண்டொரு வருடம் இந்த வேலையைக் கற்றுக் கொள். இப்போது உனக்குக் குறைவான வயது தான். இப்போது நீ சுதந்திரமான முறையில் பத்திரிகையை நடத்த முடியாது; அது சரியும் அல்ல. நாலு பேரோடு சேர்ந்து வேலை செய்து உனக்கு அநுபவம் ஏற்பட்டால் உன் பத்திரிகைக்கு மதிப்பு கூடும். உன்னுடைய பத்திரிகை சாமானியப்பட்டதாக இருக்கக்கூடாது. உன் கருத்துகளுக்கு மரியாதை கிடைக்க வேண்டும். வேலைசெய்து கொண்டே போனால் எல்லாச் சட்டங்களும் விதிமுறைகளும் புரிந்துவிடும். மொழியில் கனம் கூடும், மற்ற விஷயங்கள் தாமாகத் தெளிவுபடும். ஆகையால் தான் இதற்கெல்லாம் உன் படிப்பு பூர்த்தி ஆக வேண்டும் என்று சொன்னேன். இதைப்பற்றி உனக்கு நம்பிக்கை உண்டான பிறகு தார்வாருக்கு வா. பிரஸ்ஸுக்காக அப்போது ஏதாவது செய்வோம். அங்கேயே பின்பக்கம் பிரஸ் வைத்துக் கொள்ளலாம். அங்கேயே காலேஜில் சேர்ந்து டிக்ரி வாங்கிக்கொள். பிறகு வேண்டுமானால் செய்தி ஏட்டைத் தொடங்கலாம்.'

அச்சுதன் மிக மகிழ்ச்சியுற்றான், ஆனால், அவ்வளவு காலம் பொறுக்க வேண்டும் என்பதை அவனால் சகிக்க முடியவில்லை: 'அடுத்த வருடம் இங்கேயே ஆர்ட்ஸில் சேருகிறேன்.'

'இரண்டு மூன்று வேலைகளை உன்னால் கவனிக்க முடியுமா, செய்தித்தாள், பிரஸ், படிப்பு?'

'முடியும்.'

'இங்கே காற்று மோசம், அதிகப்படியாக உழைக்கக் கூடாது.'

'இல்லையே, இந்த ஐந்தாறு மாதங்களில் பிரஸ் வேலையைப் போதுமான அளவு கற்றுவிட்டேன். அடுத்த ஜூன் முதல் காலேஜும் பத்திரிகையும் மட்டும்தான் இருக்கும்.'

தேசாய் சற்று சந்தேகத்தோடு கூறினார். 'உன்னால் முடிந்தால் செய்துகொள். ஆனால் உன் தாயார் உன்னைப்பற்றி மிகவும் கவலைப்படுகிறாள். நீ இங்கே மாவுமில்லையும் பிரஸ்ஸைப் பற்றியும் யோசித்துக் கொண்டு இருக்கிறாய்?'

பிறவிப் பணக்காரனாக இருந்தும் காந்திஜீயின் செல்வாக்கு காரணமாகத் தரித்திர நாராயணனின் தொண்டன் ஆகிவிட்ட காரணத்தால் அச்சுதனின் மனத்தில் அவ்வப்போது பயங்கரமான வெறுமை பரவிவிடும். இந்த ஆண் உடலின் வலிய நெஞ்சின் ஏதோ ஒரு மூலையில் பெண்களை நிகர்த்த மென்மையான மனம் அச்சுதனுக்குள்ளே எட்டிப் பார்க்கும். அது வெவ்வேறு விதமாக வெவ்வேறு நேரத்தில் வெளிப்படும். சில சமயம் தான் பணக்காரனாகப் பிறந்ததுபற்றி வருத்தம் உண்டாகும். சிலசமயம் தன் செயல்முறையைப் பார்த்து, 'தாய் தந்தையருக்கு முன்னிலையில் அறமுறையில் பொய்யன் ஆகிறேனோ' என்று அவனுக்குத் தோன்றும். பம்பாயின் கடூரமான சமூக வாழ்க்கையில் ஒரு மூலையில் கிடக்க அவனால் இயலாது. பம்பாய் மனிதர்களின் காடு. மக்கள் கூட்டத்திலும் மனிதன் தனிமையை உணருவான். இந்தக் கொடிய, தனிமையான க்ஷணத்தின் கற்பனையால் பம்பாய் 'காய்ச்சல்' எனப்படுகிறது.

இத்தகைய கணங்கள் வருகையில் அச்சுதன் தன் அறையின் ஒரு மூலையில் போர்வையால் முகத்தை மூடிக்கொண்டு படுத்துக் கொள்வான், உள்ளுக்குள்ளேயே அழுது தீர்ப்பான். அவனுடைய ஹாஸ்டல் கூட்டாளிகள் அவன் போர்வையை இழுத்து, 'பணக்காரத்தனத்தின் பயன்' என்று அவனுக்குச் சினமூட்டுவார்கள். அது மெய்யென்றே அச்சுதனுக்குத் தோன்றும். ஏழைகளுக்கு அம்மா எங்கே, அப்பா எங்கே, அவர்கள் தங்களுக்குள்ளேயே வசிக்கிறார்கள், எப்போதும் உழைத்துக்கொண்டு இருக்கவேண்டும். இந்தத் துன்பம் எனக்குள்தான் இருக்கவேண்டும். இந்தத் தத்துவம் அவனுடைய

சொந்தக் கண்டுபிடிப்பு. உடலுழைப்பால் மனப்பலவீனத்தை மறக்க முயன்று கொண்டு இருந்தான். தாய் தந்தையரைப் பிரிந்திருக்கும் துன்பத்தைத் தன் முயற்சியாலும் அல்லது மற்றவர்களின் முயற்சியாலும் மறக்க முயன்று கொண்டு இருந்தான். தாய் தந்தையர் சகோதரிகளைப் பிரிந்து கவலைப்படும் மற்றவர்களை அவன் தேற்றுவான், ஆனால் அதையே அவனிடம் கூறினால் அவனால் பொறுக்க இயலாது. தன் உள்ளார்ந்த துயரத்தை மறப்பதற்காக அவன் மாவரைக்கும் மில்லிலும் பிரஸ்ஸிலும் ஓயாது பாடுபட்டான். இந்தச் சூழல்களில்தான் பிரஸ் ஃபோர்மன்னோடும், மாவுமில் அரைப் பைத்தியத்தோடும் நட்பு ஏற்பட்டது. அம்மாவின் ஞாபகம் மீண்டும் அவனைத் துடிக்க வைத்தது.

அவன் வெறும் பார்வை செலுத்திக் கடலை நோக்குவதைத் தேசாய் திடீரென்று பார்த்தார். அச்சுதனின் இந்தப் பலவீனம் முன்பே அவருக்குத் தெரியும். அவரும் ஒருமுறை நிலைகுலைந்திராவிட்டால், தாயாரைப் பற்றி இப்படி அச்சுதனிடம் பேசி இருக்கமாட்டார். பம்பாய்க்குச் சென்று காமர்ஸ் படிப்பதாய் அவன் கூறியபோது, தனியாக இருக்கும் தைரியம் அவனுக்கு ஏற்படும் என்று எண்ணித் தான் அவனுக்குப் பம்பாய் போக அநுமதி தந்தார். பேச்சை மாற்றுவதற்காக அவர் கேட்டார்: 'மாவு மில்லில் வேலை செய்கிறவன் கன்னடம் பேசுகிறானே?'

'ஆம், அவன் தார்வாரைச் சேர்ந்தவன், அவன் இங்கேவந்து நீண்டகாலம் ஆகிவிட்டது. அரைப் பைத்தியம், ஆனாலும் நல்லவன். மாவு மில் முதலாளிக்கு அவனிடம் மிகவும் நம்பிக்கை. அவன் வசிப்பதற்கு ஓர் அறை கொடுத்திருக்கிறார்.'

'உனக்கும் அவனுக்கும் எப்படிப் பழக்கம் ஆயிற்று?'

'ஒரு தடவை ரயிலில் கன்னட நாவல் படித்துக்கொண்டு இருந்தேன். அதன் மேல் என் பெயரோடு 'தார்வார்' என்று எழுதி இருந்தேன். அவன் எதிரில் உட்கார்ந்திருந்தான். 'உங்களுக்குத் தார்வாரா?' என்று கேட்டான். 'ஆம்' என்றேன். 'எனக்கும் தார்வார் தான். என் மாவுமில்லைப் பார்க்க வாருங்கள்,' என்றான். அந்த யந்திரத்தின் மேல் அவனுக்கு உயிரைவிட அதிகப் பாசம். வெளியே ஒரே அசுத்தம். ஆனால், அவன் வாரத்துக்கு ஒருமுறை யந்திரத்துக்கு எண்ணெய் போடுவான், எல்லாவற்றையும் பிரித்துத் துடைப்பான். ஒவ்வொரு பௌர்ணமியன்றும் யந்திரத்துக்கு ஷோடச உபசாரத்தோடு பூஜை செய்கிறான். அவனுக்கு சர்வமும் அதுதான். முதலாளி வீட்டார் பித்ரு பட்சத்தின்போது இவனைக் கூப்பிட்டுச் சாப்பாடு போடுவார்கள். சுகமாக இருக்கிறான்.'

'புத்தி உள்ளவர்களுக்குத்தான் துக்கம் உண்டாகும். இப்பேர்ப்பட்டவர்களுக்குத் துக்கம் ஏது?' — இவர்கள் ஆண்டவனைப் போன்றவர்கள் என்பதே அவர் சொல்லின் கருத்து.

'அவனை எங்கோ பார்த்திருப்பதாய் எனக்குப் படுகிறது. அவன் பெயர் என்ன?'

'பிந்தகோள வெங்கட்ராய்.'

'பிந்தகோள ராகப்பாவுக்கு இவன் ஏதாவது உறவா என்ன?'

'அது தெரியவில்லை. தனக்கு உடன்பிறப்பு ஒருவன் இருட்பதாய் ஒருமுறை சொன்னான்.'

தேசாய் சுருக்கமாக வசந்தனின் சில செய்கைகளைக் கூறினார். அவர் தங்கியிருந்த ஹோட்டலுக்குத் தகப்பனாரும் பிள்ளையும் வந்தார்கள். ஆரோக்கியத்தைக் கவனித்துக் கொள்ளுமாறு தேசாய் புத்திரனுக்கு அறிவுறுத்தினார். மறுநாள் அச்சுதன் தந்தைக்கு மலபார்ஹில் போன்ற அழகான இடங்களைக் காண்பித்தான், உயர்தர ஹோட்டலில் சாப்பிட்டார்கள், மாலையில் அவருக்கு விடை கொடுத்தான். இரண்டு நாட்களும் எப்படி கழிந்தன என்றே அவனுக்குத் தெரியவில்லை.

பிறகு அதே பிரிவு... தனிமை.

பாகம் 2

# 22. அனுபவங்கள் - புளிப்பன, இனியன

திருமணம் இளமைக்கும் நடுவயதுக்கும் இடையிலுள்ள தொரு வார்ப்புப் பாலம். மணமானபின் மாறாத மனிதனை நிறைவு பெறாத மனிதன் என்றே சொல்லவேண்டும். புதிய நம்பிக்கை, ஆசை, ஆதரிசம் ஆகியவை மூன்று நான்கு ஆண்டுகள்வரை தலைகாட்டுகின்றன, பிறகு கனவுலோகத்தை புளிப்பும் இனிப்பும் கலந்தவை ஆக்கத் தொடங்குகின்றன. 'இதோ இன்பகாலம் முன்னால் இருக்கிறது, இப்போது பொறுத்துக் கொள்ள வேண்டியதுதான்' என்று மனிதன் எண்ணுகிறான்.

கிட்டி தன் சூழலுக்குள்ளேயே உள்நோக்கு செலுத்துபவனாக ஆகிக்கொண்டு இருந்தான். இந்தச் சூழலைக் கடந்து செல்லும் விருப்பமோ, அல்லது இதன் சுவர்களை விட உயர்ந்துவிட வேண்டும் என்கிற விழைவோ அவனுக்குள் இல்லை. தன் சூழலுக்குள்ளேயே என்ன ஆகவேண்டும் அல்லது என்ன ஆகக்கூடாது என்பதைப் பற்றி யோசிக்கத் தொடங்கி இருந்தான். மனவாழ்க்கையின் ஆரம்பகாலத்தில் விருப்பங்கள் நிறைவேறியபின் காதல் உடலின் வேட்கைமீது மட்டும் ஊன்றுகிறது. உடலும் களைத்துவிடுகிறபோது (ஆனால் புத்தி களைப்பதில்லை) தம்பதி மிகுந்த உள்ளார்ந்த விருப்பத்தின் ஒருங்கிணைப்பைக் காண முயலுகின்றனர். அப்போது குழந்தைகள் அவர்களுக்கு உதவும்படியாக ஆகின்றன. குழந்தை இல்லாவிட்டால், குழந்தை இல்லாக் குறையே ஒரு வேதனை ஆகிவிடுகிறது, இந்த ஒருங்கிணைப்பு தம்பதியைக் கருணையில் சேர்த்துவிடுகிறது.

கலியாணமாகி ஐந்து ஆண்டுகள் ஆகியும் கிட்டியின் வீட்டில் குழந்தை ஒன்றும் இல்லை. ஒவ்வொரு நாளும் உடலின் வேட்கை

குழந்தை வேண்டும் விருப்பத்தின் வடிவமாகத் தோன்றலாயிற்று. மனத்தின் அச்சம் கிட்டியின் வாயிலிருந்து வெளிப்படும். அந்த ஊமை வேதனை ரத்னாவுக்குள்ளும் இருந்தது. அதிலும் அச்சம் இருந்தது. 'என்னொத்தவர்கள் இரண்டு-இரண்டு குழந்தைகளைத் தூக்கிக்கொண்டு சுற்றுகிறார்கள்,' என்று அவள் அவ்வப்போது அரற்றுவாள். அந்தக் கோதாவரிக்கும் மணம் ஆகிவிட்டது, ஆணொத்த தோற்றமுள்ள அவளுக்கு இரண்டு குழந்தைகளும் ஆகிவிட்டன. கோதாவரி பிறந்தகம் வந்தபோது, தன் அவலட்சண மான குழந்தைகளைக் கூட்டிக்கொண்டு, ராகப்பா வீட்டுக்கு ரத்னாவைப் பார்க்க வந்தாள். அந்தக் குழந்தைகளைப் பார்த்து ரத்னாவின் மனத்தில் அருவருப்பும், பொறாமையும், நம்பிக்கையும், அன்பும் ஏககாலத்தில் உண்டாயின.

குழந்தைகளுக்காகக் கிட்டியின் மனம் ஆண்டவன் பக்கம் குனிந்தது. ஆசையுள்ள அந்தக் காரிய சாதகனுக்குப் பக்தியில் மிகுந்த நம்பிக்கை இல்லை, ஆனால் தேசபக்தியின் விளைவாகச் சிறிது தாய்ப்பக்தி அவனுக்குள் ஒளிர்ந்தது. அன்னையின் பால் அவனுக்குள்ள மரியாதை வளர்ந்தது. பேரன் பேத்திகள் வேண்டும் என்ற ஏக்கம் அவளுக்கும் இருந்தது. இவ்வாறாக, சின்னஞ் சிறு குழந்தை இல்லாத குறை மூவர் மனத்திலும் ஒருவர் மீதொருவருக்கு நம்பிக்கை உண்டாகும்படி செய்துவிட்டது. ஆனால், அதே காலத்தில் ஒரு விசேஷமான நிகழ்ச்சி நிகழ்ந்தது.

கிட்டியின் வீட்டுத் தேவமூர்த்திகளால், அவனுடைய தந்தை பூஜை செய்து வந்த ஒரு கருநிற சாளிக்ராமமும் இருந்தது. அவர் காலமான பிறகு அதை ஒரு பெட்டியில் வைத்துவிட்டு சில மூர்த்திகள் மட்டும் பூஜைக்காக வெளியில் வைக்கப்பட்டிருந்தன. உபநயனத்துக்குப் பிறகு கிட்டிதான் இவற்றைப் பூஜித்து வந்தான். நவராத்திரியின் போது ஒரு முறை எல்லா தேவவிக்கிரகங்களும் வெளியில் எடுக்கப்பட்டுத் தேய்த்துக் கழுவப்பெற்று பூஜை செய்யப்படும், மீண்டும் அவை தம் இடத்தில் வைக்கப்பட்டு விடும். சாளிக்ராமம் என்றால் கிட்டிக்குக் கொஞ்சம் அச்சம். அதன் நிறமும், உருவமும், அதன் சித்திரக் கோடுகளும் அவனைப் பயமுறுத்திவிடும். அவனுடைய தாய் சாளிக்ராமத்துக்குச் சிறப்பான மரியாதை தருவாள், ஆகையால் குழந்தைப் பிராயத்திலிருந்தே அவன் மனத்தில் அதன் ஆட்சி இருந்தது.

ஒரு நாள் அந்த சாளிக்ராமம் காணாமல் போய்விட்டது.

அது நேர்ந்தது இவ்வாறு: கிட்டி வெண்ணிஹள்ள ரயில் பாலத்தின் மேல் சென்றுகொண்டிருந்தான். ரயில் தண்ட வாளத்தின் மீது நடந்துகொண்டு இருந்தான். செல்லும்போது அவன் திரும்பிப் பார்க்க மெயில் வண்டி வருவது தெரிந்தது. கிட்டி தண்டவாளம் பாதை வழியே ஓடினான், ஆனால் வண்டி

வேகத்துக்கு அவனால் எப்படி ஈடுகொடுக்க முடியும்? தவிர, தலைமீது தேவமூர்த்திகள் பெட்டி. பாலத்தின் இருபக்கங்களிலும் இருந்த மரஸ்லீப்பர்கள் முன்னால் செல்லச் செல்லச் சிறுக்கத் தொடங்கின. அவற்றின் உதவியால் நிற்கவும் இடமில்லை. எவ்வளவு ஓடினாலும் பாலம் முடிவடைவதாகத் தெரியவில்லை. கடைசியில், கிட்டி பகவானின் நாமத்தைச் சொல்லியவாறு அந்தக் கட்டைகள் மீது விரல்கள் ஊன்றி நின்றுகொண்டான். அவனுடைய கைகள் பெட்டி மூடியை அழுத்திப் பிடித்துக் கொண்டிருந்தன. இதற்குள் வண்டி தடதடவென்று எதிரில் ஓடத் தொடங்கியது. அதனுடைய சத்தத்தினால் அஞ்சிய கிட்டி மூச்சும் விடவில்லை. உடல் முற்றும் வேர்வை கொட்டியது. பகவானின் அருளால் ஆபத்தைக் கடந்துவிட்டோம் என்று அவன் எண்ணுகையில் இறுதிக் கார்டு வண்டி வந்தது. அதில் ஜார்ஜ், ஹெட் கிளர்க்கு ஜோஷி, ஆங்கடி தாசில்தார், தேசாய் ஆகியோர் கார்டோடு நின்று கொண்டு இருந்தார்கள். ஜார்ஜ் கார்டின் கரம் பற்றி, 'இல்லை, இல்லை.' என்று சொல்லிக் கொண்டு இருந்தான். கார்ட் ஜார்ஜின் கையை உதறிவிட்டுக் கையிலிருந்த பெருத்த தடியால் கிட்டியின் முதுகில் ஒரு போடு போட்டான். வண்டி முன்னால் போய்விட்டது. கிட்டி சமாளித்துக் கொள்வதற்குள் தலைமீதிருந்த பெட்டியின் மூடி திறந்துகொண்டது. உள்ளே இருந்த மூர்த்திகள் யாவுமே வெண்ணிஹள்ளவில் விழுந்து விட்டன. கிட்டி நடுவிலேயே அவற்றைப் பிடித்துக் கொள்ளக் கைகளை விரித்தான், ஆனால் அவன் கையில் சாளிக்ராமம் மட்டுமே சிக்கியது. 'போதும், சாளிக்ராமம் தப்பினால் எல்லா மூர்த்திகளும் தப்பினாற் போல்,' என்று சாளிக்கிராமத்தைக் கெட்டியாகப் பிடியில் இறுக்கிக் கொண்டான். அதைப் பையில் வைத்துக் கொள்ளுகையில், கையில் இருந்த சாளிக்ராமம் சலசலக்கலாயிற்று.

'அட, இதற்கு உயிர் இருக்கிறதா, என்ன?' என்று அவன் கைப்பிடியைப் பிரித்துப் பார்த்தான்.

'என்னை ஏன் பிடித்துக் கொண்டாய்? இவ்வளவு காலமாக நீ என்னைப் பூஜை செய்தாயா? விடு என்னை. வாய்க்காலில் தினம் என் மேல் கொஞ்சம் தண்ணீராவது படும்' என்று சொல்லிக் கொண்டே சாளிக்கராமம் அவன் கையில் குதிக்கத் தொடங்கிற்று. அது விழுந்துவிடும் என்ற பயத்தால் அவன் மீண்டும் கைப் பிடியை மூடிக் கொண்டான். 'வேண்டாம், வேண்டாம்' என்று கிட்டி மன்றாடியும் சாளிக்ராமம் சலசலத்து கிலுகிலுத்து அவன் கையிலிருந்து தாவிவிட்டது. அதற்குள் அதன் தண்மையான ஸ்பரிசத்தால் கிட்டி கிடுகிடுவென நடுங்கலானான். உடல் முழுவதும் வியர்த்து ஆறாய்ப் பெருகியது. கோ கோ கோ வென்று கூக்குரல் இட்டவாறு அவன் எழுந்து உட்கார்ந்தான்.

கிட்டி இப்படிப் பிதற்றியதால் ரத்னாவின் தூக்கமும் கலைந்துவிட்டது. அவளும் எழுந்து உட்கார்ந்து கணவனை அச்சத்தோடு பார்க்கலானாள். கெட்ட கனவு என்றவாறு கிட்டி டார்ச்சைப் போட்டுக் கடிகாரத்தைப் பார்த்தான். இரவு இரண்டு மணி ஆகியிருந்தது. கனவை விரிவாக மனைவியிடம் உரைப்பதில் பொருள் இல்லை. தவிர அச்சத்தின் நடுக்கம் இன்னும் மனத்தில் அப்படியே இருந்தது. கிட்டி கதவைத் திறந்து தாயாரை எழுப்பினான்.

பல நாட்களாய்க் கிட்டி, அன்னையோடு மனம்விட்டுப் பேசியதில்லை. அகத்துக்காரியோடு பேசினால் அம்மாவுக்குக் கோபமாகும் என்று அவளோடு பேசுவதையும் குறைத்துக் கொண்டு விட்டான். ஆனால், அன்று அம்மாவை எழுப்பி சொப்பனத்தை விரித்துரைத்தான். பீதியுற்ற ரத்னாவும் சமையல் அறையின் சுவர் மீது சாய்ந்து நின்று எல்லாவற்றையும் கேட்டாள். அச்சம் மூவர் மனங்களையும் ஒன்றாகிவிட்டது.

கங்கவ்வாவும் இவ்வளவு காலத்திற்குப் பிறகு முழுமனத்தோடு வாயைத் திறந்தாள். மகன் அஞ்சுவதைக் கண்டு அவனுக்குத் தைரியம் கூறினாள்.

'கிட்டண்ணா, பயப்படாதே, குழந்தை. சாளிக்ராமம் நமது முக்கியமான தெய்வம். அவர் இருந்தவரை, இதனிடம் மிகவும் சிரத்தையோடு இருந்தார். அவர் காலமான போது நீ சிறிய குழந்தை. அதன் பூஜை செய்வதில் தோஷம் ஏதாவது ஏற்பட்டு விடக் கூடாதே என்று தான் நான் அதை உள்ளே எடுத்து வைத்தேன். தெய்வம் கோபித்துக் கொள்வதில்லை. பக்தி மட்டும் இருந்தால் போதும், எல்லாத் தெய்வங்களும் சாந்தமாக இருக்கும். நீ பயப்பட வேண்டாம். நீ இப்போது வளர்ந்து விட்டாயா? 'இனி நீ என்னைப் பூஜை செய்யலாம்' என்று பகவான் சாளிக்ராமம் உனக்கு அறிவுறுத்தியிருக்கிறார். இதைப் பெரியவர்கள் செய்த பூஜாபலன் என்று நீ எண்ண வேண்டும். உனக்கு இன்னும் இளம்பிராயம், சாளிக்ராமத்தை மறந்து விட்டாய். ஆனால், நான் எப்படியடா குழந்தை மறக்கமுடியும்?... நமக்கு முதலில் சம்பத்து கொடுத்தது இதுதான், வறுமை வந்தபோது காத்ததும் இது தான். நீ பூஜை செய்த பிறகு தினமும் நான் ஒரு நெய் விளக்கு ஏற்றிவைக்கிறேன், அம்பி. பகவான் கோபமாக இருந்தாலும் அதிகக் கோபமாய் இருக்கமாட்டார்.'

'சாளிக்ராமத்தின் பெயரால் விளக்கு ஏற்றுகிறாயா, என்ன?'

தாயார் தலை அசைத்து ஆம் என்றாள்.

இதைக் கேட்டபிறகு, வெதிர்வெதிர்த்திருந்த ரத்னாவின் மனத்தில், கசப்பாய்ப் பேசும் அக் கிழவியின் பால் ஒரு மரியாதை உணர்ச்சி பிறந்தது. அம்மாதான் என்னைக் காத்தாள் என்று

கிட்டிக்குப் பட்டது. தன் குலதர்மமும் குலாசாரமும் உயிர்த்து உருக்கொண்ட தேவியாகவே அன்னை அவனுக்குக் காட்சி தந்தாள். அன்றே பெட்டியிலிருந்த சாளிக்ராமம் வெளிப்பட்டுத் தன்னுடைய பழைய செப்புத் தட்டில் எழுந்தருளிவிட்டது. கங்கவ்வாவும் தாய் ஸ்தானத்தில் ஸ்தாபிக்கப் பெற்றாள்.

கச்சேரிக்குப் போகுமுன் கிட்டி சாளிக்ராமத்தை வழிப்பட்டு, 'இன்று நான் தவறு ஒன்றும் செய்யாமல் இருக்க வேண்டும், என் புத்தி சரியாக இருக்கவேண்டும், என் செல்வாக்கு குறையாமல் இருக்க வேண்டும், பையில் கொஞ்சம் பணம் விழுந்தபடியே இருக்க வேண்டும்,' என்றெல்லாம் பிராத்தனை செய்துகொண்டு வீட்டைவிட்டு வெளியே கிளம்புவான். சில சமயம் சாளிக்ரா மத்தின் நிர்மால்யமான துளசி தளத்தையும் பையில் போட்டுக் கொண்டு போவான்.

தேவதைகளில் சாளிக்ராமமும், வீட்டில் தாயாரும் வழிபாட்டுக்கு உரியவர்கள் ஆனதைப் போல் அலுவலகத்தில் கிட்டிக்கு ஜார்ஜ் வழிபாட்டுக்கு உகந்தவன் ஆனான். கிட்டிக்கு மணமான நாலைந்து மாதத்திற்குப் பிறகு ஜார்ஜுக்கும் மணம் ஆகிவிட்டது. அவனுடைய வீட்டில் ஓர் ஆண் குழந்தையும் இருந்தது. ஜார்ஜ் ஸ்தாணுவைப் போல் உறுதியாக இருந்தான். அதைரியத்துக்கும் சஞ்சலத்துக்கும் ஆட்பட்டுத் தவிக்கும் கிட்டிக்குத் தன் உறுதியான வாழ்க்கையின் வாயிலாக மௌன ரூபத்தில் அவன் துணை நின்றான். வீட்டில் சாளிக்ராமத்துக்கு இடையீடு இல்லாமல் நெய்விளக்கு ஏற்றி வைக்கும் அம்மா இருந்ததை போல, ஆபிஸில் மாலையில் இருமுறை தேநீர் பருகாதவனும், வேலை செய்யாது பணம் ஏற்காதவனும், நம்பிக்கையின் பெருமையைக் கைவிடாதவனும், யாருக்கும் உபதேசம் செய்யாதவனுமான ஜார்ஜ் இருந்தான். இம்மாதிரி ஆட்கள் கிட்டியைத் தங்கள்பால் கவர்ச்சிக்கின்றவர்களே அன்றி அவர்களின் உதாரணம் இவனுடைய சக்திக்கு அப்பாற்பட்ட தாகும். நீதியின் உதயம் எங்கே என்பதற்கு ஞானிகள் பல பதில்கள் இயம்பியிருக்கலாம். சமூகவாழ்க்கையின் தேவைகளுக் காக நீதி பிறவி எடுத்துள்ளது எனில் வெவ்வேறு வித சமூகங்களில் வெவ்வேறுவித நீதிகள் தேவைப்பட்டிரா. நீதியின் உதயம் 'யத்யதா சாதி ச்ரேஷ்ட: (சான்றோன் எதைச் செய்கிறனோ) என்பதில் உள்ளது. சிலர் முயன்று கல்லாமலே நீதியைப் பேணு கிறார்கள். அவர்கள் மிக இயற்கையாகக் கீர்த்திமான்கள் ஆகிறார்கள். அவர்களுடைய வாழ்க்கையின் உறுதிப்பாட்டைக் கண்டு, உறுதியின்மையால் துயரப்படுகிறவர்கள். 'உறுதியில் தான் இன்பம் இருக்கிறது,' என்கிற தத்துவத்தின் பெருமையை அறிகிறார்கள். மாலையில் ஒரு தடவை தேநீர் பருகுவதில் தான்

இன்பம் கிடைக்கிறது என்ற சித்தாந்தத்தையும் சில சமயம் ஏற்கலாம் என்றால் இது குருட்டு நீதி, மூடக் கற்பனையாகவே இருக்கமுடியும், அல்லது இந்த எந்தத் தத்துவத்தையும் தேடாமலே ஜார்ஜைப் போன்றவர்கள் தனித்தன்மையைத் தங்கள் ஆதரிசம் ஆக்கிக் கொள்ளும்போது 'நபர்(வீர)வழிபாடு' ஆரம்பமாகி விடுகிறது. கிட்டியையொத்த சாமானியர்கள் தங்கள் சிறுமையை ஏசிக்கொண்டே இத்தகையவர்களைப் புகழத் தொடங்குகிறார்கள், அவர்களிடம் பொறாமைப்பட்டுத் தங்கள் வாழ்க்கை பேரில் துயரம் கொள்கிறார்கள். அதிர்ஷ்டவசத்தால், சாளிக்ராமத்தின் துணை கிடைத்துவிட்டால் இத்தகையோர் தலைகீழான முறையில் சிறிது உறுதி பெறுகிறார்கள்.

தனக்குத் தெரியாமலே ஜார்ஜ் கிட்டியை ஆத்மசோதனை செய்து கொள்ளத் தூண்டிக் கொண்டு இருந்தான். ஒரு நாள் கிட்டி ஒரு பெரிய ஸ்டேட்மென்டை அன்றே தயாரித்து வைத்துவிட்டு வீட்டுக்குப் போக வேண்டி இருந்தது. கச்சேரி நேரம் ஆன பின் ஜார்ஜ் கிட்டியைப் பார்க்க வந்தான். கிட்டி விளையாட்டாக, 'ஜார்ஜ், கொஞ்சம் இதைப்படி, நான் எழுதிக்கொண்டே போகிறேன். நீ உதவி செய்தால் கிருஷ்ணப்பா தோசை வாங்கித் தருகிறேன்,' என்றான். ஜார்ஜ் புன்னகை புரிந்தவாறு நின்றவாறே அதைப்படிக்கத் தொடங்கினான். அதிலேயே ஒன்றரை மணி நேரம் போய்விட்டது. மணி ஏழு அடித்துவிட்டது. வேலை முடிந்ததும் கிட்டிக்குத் தர்ம சங்கடமாகத் தோன்றியது. ஜார்ஜ் மாலையில் ஒன்றும் சாப்பிடுவதில்லை; ஆனால் அவனுக்காகவே ஒன்றரை மணிநேரம் வேலை செய்திருந்தான், அவன் தோசை வாங்கித் தருவதாய் வாக்களித்திருந்தான். என்ன ஆனாலும் வற்புறுத்தித் தோசையைச் சாப்பிடவைத்து விட வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டு அவன் ஜார்ஜோடு புறப்பட்டான். மிஷன் காம்பவுண்டு திருப்பத்தில் ஜார்ஜ் திரும்பினான். அவன் ஜார்ஜை ஹோட்டல் பக்கம் இழுக்க முயன்றான். ஜார்ஜ் மறுத்தான், இதனால் கிட்டிக்கு வருத்தமாக இருந்தது. அதை உணர்ந்த ஜார்ஜ், 'வீட்டில் ஸ்டீபன் எதிர்பார்க்கிறான். ஹோட்டலுக்குப் போனால் நேரமாகிவிடும்,' என்றான்.

உலகம் முழுவதுமே தன்னைப் பரிகாசம் செய்ய உள்ளுக்குள்ளே திட்டம் இடுவதாய் அவனுக்குத் தோன்றியது. ஸ்டீபன் (ஜார்ஜின் இரண்டாவது பிள்ளை) உடல்நலமற்று இருந்தான் என்பதை ஜார்ஜ் அவனுக்கு முன்பே கூறவில்லை. 'சிரித்தபடி ஒன்றரை மணிநேரம் என் வேலையைச் செய்து கொண்டு இருந்தான் என்பதற்காக அவனுக்குத் தோசை உண்ண வைக்க விரும்பினேனே' என்றெல்லாம் கிட்டி உள்ளுக்குள் கவலைப்பட்டான்.

ஒரு தடவை கிட்டி கிறிஸ்துமஸின் போது அவனுடைய வீட்டுக்குப் போனான். ஸாராவின் கட்டளையை நிறைவேற்று வதில் கவனமாக இருந்த ஜார்ஜைக் கண்டு, 'இவன் சதிபக்த சிரோமணியாக இருக்கிறானே. வீட்டில் அம்மையின் ஆட்சி. ஜார்ஜ் பெண்டாட்டி தாசன்' என்பது கிட்டிக்கு வெகு திருப்தி உண்டாயிற்று. கிட்டியின் வீட்டிலோ நிலைமை முற்றிலும் தலைகீழ். திருமண உற்சாகம் ஓய்ந்தபிறகு ரத்னாவும் மற்ற பத்தினிகளைப்போல் பத்தினி ஆகிவிட்டாள். ஆனால் ரத்னா நோயுற்று விட்டால் கிட்டி இரவும் பகலும் கவலைப்படுவான். அப்போது கச்சேரி வேலையும் செம்மையாக நடைபெறாது.

ஸாராவின் பிரசவத்தின் போது கிட்டி சைக்கிளில் சிவில் ஆஸ்பத்திரிக்குப் போனான். காத்திருக்கும் அறையில் உட்கார்ந்து ஜார்ஜ் செய்தித்தாள் வாசித்துக்கொண்டு இருந்தான். பக்கத்து வார்டில் ஸாரா முனகும் சத்தம் கேட்டுக்கொண்டு இருந்தது. அதைச் செவியுற்று கிட்டியின் மனம் வாடியது. ஜார்ஜின் பக்கம் பார்த்தான்: அவனோ சித்திரங்களோடு இருந்த செய்தித்தாளில் மூழ்கி இருந்தான்.

# 23. கிட்டியின் சுற்றுப் பிரயாணம்

**அதகேன ப்ரயுக் தோஅடயம் பாபம் சரதி பூருஷ:**
**அநிச்சந்நபி வார்ஷ்ணேய பலாதிவ நியோஜித:**

விருஷ்ணிகுலத்தில் தோன்றிய கிருஷ்ணா! எதனால் தூண்டப்பட்டு மனிதன் தான் விரும்பாமலிருந்தும், அரசனால் ஏவப்பட்ட பணியாள் போல் வலிமையோடு தூண்டப்பட்டது போல் பாவத்தைச் செய்கிறான்? — கீதை.

ஆசையை அன்றி, மனிதனைப் பாவம் செய்யும்படி தூண்டக்கூடிய சக்தி எது? — இக் கேள்வியைத் திரேதாயுகத்தி லிருந்து மனிதன் கேட்டுக் கொண்டு வருகிறான். அதற்குப் பதில் எதுவாக இருந்தாலும் சரி, தவறு செய்துவிட்ட பின்னர் அதற்காகப் பச்சாத்தாபப்படுகிறவனை தர்மாத்மா என்றே கூறவேண்டும். சுற்றுப்பிரயாணம் செய்யும்போது வழுக்கி விழாத அரசு அதிகாரியைத் தர்மராஜா எனக் கூறவேண்டும், அல்லது, வடிகட்டின முட்டாள்.

அக் காலத்தில் சுற்றுப்பயணம் செய்யும் காலத்தில் ரிவென்யூ இலாக்கா ஊழியர்கள், போர்க்காலத்தில் பாசறையிலிருந்து விடுபட்ட ராணுவவீரனைப் போல் இருப்பார்கள். வீட்டை விடுத்துத் தூரம் போனதும் ஒவ்வொரு நாளும் சுவையான உணவு,

மக்கள் மீது அதிகாரம், அரட்டை, தங்கள் ஆணவத்தை அடிக்கடி சோதனை செய்து பார்க்கும் விருப்பம் — இவையெல்லாம் கூடி 'ஏகைகமப்யநர்தாய' (ஒவ்வொன்றுமே கேடு தரும்) போல் ஆகிவிடுகிறது. கீழே வேலை செய்வோர், கௌடா (வட இந்தியாவிலுள்ள ஜாட்களைப் போன்று மைசூரில் உள்ள பெருமைமிக்கதோர் இனம். பெரும்பாலும், விவசாயிகள். விவசாயிகளுக்கு இடையில் இச்சொல் மரியாதையைக் குறிக்கப் பயன்படுகிறது), குல்கர்ணி வேலைக்காரர்களைப் போல் முன்னும் பின்னும் ஓடுகிறார்கள். தட்டிக் கேட்பார் இல்லாத இத்தகைய நாட்களில் சுற்றுப்பிரயாணத்தின் போது, அநுபவசாலி யான ஒரு குமாஸ்தாவும்கூட இருந்துவிட்டால் சொல்ல வேண்டுமா என்ன?

இம்முறை ஹெட் கிளார்க்கு ஜோஷி ராம்ராயுடன் கிட்டி சுற்றுப்பிரயாணத்திற்குப் போக நேர்ந்தது. அவனுடைய சுற்றுப் பிரயாணங்கள் பிரபலமானவை. அவனுடைய பராக்கிரமம் ரிவென்யூ துறையின் ரிகார்டுகளில் பொன் எழுத்துக்களால் எழுதத் தக்கவை. ஒருமுறை மேய்ச்சல் நிலத்தில் ஒரு கிராமத்து ஸ்திரீயை, 'உனக்கு அபராதம் விதிப்பேன்,' என்று பயமுறுத்தி விட்டான். ஒருமுறை தாசில்தாரை முன்னால் உட்காருமிடத்தில் உட்கார வைத்துவிட்டுப் பின் அறையில் காதல் லீலை நடத்தினான். அவனைப்பற்றி இப்படி எத்தனையோ கதைகள் பிரபலமாக இருந்தன. அவனுடைய நண்பர்கள் சீட்டாடும்போது அவன் உடைய இப்புகழை அடிக்கடி பாடுவார்கள். 'உங்களைப் பற்றி நான் இப்படி கதைகள் சொல்ல முடியாதா, ஓய்? உங்கள் புகழை நம்மால் வருணிக்கத் தகுமோ?' என்று தான் அவன் அடிக்கடி பதில் சொல்வது வழக்கம். ஆனால் தன்மீது ஏற்றப்பட்ட கதைகளை அவன் ஒருகாலும் மறுத்ததில்லை. பேச்சோடு பேச்சாகக் கிட்டியும் அவனை இம்மாதிரி கேலி செய்ய ஆரம்பித் தான். ஆனால், இந்த ஜூனியர் மோஸ்டின் கேலி ஜோஷி ராம் ராய்க்குப் பிடிக்கவில்லை. கிட்டியின் பக்கம் சரேலென்று திரும்பி, 'ஏய் கிருஷ்ணா, பிறரைப் பார்த்து வயிற்றெரிச்சல் படாதே. சாப்பிட்டது செரிக்காது. உன் குட்டையும் உடைத்து விடுவேன்,' என்று அறைகூவினான். 'எல்லாம் உங்கள் ஆசீர்வாத மாக இருக்கட்டும்' என்றான் கிட்டி. ராமராய் முன்பின் பாராமல், 'நீ ஆண்பிள்ளை இல்லை என்று எனக்குத் தெரியும்,' என்று கூறிவிட்டான். சீட்டாடுகிறவர்கள் எல்லாரும் கடகடவென்று சிரித்துவிட்டார்கள். இது ராமராயின் வழக்கமான ஏளனம். தனக்குக் குழந்தை இல்லாத குறையை இந்தக் கேலி சுட்டிக் காட்டுகிறது என்று கிட்டிக்குப் பட்டதும் அவன் சிந்தனை வசப்பட்டான். இது மட்டும் அல்ல, மற்றொரு கிளார்க்கு அவனை

உசுப்பிவிடும் விதத்தில், 'ராமண்ணா, ஏன் இப்படி அவசரப்படுகிறீர்? குழந்தைகளின் சுகம் என்ன என்று உமக்குத் தெரியாதா? நாலுநாள் ஜாலியாக இருக்கட்டுமே. ஒரு தடவை ஆரம்பித்து விட்டான் என்றால் அப்புறம் நீரும் பின்தங்க வேண்டியதுதான்,' என்றான். இன்னொருவன் வேறுவிதமாய்ப் பேசினான்: 'டேய் கிருஷ்ணா, மாமனாரைப் பார்த்துத்தான் கொஞ்சம் கற்றுக்கொள்ளேன். மீசை நரைத்தும் ஆசை விடவில்லை. அவனுடைய மாப்பிள்ளை ஆகியும்கூட நீ என்ன பெயர் எடுத்து விட்டாய்?'

ஜோஷி ராமராயுக்குக் கிட்டியை வெறும் சொல்லால் அடித்துவிட்டு ஓய்கிற நினைப்பு இல்லை. அவன் ஒரு திட்டம் வைத்திருந்தான். அவனுடைய பிடியில் சிக்கிய கிளர்க்குகள் எல்லாருமே ஏதாவதொரு தப்பு வேலை செய்துவிட்டு ராமராயிடம் சொல்வதற்கு ஒரு வாய்ப்பு ஏற்படுத்தி விடுவார்கள். அவர்கள் ராமராயைப் பரிகாசம் செய்யத் தொடங்கினால், 'உங்களுடைய வண்டவாளம் எனக்குத் தெரியும்,' என்று அவர்கள் வாயை அடைத்து விடுவான். கிட்டியைப் பற்றியும் ராமராய் தன் நண்பர்களுக்கு முன் சபதம் செய்திருந்தான்: 'இந்தப் பயலுக்குக் கொழுப்பு ரொம்ப ஏறிவிட்டது. இம்முறை இவன் கொழுப்பை இறக்கிவிடுகிறேன்' என்று.

கொழுப்பும் இறக்கப்பட்டுவிட்டது.

அந்தப் பயங்கரமான அநுபவம் கிட்டியை வேரோடு உலுக்கிவிட்டது. அவன் எப்படி அதற்குத் தயாரானான் என்று தெரியவில்லை. அவனுக்கே புரியவில்லை. அந்தக் குப்பைகூளத்தையும் ஆபாசத்தையும் பார்த்துக்கூட அவன் ஏன் பின் வாங்கவில்லை என்றே தெரியவில்லை. ராகப்பாவின் மருமகன் என்ற ஆங்காரமோ, சுற்றுப்பிரயாணத்தால் வந்த செருக்கா, ராமராயின் தூண்டுதலா, புதிய அநுபவம் காணும் ஆர்வமா — அவனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. அந்த ஒளிவுமறைவு, அந்த அச்சம், அந்த அருவருப்பு — ஒவ்வொன்றையும் நினைவுபடுத்திக் கொண்டு, 'எப்படி இப்படி நான் இதைச் செய்தேன்' என்று அடிக்கடி நினைப்பான். ஒவ்வொரு விஷயமும் அவனுடைய மனத்தில் திரும்பத் திரும்ப வட்டமிடும். 'கிருஷ்ணா, நீ முதலில் போய்வா, நான் இங்கே நிற்கிறேன்,' — இதை ஞாபகப்படுத்திக் கொண்டு தூ-தூ-தூ என்று துப்பிக்கொண்டு போவான். கிளர்க்குகளுக்கு இடையில் இச் செய்தி பரவிவிட்டது. அவர்களுக்கு முன்னால் தன் காகிதங்களைப் பார்க்கும்போதும்கூட அவன் தூ-தூ என்று கொண்டே இருப்பான். 'என்ன அது? இந்த ஆபாசத்தைச் சகிக்க முடியுமா' என்று எண்ணுவான் அவன்...

ராமராயின் கோஷ்டியில் அவனுக்குத் 'தூ குல்கர்ணி' (குமாஸ்தா) என்ற பெயரே பிரபலம் ஆகிவிட்டது. 'காம்ப்' முடிவாகும் நாள். இவ்வளவும் செய்தவர்கள், தீண்டாமையில் நம்பிக்கை உள்ள கிளார்க்குகள் நெய்யில் பொறித்த பக்கோடாவைச் சாப்பிட்டுக் 'காம்ப்'பைக் கலைப்பது என்று தீர்மானம் செய்தார்கள். ராமராய் கௌடாவை மிரட்டினான்: 'ஏ கௌடா, இன்றைக்குத் தரமான வெண்ணெய் வரவேண்டும். ஒரே வீட்டிலிருந்து வரவேண்டும், தரகு மண்டிபோல் இங்கே இருந்து கொஞ்சம் அங்கேயிருந்து கொஞ்சமாக சேர்த்ததாய் இருக்கக் கூடாது, பசுவுடையது கொஞ்சம், எருமையுடையது கொஞ்சம், வெள்ளாட்டுடையது; கொஞ்சம், கழுதையுடையது கொஞ்சம் என்று கலப்படமாய்க் கொண்டு வந்தால் தாசில்தார் எப்படி சாப்பிடுவார்? இதை நீதான் யோசித்துப் பார்க்க வேண்டும்.' கௌடா அவனுடைய ஆணைப்படி தனக்கு நம்பகமான குடியானவன் வீட்டிலிருந்து வெண்ணெய் கொண்டு வந்து கொடுத்தான். தவனப்பா வெண்ணெய் கிராமம் முழுவதும் புகழ்பெற்றது. வெண்ணெய் காய்ச்சினார்கள். நெய் உருகி அழகான சிவப்பு வர்ணத்தில் வந்தது. 'இவ்வளவு நல்ல நெய்யை சுற்றுப்பிரயாணம் முழுவதிலும் பார்த்ததில்லை. புறப்படுவதற்கு முன் இந்த வெண்ணெய் கொண்டுவந்த கௌடாவுக்கு இன்னும் இரண்டு ரூபாய் இனாம் தரவேண்டும்' என்று ராமராய் அறிவித்தான். இதற்குள் லச்சப்பாவுக்கு ஒரு யோசனை தோன்றியது. 'இந்த நெய்யில் அம்பாடி இலை போட்டால் மிகவும் ருசியாக இருக்கும்,' என்றான். பார்த்தால் அம்பாடி இலை ஒரு நாளுக்கு முந்தியே தீர்ந்துவிட்டது தெரிந்தது. இலை கொண்டுவரும் கீழுள்ள ஊழியனை ராமராய் விரட்டினான். அவன் கிராமம் எங்கும் தேடிவிட்டு இலை கிடைக்காமல் கறுப்பு இலை கொண்டுவந்தான். முன்பே தெரிந்திருந்தால் வேறு கிராமத்திலிருந்து இலை கொண்டுவர ஊழியனை அனுப்பி இருக்கலாம். இங்கே நெய் நன்றாகக் கொதிக்கத் தொடங்கியது.

ராமராய் கத்தினான்: 'போடு, கறுப்பு இலைகளையே போடு. நமக்கு என்ன நஷ்டம்?' அவனுடைய நண்பர்கள், 'எனக்கு ஒன்று, எனக்கு ஒன்று' என்று இருபத்தைந்து முப்பது இலைகளை கொதி நெய்யில் போட்டார்கள். நெய்யின் நறுமணத்தோடு இலையின் நறுமணமும் வெளியில் பரவியது. அடுப்பு மீதிருந்த பாத்திரம் இறக்கப்பட்டது. நெய்யின் ஜொலிப்பு மங்கிவிட்டது. நுரை எழுந்துகொண்டு இருந்தது. அட, இதென்ன, நெய் எல்லாம் பச்சை ஆகிவிட்டது.

'நெய் என்ன செய்யும்? நூறு இலை போட்டு விட்டீர்களே?' என்றான் ராமராய்.

'வெண்ணெயில் அவன் விஷம் கலந்திருப்பானோ?' என்று கூச்சலிட்டான் லச்சப்பா.

அதைக் கேட்ட ராமராய் கடகடவென்று நகைத்து உரத்துக் கூறினான்: 'கூப்பிடு அவனை' ஊழியன் வந்ததும் அவன், 'போ, வெண்ணெய் கொடுத்தானே, அவனை அழைத்துவா. கூடவே அந்தக் கௌடாவையும் கூட்டிக்கொண்டு வா.'

அந்த அப்பாவி அப்போதுதான் சாப்பிட உட்கார்ந்திருந்தான். கிலி கொண்டு எழுந்து ஓடிவந்தான். கௌடா அவனுக்கு முன்பே அங்கே வந்து நின்று கொண்டு இருந்தான். ராமராய் விசாரணையைத் தொடங்கினான்:

'ஏனப்பா, உன் பெயர் என்ன?'

'என் பெயர் தவனப்பா, எஜமான்.'

'இந்தக் கிராமத்தில்தான் இருக்கிறாயா?'

'ஆம், எஜமான்.'

'உன் நிலத்துக்கு இந்தத் தடவை அதிகமாய் வரி போட்டிருக்கிறதா?'

வெண்ணெயினால் மகிழ்ந்துபோன எஜமானர் வரியைக் குறைக்கப் போகிறார் என்று எண்ணித் தவனப்பா, 'ஆம், எஜமான்,' என்றான்.

'அப்படியானால் நீ எங்களுக்கு விஷம் வைக்கப் பார்த்தாய்?'

'என்ன சொல்கிறீர்கள், எஜமான்?' — என்றான் தவனப்பா, விஷயம் விளங்காத காரணத்தால்.

ராமராயிக்குத் திடீரென்று கோபம் வந்துவிட்டது.

'விஷம்டா, விஷம். உன் பெண்டாட்டியை... விஷம் சாப்பிட்டுச் செத்துவிடுவோம் என்று பார்த்தாயா? இப்போதே வெறிநாய்க்கு வைத்துக் காட்டுகிறேன். வெண்ணெயில் விஷம் கலந்து ஆபீசர்கள் எல்லாரையும் கொல்ல நினைத்தாயா?... நிசம் சொல்லு... போக்கிரிப் பயலே... அந்தப் பாத்திரத்தில் பார்.'

திகைப்பு கொண்ட தவனப்பா பாத்திரத்தில் எட்டிப் பார்த்தான். நெய் பச்சையாக இருப்பதைப் பார்த்து அஞ்சிவிட்டான்.

'அடே அப்பா, இது ஏன் இப்படி ஆகிவிட்டது? எனக்கு ஒன்றும் புரியவில்லை எஜமான்.'

'எலே, உனக்கு எப்படிப் புரியும்? நீ ரொம்ப நாணயஸ்தன் இல்லையா? நீ அரசாங்க ஆபீசர்களுக்கு விஷம் கொடுக்கிறவன்... ஏண்டா, ஆபீசர்களைக் கொன்று பெரிய மனுஷ்யன் ஆகப் போகிறாயா? சரி, நாலுநாள் ஜெயிலிலே இருந்தால் எல்லாம்

சரியாகிவிடும். லட்சுமணராவ், கம்ப்ளெயிண்ட் எழுதச் சொல்லும். இவனுடைய ஸ்டேட்மென்டும் வாங்கிக் கொள்ளும். போலீஸ் இன்ஸ்பெக்டர் ஐயாவும் இங்கேயே இருக்கிறார்... கௌடா, நீங்கள் இதற்கு சாட்சி சொல்ல வேண்டும்.'

'அட அப்பா, எனக்கு ஜயில் ஏன்....'

'கௌடா, நீங்கள் சொல்லுங்கள் அவனுக்கு, என்ன செய்திருக்கிறான் என்று.'

அதிக வரி விதித்ததால், விஷம் வைத்து அரசு ஆபீசர்களைக் கொல்ல தவனப்பா முயன்றதை கௌடா அவனுக்கு விளக்கினான். இந்தக் கிரிமினல் வழக்கு அவன் மீது தொடரப்படும்... வெலவெலத்துப் போன தவனப்பா ராமராயின் கால்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். ராமராய் கௌடாவுக்கு விரல்களால் ஜாடை காட்டி இருபத்தைந்து ரூபாய் அபராதம் கட்டச் சொன்னான். தவனப்பா தலைமேல் கால் வைத்து ஓடி வீட்டுக்குப் போனான். வீட்டிலிருந்து பத்து ரூபாய், எங்கிருந்தோ பத்து, மறுபடியும் எங்கிருந்தோ ஐந்து திரட்டிக்கொண்டு ஓடோடி வந்தான். ராமராயின் காலடியில் வைத்துக் கைகுவிக்கத் தொடங்கினான். ராமராய் கம்பீரமாக, 'தண்டனை விதிப்பதோடு வேலை முடியவில்லை, தவனப்பா. மறுபடியும் இம்மாதிரிக் காரியம் செய்யவில்லை என்று உன் குல தேவதை பேரில் சத்தியம் செய்யவேண்டும். செய்,' என்றான். தவனப்பா மார்பு மீது இரண்டு கைகளையும் வைத்துக்கொண்டு ஆணையிட்டுவிட்டு, பெரிய ஆபத்திலிருந்து மீண்டோம் என்று எண்ணிக்கொண்டு அங்கிருந்து நழுவிவிட்டான்.

கௌடாவை அனுப்பிவிட்டு அதே நெய்யில் அரசு ஊழியர்கள் அனைவரும் தவனப்பா பெயரைக் கூறி வாழ்த்தியவாறு வயிறார உண்டு முடித்தார்கள். இருபத்தைந்து ரூபாயைத் தட்சிணையாகக் கருதி தங்களுக்குள் முறைப்படி பங்கிட்டுக் கொண்டார்கள்.

கிட்டியின் கையிலும் மூன்று ரூபாய் வந்தது. அவன் வெட்கத்தையே விட்டுவிட்டான். 'இப்போதைக்கு இது வரவு' என்று மூன்று ரூபாயை ஜேபியில் போட்டுவிட்டான்.

ஊருக்குத் திரும்பிய பிறகு கச்சேரியில் ராமராய் கிட்டியின் முதுகைத் தட்டிக் கொடுத்துப் புகழ்ந்தான்: 'நீ உண்மையான ஆண்பிள்ளை. எங்களைப் போன்றவர்கள் முதல் சுற்றுப் பிரயாணத்திலேயே இவ்வளவு ஆழத்தில் இறங்கியதில்லை. நீ ரிகார்டு ப்ரேக் பண்ணிவிட்டாயே.' மற்றவர்களும் கிட்டியிடம், 'உன்னைப் போல் எங்களுக்குத் துணிச்சல் இல்லை,' என்றார்கள். மற்றவர்கள் செய்வதையே தானும் செய்வதாய்க் கிட்டி

எண்ணியிருந்தான்; ஆனால் அவன் மற்றவர்களை மிஞ்சி விட்டதாக இப்போதுதான் அவனுக்குப் புரிந்தது.

கிட்டி ஏதாவது தவறு செய்துவிட்டுப் பிறரிடம் ஏச்சு கேட்க நேர்ந்தாலும், நான் இவ்வளவு கெட்டவனாக இருந்தாலும், ஆபீசில் ஜார்ஜைத் தவிர மற்ற எல்லாரையும்விடத் தான் எவ்வளவோ நல்லவன் என்று அவனுக்குள் மறைவாக ஒரு கர்வம் இருந்தது. இது அவனுடைய நீதியுணர்ச்சியைக் காத்தது. ஆனால் இப்போது அக் கர்வம் பொய்யானது என்று பிரமாணத்துடன் வெளியாகிவிட்டது. நீதியுணர்வில் ராமராயைவிடத் தான் தாழ்ந்தவன் என்பதை அவன் மனம் இப்போதும் ஏற்கத் தயாராக இல்லை, ஆனால் உண்மையான நிலைமையில் அதை மறுக்கவும் நண்ணாது. அவனைச் சுற்றிலும் உட்கார்ந்து இருக்கும் நீதியுணர்வு அற்றவர்களுக்கும்கூட அவர்களை அறியாமலேயே ஒரு நீதியுணர்வு இருக்கத்தான் செய்கிறது. அவனுக்காகவும் அது இருக்க முடியாதா என்ன? இந்தக் கேள்விகள் திரும்பத் திரும்ப அவன் மனத்தில் சுழலத் தொடங்கின, ஆனால், அவனுக்கு யாதொரு பதிலும் கிடைக்கவில்லை.

ரத்னாவின் அருகில் செல்ல அவனுக்குப் பயமாக இருந்தது. அம்மாவோடு பேச வெட்கமாக இருந்தது. தான் தீண்டுவதால் சாளிக்ராமம் களங்கப்பட்டு விடுமோ என்று அவனுக்கு அச்சம் உண்டாக ஆரம்பித்தது. வாழ்க்கையே அவனுக்கு ரஸமற்றதாய்த் தோன்றியது. தூக்கம் சரியாக வரவில்லை. தூக்கத்தில் பிதற்றும் பழக்கம் மிகுந்துவிட்டது. அடிக்கடி மௌனமாய்க் குந்திக் கொண்டிருக்க மனம் அவாவியது. இந்தத் தாமச மௌனத்தி லிருந்து அவனை எழுப்பி யாராவது அவனுடன் பேச முயன்றால் அவனுடைய ரஜோகுணம் முழுவதும் சினத்தில் வெளிப்பட்டது.

ஆபீசில் அவனுடைய பராக்கிரமத்தின் புகழ் பரவ நேரம் ஆகவில்லை. மற்றவர்கள் ராமராயின் பலி ஆனபோது ஏனோ இவ்வளவு சந்தடி எழவில்லை. கிட்டிக்கு நீதியுணர்வு பற்றி இருந்த கெட்ட கர்வம் காரணமாகவோ, அல்லது அவனுக்கு வயது குறைவு என்பதாலோ, அல்லது பச்சாதாபப்படும் முகம் காரணமாகவோ மற்றவர்களுக்கு அவனைப் பற்றி மிகுந்த ஆர்வம் காணப்பட்டது.

ஒருகால், இந்த விஷயம் ஜார்ஜின் காதுக்கும் எட்டி இருக்குமோ என்று அவனுக்குப் பயம் உண்டாக ஆரம்பித்தது. பிறர் வாயிலாக அவனுக்குத் தெரிவதைவிட, தானே நேரில் சொல்லிவிடுவது நல்லது என்று கிட்டிக்குப்பட்டது. தவிர, தன் உள்ளத்தில் உள்ளதை உரைப்பதற்கு உலகத்தில் ஜார்ஜைத் தவிர அவனுக்கு வேறு யார் இருக்கிறார்கள்? ஒருநாள் அவன்

ஜார்ஜிடம் எல்லாவற்றையும் கக்கிவிட்டான். அப்போதைய தன் மனோநிலையை இயன்றவரை தெளிவுபடுத்தினான். ஆபீஸ் முழுவதும் இக்கதை பரவி இருந்தும் ஜார்ஜிடம் அதை யாரும் கூறவில்லை. அவனுடைய மனத்துயரத்துக்கு ஜார்ஜிடம் பதில் ஏதும் இல்லை. உபதேசம் செய்யும் ஆற்றலும் அவனுக்கு இல்லை. தன் தூய ஒழுக்கத்தைப் பிறருக்கு முன்னால் வைக்க அவனால் முடியும். பார்ப்போர் அதிலிருந்து எவ்வளவு வேண்டு மானாலும் கற்றுக் கொள்ளலாம். கிட்டியின் மனவேதனை அவனுக்குப் புரிந்தது. அவன் இந்த அறிவுரை மட்டும் நவின்றான்: 'நீங்கள் உங்கள் ஆரோக்கியத்தைக் கவனித்துக் கொள்ளுங்கள்.'

# 24. தேசாயோடு போராட்டம்

ராகப்பா வெற்றிலை போட்டபடி இருந்தவன் நடுவில் நிறுத்திக் கொண்டு சொன்னான்: 'இம்மாதிரி போலிப் பெரிய வர்களை வழிக்குக் கொண்டுவர வேண்டும். பண விவகாரத்தில் விட்டுக் கொடுப்பதால் லாபமில்லை. இப்போது யாருக்காவது மானம் போகும் என்றால் உனக்குத்தான் போகும், தேசாயுக்கு என்ன போகும்?'

'உங்கள் வீட்டுப் பணத்தை அமுக்கி வைத்துக்கொண்டு இருக்கிறான். வரதட்சிணைப் பணத்தையும் அமுக்கி வைத்துக் கொண்டு இருக்கிறான். இப்படியே எல்லாவற்றையும் விழுங்கி விட்டுப் போய்விடுவேன், நீயோ வட்டிக்குப் பணம் வாங்கி வாங்கித் தேய்ந்து கொண்டு இருக்கிறாய். இது என்ன நியாயம்! நீ பேச்சை எடு. பேச்சு நம்மிடம் வந்த பிறகு என்ன செய்யவேண்டும் என்று யோசிக்கலாம்.'

விஷயம் இதுதான்: கங்கவ்வா வரதட்சிணைப் பணம் வாங்கித் தன் இரும்புப் பெட்டியான தேசாயிடம் வைத்து விட்டாள். வரதட்சிணையை நம்பிக் கிட்டி கடன் வாங்கி இருந்தான். கலியாணக் குதூகலத்தில் அம்மாவிடம் இதைப் பற்றி ஒன்றும் பேசாமல் கிட்டி மௌனமாக இருந்துவிட்டான். 'ஒரு விதத்தில் இது நல்லதுதான். என் சம்பளத்திலிருந்து கொஞ்சம் கொஞ்சம் கடனுக்குக் கட்டிக்கொண்டு போவேன். அதனால் இந்த ரூபாய் மிச்சம் ஆகிவிடும்,' என்கிற உற்சாகத்தோடு அவன் தன் மணவாழ்க்கையை ஆரம்பித்தான். முதலிலேயே பணத்தட்டாக இருந்தவனுக்கு இந்தச் சுமை மிகுதியாகப்பட்டது. சில மாதங்கள் சிரமப்பட்டுக் கடனில் கொஞ்சம் அடைத்தான். இனியும் கஷ்டப்பட அவனுக்கு மனமில்லை. லஞ்சப்பணம் சாயா சிற்றுண்டியிலேயே பறந்துவிடுகிறது. இவ்வாறு இரண்டு

வருடங்களாகக் கடனுக்கு வட்டி கொடுக்கவும் பிடிக்கவில்லை. மூன்று மாதங்களுக்கு ஒருமுறை வட்டி கட்ட வீட்டிலிருந்து மனவருத்தத்தோடு போவான். கலியாண உற்சாகமும் இப்போது அடங்கிவிட்டது. தன் கஷ்டத்தைப் பார்த்தாவது அம்மா தானாகவே வரதட்சிணைப் பணத்தைக் கொடுத்து விடுவாள் என்று எண்ணுவான். ஆனால் அவளோ இவ்விஷயத்தில் கொடிய மௌனம் சாதித்து வந்தாள்.

ராகப்பாவுக்கு இந்த விஷயங்கள் எல்லாம் தெரியும். ரத்னா சிற்சில சமயங்களில் இதைப்பற்றிக் கூறுவாள். ஆனால் அவன் தானாகவே இதைப்பற்றி வாய் திறக்க விரும்பவில்லை. கிட்டியே பேச்சைத் துவக்க வேண்டும் என்று எதிர்பார்த்துக் கொண்டு இருந்தான். தேசாயின் செயற்கைப் பெருமையை அவனால் பொறுக்க முடியவில்லை. அவருடைய வெல்ல முடியாத தனித் தன்மை அவனுடைய சஞ்சல குணாதிசயங்களை ஏளனம் செய்வதாய் அவனுக்குப் பட்டது. கங்கவ்வாவின் விருப்பப்படி, மணமான ஓராண்டுக்குப் பிறகு தேசாய் ராகப்பாவைக் கூப்பிட்டுக் கிட்டியைத் தத்து எடுத்துக் கொள்ளும் விஷயம் பற்றிப் பேச் செடுத்தார். மணமானபிறகு ராகப்பாவின் விருப்பமும் மந்தப்பட்டு விட்டது. 'இந்த வேலை இரண்டாவது பெண்ணுக்குக் கலியாணம் ஆனபிறகு நடக்கும்' என்று ராகப்பா பதில் சொல்லி இருந்தான். 'பேச்சு அப்படி நடக்கவில்லை' என்று தேசாய் சொன்னார். 'அது தான் லோக சம்பிரதாயம்', என்று தேசாய் சொன்னார். 'இரண்டாம் பெண் கலியாணத்துக்கு உங்கள் விருப்பம் போல் செலவு செய்யுங்கள். ஆனால் சுவீகாரச்சடங்கு நடந்துவிட வேண்டும்'. ராகப்பா சொன்னான் 'முதலில் கலியாணம் ஆகட்டும், பிறகு எல்லாம் கிட்டண்ணாவுக்குத் தான்'. தேசாய் பதில் கூற முடியவில்லை. அப்படியே ஆனாலும் நாலு ஆண்டுகள் விஷயம், ஆகையால் தேசாய் கங்கவ்வாவுக்கு ஆறுதல் உரைத்தார்.

இதனால் தேசாய்க்கு முழுத் தோல்வி ஏற்பட்டு விடவில்லை என்றாலும் சற்று கர்வபங்கம் ஆயிற்று. கூடவே அவருக்கு இவன்மேல் கொஞ்சம் சந்தேகமாகவும் இருந்தது. ஆனால் ராகப்பாவுக்கு முன்னால் கங்கவ்வாவைச் சமாதானப்படுத்தினார். 'சரிதானே. இரண்டாவது கலியாணத்துக்கு இன்னும் எவ்வளவு காலம் இருக்கிறது. நம் ஒப்பந்தம் இப்போது ஊர்ஜிதம் ஆகிவிட்டது.' ஆயினும் அவர் ராகப்பாவிடம், 'ஒப்பந்தத்தை நீங்கள் மீறி விட்டால் என்ன செய்வது?'

ராகப்பா மனத்துக்குள் கறுவினான் : 'ஓஹ்ஹோ, என்னிடம் இப்படிப் பேச என்ன துணிச்சல் உனக்கு,' அன்று முதல் தேசாயை வளைத்துக் கொள்ளச் சமயம் பார்த்துக் கொண்டு இருந்தான்.

அவனுக்கு அந்த வாய்ப்பை உண்டாக்கித்தர அவனுடைய முட்டாள் மருமகனுக்கு இவ்வளவு ஆண்டுகள் ஆயின. இறுதியில் கிட்டண்ணா அந்த வாய்ப்பைக் கொடுத்தேவிட்டான். ஒரு நாள் அவன் தன் மாமனாரைச் சந்தித்துத் தன் வரதட்சிணையையும், கடனையும் பற்றி விரித்துரைர்த்தான். 'எனக்கு என் தாயாரின் புத்தியில் நம்பிக்கை இருக்கிறது, உண்மை தான். அவள் செய்வதெல்லாம் என் நன்மைக்காகவே செய்கிறாள். ஆனால் நான் வட்டி கட்ட வேண்டியிருக்கிறது, ஜார்ஜுக்கு முன்னால் பொய்யன் ஆகவேண்டி இருக்கிறது. தவிர, அம்மா வைத்திருக்கிற பணத்துக்கு எழுத்தில் ஆதாரம் கிடையாது. இந்தக் காலத்தில் தஸ்தாவேஜுகள் எல்லாம் சரியாக இருந்தாலும் ஏமாந்து போக நேருகிறது. இந்த மாதிரி விவகாரங்களை நாம் தினம் கச்சேரியில் பார்க்கிறோம். தேசாய் மிகவும் நல்லவர், ஆனால் இப்போது காலம் கெட்டுக்கிடக்கிறதே.'

கிட்டியைத் தேசாய்க்கு விரோதமாக நிறுத்தி வைக்க வேண்டும் என்று ராகப்பா முன்பே யோசித்திருந்தான். இதற்கு முக்கியமான காரணம், தத்து எடுத்துக் கொள்வதைத் தள்ளிவைத்ததால் அவனைப் பற்றிக் கிட்டிக்கு சந்தேகம் உண்டாகி இருக்கும், கிட்டியிடம் தேசாயின் செல்வாக்கு ஓங்கி இருக்கும் என்பதே. அதைக் குறைத்துக் கிட்டியைத் தன் பைக்குள் போட்டுக் கொள்ள வேண்டும். இத் தருணத்தைப் பயன்படுத்திக் கொண்டு அவன் தன் நிலைமையை வலுப்படுத்திக் கொண்டான். அவன் பேச்சை வளர்த்துக் கூறினான் 'கிட்டண்ணா, நான் உன்னை ஏமாற்றவில்லை. எனக்கு நீ வேறு ரத்னா வேறா? இரண்டு பேருக்கும் என்னைப் பற்றினவரையில் ஒரு வித்தியாசமும் இல்லை. நீ என் மகன் போல். முதலாவதாக, தேசாயுடன் சச்சரவு விலைக்கு வாங்கத் தேவை இல்லை. அவர் பணம் கொடுத்தால் சரி, இல்லாவிட்டால் நயமாய் பேச வேண்டும்' என்று உபதேசம் செய்து தேசாயிடம் நயமாய் பேசுமாறு தூண்டிவிட்டான். கடனுக்காகக் கிட்டிக்கும் தேசாயுக்கும் சண்டை மூண்டால் அவன் மத்தியஸ்தனாகத் தலையிட்டு முடிவு செய்யலாம் என்பது ராகப்பாவின் அந்தரங்க நோக்கம்.

இரண்டு நாளில் தன்னுடைய தைரியத்தை எல்லாம் திரட்டிக் கொண்டு தேசாயின் வீட்டுக்கு வந்தான். தேசாயிடம் பேசப் போவதைப் பற்றி அவன் தாயாரிடம் சொல்லவில்லை.

தேசாய் உட்கார்ந்தபடி பஞ்சாங்கம் பார்ததுக் கொண்டு இருந்தார். வரவழைத்துக் கொண்ட புன்சிரிப்புடன் அவர் கிட்டியை வரவேற்றார். கிட்டி பொய்யாக நலம் விசாரித்தான், மிகவும் பணிவு உள்ளவன் போலக் காட்டிக் கொண்டு தன் கடனைப் பற்றின விவரத்தை அவருக்குத் தெரிவித்தான்.

தேசாய் கேட்டார்: 'எவ்வளவு கடன் வாங்கினாய்?'

'ஐநூறு.'

'என்னைக் கேட்டால் கொடுத்திருக்கமாட்டேனா? சரி, போகட்டும். இது நடந்து நாலு ஐந்து வருடம் ஆகிவிட்டது, இதுவரை எவ்வளவு அடைத்திருக்கிறாய்?'

'பணம் மிச்சப்படுவதே இல்லை, அசலில் நாற்பது ரூபாய் மட்டும் தீர்ந்திருக்கிறது. வட்டி மட்டும் கொடுத்துக் கொண்டே வருகிறேன்.

தேசாய் கவலையுற்றுக் கூறினார். 'வெட்கமாக இல்லையா உனக்கு இதைச் சொல்ல?'

வரதட்சிணை விஷயத்தை எப்படி எடுப்பது என்று கிட்டிக்குப் புரியவில்லை. தேசாய் தம் பேச்சைத் தொடர்ந்தார்.

'நல்ல பையன், நல்ல முறையில் குடும்பம் நடத்துவான் என்று எண்ணி நடுவில் இருந்து உனக்காக நாம் ஏதோ செய்தோம். உனக்கு மனைவியைக் கட்டி ஆளத்தெரியவில்லை. 'அம்மா, நீ சாப்பிட்டாயா இல்லையா' என்று தாயாரை எப்போதாவது நீ கேட்டிருப்பாயா? உத்தியோகம் பார்க்கிறாய், ஐநூறு ரூபாய்க் கடனைத் தீர்க்க முடியவில்லை. இதில் நான் என்ன சொல்ல முடியும்?'

'வரதட்சணை வந்ததும் அந்தக் கடனை அடைத்துவிடலாம் என்று எண்ணினேன், ஆனால் இப்போது வட்டி மட்டும்தான் கட்ட முடிகிறது. உத்தியோகத்தைப் பார்த்துக் கடன் தந்தவர்கள் எத்தனை காலம் பேசாமல் இருப்பார்கள்?' என்றான் கிட்டி வெட்கம் எல்லாம் விட்டு.

'பின் உத்தியோகம் ஏன் பார்க்கிறாய், விட்டுவிடு. உன் தாய் ஏதாவது செய்து உன்னையும் உன் அகத்துக்காரியையும் சாப்பாடு போட்டு விடுவாள்...'

தேசாய்க்குக் கிட்டியின் பேச்சு புரிந்து மிகவும் கோபம் வந்துவிட்டது. அவருடைய சினத்தைக் கண்டு கிட்டி விவேகத்தை மறந்துவிட்டான். 'இன்று தப்பான வேளையில் மாமனாரின் உபதேசத்தைப் பயன்படுத்தி விட்டோம்,' என்று எண்ணினான் அவன்.

'நீங்கள் இப்போது நானூற்று அறுபது ரூபாய் கொடுத்தால் அவர்களுடைய கடனை அடைத்துவிடுவேன். சம்பளத்திலிருந்து உங்களிடமே கொடுத்துக் கொண்டே போகிறேன், நடுவில் வந்தவர்களின் பொறுப்பும் தீர்ந்து போகும்.'

'இந்த யோசனை முன்பு ஏன் வரவில்லை? இதைத் தவிர, அம்மாவின் யாத்திரைப் பாக்கியும் தீர்த்துவிட்டாய். சரி, அது

போகட்டும், இங்கே இருப்பதை அங்கே கொண்டு போய்ப் போடுவதால் என்ன லாபம்?'

'லாபம் ஒன்றும் இல்லை.'

கிட்டிக்குத் திடீரென்று சந்தேகம் வந்துவிட்டது, அவனுடைய மாமனாரின் உபதேசம் பற்றித் தேசாய் கண்டு கொண்டாரோ என்று. பண விவகாரத்தில் மாமனார் மருமகனுக்கு நடுவில் விழுவதில்லை என்று தேசாய் ஏற்கெனவே முடிவு செய்திருந்தார். இப்போது அதைப் பற்றிப் பேச அவருக்குத் தேவை இல்லை. வேறு வழி இன்றி கிட்டி பேச்சைத் தொடர்ந்தான்.

'கலியாணம் செய்து கொண்ட நான் தான் முட்டாள். கலியாணத்துக்காகத்தான் கடன் வாங்கினேன். குறைந்தப் பட்சம் வரதட்சிணையாவது என் கைக்கு வந்திருக்க வேண்டும்.'

தேசாய்க்கு மனத்திற்குள் அதிருப்தி ஏற்பட்டது. சற்று நிமிர்ந்து உட்கார்ந்து அவன் மேலே பேசுவதைக் கேட்கக் காத்திருந்தார்.

கடைசியில் கொஞ்சம் முன் பின் யோசித்துத் தயங்கியவாறு, 'வரதட்சிணைப் பணமும் அதற்கு முந்தின ஆயிரம் ரூபாயும் உங்களிடம் அம்மா கொடுத்து வைத்திருப்பதாய்க் கேள்விப்பட்டேன்,' என்று கூறிவிட்டான்.

'ஜாக்கிரதை! என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய் நீ,'

'இல்லை, நான் உங்களைப் பணம் கேட்கவில்லை, உங்களிடம் அம்மா கொடுத்து வைத்திருப்பது மெய்தானே?'

'இல்லை, ஒன்றும் கொடுத்து வைக்கவில்லை!...' தேசாய்க்கு வேர்த்து வழிந்தது, குனியாமலே பஞ்சாங்கம் பார்க்கலானார்.

இன்னும் அவர் ஏதாவது கூறுவார் என்று கிட்டி பத்து, பதினைந்து நிமிடங்கள் காத்திருந்தான், ஆனால் அவர் அப்படியே உட்கார்ந்தபடி பஞ்சாங்கம் பார்த்துக் கொண்டிருக்கிறார், வாய் கூட அசைக்கவில்லை.

கடுமையான மௌனத்தை உடைத்துக் கிட்டி கூறினான்: 'சரி, நான் வருகிறேன்.'

'உம்.'

கோபத்தோடு தரையை உதைத்தவாறு கிட்டி கதவுவரை வந்தான். ஒரு முறை உணர்ச்சி வேகம் இறங்கியபின் இதுவரை பேச முடியாமற் போன காரணத்தால் அவனுடைய சக்தி முழுவதும் அவனுடைய மூளையை கொதிக்க வைக்கத் தொடங்கியது. அவனுடைய கைகால்கள் நடுங்கிக் கொண்டு

இருந்தன. இதற்குள் மற்றோர் எண்ணம் வந்ததால் கதவுக்கு வெளியிலேயே நின்றபடி கூறினான்:

'அம்மாவை விட்டுத் தனியாகப் போகவில்லை என்று என்னை ஆணை வைக்க வைத்தீர்கள், தத்து எடுத்துக் கொள்வதாய் மாமாவிடம் சத்தியம் வாங்கிக் கொண்டீர்கள். பணம் உங்களிடம் கொடுத்து வைக்கவில்லை என்று நீங்களும் எல்லாருக்கும் முன்னால் சத்தியம் செய்வீர்களா?'

'சமயம் வரும் போது சத்தியம் செய்வேன்,' என்றார் தேசாய்.

சில சமயம் ஆண்டவனையே எதிர்க்கும் கடுமையான துணிச்சல் அவருக்கு இருந்தது. கிட்டி வேறொன்றும் சொல்லாமல் கதவைக் கடக்கப் போகும் நேரத்தில் தேசாய் அவனைக் கூப்பிட்டு துயரம் நிறைந்த புன்சிரிப்போடு உரைத்தார்:

'கிருஷ்ணா, கொஞ்சம் இங்கே வாயேன். உனக்குத் தெரிவதற்காக உனக்கு ஒரு மிகப் பழைய விஷயத்தைச் சொல்கிறேன். முன்பு தார்வாரில் ஹோசாயல்லபுரத்தில் எங்கள் வீடு ஒன்று இருந்தது. நான் தடுத்தும் கேளாமல் என் தகப்பனார் அதை விற்றுவிட்டார். அதற்காக இன்றுவரை நான் அவருக்கு சிரார்த்தம் செய்வதில்லை. உனக்குத் தெரிந்திருக்க வேண்டும் என்பதற்காக இதைச் சொல்கிறேன்.'

இதைப் புரிந்து கொள்ளக் கிட்டிக்கு ஒரு நிமிடம் ஆயிற்று. அவன் மீண்டும் புறப்படுவதற்குள் தேசாய் மற்றொரு கணை எய்தார்.

'இதை உன் மாமனாரிடமும் சொல்லு, அவருக்கும் தெரிந்திருக்கட்டும்.'

தேசாயின் இக்கூற்றைக் கேட்டு ராகப்பா, 'சரி, இன்று முதல் உனக்கும் தேசாய்க்கும் சண்டை ஆரம்பம் ஆகிவிட்டது,' என்றான். கிட்டிக்குச் சண்டை என்றால் பயம்.

'நீ பேசாமல் இரு. என்னால் முடிந்ததை நான் செய்கிறேன். ராகப்பாவை உசுப்பிவிட்டவர்கள் தப்பிவிட முடியாது என்பது பிரசித்தம். இது தேசாய்க்கும் தெரிந்திருக்க வேண்டும்,' என்ற ராகப்பா மீசையை முறுக்கிவிட்டுக் கொண்டான்.

## 25. ராகப்பாவின் இரட்டை வடிவம்

இந்த ஐந்தாறு ஆண்டுகளில் ராகப்பா மிகவும் மாறிப் போயிருந்தான். அதற்கு முக்கியக் காரணம் மஹபூப்ஜானின் மரணம் எனலாம். அவள் இறந்தபின் ராகப்பாவுக்கு வாழ்க்கையில் இருந்த கவர்ச்சியே போய்விட்டது. தேசாயை

வசப்படுத்த வேண்டும் என்கிற முயற்சியில் அவன் ஈடுபட்டி இருந்தான். ஆனால் அவரோ அவனுடைய பிடியில் சிக்கவில்லை அத்துடன் மஹபூபும் போய்ச் சேர்ந்தாள்.

அவளுடைய சாவும் ஒரு கதை. தொடர்ச்சியாக ஒரு மாதகாலம் நாடகக் கம்பெனியில் வேலை செய்யும் வலிமை அவளுக்கு இல்லை என்று தெரிந்தே இருந்தது. ராகப்பாவிடம் வாக்களித்தபடி பரமேசுவரன் அவளைக் குடிக்குமாறு வற்புறுத்து வதில்லை, ஆனால் மஹபூப் அந்நாட்களில் கேட்டு வாங்கிக் குடித்தாள் என்பது வாஸ்தவம். ஒவ்வொரு நாளும் தூங்காது இருக்கும் பழக்கம் அவளுக்கு விட்டுப் போய் நீண்ட காலம் ஆகிவிட்டது. வழக்கம் போல் வாந்தியும், நெஞ்சுவலியும் ஆரம்பமாயின. நாடகக் கம்பெனியின் சரிவுக் காலம் தொடங்கி விட்டது போலும், அதனால் பரமேசுவரனுக்கும் போதிய லாபம் இல்லை. தார்வார் கானல் நீர் போலிருந்தது, எப்போது நல்லபடி வசூல் ஆகும் என்று கூற முடியவில்லை. கவலைப்படும் பரமேசுவரனைப் பார்த்து தானே கஷ்டத்தைப் பொறுத்துக் கொண்டு மற்றொரு 'சாயா' குடித்துவிட்டு மஹபூப் வேலைக்குத் தயார் ஆகிவிடுவாள். பட்டன் அவளுடைய சிரமத்தைப் பார்த்துத் தணிவான குரலில் பாடுமாறு கூறுவான். முன்னைப் போல இரண்டு முறை பாகமேற்க அவளால் இயலவில்லை. ஒருவாறாக ஒரு மாதம் போக்கிவிட்டான் அவள்.

வீடு திரும்பியதும் ரத்த அழுத்தம் தாக்கியது. எழுந்து நின்றால் தலை சுற்றியது. உணவு உடம்புக்கு ஒட்டவில்லை, ராகப்பா அவளை ஆஸ்பத்திரிக்கு அழைத்துக் கொண்டு போனான். அங்கே இரண்டு மாதங்கள் இருந்தாள். சற்றுக் குணமானதும் திரும்பினாள். ஆனால், பதினைந்து நாளானதும் பழைய நிலைமைக்கே திரும்பிவிட்டாள். இம்முறை அவள் ஆஸ்பத்திரிக்குப் போக இணங்கவில்லை. அல்லாவின் திருவுள்ளம் என்று இரவும் பகலும் ஆண்டவன் தியானத்தில் இருக்கலானாள். சில சமயம், தெய்வத் தியானத்தின் போது அவளுடைய விழிகளிலிருந்து தாரை தாரையாக நீர் பெருகும். ராகப்பா மனப்பூர்வமாய் அவளுக்குத் தொண்டு புரிந்தான். என்னால்தான் இவளுக்கு இத்தனை துன்பம் என்று எண்ணி அவளைக் காக்க அயராமல் முயற்சி செய்தான். இரண்டொரு நாளைக்கு ஒரு முறை ஹுப்பளிக்கு வந்து தனக்கு முன்னால் அவளை மருந்துண்ணச் செய்வான், பாலும் பழமும் ஊட்டுவான். பத்துப் பன்னிரெண்டு மாதங்களுக்குப் பிறகு வலி முன்னைவிட மிகுதியாக வரத் தொடங்கியது. கப பித்தக் காய்ச்சலும் சேர்ந்து கொண்டது. ராகப்பா ஹுப்பளிக்கு ஓடி வந்து சேர்ந்தான், பக்கத்தில் இருந்து பணிவிடை செய்தான், ஒரு மாதம் வரை அங்கேயே இருந்தான். தன் முழுவலிமையையும் பயன்படுத்தி

ராகப்பா அவளைக் காப்பாற்றச் சாவோடு போராடினான். அவனுடைய மனவலிமையைக் கண்டு சாவும் சற்று அஞ்சியது போலும். பதினைந்து நாட்கள் வரை வாழ்வுக்கும் சாவுக்கும் இடையில் ஊசாலடிக்கொண்டிருந்த மஹபூப் ஒரு நாள் விடியலில் நாலு மணிக்கு வேர்வையால் முற்றிலும் நனைந்து போனாள். காய்ச்சல் திடீரென்று இறங்கிவிட்டது.

போகுங்கால் மரணம் அவள் முகத்தின் மீது தன் முத்திரையைக் குத்திவிட்டுப் போயிற்று. அப்போது மஹபூப் முற்றிலும் குரூபி ஆகிவிட்டாள். வயதானாலும் அழகும் அமைதியும் நிறைந்த முகத்தில் இப்போது கறுப்புப் புள்ளிகள் காணப்பட்டன. ஒரு கண் மேலே எழுந்துவிட்டது. புருவங்களின் ரோமம் பழுப்பாக இருப்பினும் ஆங்காங்கு வெடித்திருந்தன.

அவளுடைய சுபாவத்தில் குறிப்பிடத்தக்க மாறுதல் ஏதும் இல்லை. மற்றவர்களிடம் அவள் சிறிது கடிந்து கொண்டாலும், எஜமானிடம் எப்போதும் போலவே இருந்தாள். மனிதனின் சகிப்புத் தன்மைக்கும் ஓர் எல்லை உண்டு. இவ்வளவு காலம் பணிவிடை செய்து செய்து ராகப்பாவுக்கு அலுப்பு தட்டிவிட்டது. அத்துடன், தன் நிலைமையைக் கண்டு மஹபூபே பயந்தாற் போல் இருந்தாள். அவள் அழுதவாறு ராகப்பாவின் கால்களைக் கட்டிக் கொண்டு கதறினாள்: 'இவ்வளவு பாடுபட்டு என்னை ஏன் காப்பாற்றினீர்கள்?...மறுபடி எனக்கு வலி கண்டால் என்னைக் காப்பாற்ற முயற்சி செய்யாதீர்கள். இப்படி உயிரோடு இருப்பதற்குப் பதிலாகப் பேசாமல் கண்ணை மூடிவிடுவேன்.'

ராகப்பாவுக்கு மிகவும் துயரமாக இருந்தது. கூடவே, மஹபூப் இருப்பதால் பயன் இல்லை எனவும் தோன்றியது.

அடுத்த இருபது நாளுக்குப் பிறகு இறுதி நேரம் வந்துவிட்டது. ராகப்பா யந்திரம் போல் கவனித்துக் கொண்டு இருந்தான். ஆனால் பொறுப்பதற்கும் ஒரு வாய்ப்பு உண்டு. மறுநாளே மஹபூபின் தோற்றம் அவனுக்கு உறுத்தியது. தன் மனத்தை ஆற்றுவதற்காக மற்றொரு பாடகியின் வீட்டுக்குப் போய்ப் பாட்டு கேட்க உட்கார்ந்துவிட்டான். அவன் போன ஒரு மணி நேரத்திற்குப்பின் அவனை நினைத்து வண்ணமே மஹபூப் கண்களை மூடிவிட்டான்.

மறுநாள் இச்செய்தியைக் கேட்ட ராகவப்பாவுக்குத் தன் உயிரையே யாரோ பிழிந்திட்டாற் போல் இருந்தது. இவ்வளவு நாட்கள் இங்கே இருந்தும் கடைசி நேரத்தில் அவளுக்குப் பக்கத்தில் இல்லாமற் போனோமே என்று தலையில் அடித்துக் கொள்ளத் தோன்றியது. அடுத்த பதினைந்து நாட்கள் அவன் வயிற்றுவலியால் படுக்கையில் கிடந்தான். குணமான பின்னர் அவன் பழைய ராகப்பாவாக இல்லை. உள்ளுக்குள்ளே அவனுடைய மனத்தின் பலவீனம் ஆரம்பமாயிற்று.

மஹபூப் இறந்ததும் தன் வீட்டிலிருந்து மஹபூபின் வீட்டுக்குப் போன சொத்துக்கள் எல்லாம் மீண்டும் தன் வீட்டுக்கே மீண்டுவிடும் என்ற சம்பக்காவின் பொய் நம்பிக்கை பலிக்காது போயிற்று. மஹபூப் தன் செல்வம் முழுவதையும் மருமானின் கடையில் ஈடுபடுத்திவிட்டாள். இது தொடர்பாக ராகப்பா ஏதும் செய்யத் தயாராக இல்லை. இரண்டாம் தடவை நோயுற்று நலமுற்ற பிறகு மஹபூப் தன் கழுத்தில் இருந்த சந்திரஹாரத்தை எடுத்து சம்பக்காவிடம் அனுப்பினாள்: சாந்தாவுக்கு மணமாகும் பொழுது அவளுக்குக் கொடுக்குமாறு சொல்லிவிட்டாள். அவ்வளவுதான், அது தான் வீட்டுக்குத் திரும்பிவந்தது.

நாள் போகப் போக ராகப்பாவின் ஒளி மங்கத் தொடங்கிற்று. முன் போன்ற உற்சாகம், ஆற்றல், சபலம், எல்லாமே குறையாமல் இல்லை. முன் போன்ற அவனுடைய உடல்வலிவும் அறிவுத் தெளிவும் இப்போது பழங்கதைகள் ஆகிவிட்டன. அக் காலத்தில் ராவணனைப் போன்று பேராற்றலோடு பூமியை நடுக்கியவன் இப்போது எளிய நடிகனைப் போல் ஆடுவது போல் இருந்தது. அவன் அலௌகிகமான தனித்தன்மையை இழந்து தேசு குன்றிவிட்டான். இது அவனுக்கே புரிந்தது. சில சமயம் வழி நடக்கும் பொழுது குதிகால் தடுமாறினால், 'முன்பு இப்படி ஆனதில்லை,' என்று அவன் வாய்தானாகவே முணுமுணுத்தது. முன்பு தான் செய்த எந்தக் காரியத்திற்கும் கழிவிரக்கம் கொள்ளாத அவன் இப்போது ஒவ்வொன்றுக்கும் வருத்தப் படலானான். மரணத்தின் சக்தியே இத்தகையது. துயரம் என்பதையே அறியாத இரும்பு உள்ளம் படைத்தவர்களுக்கும் மரணம் துயரப்படுவதற்கும் கற்றுக் கொடுத்துவிட்டால் பிறகு அவர்கள் எந்த விஷயத்திற்கும் துயரப்பட முடியும். இக்காலத்தில் ராகப்பா கற்பனாலோகத்தில் நடமாடத் தொடங்கினான். கற்பனைத் துயரங்களாலும் அவன் துயரப்படலானான். தன் புத்தி நாற் புறங்களிலிருந்தும் ஆதாயம் கொணர்ந்து சேர்க்கவில்லை என்பது அவனுடைய முதல் துயரம். தன் புத்தி தன் சக்தியைச் சேதப்படுத்திவிட்டது என்பது அவனுடைய இரண்டாம் துயரம். தன் புத்தியின் சக்தியே குன்றிவிட்டது என்பது மூன்றாம் துயரம்.

இப்போது எஞ்சியிருந்தது ராகப்பாவின் நிழல் மட்டுமே. முந்தைய பயங்கரமான ராகோயா பராரி மஹபூபுடன் மறைந்தே போய்விட்டான்.

'இந்தத் தேசாய் சற்று முன்பே என்கையில் சிக்கி இருக்க வேண்டும். இப்போது என் உடல்பலம் கூடக் குறைந்து வருகிறது. அக்காலத்தில் அகப்பட்டுக் கொண்டிருந்தால் பதினைந்தே நாளில் தெளிவு கொடுத்திருப்பேன்' - தன் மனைவிக்கு முன்னால் அவன்

இப்படி ஜம்பமாகப் பேசுவான். தேசாயும் கங்கவ்வாவும் ராகப்பாவின் வீட்டில் கசப்புக் கேலிக்கான பொருள்கள். இருவரும் வீட்டின் பகைவர்கள். கிட்டியின் கடன், ஏழ்மை, தேசாயிடம் கொடுத்து வைக்கப்பட்டுள்ள பணம் ஆகியவற்றைப் பற்றித் தாராளமாகப் பேச அவனுக்கு ஓய்வு இருந்ததால் கசப்பு மிகுந்துவிட்டது.

சக்தி குன்றிப் போயிருக்கலாம், ஆயினும் பராரியின் நடவடிக்கைகள் நின்றுவிடவில்லை. அந்த ஆண்டு தேசாயின் நிலத்தில் பெரும் அளவில் களவு போயிற்று. தேசாயின் கிராமத்திலிருந்து தார்வார் சந்தைக்கு வருகிறவர்களோடு ராகப்பா சிநேகம் செய்து கொண்டிருந்தான். அவனுடைய நோக்கங்கள் பல இன்னும் நிறைவேறவில்லை, ஆனால் மற்றொரு வழி புலப்படாதலால் அவன் மட்டமான வேலைகளில் இறங்கவில்லை.

தேசாயின் மகன் வசந்தன் திருட்டுத்தனமாகத் தானியம் விற்கும் பழக்கத்தை இன்னும் கைவிடவில்லை. சென்ற காலத்தில் அவன் நாடகக்குழு ஒன்று சேர்த்ததையும், கிராமத்தாரின் பகைமையை ஈட்டிக் கொண்டதையும், தேசாய் ஓடோடிக் கிராமத்துக்குச் சென்றதையும் பற்றி ராகப்பாவின் சீடன் ஒருவன் அவனுக்குக் கூறி இருந்தான். இப்போது வசந்தன் வெளிப்படையாகத் தானியம் விற்பதில்லை. ஆனால் பழகிய கிராக்கிகளுக்கு மட்டும் மூன்று நாளைக்கு ஒரு முறை அரை அல்லது ஒரு மூட்டை விற்பனை செய்தான். ராகப்பாவின் சீடன் பசவண்ணி தந்திரக்காரன், ஸ்கூலில் நாலுவகுப்பு வரை படித்தவன், ஆர்வம் மிகுந்தவன், விபரீதமான வேலைகளில் அதிகச் சுவை உடையவன், அவன் வாயிலாக ராகப்பா வசந்தனுக்குச் செய்தி அனுப்பினான், 'தார்வாரில் உங்களுக்குப் பக்கத்திலேயே இருக்கிற ஒரு பிரமுகர் ஏராளமாகத் தானியம் கொள் முதல் செய்யத் தயார்,' என்று.

கெட்டிக்காரரானான பசவண்ணி நன்றாய்த் தாளித்துக் கொட்டி ஆசை காட்டினான். அவன் தரகன். தானியம் கைக்கு வந்ததும் ரொக்கம் கொடுத்து விடுவான். இரவோடு இரவாகத் தானியத்தை மாட்டு வண்டியில் தார்வாருக்குக் கொண்டு வந்து சேர்த்துவிடுவான், ஆனால், காரியம் காதும் காதும் வைத்தாற் போல நடக்கும். இந்தத் திட்டம் ஒரு மாதகாலம் லாபகரமாக இருந்தது. ராகப்பாவுக்குப் பதினைந்து மூட்டை சோளம் கிடைத்தது. தார்வாருக்கு கொண்டு வந்து சேர்க்கும் செலவு, பசவண்ணியின் தரகு, இதர செலவுகள் போக ராகப்பாவின் பையில் இருபத்திரண்டு ரூபாய்கள் விழுந்தன.

ராகப்பாவின் மனசுக்கு இந்தச் சின்னச் சின்ன வழிமுறைகள் பிடிக்கவில்லை. 'சே, வெறும் இருபது ரூபாய், வெட்கக் கேடு. மஹபூப் உயிரோடு இருந்த காலத்தில் இந்த ரூபாயை ஒரே நாளில் ஊதி எறிந்தவன் தானே நான்,' என்று மனத்தில் எண்ணிக் கொண்டான். இதைவிட எளிய வழி பற்றி யோசிக்கலானான். தேசாயைத் தன் இடுக்கியில் பிடிக்க வேண்டுமானால் அவனுடைய மகனை முதலில் பிடிக்க வேண்டும். விரல் பற்றிப் பிடித்து இழுக்க வேண்டியதாக இருக்கலாம். இதற்கு வசந்த னோடு நேர்ப் பழக்கம் செய்து கொள்ள வேண்டியதாக இருக்கும். வசந்தனுக்கு முதலில் நாடகக் கம்பெனியில் மிகுந்த ஆர்வம் இருந்தது. ராகப்பாவும் அவ்விஷயத்தில் தேர்ந்தவன். ஆகையால் நாடகத்துறையில் வசந்தனை ஊக்கி விடுவதற்காக அவனைத் தன்னிடம் அழைத்து வருமாறு பசவண்ணியிடம் சொல்லி அனுப்பினான். மறுநாள் முதலே அவனை எதிர்பார்க்கலானான்.

இது ராகப்பாவின் ஒரு முகம்.

இப்போது கிட்டியின் பக்கம் கவனம் செலுத்துவது இரண்டாவது முகமூடி.

கிட்டியைத் தத்து எடுத்துக் கொள்ளும் விஷயமாக ராகப்பாவின் மனம் மாறத் தொடங்கி இருந்தது. அவன் இதைப் பற்றி முழுமனத்துடன் ஒரு போதும் யோசித்தில்லை. பெண்ணைக் கொடுக்கும் போது கங்கவ்வாவை வசப்படுத்த அது ஒரு வழி, அவ்வளவு தான். கங்கவ்வாவின் பிடிவாதம் காரணமாகவே இந்த எண்ணம் தீர்மானமான உருக்கொள்ள ஆரம்பித்தது. அப்போது ராகப்பாவுக்கு இளமைப் பருவம்; தத்து எடுத்துக் கொள்ளும் விஷயம் அவனுக்கு வேடிக்கையாகப் பட்டது. சூழ்நிலைக்கு ஆட்பட்டுத் தத்து எடுத்துக்கொள்ள உடன்பட்டான். எல்லாருக்கும் முன்னால் சத்தியமும் செய்தான். இதைத் தவிர, கிட்டியின் விஷயமாகச் சம்பக்கா மிகவும் அடம் பிடித்துக் கொண்டிருந்தாள். இந்த எல்லாக் காரணங்களாலும் மணத்துக்கு முன்னர் தத்து விஷயத்துக்கு இசைந்தான்.

மணம் ஆகிவிட்டது. தத்து எடுத்துக்கொள்ளும் விஷயம் தள்ளிப் போனமையினால் ராகப்பாவின் யோசனைகளிலும் மாறுதல் ஏற்பட ஆரம்பித்தது. மணத்துக்குப் பிறகு கங்கவ்வா பகையைக் கைவிடுவாள் என்ற அவன் எண்ணம் பொய்த்து விட்டது. கங்கவ்வா ஒரு தடவைகூட அவனுடைய வீட்டுக்கு வர வில்லை, ஒரு தடவை கூடச் சகோதரனைத் தன் வீட்டுக்கு வருமாறு அழைக்கவில்லை. ரத்னாவும் மிக்க சுகமாக இல்லை. அவளுடைய ஆத்திரம் தன் மகள் மீது இறங்குகிறது என்னும் எண்ணம் அவன் மனத்தில் உறுதிப்படலாயிற்று, இந்த நாலைந்து வருடங்களில் கிட்டியும் ராகப்பாவுக்கு வாரிசு ஆகும் லட்சணம்

எதையும் காட்டவில்லை. அவன் ராகப்பாவின் தோழன் ஆனான், ஆனால் வாரிசாகும் தகுதி அவனுக்கு இல்லை. இதை வைத்து அவன் வீட்டுக்காரியிடம், 'கிட்டியின் இடத்தில் நான் இருந்தால் கங்கவ்வாவை 'என் தாய், என்னைப் பெற்றவள்' என்று சொல்லிசாஷ்டாங்கமாய் வணங்கியபடியே அவளை வீட்டை விட்டு வெளியேற்றி இருப்பேன்', என்று முழங்கினான்.

இந்தச் சூழ்நிலையில் தேசாய் அவனைக் கூப்பிட்டுத் தத்து விஷயத்தைக் கேட்கவே, சினத்தால் உள்ளங்கால் முதல் உச்சந்தலை வரை ஒரே எரிச்சலாக இருந்தது, தன் உள்ளத்து ஆத்திரத்தைத் தேசாய்க்கு முன் கொட்டினான்: 'ஐயா, கலியாணம் ஆகி ஒன்றரை வருடம் ஆகிறது, ஒரு முறை கூடக் கங்கவ்வா எங்கள் வீட்டில் அடியெடுத்து வைக்கவில்லை, எத்தனையோ பண்டிகையும் கொண்டாட்டமும் வருகிறது. இந்த மனஸ்தாபம் இப்படியே இருந்தால் எனக்கு எப்படி நம்பிக்கை வரும்?' இதற்குத் தேசாய், 'நீங்களாகத்தான் முதலில் வாக்கு கொடுத்தீர்கள். கலியாணத்தின் போது நீங்கள் நாலுபேருக்கு முன்னால் வந்து எங்கள் மனமுறிவு இங்கேயே முடிந்துவிட வேண்டும். அப்போது நீங்கள் மனத்தில் லட்டு பிட்டுக் கொண்டு பேசாமல் இருந்து விட்டீர்களே' என்று கூறினார்.

இதனால் ராகப்பாவின் ஆத்திரம் இரட்டித்தது. கிட்டியைத் தத்து எடுப்பதில் மேலும் குறைகள் காணப்படலாயின. கிட்டியை விட நல்லவனாக இரண்டாம் மாப்பிள்ளை கிடைத்துவிட்டால்.....? கிட்டியைத் தத்து எடுத்தான பின் கங்கவ்வா பிள்ளையை வசப்படுத்திக் கொண்டு அவனுக்குத் துரோகம் இழைத்து விட்டால்....? இந்த இரண்டாவது நினைவு ராகப்பாவுக்கு மிகப் பயங்கரமானதாய்ப் பட்டது. யாருக்கும் அஞ்சாத அவனுக்கு அக்காவிடம் மட்டும் சற்று அச்சம் இருக்கத்தான் இருந்தது. இப்போது அவனுடைய மனத்தின் வலுவின்மை அச்சமாக வடிவெடுத்திருந்தது. 'அந்தக் கங்கீயிடம் மாட்டிக் கொண்டால் ஊறுகாயாக என்னை நசுக்கிப் போட்டு விடுவாள்' என்று மனத்தில் சொல்லிக் கொள்வான். கங்கவ்வாவிடம் எப்போதும் அவனுக்கு அச்சம் கலந்த பக்தியே இருந்தது. அவனுடைய சகோதரியே அவன் நினைவுகளின் மையப்புள்ளி. அவளைப் பற்றி மற்றொரு காயத்திரி மந்திரம் அவன் செவிகளில் ஒலித்தது: கங்கீ, இன்னும் என் துவேஷம் முடிவுறவில்லை. உனக்குத் தான் நல்ல அதிர்ஷ்டம். நீ பேயாகி என்னைப் பழிவாங்க வரும்போதுதான் எனக்கு அமைதி கிட்டும்.

தத்து எடுக்கும் விஷயத்தை இப்போது எவ்வாறாகவாவது ஒரு முடிவுக்குக் கொண்டு வந்துவிட்டால் தேசாயையும் கங்கவ்வாவையும் துன்புறுத்திய ஆனந்தம் கிடைக்கும். ஆனால்,

நாலு பேருக்கு நடுவில் ஆணை வைத்திருக்கிறானே; இன்னும் இரண்டொரு வருடம் தள்ளலாம், சாந்தாவுக்கு மணமாகும் வரை. அப்பால் அவன் தனக்குள் கூறிக் கொள்வான் : 'ராகப்பா, நீ அசல் ராகப்பாவானால் இவ்விஷயம் மறுபடியும் கிளப்பப்படு முன்பேயே இதை நீ தீர்த்துக் கட்டிவிட வேண்டும்'.

தத்து பற்றி ராவணனைப் போல் சிந்திக்கலானான். 'என் வீட்டில் ஆண் பிள்ளை பிறந்து விட்டாலோ?' சாந்தா பிறந்த பிறகு டாக்டரின் ஆலோசனைப்படி ராகப்பாவுக்கு மனைவியோடு தொடர்பு விட்டுப் போய்விட்டது. மற்றொரு பிரசவம் மனைவியின் உயிர்ப்பிரச்னை ஆகும் என்று டாக்டர்கள் தெளிவாக எச்சரித்திருந்தனர். இப்போது அவனுக்கு ஐம்பது வயது, மனைவி நாற்பதை எட்டி விட்டாள். 'இனி எனக்குக் காலம் குறைவு. சாந்தாவின் திருமணத்தைத் தள்ளிப் போடுவதால் லாபமில்லை. அவளுக்கு வயது கூடிவிட்டால் கலியாணம் செய்வதே கஷ்டம் ஆகிவிடும், என்று எண்ணினான் அவன்.

'என்ன ஆயினும் சரி, நான் இரக்கத்தை ஒரு பக்கமாய் வைத்து விட்டு....என் அகத்துக்காரியின் உயிர்....ஒரு பிள்ளை பிறந்ததும் அவள் சீட்டு கிழியட்டும்,' என்று பற்களை நெறித்தவாறு ராகப்பா முடிவு செய்தான்.

டாக்டர்களுக்கு என்ன தெரியும்? ஒன்றைப் பத்தாய்ப் பெருக்கிச் சொல்வார்கள்.

கணவன் வாய் வழியே ஒரு சொல் வெளிவந்தாலும் அவனுடைய எண்ணங்கள் படிக்க முடியும். கணவனின் மனோ பாவத்தைப் புரிந்து கொண்டா அவள் இன்று வரை தன் வாழ்க்கை யைக் கழித்தாள்...ஒன்றும் பேசாது இறுதித் தியாகத்துக்கு அவள் தயாரானாள். ரத்னாவுக்காக மனத்தில் சிறிது இரக்கம் வந்தது என்னவோ நிசம், ஆனால் அவளுக்குக் கணவனே கடவுள். கணவனோடு அன்போ, வெறுப்போ, அது அவளுக்கே உரியது; ஆகையால் அதற்கும் அவள் தயாராக நேர்ந்தது.

## 26. அச்சுதனின் பதில்

கிராமத்திலிருந்து பதினைந்து மூட்டைகள் சோளம் தார்வாருக்கு வந்து விற்பனை ஆகியுள்ளது என்கிற செய்தி தேசாயின் செவிகளுக்கு சில நாட்களிலேயே எட்டி விட்டது. இதற்கு முந்தின அறுவடைகள் போது திருட்டு போனதைப் பற்றின வருத்தம் அவருக்கு இருந்தது. அந்தத் திருட்டிலும் ராகப்பாவின் கைவரிசை இருந்துள்ளது என்கிற அவருடைய

சந்தேகம் இப்போது உறுதி ஆகிவிட்டது. தேசாய் தம் தந்தையாரின் காலத்தில் தம் முழுவலிமையோடு அரசியல் போராட்டத்தில் பங்கு கொண்டார், ஆனால் ஓய்வு பெற்ற ராணுவ வீரனைப் போல் சென்ற இருபது வருடங்களாய் அமைதியான வாழ்க்கை நடத்தி வந்தார். இந்த இருபது ஆண்டுகளில் அவருக்கு எதிராகப் பெரிய பகைவர்கள் யாரும் தலை எடுத்ததில்லை. மதம் கொண்ட யானையைப் போன்ற அவர் தமக்குள் களித்திருந்தார், ஆகையால் அவருக்கு உண்மையான நண்பர்களும் குறைவு. முற்றிலும் உயிரை வாங்க வரும் விரோதிகளும் இல்லை. இப்போதுதான் ஒரு காரணமும் இல்லாமல் ராகப்பா தொல்லை கொடுக்க முற்பட்டிருந்தான். இதனால் அவருக்கு வருத்தமாக இருந்தது. நீண்ட காலமாகத் துவேஷத்தினின்றும் பொறுமை யினின்றும் விலகி இருந்ததால், இப்போது அவர், 'இந்த ராகப்பாவுக்குப் பாடம் கற்பிக்காவிட்டால் நான் பஹாதுர் தேசாய் அல்ல,' என்ற கூறலானார். இப்போது ராகப்பா நேர்ப் போராட்டத்தில் இறங்கிவிட்டான், இனி மௌனமாக இருந்தால் காரியம் நடவாது என்று எண்ணிய அவர் கோபத்தில் அச்சுதனுக்கு ஒரு கடிதம் எழுதினார். அதில் நடப்பதைச் சுருக்கமாக விவரித்துவிட்டு, 'வெங்கடராய் ராகப்பாவின் சகோதரனாக இருக்க முடியுமா? இது தொடர்பாக வேறு விவரம் தெரிந்தாலும் எழுதவும். இந்த வேலையைச் செய்ய வேண்டியது உன் கடமை, இந்த விஷயத்தில் எனக்கு முழு அக்கறை உண்டு; முயற்சி செய்து பதில் எழுதவும்,' என்று கேட்டிருந்தார். இவ்வளவு வெளிப் படையாக அவர் ஒருபோதும் அச்சுதனுக்கு எழுதியதில்லை.

இந்த வேலை செய்வதற்கு அச்சுதன் மிகுந்த சிரமப்பட வேண்டியதாயிற்று, அதனால் அவனுடைய பதில் வர நான்கு நாட்கள் ஆயின, பதில் விரிவாக இருந்தது.

நலம் ஸ்ரீ தேவிதாஸ் ப்ளவர் மில்
லால்பாக்

தீர்த்தரூபமான சரணாரவிந்தங்களில் அநேக சாஷ்டாங்க நமஸ்காரங்கள். தங்கள் கடிதம் கிடைத்தது. நான் நலமாக இருக்கிறேன். இப்போது ஆசிரியர் என்னிடம் பொறுப்பான வேலைகளை ஒப்படைக்கத் தொடங்கியுள்ளார். அண்மையில் இரண்டொரு முறை தலையங்கம் எழுதும் வாய்ப்பு தந்தார். என் கட்டுரையைப் படித்துத் தேவையற்றவற்றை நீக்கினார். இங்கே மூன்று நான்கு ஆண்டுகளாகப் பணியாற்றுவதால் மற்ற ஜூனியர்களுக்குள் நான் சீனியர். பத்திரிகையின் பொருளா தார நிலைமை கவலை தருவதாக இருக்கும் காரணத்தால்,

ஆண்டு தோறும் அரைச் சம்பளத்தில் கல்லூரி மாணவர்களே உதவி ஆசிரியர்களாக நியமிக்கப்படுகின்றார்கள். ஆகையால் ஒவ்வோராண்டும் புதிய முகங்கள் வருகின்றன, அவர்கள் அனைவரிலும் நானே பழையவன். அதனால் ஆசிரியருக்கு என் பேரில் மிகுந்த நம்பிக்கை. பி.ஏ. படிப்பும் நல்ல முறையில் நடக்கிறது. தாங்கள் எதைப்பற்றியும் கவலைப்பட வேண்டாம். மாவு மில்லுக்குப் போவதைக் குறைத்துவிட்டேன். பிரஸ்ஸுக்கும் வாரத்தில் இரண்டொரு முறை தான் போகிறேன்; அதுவும் யந்திரம் பற்றித் தெரிந்து கொள்வதற் காக. அங்கும் எனக்கு உடலுழைப்பு இல்லை. தாங்கள் எதற்கும் கவலைப்பட வேண்டாம். அம்மா அவர்களிடமும் விவரம் கூறிக் கவலைப்படாதிருக்கச் சொல்லவும்.

இனி, தாங்கள் கேட்டுள்ளதைப் பற்றி எழுதுகிறேன். வெங்கடராய்க்கு எதையும் புரியவைப்பது கஷ்டம். நோக்கத் தோடு கேள்விகேட்டால் அவனுக்கு சந்தேகம் உண்டாகி விடுகிறது. வக்கிரமாகப் பேச ஆரம்பிக்கிறான். இதற்கு முன்னால் வெங்கடராய் பலமுறை தன்னிடம் வைத்திருந்த கடிதத்தைக் காட்டி இருந்தான். பலமுறை காட்டிய காரணத் தாலும், அவனுடைய விசித்திரமான நடத்தை காரணமாகவும் நான் அக்கடிதத்தின்பால் குறிப்பான கவனம் செலுத்தவில்லை. ஒரே ஒரு தடவை படித்தேன். இப்போது படிக்கக் கேட்டதற்கு அநாவசியச் சந்தேகம் கொண்டு மறுத்துவிட்டான். அவனை மகிழ்விக்க நான் பெரும்பாடுபட நேர்ந்தது. அவனுக்கு உற்சாகம் வரும்போது கடிதத்தை யாருக்கும் படிக்கத்தரு கிறான். கொஞ்சம் கன்னடம் தெரிந்தவர்களிடமும் அவனோடு கூடிப்பழகுகிற வர்களிடமும் கடிதத்தைக் காட்டிக் கேட்பது அவன் பழக்கம். 'என்பாகம் எனக்குக் கிடைத்து விடுமா' என்று. அந்தக் கடிதத்தைப் பார்க்கிற ஒவ்வொருவரும், என்ன, இது உன் தானபத்திரமா? இது உனக்கு எப்படி கிடைத்தது?' என்று கேட்கிறார்கள். அந்தப் பத்திரத்தை அவனிடமிருந்து வாங்கிக் கவனமாய்ப் படித்தபோது எனக்கும் அப்படித்தான் பட்டது. இங்குள்ள ஒரு வக்கீல் நண்பரைக் கேட்டதற்கு அவரும் அப்படியே சொன்னார். அந்தப்பத்திரம் கீழ் கண்டவாறு:

தார்வாரில் வசிக்கிற சுவாமிராவ் ஸ்ரீ கிருஷ்ணகுல்கர்ணி பெயரிலும், பிந்தகோளத்தைச் சேர்ந்தவனும் தற்போது பூனாவில் வசிக்கிறவனும், உத்தியோகம் பார்க்கிறவனுமாகிய

வெங்கடராய்வாமன் இந்தத் தான பத்திரத்தை எழுதுகிறேன். நானும் என்னுடைய தமயனார் ஸ்ரீமான் ராகவேந்திரவாமன், பிந்தகோளம் ஆகிய இருவரும் நிலத்தில் சமபங்குதாரர்கள். எங்கள் தந்தையாருக்கு வேறு ஆண் சந்ததி இல்லாததால் எங்கள் தந்தையாரின் சொத்துக்கு நாங்கள் இருவர் மட்டுமே பாத்தியம் உள்ளவர்கள். நான் அயலூரில் வேலை செய்யும் காரணம் பற்றி எங்கள் பாகம் ஆகாத சொத்துக்களை என் தமையனார் ஸ்ரீ ராகவேந்திரவாமன் பிந்தகோளம் அவர்களே கவனித்து வருகிறார், நிலமும் அவர் வசமே இருக்கிறது. சகோதரர்களாகிய எங்களுக்குள் பாகப்பிரிவினை நடக்க வில்லை. இச்சமயத்தில் எனக்கு ஒரு கஷ்டம் வந்தது. தாங்கள் மகிழ்ச்சியோடு அதைச் சமாளித்தீர்கள். இந்த உதவிக்குப் பதிலாக என் பங்குக்குச் சேரவேண்டிய தந்தையாரின் நிலத்தை நானாக, என்விருப்பப்படி தங்கள் பெயருக்குத் தானபத்திரம் எழுதிக்கொடுக்கிறேன். அதன் பேரில் எங்கள் வமிசத்தார் யாரும் தகராறு செய்யமாட்டார்கள், தாங்கள் அதை அநுபவிக்கலாம். நான் மணம் ஆகாதவனாதலால் இந்தச் சொத்து மீது வேறுயாருக்கும் உரிமை இல்லை. என் பங்குக்கு வரவேண்டிய நிலத்தைத் தாங்கள் பஞ்சாயத்தார்கள் மூலம் தீர்த்துக்கொண்டு, இப்போது என் தமையனாரின் வசமுள்ளதைத் தாங்கள் எப்போது வேண்டுமானாலும் வசப் படுத்திக்கொள்ளலாம். இந்தத் தானபத்திரம் பிந்தகோளம், ராகவேந்திரவாமன் முன்னிலையில் தயாரிக்கப்பட்டது. இதை அவர் ஒப்புக்கொண்டு கையொப்பம் இட்டுள்ளார் இதுவே தானபத்திரமாகும்.

*சாட்சி:சாந்தப்பா*<br>*சிவப்பா ஸெட்டி*

*வெங்கடேச வாமன் பிந்தகோளம்*<br>*சுவாமிராய் கிருஷ்ண குல்கர்ணி*<br>*ராகவேந்திரவாமன் பிந்தகோளம்*

இந்தப் பத்திரத்தில் ரிஜிஸ்டிரேஷன் அடையாளம் ஒன்று மில்லை. இந்தப் பத்திரத்தை வாசிக்கும் ஒவ்வொரு கிளர்க்குக்கும் பத்திரம் மெய்யானதாகப்படுகிறது. ஆனால் எனக்கு ஒரு சந்தேகம் உண்டாகிறது. காகிதத்தில் ஆழ்ந்த கறுப்பு மையால் எழுதப்பட்டுள்ளது, அது பழையதாகி விட்டது. ஆகையால் இது அசல் தஸ்தாவேஜியின் ஒரு பிரதி. ஆனால் நான் கையெழுத்துக்களை நன்றாகச் சோதித்துப் பார்த்தேன், கையெழுத்துக்களின் எழுத்துக்கள் தனித்தனியாக இருப்பதால் இது பிரதிஅல்ல, அசல் தஸ்தாவேஜியே என்று

எனக்குப் படுகிறது. ஆழ்ந்த கறுப்புமையாக இருக்கும் காரணத்தால் கையெழுத்துகள் ஒரே நபரால் போடப்பட்டவை போல் தோன்றினாலும் கவனித்துப் பார்த்தால் வெவ்வேறாகக் காணப்படுகின்றன.

இது அசல் பத்திரமாக இருந்தாலும், மற்றொரு சந்தேகம் எழுகிறது, இது உண்மையில் சுவாமிராயிடம் இருக்க வேண்டும். அது வெங்கடராயிடம் ஏன், எப்படி வந்தது? பத்திரம் இதுவரை ரிஜிஸ்தர் ஆகவில்லை. இதை சுவாமிராய் குல்கர்ணி தம்மிடம் மிகப் பத்திரமாக வைத்திருக்கவேண்டும்.

இந்தக் கேள்வி பதில்களை எல்லாம் நான் தங்களுக்கு எழுதத் தேவை இல்லை. மற்ற விவரங்களை வெங்கடராயிட மிருந்து அறிவது கடினம். பத்திரத்தைப் படிக்கும் போது சில கேள்விகள் கேட்டேன்; பத்திரத்தில் குறிப்பிட்டுள்ளபடி அவனுக்கு என்ன கஷ்டம் வந்தது என்று கேட்டால் மழுப்பு கிறான் அல்லது கடிந்துகொள்கிறான். நான் பத்திரத்தைக் கவனமாய் வாசித்ததையும் அவனால் பொறுக்க முடிய வில்லை. தாங்கள் ஐந்து நிமிடப்பழக்கத்திலேயே அவனுடைய சுபாவத்தைத் தெரிந்துகொண்டு இருப்பீர்கள்.

இவ்விஷயமாகத் தங்களுக்கு மேலும் உண்மை தெரிந்தால், அதைப்பற்றி மேலும் விவரம் அறிய விரும்பினால், தாங்கள் எல்லா விவரங்களையும் எனக்கு எழுதி அனுப்புங்கள், என் வக்கீல் நண்பர்களைத் தங்களுக்குத் தெரிவிக்கிறேன் என்னால் இயன்றவரை நானும் இதைப்பற்றி யோசிப்பேன்.

பூஜிக்கத்தக்க அன்னை அவர்களுக்கும் சகோதரர் களுக்கும் நான் நலமாக இருப்பதைத் தெரிவியுங்கள். சுபம்.

*தங்கள் அன்புள்ள*
*அச்சுதராவ்.*

*கடிதம் படித்ததுமே தேசாயின் உள்ளத்தில் போராட்டம் மூண்டது. அவருக்கு ஏற்கனவே தெரிந்திருந்த விஷயங்களோடு இத்தகவல்களைச் சேர்த்துப் பார்க்கத் திடீரென்று ஒரு வெளிச்சம் தெரிவது போல் இருக்கும். ஆனால் மீண்டும் சந்தேக இருள் பரவும். இன்னும் கரையிலேயே நின்று கொண்டிருந்த தேசாயை உள்ளே குதிக்குமாறு இந்தக் கடிதம் அழைத்தது. கூடவே, புதல்வனின் புத்திக் கூர்மையின்பால் கவர்ச்சியும் இருந்தது. என்னவானாலும், தாமும் தம் மகனும் இந்த விவகாரத்தில் தலையிட்டு இந்த ரகசியத்தைத் துவக்க வேண்டும் என்று அவர்*

மனம் தயாராகிவிட்டது. இதிலிருந்து தப்பவேண்டும் என்று முன்பு அவருக்கு இருந்த எண்ணம் முற்றிலும் முற்றுப்பெற்றது. இக்கடிதத்தைப் படித்தபிறகு, அதன் இடத்தில் தேசாயின் வாழ்க்கையில் அதிதீவிரமான செயலாக்கம் பிறந்தது. இந்தப் பிரச்சனை அவர்மீது நம்பிக்கை வைத்துள்ள ஆதரவற்ற ஒரு விதவையின் நன்மையைப் பற்றியது மட்டும் அல்ல, ஆனால் அவருடைய வீரத்திற்கு அறைகூவல் விடுக்கும் ஒரு கெட்டிக்காரப் பகைவனைத் தாழ்த்திக்காட்ட வேண்டிய பிரச்னை ஆகும். அவருடைய தந்தை மாண்டபிறகு இத்தகைய பகைவனை அவர் சந்தித்ததில்லை. பார்த்துக்கொண்டு இருக்கையிலேயே அவன் களத்தில் இறங்கி வந்திருந்தான். தம்மை அறியாமலே இவர் தோள்களைத் தூக்கி இருந்தார். இனி முன்னும் பின்னும் யோசிக்க முடியாது.

தேசாய் மீண்டும் இளைஞர் ஆகிவிட்டார்.

## 27. வசந்தன் - ராகப்பா உரையாடல்

ராகப்பாவின் யோசனைப்படி பசவண்ணி தார்வாருக்கு வந்து ராகப்பாவைச் சந்திக்கும்படி வசந்தனைத் தூண்டிவிட்டாள். 'நம் கௌடாவுக்கு நாடகம் என்றால் உயிர்' என்று அவரிடம் சொன்னேன். 'கௌடாவுக்கு அத்தனை ஆர்வமா, அவருக்கும் நமக்கும் நல்ல ஜோடிப் பொருத்தம் இருக்குமே,' என்றார். முன்பு அவருக்கு நாடகக் கம்பெனிகள் இருந்தன; அவரே பல தடவை நடிகர்களுக்கு நடிப்பு சொல்லிக் கொடுத்திருக்கிறார். 'உம்முடைய கௌடா நம்மோடு ஒத்துழைத்தால் இன்னொரு நாடகம் போடலாம்' என்று கூடச் சொன்னார். அவர் உங்களைப் பார்த்தால் போதும், உங்களுக்குத் தான் ராஜபார்ட் கொடுப்பார் என்று எனக்கு மிகவும் நம்பிக்கை. உங்களைப் பார்த்ததுமே இந்த விஷயம் என் மனசில் தீர்மானம் ஆகிவிட்டது. உங்களைப் பார்த்தால் ராஜா என்றே படுகிறது'- இவ்வாறே பசவண்ணி வாயை அகலவிரித்துக் கூறவே, வசந்தன் ஒருநாள் தானாகவே சொன்னான்: 'வா, பசவண்ணி, ஒரு நாள் தார்வார் போய் வரலாம். ஊருக்குப் போய்ப் பல நாள் ஆகிறது.'

அவப்பெயருக்கு அஞ்சித் தார்வாரை விட்டுச் சென்ற வசந்தன் கிராமத்து வேலைகளிலேயே மூழ்கித் தார்வாரை முற்றிலும் மறந்தாற் போல் இருந்தான். கிராமத்தில் கவர்ச்சிகளுக்கும் குறைவில்லை. பசு, காளை மாடு, நிலபுலம் ஆகியவற்றின் கவர்ச்சியில் வசந்தனுக்குக் கிராமத்தை விடுத்து வருவதே கடினம் ஆகிவிட்டது. சின்ன வேலைகளுக்காகக் கிராமத்திலிருந்து வெளிவர அவன் தயாராக இல்லை, ஆனால்,

நாடகத்தில் ராஜபார்ட் கிடைக்கும் வாய்ப்பு இருக்கிறது என்றால் அதைவிடப் பெரிய சங்கதி என்ன இருக்கமுடியும்? முன்பு ஒரு முறை அவன் நாடகத்தில் முழுஈடுபாடு காட்டியபோது தந்தை குறுக்கிட்டு காரியத்தைக் கொடுத்தார். அப்போது நிறைவேறாத அந்த ஆசை இப்போது எளிதில் கைகூடும் எனில் ஏன் முயற்சி செய்யக் கூடாது? இவ்வாறாக, வசந்தன் தார்வாருக்குப் போக ஆயத்தமானான். தகப்பனாருக்குத் தெரிந்துவிடக் கூடாது என்பதற்காக தார்வாருக்கு இரவில் போய்ச் சேரும் பஸ்ஸில் பசவண்ணியோடு அங்கே போய்ச் சேர்ந்தான். பசவண்ணி அவனை நேராக ராகப்பாவின் வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போனான்.

ராகப்பா அவனை வரவேற்று முதலில் தேநீர் தந்தான், பிறகு அருமையான சாப்பாடும் போட்டான். முந்திரிப் பருப்பு, திராட்சை, பம்பாய் பிஸ்தா, ஒன்பது பத்துவகைப் பழங்கள் முதலியவற்றைச் சுவைத்த வசந்தனுக்குக் கங்கு கரையில்லாத களிப்பு. வசந்தன் சீமான் வீட்டுப் பிள்ளை. வேணுபாயின் சமையலில் சுவையைவிட அளவுதான் மிகுதி. தன் வீட்டுக் கனிமலர்களுக்கு முன்னால் ராகப்பா வீட்டுக் கனியவியலைக் கண்டு வசந்தனுக்கு ஒரு வகை மன அமைதி உண்டாயிற்று. உண்ணும் போது ராகப்பா பீமசேனனைப் போல் வற்புறுத்தி ஊட்டிக்கொண்டு இருந்தான், கூடவே சிரிப்பும் தமாஷுமாகப் பேசியவாறு இருந்தான். ஆனால், வசந்தன் வீட்டில் சாப்பிட அமர்ந்துவிட்டால் சிரிப்புக்கும் தமாஷுக்கும் அனுமதி கிடையாது.

சாப்பிட்டான பிறகு ராகப்பா இரவு இரண்டுமணி சுவாரசிய மான பல தகவல்கள் சொல்லி வசந்தனை மகிழ்வித்தான். தன்னுடைய நாடகக் கம்பெனி வாழ்க்கையின் விந்தையான அனுவங்களைக் கவர்ச்சிகரமாக வருணித்தான். புகழ் பெற்ற மஹபூப் ஜான் இவனுடைய ஆசைநாயகி என்று எண்ணிய வசந்தனுக்கு ராகப்பாவிடம் இருந்த மரியாதை உணர்ச்சி மிகுந்துவிட்டது. நாடக மேடையில் கனவில் தென்படுவது போன்று மறுபடியும் மறைந்துபோகும் நடிகர் குழுவும், நோட்டீஸ்கள் வாயிலாக அறிமுகமான நபர்களும் இப்போது வசந்தனுக்கு உயிரோடிருப்பவர்களெனக் காணப்பட்டார்கள். மஹபூப் ஜானின் தவறான உச்சரிப்பை ராகப்பா திருத்தினான் என்று அறிந்தபோது பெரியபெரிய நடிகநடிகையரும் தவறாக உச்சரிப்பு செய்கிறார்கள் என்பதை வசந்தன் தெரிந்துகொண்டான். பல்வேறு கிராமங்களில் நேர்ந்த அவமானங்கள், கொட்டகைகள் பிய்க்கப்பட்டது, கூடாரங்கள் கிழிக்கப்பட்டது, குடிகாரர்களை

வெளியேற்றியது, பொய் சொல்லியும் மிரட்டியும் லைசன்ஸ் வாங்கியது, மேடையில் சாமான்களை மறந்து போவதால் ஏற்படும் அவமானங்கள், காலத்தில் சம்பளம் கிடைக்காததால் 'நாங்கள் வேடம் போட்டுக்கொள்ள மாட்டோம்' என்று நடிகர்கள் பிடிவாதம் செய்து உட்கார்ந்துவிடும் பழக்கங்கள் முதலிய செய்திகளில் உண்மை ஓரளவு இருந்தாலும் ராகப்பா தன்கைச் சரக்கையும் சேர்த்து சுவைபடச் சொன்னான். அதைக் கேட்டுச் சிரித்துச் சிரித்து வசந்தனுக்கு வயிறு வலிக்கத் தொடங்கியது.

ராகப்பாவின் இப்பேச்சுக்குப் பின்னால் மற்றொரு உள்நோக்கமும் வேலை செய்து கொண்டு இருந்தது. அவனைப் பார்த்ததுமே, பெண்ணைப் பெற்றவன் என்கிற முறையில் ராகப்பாவின் மனத்தில் 'இவன் சாந்தாவுக்குப் பொருத்தமானவனாக இருக்கமாட்டானா?' என்னும் எண்ணம் திடீரென்று தோன்றி இருக்கலாம். வசந்தன் அவனுடைய செல்வாக்கின் கீழ் வரவர, 'இவனை மாப்பிள்ளை ஆக்கிக் கொள்ள வேண்டும்' என்ற எண்ணம் உறுதிப்பட்டு வந்தது. தேசாயின் மீதுகொண்ட சினம் ராகப்பாவுக்கு மற்றொரு பணக்கார மருமகன் கிடைக்க உதவும் என்றால். அதில் தவறு என்ன?...

'நீங்கள் கிராமத்தில் நாடகம் நடத்தினீர்கள் என்று கேள்விப்பட்டேன்... கிராமத்து நாடகம் மார்வாடியின் தலைப்பாகை போல; அதை எப்படி வேண்டுமானாலும் கட்டலாம். அவர்களுக்கு இரண்டு வார்த்தை சொல்லித் தருவதற்குள் சொல்லித் தருபவர்கள் தீர்ந்து போய்விடுவார்கள். உண்மையான நாடகம், நகரத்தில் ஆடப்படுவதுதான். ஒரு நோட்டீசுக்குப் பதிலாக இரண்டு கொடுத்தால் நாடகத்தின் அழகே மாறிப்போகிறது. உண்மை என்ன என்றால்...தேர்ச்சி மிகுந்த நடிகர்கள் இருக்க வேண்டும், பெண் வேடத்தைப் பெண்களே ஏற்க வேண்டும், நல்ல பாட்டுகள், நன்றாகப் பாடக்கூடியவர்கள் மூன்று நான்கு பேர் வேண்டும். நிறைய வசூலும் செய்ய வேண்டும். இவை எல்லாம் இருந்துவிட்டால்... வசந்தராவ், எட்டணா டிக்கெட்தான் வையுங்கள், கூட்டம் நெறியும். நாடகத்தில் அலங்காரமும் முக்கியம். அள்ளி அள்ளி எறிய வேண்டியதாக இருக்கும்; அதைப் போலவே திரட்டியும்விடலாம் - அதுதானே நாடகம். வெறும் கடலை மிட்டாய் தின்றுவிட்டுப் பலகை மேல் ஆடவிட்டால் காசும் போய்விடும், பெயரும் போய்விடும்.'

வசந்தன் அவனுடைய கருத்து முழுவதையும் ஒப்புக்கொண்டான். அதனோடு மனத்தில் இருந்த ஒரு சந்தேகத்தையும் வெளியிட்டான்: 'ராஜபார்ட் போட்டுக்கொள்ளத் தேர்ச்சி உள்ளவர்கள்தான் வேண்டும், இல்லையா?'

வசந்தனின் உள்ளக் கிடக்கையைப் புரிந்துகொண்டு ராகப்பா கூறினான்: 'அப்படி ஒன்றும் தேர்ச்சி உள்ளவர்கள் தேவை இல்லை. மேக்கப்பால் கழுதையையும் ராஜா ஆக்கிவிடமுடியும். ஆனால், இனிய குரல் வேண்டும். ஆம், கொஞ்சம் உயரமும் வேண்டும். உச்சரிப்பு தெளிவாக இருக்க வேண்டும். இவை எல்லாம் தாமாக வந்து விடுவதில்லை, வசந்தராவ். இவற்றைக் கற்கவேண்டும்.

நாடகமும் ஒரு கலை. நடிப்புக்கலை எவ்வளவு கஷ்டமானது. அனுபவஸ்தர்களின் காலில் விழுந்து கற்றுக் கொள்ள வேண்டும். உங்களைப் போன்ற புத்திசாலி இளைஞர்கள் கற்கவேண்டுமானால் குறைந்தது பதினைந்து நாளாவது பயிற்சி வேண்டும், அதுவும் நாளுக்கு ஆறுமணி நேரம். நடிப்பு சும்மா வந்துவிடாது. இவை எல்லாவற்றோடும் புத்திக் கூர்மையும் கூடிவிட்டால் பொன்மலரில் வாசனை சேர்ந்தாற் போலத்தான். உங்களையே உதாரணமாக எடுத்துக் கொள்ளலாம். நீங்களே என்னிடம் வந்து, 'எனக்கு பிடிக்கிறது, நான் ராஜாவாக நடிக்கிறேன்' என்றால் நான் மறுத்துவிடுவேன். ஆனால், உங்களுடைய புத்தி, சக்தி, கற்கிற ஆர்வம், எல்லாவற்றையும் பார்த்த பிறகுதான், 'ஆம், பிள்ளையாண்டான் பரவாயில்லை, இன்று இல்லாவிட்டாலும் நாளை கற்றுவிடுவான்' என்று சொல்ல முடியும்.'

'நான் கற்கத் தயார்; நான் கற்க முடியும் என்று உங்களுக்குப் படுகிறதா?'

'நண்பரே, கற்றுக்கொள்ளத் தயார் சொல்லுங்கள். உங்களைப் போன்றவர்களுக்கு எந்த வித்தை வராது? நானும் நீங்களும் சேர்ந்து 'ஆர்பாட்' என்ற பெயரோடு கம்பெனி ஆரம்பிப்போம். நாலு நாள் இங்கே வருவதும் போவதுமாக இருந்தால் அதிலுள்ள கவர்ச்சி உங்களுக்குத் தெரியும். அபிநயமும் ஒரு கலை. சாமானிய அபிநயத்தில் இருந்து மிச்ச அபிநயத்துக்கு எப்படிப் போவது, மிச்ரத்திலிருந்து திச்ரம் வரை எப்படிப்போவது, புருவத்தை எப்போது உயர்த்த வேண்டும், பிரவேசம் எப்படி செய்வது, அலங்காரம் கெடாமல் நெற்றியில் கட்டை விரலை எப்படி வைப்பது, மீசை கீழே விழுந்துவிடாமல் மீசையை எப்படி முறுக்குவது, கண்களிலிருந்து கண்ணீரை எப்படி வரவழைப்பது, நடிகர்களின் தலையில் காயப்படாமல் கதையை எப்படி சுற்றுவது - இந்தமாதிரி சிறிய,பெரிய விஷயங்கள் எல்லாம் இருந்தாலும் ஒன்றோடு ஒன்று கூடிப் பதினொன்று ஆகின்றன, தெரிந்ததா, தம்பி. இவைதான் விஷயங்கள். இவற்றுக்கு பஹாதுர் தேசாயான நீங்கள் திடமாக இருக்க வேண்டும்.'

'நீங்கள் ஆட்டுவிக்கிறபடி நான் ஆடத் தயார். வித்தை யாருடைய அப்பன் வீட்டுச் சொத்து?' - என்றான் வசந்தராவ் சிஷ்யபாவத்தோடு. ஆனால், அவன் உள்ளுக்குள் தன்னை ராஜாவாகச் சித்தரித்துக் கொள்ளலானான்.

மறுநாள் பொழுது புலர்ந்ததும் பசவண்ணியோடு வசந்தன் புறப்பட்டான். தேநீர் நேரத்தில் சாந்தாவின் முதல் தரிசனமும் ஆயிற்று.

அதற்குப்பிறகு வசந்தன் வாரத்தில் இரண்டொரு தடவை தார்வாருக்கு ரகசியமாக வந்து போகத் தொடங்கினான். ராகப்பா அவனுக்கு 'மதர் வெங்காசனி', ரோயின் சுந்தரசானி, நகைச்சுவை சிகாமணி துளஜாராம், வில்லவ் சிரேஷ்டன் ராஜசேகரப்பா, ரோ புத்துராவ் டபகல்லி, சங்கீத சூறாவளி கணூரபுவா முதலியவர்களை அறிமுகம் செய்துவைத்தான். 'அடுத்த வருடம் தேசாய் கம்பெனி ஆரம்பிக்கிறார். நீங்கள் இதில் சேர்ந்தாக வேண்டும்,' என்பது போன்ற பேச்சுகளை ராகப்பா அவர்களோடு பேசினான். சுந்தரசானி வீட்டில் ஒரு சிறு கூட்டம் கூடியது. அப்போது பாக்கு வெற்றிலை பெற்றுக்கொண்டு வசந்தன் அவள் கையில் ஐந்து ரூபாய் வைத்தான். காலால் ஹார்மோனியம் வாசிக்கும் சந்திரய்யாவைச் சந்தித்து, 'எந்தக் கம்பெனி ஹார்மோனியம் நன்றாக இருக்கும்?' என்று கேட்டுத் தெரிந்து கொண்டான்: அதன் விலை என்ன? அதனுடைய குணதோஷங்கள் யாவை? - என்பது பற்றி சர்ச்சை நடந்தது. இந்த எல்லா விஷயங்களிலும், மிகமிகச் சிறிய விஷயமாயினும் மிகமிகப் பெரிய விஷயமாயினும், அறிவுக் களஞ்சியமாக ராகப்பா திகழ்வதைக் கண்டு வசந்தனுக்குத் தன் குழுவினிடம் இருந்த நம்பிக்கை வலுத்தது. பக்கீரப்பாவைப் பார்த்து முதல் முன்திரை, வீடு, வீதி, காடு ஆகிய காட்சிகளைத் தீட்டிய எட்டுதிரைகளுக்கு எவ்வளவு ஆகும், நாலு, ஆறுதிரைகளுக்கு எவ்வளவு ஆகும் என்பதைப் பற்றி எல்லாம் விவாதித்தார்கள். கணக்கு போட்டுப் பார்த்த போது, கலைஞர்களின் சாப்பாடு, சம்பளம் முதலிய நடைமுறைச் செலவுகள் தவிர, சாமான் களுக்குமட்டும் இரண்டாயிரம் ரூபாய் தேவைப்பட்டது. இந்தத் தொகைகளைப் பார்த்து வசந்தனின் விழிகள் கிழிவனபோல் பிதுங்கின. ஒரு நூறு ரூபாயில் கிராமத்தில் ஒரு முழுநாடகமே ஆடிவிடலாம், கொஞ்சம் மிச்சம் கூட ஆகிவிடும். இங்கேயோ கேவலம் கிரீடங்களுக்கே நூறுரூபாய் பறந்து விடுகிறது.

இதன் பேரில் ராகப்பா அவனுக்கு ஊக்கமூட்டி உரைத்தான்: 'உங்களுக்கு என்ன, தேசாய். உங்களிடம் இருக்கும் சொத்து என்னிடம் நகரத்தில் இருந்தால், என்னால் என்ன முடியும் என்பதைச் செய்து காட்டுவேன்.'

வீட்டுத் தானிய மூட்டைகளையும் களஞ்சியத்தையும் விற்பனை செய்வதைப் பற்றி ராகப்பாவுக்கு அதிக அக்கறை இல்லை. ஏனெனில், இதில் எல்லாம் என்ன கிடைக்கிறது? அதனால் சற்று உதவியாக இருக்கும் என்பது என்னவோ மெய்தான். ஆனால் இம்மாதிரி சின்னச் சின்ன விஷயங்கள் ஒரு தொழில்காரனுக்கு அழகாக இராது.

'அதிலிருந்து கொஞ்சம் வருகிறது, ஆனால், தேசாய், எவ்வளவு காலம்தான் இதைப் பெரியவர்களிடம் இருந்து மறைத்து வைக்க முடியும்? இப்போது நீங்கள் மேஜர் ஆகிவிட்டீர்கள். அதிலும் நீங்கள் பணத்தை வீணாக்கப் போவதில்லை. இதுவும் ஒரு தொழில். பணம் போட்டுப் பணம் எடுக்க வேண்டும். இதில் வெட்கப்படுவதற்கு என்ன இருக்கிறது? வெட்கப்பட்ட காலம் போய்விட்டது. இதைச் சிலர் இழிவாகப் பேசலாம். செய்யட்டும். இந்தத் தொழிலில் நீங்கள் எந்த அளவு நல்ல ஒழுக்கத்தோடு இருக்கிறீர்களோ, எந்த அளவு புத்திசாலித்தனமாய் நடந்து கொள்கிறீர்களோ, அந்த அளவு அதிகமான ஆதாயம் அடையலாம். நீங்கள் வெட்டிப் பழக்கங்கள் செய்து கொண்டு, பிறத்தியாரின் கைப்பாவையாக ஆகிவிட்டால் அவர்கள் உங்களை ஏமாற்றிவிடுவார்கள். தவறான வழியில் போகிறவன் வீட்டோடு இருந்தாலும் நஷ்டம்தான் அடைவான், தேசாய். நானே எல்லாவித ஆட்டமும் ஆடியிருக்கிறேன். எனக்கு என்ன கெட்டுவிட்டது? சொல்லுங்கள், பார்க்கலாம். மனுஷ்யன் ஆட்டம் ஆடலாம், ஆனால், அதில் மூழ்கிவிடக்கூடாது. மூழ்கினால், தொலைந்தான். இந்த விவேகம் உங்களுக்கு இருந்தால் நீங்கள் யாரிடமும் அஞ்சவோ, வெட்கப்படவோ தேவை இல்லை, ரகசியமாக வைத்திருக்கவும் தேவை இல்லை. நாடகமும் ஒரு தொழில்.'

இந்த அரைக்கம்பீரமான, மிகப் பழகியதன் அடையாளமாக ஒருமையும் பன்மையும் கலந்த உபதேசத்தை மனத்திற்குள்ளேயே சொல்லிக் கொண்ட வண்ணம் வசந்தராவ் பஸ்ஸில் கிராமத்தை அடைந்தான்.

## 28. சம்பக்காவின் கவலைகள்

இச்சமயம் சம்பக்காவின் மனத்தில் குவியல் குவியலாக எண்ணங்கள் எழலாயின. வீட்டில் முன் போலக் கலகலப்பு இல்லை. இந்த உணர்வு வலியினால் பிசையுண்ட சம்பக்காவை அன்றி வேறு யாருக்கு ஏற்பட முடியும்? அவளுக்கு இப்போது முப்பத்தேழு முப்பத்தெட்டு வயது ஆகிவிட்டது. இந்த

இருபதாண்டு இல்வாழ்க்கையில் அவள் நிறையப் பார்த்து இருந்தாள். வீட்டில் அவள் துக்கம், சுகம் இரண்டையும் பார்த்தாள். ஆனால் இப்போது காண்பதோ வேறு வகையான வெறும் சூன்யம். அவள் கணவனை ஒரு காதலியைப் போன்று மிக நெருங்கியிருந்து பார்த்து வந்திருக்கிறாள். அவளுக்கு அவனுடைய அந்தரங்கமும் தெரியும். அவனுடைய இன்ப சுபாவத்துக்குப் பின்னால் ஒளிந்துள்ள போராட்டங்களையும் அறிவாள். அதே போன்று அச்சமயத்தில் அவளுடைய கணவனிடம் ஏற்பட்டு வந்த மாறுதல்கள் மற்றவர்களுக்குத் தென் படாவிட்டாலும் அவளுக்கு மிகத் தெளிவாகத் தென்பட்டன. அவனுடைய சித்தவடிவான சுவர்களில் விழும் பிளவுகளைப் பார்த்து அவள் பேதை போல் ஊமைத் துன்பத்தால் கவலை யுற்றும் தன் நாட்களைப் போக்கி வந்தாள். அவளுடைய கணவன் தோற்கத் தொடங்கியிருந்தான்.

என்ன இது, வயோதிகமா?...சாப்பாடு குறைந்துவிட்டது. சற்றுத் தூசி படிந்திருந்தாலும் தூக்கி எறிந்துவிட்டு வேறு ஆடை கட்டிக்கொள்ளும் ராகப்பாவின் காலர்களில் அங்குலக் கணக்கில் அழுக்கு நன்றாகத் தெரிந்தது. உடம்பு முன் போல் திடமாகவே இருந்தது, ஆனால் முகத்தில் இருந்த மகிழ்ச்சியைக் காணோம். யாரோ கோடு கிழித்தாற் போல முகத்து ரேகைகள் மிக ஆழ்ந்து விட்டன. வெளியாருக்கு இது காணப்படாமல் இருக்கலாம், ஆனால் சம்பக்காவைப் பொறுத்தவரை அவை அச்சத்தின் முன் அறிவிப்புகள். வீட்டில் நாளைச் சாப்பாட்டுக்கு ஒரு மணி தானியம் இல்லாத போது கூட; கவலையை மாடத்தில் போட்டு விட்டு ஒரே நிமிடத்தில் விறகுக் கட்டை போல உறங்கிவிடுகிற கணவன் இப்போது இரவு இரண்டு மணிவரை புரண்டபடி இருக்கிறான்.

மற்றொரு விஷயம். கணவனின் எண்ணங்களை அறிந்து கொள்ளச் சம்பக்கா அவனுடைய செய்கைகளைப் பார்க்க வேண்டி இருந்தது. எந்நேரமும் புன்னகையோடு இருக்கும் அவன் ஏதாவது வேலை செய்த பிறகு தான், 'ஓ, இதுவா விஷயம்' என்று புரிந்துகொள்ள முடியும். ஆனால், இப்போது அவன் தனக்குத்தானே பிதற்றிக் கொள்ளத் தொடங்கி இருந்தான். முன்பு மனத்து நினைவுகளை முகம் பிரதிபலிக்காது. இப்போதோ முகத்தைப் பார்த்தாலே புரிந்தது, அவனுடைய உதடுகளும் அசைந்தபடி இருக்கும்.

கடைசியில் ஒருநாள் தேநீர் பருகும் வேளையில் வெளிப் படையாகப் பிதற்றினான்: 'உயிர் போனாலும் சரி, அவர் கையில் சிக்கமாட்டேன்.'

சாந்தாவும் சம்பக்காவும் அச்சொற்களைக் கேட்டார்கள். இவ்வளவு தெளிவாகப் பேசக் கேட்ட சம்பக்கா, கணவன் தன்னிடம் தான் ஏதோ சொல்கிறான் என்று எண்ணியவளாய், 'ஏன், என்ன ஆயிற்று?' என்று கேட்டாள். ராகப்பா வியப்போடு, 'என்னது?' என்றான்.

'நீங்கள் ஏதோ சொல்லிக் கொண்டு இருந்தீர்களே,' என்றாள் சம்பக்கா.

'நான் என்ன சொன்னேன், உனக்கு ஏதாவது பைத்தியம் பிடித்துவிட்டதா?'

தந்தையின் பேச்சு நொடியில் மாறியதைக் கண்ட சாந்தா சீனிடப்பாவைப் பிறையில் வைக்கப் போனவள், வியப்படைந்தவளாய் அப்படியே நின்றுவிட்டாள்.

'உனக்கு கேட்கவில்லையா, சாந்தா?'

சாந்தா சாட்சியம் சொன்னாள்: 'ஆம், அப்பா, யாருடைய கையிலோ சிக்கமாட்டேன் என்று சொன்னீர்கள்?'

ராகப்பா ஆத்திரமுற்றுப் பலமாய்க் கத்தினான்: 'நான் யாரிடமும் ஒன்றும் சொல்லவில்லை...பைத்தியக்காரத் தனமாய்ப் பேசி எனக்குக் கோபமூட்டாதீர்கள்.'

'ஏன், உங்களுக்கு என்ன ஆகிவிட்டது? ஏன் இப்படி...'

'போதும், ஜாக்கிரதை!' என்று சொல்லிக் கொண்டே தேநீரை மடக் என்று விழுங்கிவிட்டு எழுந்து போய் விட்டான் ராகப்பா.

அப்போது முதல் அவனுடைய தன்னுரையைக் கேட்டாலும் சம்பக்கா கேட்காதவள் போல் இருந்துவிடுவாள். இவ்வாறு தடையற்றுப் போனதாய் ராகப்பாவின் தன்னுரை மிகுந்துவிட்டது. கணவன் கிழப்பருவத்தை நோக்கி ஓடுவதாகச் சம்பக்காவுக்கு அச்சம் உண்டாகிவிட்டது. ஒரு நாள் சாந்தாவிடம் கூறினாள்: 'உனக்குக் கலியாணம் ஆனபிறகு அவருக்கு முன்னால் பகவான் என்னை அழைத்துக் கொள்ள வேண்டும் என்று பிரார்த்தனை செய்கிறேன். இனி அதிககாலம் இருக்க நான் விரும்பவில்லை. நீ பிறந்த போதே நான் போயிருந்தால் இதுவரை பதினைந்து சிராத்தம் ஆகியிருக்கும்.' சொல்லும் போதே அவளுடைய கண்கள் கலங்கின.

அவளுக்கு இது கவலை.

மற்றொரு கவலையும் இருந்தது. இந்த வயதில் அவள் கருத்தரித்தால்? முதலில், மரணபயம், இரண்டாவது, வலி பயம்; ஆனால், ஆயுள் முழுவதையும் அவள் துயரத்தில் கழித்தவள். இப்போது, துயரத்திலேயே எல்லாவற்றையும் ஏற்கத் தயராக இருந்தாள். 'கட்டாயம் மரணம்' என்று டாக்டர் தெளிவாய்க் கூறி

இருந்தார். பதினைந்து ஆண்டுகள் ஆகிவிட்டன; ஒரு கால் நான் சாகாமல் தப்பலாம். ஆனால், ஆண் குழந்தை தான் பிறக்கும் என்பதற்கு என்ன உறுதி? ஆண் குழந்தையே பிறந்து, நான் இறந்துபோனால்?...இத்தனை ஆசையோடு பிறவிகொடுத்து குழந்தையை அநாதை ஆக்கிவிட்டு நான் இறந்துவிட்டால்?' - இவ்வாறு ஜீவமரணப் பிரச்னைகள் அவளைச் சூழ்ந்து கொண்டு இருந்தன. 'குழந்தை வேட்கையோடு கணவன் நெருங்கினால் என்ன செய்வது?' என்று எண்ணி மௌனி ஆகிவிடுவாள். 'இதையெல்லாம் யோசிப்பது என் வேலை அல்ல' என நினைப்பாள். ஆனால், அதே நினைவு அவளை வளைத்துக் கொள்ளும்.

இன்னொரு கவலையும் இருந்தது. ரத்னாவுக்குக் குழந்தைகள் இல்லை. அவளுக்கு முன்னால் இந்த வயதான காலத்தில் தான் வயிற்றைத் தூக்கிக் கொண்டு நின்றால் அவளுக்கு வருத்தமாக இருக்கலாம். அது மட்டும் அல்ல, அவளுடைய வாய்க் கவளத்தைத் தட்டிப் பறிக்கிற கதை, ஐயோ!

மகாபாரதத்தையும் பாகவதத்தையும் பாராயணம் செய்கிற சம்பக்காவுக்குத் தன் கணவன் இத்தகைய காரியங்களினால் அதோகதி அடையவில்லையா என்கிற அச்சம் எழுந்தது. ஆனால், இதில் ஒரு மனைவி என்ன செய்ய முடியும்?

மஹபூப் ஜானுடன் கணவனுக்குத் தொடர்பு இருந்த தகவல் அவளுக்குத் தெரிந்த போது அதைச் சகித்துக் கொள்ளும் சக்தி இருந்தது; ஆனால், இப்போது எழுந்துள்ள நீதிப் பிரச்னை முற்றிலும் வேறுவகைப்பட்டது. தவிர, தகர்க்க முடியாத கோட்டை என விளங்கிய கணவன் இப்பொழுது அவளுடைய கண்களுக்கு முன்னாலேயே சரிவுறுவதாகத் தோன்றியது. இதைக் காண அவள் குடல் கலங்கிற்று.

சுவர்களில் விழும் வெடிப்புகளைப் பார்க்கும்போது உண்டாகும் வேதனையைவிட ஆயிரம் மடங்கு மிகுதியான துன்பம் இரும்பு போன்றதொரு மனிதன் சரிவதைப் பார்க்கும் போது உண்டாகிறது. காளிதாசனும் அஜராஜனின் கிழப்பருவத்தை வருணனை செய்யும் போது சொல்கிறான்: 'ஆலமரம் அரண்மனைச் சுவரிலும் வெடிப்பு உண்டாக்கி விடுவதைப்போல் இந்துமதியின் பிரிவு அஜனின் நெஞ்சைப் பிளந்துவிட்டது.'

சம்பக்காவின் கவலைகள் முடிவு காணவில்லை; மற்றும் ஒரு கவலை இருந்தது; சாந்தா பற்றி.

சாந்தா நாளுக்கு நாள் வளர்ந்து வந்தாள். ரோஜா மொட்டு போன்று மென்மையாகவும் மலர்வதாகவும் அவள் தோற்றம்

தந்தாள், ரத்னாவை விட அரைஅடி உயரமாக வளர்ந்து விட்டாள். பதினைந்து வயதிலேயே அவள் இவ்வளவு அழகுறுவாள் என யாருக்குமே தோன்றவில்லை. தாய் தந்தையர் இருவருமே அழகானவர்கள். ஆனால் சாந்தாவின் வெண்மை வண்ணமும், உயரமான உடலும், உடலின் கட்டுக்கோப்புப் பொலிவும் முழுக்க முழுக்க வேறு. அவளை மணப்பவன் பாக்கியவானாக இருப்பான் என்று அவளை அறிந்தவர்கள் சொல்வார்கள். தன் மகளின் அழகைப் பற்றி சம்பக்காவுக்கு நிறையக் கர்வம் இருப்பினும் அவளுடைய மனத்திற்குள் எல்லா அழகுகளைப் பற்றியும் ஐயமும் அச்சமும் இருந்துகொண்டே இருந்தன. அவளே அழகி; தன் அழகு காரணமாக அவள் போதுமான துக்கம் கண்டு விட்டாள். ஆகையால் மறந்தாற்போலக்கூட அவள் சாந்தாவுக்கு முன்னாலோ பின்னாலோ அவளுடைய எழிலைப் புகழ்ந்ததில்லை.

பெண் அழகி என்பதால் அவளைக் கண்ணாடிப் பெட்டியில் மூடிவைக்க முடியுமா என்ன? பெண்களுக்கு தன் அழகு பற்றிய கர்வம் வந்துவிடக் கூடாது என்று பெற்றவள் லட்சம் முயற்சி செய்தாலும், வெளிச் சூழல் காரணமாக அவளுக்கு ஓரளவு அகம்பாவம் ஏற்படுவது இயற்கைதானே.

ரத்னாவைவிட சாந்தா இரண்டு மூன்று வகுப்பு கூடப் படித்தவள். அதிகம் படித்தது முக்கியம் அல்ல, ஆனால் அவள் எந்தக் காலத்தில் படிப்பு பெற்றாள் என்பதுதான் மிகவும் முக்கியமான விஷயம்.

ரத்னா ஸ்கூலில் படித்த காலத்திற்கும் சாந்தா படித்த காலத்திற்கும் இடையில் மண்ணுக்கும் விண்ணுக்கும் இடையில் உள்ள வித்தியாசம் இருந்தது. இருவருக்கும் ஐந்து வருட வித்தியாசம் என்றாலும் சமூகப் பழக்கவழக்கங்கள் மிகவும் மாறிவிட்டன. உப்பு சத்யாக்ரகக் காலத்தில், பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் மறியல் நடந்தபோது சாந்தா அந்தக் கிளர்ச்சிகளில் பங்கு கொள்வாள். பள்ளிக்கூடம் முழுவதிலும் பன்னிரண்டு பெண்களே இருந்தார்கள். அவர்களில் சிலர் பதினாறு வயதுக்கு மேற்பட்டவர்கள் ஆனதால் நாணம் காரணமாக ஊர்வலங்களிலும் நிகழ்ச்சிகளிலும் கலந்து கொள்ள முன்வரவில்லை; இன்னும் சில பெண்கள் பழங்கருத்துள்ள குடும்பத்தைச் சேர்ந்தவர்கள், 'நாம் இப்படிச் செய்தால் பெற்றோர் பள்ளிக்கு அனுப்புவதை நிறுத்திவிடுவார்கள்' என்கிற அச்சத்தால் ஒதுங்கினார்கள். சாந்தாவுக்கு வீட்டில் சுதந்திரம் இருந்தது. வயதும் குறைவு, அப்போது அவளுக்குப் பன்னிரெண்டு வயது.

இக்காரணத்தால் அவ்வகை நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ள அவளுக்கு வெட்கம் இல்லை. அவளும், வடக்கு கர்நாடக மாவட்டத்தைச் சேர்ந்த மற்றொரு பெண்ணும் மாணவர்களின் ஊர்வலங்களில் எல்லாருக்கும் முன்னால் கொடியைப் பிடித்துக் கொண்டு 'நம்முடைய கொடி உயர்ந்து இருக்கட்டும்' பாட்டைப் பாடிக்கொண்டும் கோஷங்களை முழங்கிக் கொண்டும் தெருக்களில் மார்ச் செய்வார்கள். கூட்டத்தில் சொற் பொழிவாற்றும் போது யாராவது, 'நம்முடைய இந்தப் போராட்டத்தில் மாதர்களும் பங்குகொண்டு சுதந்திரத்திற்காகப் போராடுகிறார்கள்' என்று பேசினால், தன்னையே புகழ்ந்து பேசுவதாக எண்ணிச் சாந்தா களிப்படைவாள்.

காலப் போக்கின்படி தன் சிறு பிராயத்திலேயே சுதந்திரத்தைச் சுவைத்த சாந்தா, ரத்னாவைப் போன்று குனிந்து செல்வது என்பது இயலாத காரியம். சாந்தா சில ஆண்டுகளாகவே யுவதி போலத் தோன்றினாள். அவள் பாவாடை தாவணி அணிவதை விடுத்துச் சேலை கட்டத் தொடங்கியிருந்தாள். இதனால் அவள் இன்னும் அழகாய்க் காட்சித் தந்தாள். அண்டை அயல் வீட்டாரும் சிநேகிதிகளும் அவளுடைய அழகைப் புகழ்வார்கள். அதிர்ஷ்டவசமாகத் தாயார் இதைப் பற்றி அலட்சியமாக இருந்ததால் அவள் கர்வி ஆகவில்லை. ஒரு நிகழ்ச்சி அவளுடைய மனத்தையே மாறுதல் பெறச் செய்துவிட்டது. அவளுடைய மனத்தில் சுயமரியாதை உணர்வு உண்டாக்கியது, குழந்தைத் தனத்தைவிடுத்து அவளுடைய நடத்தையில் ஒரு கம்பீரம் கற்பித்தது.

அவளுடைய பள்ளியில் கற்பிக்கும் ஒரு தேசபக்த இளம் ஆசிரியன் அவளுடைய நாட்டுப் பற்றையும், தேசபக்திபற்றி அவள் எழுதிய வியாசங்களையும் பார்த்து மயங்கி அவளை மணம் புரிந்து கொள்ள ஆர்வம் கொண்டான். ஒரு நாள் சற்றும் சிந்தியாது, நடுவில் யாரையும் வைத்துக் கொள்ளாது, அவனே அவளுடைய புரோக்ரஸ் ரிப்போர்ட் எடுத்துக் கொண்டு ராகப்பாவை அணுகினான். அவளுடைய படிப்பைப் புகழ்ந்து கொண்டே தன் விருப்பத்தை வெளியிடும் முறையில் ராகப்பாவிடம் உரைத்தான்: 'வேறு எதற்காகவும் இல்லாவிட்டாலும் குறைந்தபட்சம் நாட்டின் நலனையே கருத்தில் கொண்டு நீங்கள் எங்களுக்குக் கலியாணம் செய்து வையுங்கள்.' சொல்லும் போதே கண்ணீரும் பெருக்கினான். இதன் பேரில், ராகப்பா மறுத்ததோடு, தலைமை ஆசிரியரிடம் ரிபோர்ட் செய்வதாய் மிரட்டவே அந்த ஆசிரியன் மானக் கேட்டுக்கு அஞ்சி வேலையை ராஜிநாமா செய்துவிட்டு வேறு

இடத்துக்கு ஓடிவிட்டான். இந்த விஷயத்தில் நடுவர்யாரும் இல்லாததால் ஊரில் அது பரவவில்லை.

ஆனால், தன்னால் ஓர் ஆசிரியர் வேலையை இழந்தார் என்பதை எண்ணிச் சில சமயம் சாந்தா கர்வப்படுவாள். ரத்னாவைப் போல் அவள் ஒவ்வொன்றுக்கும் தாயாரை எதிர்பார்ப்பவள் அல்ல. தாயோடு தோழி போல அவள் பழகுவாள். இதனோடு சம்பக்கா மிகவும் பலவீனமாக இருந்ததால் சாந்தாவே வீட்டையும் நிர்வாகம் செய்தாள். ஆகையால் அவள் வீட்டு எஜமானி போல் ஆகிவிட்டாள்.

சாந்தாவை வசந்தனுக்கு மணமுடிக்க ராகப்பா விரும்புகிறான் என்பதை இரண்டே நாளில் சம்பக்கா உணர்ந்துவிட்டாள். இதற்காக மனத்தில் மகிழ்ச்சியும் அடைந்தாள். வசந்தராவ் தன் மகளை விரும்புவான் என்பதைப் பற்றி அவளுக்குச் சந்தேகமே இல்லை, ஏனெனில் சாந்தாவின் அழகே அத்தகையது. வசந்தராவின் தந்தை இதற்கு உடன்படாதிருக்கலாம், ஆனால் அது அவள் யோசிக்க வேண்டிய விஷயம் அல்ல. நூறு பொய் சொல்லியாவது அவளுடைய கணவன் இந்த வேலையை முடித்துவிடுவான் என்று அவளுக்கு நம்பிக்கை இருந்தது. வசந்தன் பணக்காரன் என்ற தகவலும் அவளுக்கும் உவகை தந்தது. பகவானின் அருளால் அவள் கர்ப்பவதி ஆகாமல் இருந்துவிட்டால் வசந்தன் அவளுடைய சிறிதளவு நிலத்தைப் பேராசையால் கிட்டிக்கு நடுவில் வந்து ரத்னாவின் வாய்க் கவளத்தைப் பிடுங்கிக் கொள்ளமாட்டான் என்ற எண்ணத்தால் அவளுக்குக் கொஞ்சம் ஆறுதல் ஏற்பட்டது. சம்பக்கா வாழ்க்கையில் பல துக்கங்களைக் கண்டவள். ஆகையால் அவள் மனத்தில் தேவையற்ற அச்சங்கள் தோன்றுவது வழக்கம். கிட்டி வீட்டிற்கு வந்த சமயம் அவளுக்கு எதைப் பற்றியும் பயம் இல்லை. வசந்தன் பணக்காரன்; ராகப்பாவின் அனுமதியோடு வீட்டுக்கு வந்து போகத் தொடங்கியதும் அவளுக்குக் கொஞ்சம் திகிலாக இருந்தது. 'இவ்வளவு பணக்காரன் நமக்கு மருமகன் ஆவான்? அதை நான் நம்புவதா!' என்று எண்ணுவாள் அவள்.

சம்பக்காவின் கலியாணம் தார்வாரில் முதல் காதல் திருமணம் என்று ஒரு தலைமுறைவரை பிரபலமாக இருந்தது. சம்பக்காவைப் பற்றி ஜனங்களுக்குத் தவறான அபிப்பிராயம் இருந்தது. மற்றவர்களைப் பற்றி சாரங்கராவ் போல நிஷ்ரேமாகப் பேசுவது மக்கள் பழக்கம். அவளுடைய அடக்கமான நடத்தையைப் பார்த்து சில அற்பபுத்தி படைத்த நடுத்தர

வயதினர், 'நூறு எலிகளைத் தின்றுவிட்டுப் பூனை ஹஜ்யாத்திரை போயிற்று' என்று கூறிவிடுவார்கள். ஆனால் அவளுடைய நன்கு பண்பட்ட சுபாவம் இந்த எல்லாவற்றிலிருந்தும் பாடம் கற்றது. ஒரே ஒரு கணம் அஜாக்கிரதையாக இருந்ததால் அவளுடைய கன்னித் தன்மை பின்னப்பட்டது, அதனால் சமூகத்தில் எழுந்த ஆரவாரம், தாயார் கிணற்றில் விழமுனைந்தது, அவளுடைய கணவன் மணக்க மறுத்தது, அவளுடைய மனத்தின் பயங்கரமான பச்சாத்தாபம், இறுதியாக, தாயார் இதே காரணத்தால் உருகி உருகி உயிரைவிட்டது. இவற்றை எல்லாம் அனுபவித்து முடித்துவிட்ட சம்பக்கா தன் குழந்தைகளைப் பற்றி நினைத்து நினைத்துக் கலங்கிப் போவாள்.

## 29. நேர்முக, மறைமுகப் போராட்டம்

**ரா**கப்பாவும் தேசாயும் ஒருவரை ஒருவர் நேரில் சந்தித்துப் பல நாட்கள் ஆகிவிட்டன; ஆனால் அவர் அந்தரங்கத்தில் அவனுடைய இருக்கையை அடிக்கடி உணர்ந்து கொண்டிருந்தார். வசந்தன் தார்வாருக்கு வந்து வீட்டுக்கு வராமலே திரும்பிப் போன செய்தி காற்றுவாக்கில் யார் வாயிலாகவோ அவருக்குத் தெரிந்தவர்களுக்கு எட்டி, அவர்கள் மூலமாக வேணுபாய்க்கும் எட்டிவிட்டது. அவள் அதைத் தேசாயிடம் கூறினாள். அவர் ஒன்றும் சொல்லாமல் சிந்தனை வசப்பட்டவராக உட்கார்ந்து இருந்தார். வசந்தனுக்குக் கடிதம் எழுதி அவனை இங்கே வரவழைத்துக் கொள்ளும்படி வேணுபாய் வே'ண்டிக் கொண்டதற்கும் அவர் இணங்கவில்லை. இதை எல்லாம் தாங்க முடியாத அவள் ஒருநாள் தேசாயிடம் உரைத்தாள் :

'அந்த ராகப்பா பெரிய போக்கிரி. கங்கவ்வா அவனுடைய நிழலைக்கூடப் பார்க்க விரும்பவில்லை. அவனோடு நீங்கள் ஏன் சண்டை இடுகிறீர்கள்? அவர்கள் பொருளை அவர்களிடம் ஒப்படைத்துவிடுங்கள். அவன் நம்பையனின் மனசைக் கெடுத்து விடப்போகிறான். இரண்டாயிரம் ரூபாய்க்காகத்தானே இவ்வளவும் செய்கிறான்? அவர்கள் பொருளை அவர்களிடமே கொடுத்துவிடுங்கள். உங்கள் கவலை பூராவும் தீர்ந்து போகும்.'

'ராகப்பா வந்து காலைப் பிடித்துக் கொள்ளட்டும், கொடுத்துவிடுவேன், விளையாட்டா என்ன? என்னையா எதிர்க்கிறான்? என்னோடு குஸ்தி போடுவானா? போடட்டும். ஒருகை பார்த்து விடுகிறேன். அந்தக் கிட்டியை அனுப்பி எனக்குப் புத்தி சொல்லுகிறான். ஒரு முறை நேரில் வரட்டும், தூணோடு கட்டிப் போடச் செய்கிறேன்.'

*'அவர்கள் சண்டையில் நமக்கு ஏன் வம்பு என்று முன்பு சொல்லிக் கொண்டிருந்தீர்கள். இப்போது உங்கள் மனம் ஏன் மாறிவிட்டது? இந்த விவகாரங்களினால் இப்போது உங்களுக்கு சந்தோஷம் ஏற்பட ஆரம்பித்துவிட்டதா?'*

*'அந்தப் பேச்சை விடு. நாம் பேசாமல் இருந்தாலும் நம்மை வம்புக்கு இழுக்கிறான், ஒரு முறை முடிவுதான் ஆகட்டுமே!'*

*'அவனோடு மல்லுக்கு நிற்பதானால் நில்லுங்கள். வசந்தனுக்கு எழுதி இங்கே வரவழையுங்கள். இல்லையானால் என்னையாவது அங்கே போகவிடுங்கள். நீங்கள் அசட்டையாக இருக்க இருக்க அவன் ராகப்பாவின் வலையில் மாட்டிக் கொண்டே போகிறான், அவன், பாவம், இன்னும் குழந்தை தானே. நான் இரண்டு நாள் இருந்துவிட்டு வந்து விடுகிறேன்...'*

*தேசாயினால் தன்னை அடக்கிக் கொள்ள முடியவில்லை. அவர் ஏன் பேசாமல் உட்கார்ந்திருக்கிறார்? என்பதை இப்போது சொல்லிவிடுவதே சரி என்று எண்ணி அவர் எழுந்தார். இரண்டு நாளைக்க முன்பு வசந்தனிடமிருந்து வந்த கடிதத்தை இரும்புப் பெட்டியிலிருந்து எடுத்து, 'உன்னுடைய பிள்ளை இன்னும் அறியாக் குழந்தை...அவன் தகப்பனுக்குக் கடிதம் எழுதி இருக்கிறான், பார்,' என்று கூறி அவர் படிக்க ஆரம்பித்தார்.*

*ஸ்ரீ* — *இனாம் கிராமம்*<br>*வெள்ளை வீடு*

பூஜிக்கத்தக்க தீர்த்த ரூபமான ஸ்ரீ ஸ்ரீ கோபாலராவ் தேசாய் அவர்களின் திருமுன் இக்கடிதம் எழுதுவதற்குக் காரணம், நான் மேஜராகி இரண்டு ஆண்டுகள் ஆகியும் தாங்கள் எனக்கு என் பாகத்தைத் தராமல் தாங்களே அதை அனுபவித்து வருகிறீர்கள். தங்களுக்கு மூன்று பிள்ளைகள், அவர்களில் நான் நடுவிலவன். எனக்குச் சட்டப்படி கிடைக்க வேண்டிய பிதுராப்ஜிதச் சொத்துக்கள் என் பெயரில் கூடிய விரைவில் முறைப்படி மாற்றப்படவேண்டும். தங்களுக்குச் சம்மதமானால் நான்கு பெரியவர்களை வைத்துக் கொண்டு பிரிவினை செய்து நான் என் பாகத்தை எடுத்துக் கொள்ள விரும்புகிறேன். மற்ற என் அண்ணன் அச்சுதராவும் இளம் வயதுத் தம்பி புருஷோத்தமனும் தங்கள் பாகத்தைத் தாங்களே எடுத்துக் கொண்டாலும் சரி, அல்லது, தங்களிடமே விட்டு வைத்தாலும் சரி, எனக்கும் அதற்கும் தொடர்பு இல்லை. இந்த விஷயம் நான்கு பேருக்கு முன்னிலையில் முடிவாகிவிட வேண்டும். எனக்கு என் பங்கு வேண்டும். எக்காரணத் தாலாவது என் கடிதம் கிடைத்த மூன்று மாதங்களுக்குள் என்

பங்கை எனக்குத் தருவதற்கு தாங்கள் ஏற்பாடு செய்யா விட்டால், விளைவுகளுக்குத் தாங்களே பொறுப்பாளி ஆவீர்கள். தாங்கள் காலதாமதம் செய்ததற்குத் தக்க நஷ்ட ஈடுசெய்ய வேண்டி வரும். ஆகையால் இவ்விவகாரம் விரைவில் முடிவதே எல்லாருக்கும் நல்லதாகும். தங்களுக்கு உடன்பாடானால் என்னுடைய நலம் விரும்பிகளோடு நான் தங்களைச் சந்திக்க வருகிறேன். தங்கள் விருப்பத்தைத் தெரிவிக்கக் காலதாமதம் செய்யாமல் உடனே தெரிவிக்கும்படி தங்களைப் பணிவாக வேண்டிக் கொள்கிறேன். மற்ற விஷயங்களுக்காக என்னை மன்னியுங்கள்; இந்தக் கடிதம் நோட்டீஸ் அல்ல என்றாலும், இதை நோட்டீஸாகவே கருதிப் பதினைந்து நாளில் பதில் அனுப்புமாறு தங்களைக் கேட்டுக்கொள்கிறேன். தங்கள் நலத்துக்கு எழுதவும்.

*தங்கள் இரண்டாவது சிரஞ்சீவி*
*வசந்தராவ் தேசாய்*

*மகனின் கடிதத்தைக் கேட்டு வேணுபாய்க்கு மிகவும் துயரம் உண்டாயிற்று. இக்காரணத்தால் கணவர் எவ்வளவு கலக்கம் அடைந்திருப்பார் என்பதை எண்ணி அவள் கண்கள் நிறைந்தன.*

*'இந்த மாதிரி எல்லாம் செய்யாதேடா, கெட்ட பழக்கங்களைச் செய்து கொள்ளாதேடா, கெட்டவர்களோடு சகவாசம் வைத்துக்கொள்ளாதே, அப்பா தெய்வம் மாதிரி என்று அவனுக்கு எவ்வளவோ சொன்னேன்...எல்லாம் கல்லுக்குச் சொன்ன கதை ஆகிவிட்டது. அவன் போன ஜன்மத்து விரோதி, இப்போது பிள்ளையாகப் பிறந்து வந்திருக்கிறான். இந்தப் பிள்ளையால் உங்களுக்கு சுகம் கிடைக்காது.'*

*'என்னை என்ன செய்வான்? அவனே அனுபவிக்கிறான். இந்தக் கடிதம் எழுத அவனைத் தூண்டியது யார் என்று எனக்குத் தெரியாதா என்ன?...அந்தக் குருவின் தொண்டையை நெறிக் கிறேன். இந்தத் தடவை கிட்டி-பிட்டி எல்லாரும் வழிக்கு வந்து விடுவார்கள்?'*

*தேசாய் உடனே முடிவு செய்து கடிதம் எழுதினார் :*

*தார்வார்*

*ஸ்ரீ*

சிரஞ்சீவி வசந்தராவுக்கு ஆசீர்வாதம். உன் கடிதம் கிடைத்தது. நாங்கள் எல்லோரும் நலம். நீ என் மகன் என்பதை நான் மறக்க முடியாது. நீ உன் நலம் விரும்பியோடு வரவும். ஆசீர்வாதம்.

கோலால்ராவ்

இந்தக் கடிதம் கிடைத்ததும் வசந்தனுக்குப் பயமாக இருந்தது, ஏனெனில் அதில் முக்கியமான விஷயம் பற்றி ஒன்றும் இல்லை. அப்பண்ணா பட்டன் எழுதித் தந்த கடிதத்தைப் பிரதி எடுத்துத்தான் அவன் தகப்பனாருக்கு அனுப்பினான். தந்தை இவ்வளவு விரைவாகப் பதில் எழுதுவார் என்று அவன் எதிர்பார்க்கவில்லை. இப்போது அப்பண்ணா பட்டனைக் கூப்பிட வேண்டியதாக இருக்கும். இதுவரை தன் புத்திக்கு ஏற்ப காரியம் செய்துவிட்டான், ஆனால் இனி ராகப்பாவிடம் யோசனை கேட்க வேண்டியதாக இருக்கும். மனத்தில் இந்த முடிவுக்கு வந்த அவன் தன் கடிதத்தின் நகலையும், தகப்பனாரின் பதிலையும் ஜாக்கிரதையாகக் கோட்டையில் வைத்துக் கொண்டு ராகப்பாவைச் சந்திக்கப் புறப்பட்டான்.

தான் விதைத்த விதை இவ்வளவு விரைவாகப் பயன்தரும் என்று ராகப்பா கற்பனையும் செய்யவில்லை. தேசாயுடன் வெளிப்படையாக விரோதம் செய்து கொள்ள அவன் விரும்பவில்லை. மறைந்திருந்து அடிக்கவே காத்திருந்தான். ஆயினும் தன் மனோபலத்தைக் காட்டிக் கொள்ளாமலே அவன் இருகடிதங்களையும் படித்தான். அப்பண்ணா பட்டர் எழுதிக் கொடுத்த கடிதத்தை மெச்சிக் கூறினான்: 'பிராமணன் கெட்டிக்காரன், எழுத்தில் அடக்கம் இருக்கிறது.' தேசாயின் கடிதத்தை மீண்டும் அவன் கவனமாகப் படித்தான். அதில் வசந்தனுக்கு விளங்காத ஒரு நுணுக்கத்தை அவன் கண்டான். வசந்தன் கடிதத்தில் 'நான் என் நலம் விரும்பிகளோடு சந்திக்க வருகிறேன்,' என்று பன்மையில் எழுதி இருந்தான், ஆனால் தேசாய் 'உன் நலம் விரும்பியோடு' என்று ஒருமையைப் பயன்படுத்தி இருந்தார். ராகப்பா அதன் பொருளைப் புரிந்துகொண்டான். தேசாயுடன் வெளிப்படையாக மோத அவனுக்கு விருப்பமே இல்லை. 'ஆனால் வசந்தராவ், உங்கள் தகப்பனாரின் கடிதத்தைப் பார்த்தால் அவர் அவ்வளவு சுளுவாக ஒப்புக்கொள்வார் போலத் தெரியவில்லையே,' என்றான்.

'ஏன், வரச்சொல்லி இருக்கிறாரே?'

'உங்களை இவ்வளவு அவசரமாய்க் கூப்பிடுகிறார். உங்களுடைய விஷயத்தை அவர் பொருட்படுத்தவில்லை என்று இதனால் தெரிகிறது. உங்களுடைய தகப்பனார் இப்படி விட்டுக்கொடுப்பவர் அல்ல. எனக்கு அவரைத் தெரியும்.'

'கூப்பிட்டிருக்கிறாரே, போய்த் தெரிந்துகொள்வதால் என்ன நஷ்டம்?'

'ஆம், யோசித்துச் செல்லுங்கள். கட்டாயம் போய் வாருங்கள்.'

'நீங்களும் கூட வர வேண்டும்.' வசந்தனுக்குச் சந்தேகமாகி விட்டது, ராகப்பா இப்போது தப்ப விரும்புகிறான் என்று.

'தகப்பனார் - பிள்ளை விஷயத்தில் நாங்கள் வருவது சரியல்ல.'

இதைக் கேட்டதும் வசந்தனின் முகம் விழுந்துவிட்டது. அதைக் கண்ட ராகப்பா, 'வசந்தராவ், நான் உங்களைக் கைவிட்டு விடவில்லை...அப்படி நினைக்காதீர்கள். நான் எப்போதும் உங்களுக்குப் பின்னாலேயே இருக்கிறேன்...ஏனென்றால், நாடகக் கம்பெனி ஆரம்பிப்பது என்று ஒருதரம் முடிவானபிறகு, நான் உங்களுக்கு உதவி செய்வதாக வாக்கு அளித்ததற்கும் நான் கட்டுப்பட்டவன்...ஆனால் நான் வருவதால் உங்களுக்குப் பயன் ஏற்படாது, நான் கடைசி ஆயுதம். முதலில் நீங்கள் உங்களுடைய சிறிய,பெரிய ஆயுதங்களை உபயோகியுங்கள். இக்கடிதம் எழுதித் தந்தாரே பட்டர், அவரை உங்களோடு அழைத்துச் செல்லுங்கள். அவர் கெட்டிக்காரராகத் தெரிகிறது. உங்கள் தந்தையாரின் கருத்தைத் தெரிந்து கொள்ளுங்கள். அவர் கோபமாக இருந்தால், நீங்கள் கோபித்துக் கொள்ளாதீர்கள். அவர் உங்களை இனிக்கப் பேசி வசப்படுத்த முயன்றால் உறுதியாக இருங்கள். உங்களுடைய தந்தையார் வெறும் ஆள் அல்ல. முதலில் உங்களுக்கு ஆசை காட்டுவார், இனிக்கப் பேசுவார், மிரட்டுவார். இப்படி எல்லாத் தந்திரங்களும் செய்வார். அந்தப் பரீட்சையில் நீங்கள் தேர்ந்து உங்களுடைய பேச்சில் உறுதியாக இருந்து, பிறகு என்னைக் கூப்பிடுங்கள். உங்களுக்கு ஒரு நஷ்டமும் வராமல் நான் முடிவு செய்கிறேன். எப்பேர்ப்பட்ட வக்கீல் வந்தாலும் சரி, உங்களை ஏமாற்றிவிடமாட்டேன். உங்கள் அப்பாவின் மனசில் என்ன இருக்கிறது என்பதை முதலில் தெரிந்துகொள்ளுங்கள். அதைப் பற்றி எனக்குக் கொஞ்சமாவது தெரியும்படி செய்யுங்கள். பிறகு செய்ய வேண்டியதைச் செய்வோம், ஏனென்றால், வேலை ஆரம்பமானால் இரண்டு துண்டு ஆகிவிடுவதே சரி, புரிகிறதா?'

இதனால் வசந்தனுக்குப் போதுமான தைரியம் கிடைக்கா விட்டாலும் கொஞ்சம் உற்சாகம் பிறந்தது. ராகப்பாவின் யோசனை சரி என்று அவனுக்குத் தோன்றியது. வேலையில் வெவ்வேறு அடுக்குகள் இருக்கின்றன, அடுக்குக்கு ஏற்ற ஆளைப் பயன்படுத்துவது தான் சரியாக இருக்கும். ஆயினும் தன் துணிவுக் குறைவு காரணமாக அவனுக்கு ஒரு சந்தேகம் இருந்தது: 'அப்பண்ணா பட்டன் தந்திரசாலிதான், ஆனால் கோழையும் கூட. பயமுறுத்தினால் பயந்துவிடுவான். இப்போது வர மறுத்துவிட்டால்?' - என்று கேட்டான்.

'அவனிடம் ஒரு பத்து ரூபாய் எறியுங்கள், ஏன் வரமாட்டான்? நாடகத்து ஆசாமி. ஓடிவருவான்.'

ராகப்பா தான் தப்புவதற்காக இப்படிக் கூறுகிறானா அல்லது நிசமாகவே பேசுகிறானா என்று வசந்தனுக்கு இப்போதும் புரியவில்லை. அப்பண்ணா பட்டன் உடன் வராவிட்டால், தான் வருவதாக ராகப்பாவிடம் அவன் வாக்குறுதி வாங்கிக் கொண்டான். பிறகு, சாப்பாட்டையும் எதிர்பாராமல் அப்பண்ணாவைத் தேடுவதற்காகக் கிராமத்திற்குக் கிளம்பினான்.

அப்பண்ணா பட்டன் வேதாந்தி. குழந்தைப் பிராயத்தில் வேதபாடம் கற்க முயற்சி செய்தான். இப்போது அதுவே ஜீவனோபாயம் ஆகிவிட்டது. கவிதையும் செய்வான், 'ஏ, மனிதா, மமதையை விடு!' என்கிற அவனுடைய பாட்டு மிகவும் பிரபலப் பட்டது. 'மகா யோகி அகங்காரத்தை விடுவதைப் போல், ராமன் சீதையைக் கைவிட்டான்' என்னும் பஜனைப் பாட்டுபாடி பெரும் புகழ் பெற்றான். தேசாயிடம் போக வேண்டும் என்ற சொற்களைக் கேட்டதும் அவன் கைகால்கள் மரத்தாற் போல் ஆகிவிட்டன. பெரிய தேசாயின் பெயரைக் கேட்டதும், ஆண்டவனைவிட மிகுதியாக அவரிடம் இந்த வேதாந்திக்கு அச்சம் உண்டாயிற்று. பத்து ரூபாய் தட்சிணை என்ற பேராசை வயப்பட்டு, 'ஸ்வதர்மபி சாவேக்ஷ்ய நவிக பிதுமர்ஹஸி' (ஸ்வ தர்மத்தைக் கருதிப் பார்த்தாலும் நீ இப்படி சஞ்சலப் படக்கூடாது) என்று மனத்தைத் தேற்றிக் கொண்டான். நான்கு வருடங்களுக்கு முன்னால் நாடகம் கற்பிப்பதற்காக வெள்ளை வீட்டுக்குப் போனபோது மகன் பதினைந்து ரூபாய் கொடுத்தான், கற்பிப்பதைக் கைவிடுவதற்காக அப்பனும் பதினைந்து கொடுத்தான். இவ்வாறு எட்டே நாட்களில் அரை மூட்டை சோளமும் முப்பது ரூபாயும் கிடைத்தன. அந்நாட்களில் கிடைத்த சுவையான சாப்பாடும் அவனுக்கு ஞாபகம் வந்தது. ஆகையால் பேராசைக்கு ஆளாகி வசந்தனோடு போகத் தயாரானான்.

இப்படி, வசந்தனும் அவனுடைய நலம் விரும்பியும் தார்வாருக்கு வந்து சேர்ந்தார்கள். ஹோட்டலுக்குச் சென்று பேடா, ஹல்வா, ரவாலட்டு, முதலான பட்சணங்களை சேவித்தபின் பட்டனின் பயம் சற்று விலகியது. வசந்தராவின் வேலை செய்ய உள்ளூக்கம் கிடைத்தது. ராகப்பாவைச் சந்தித்த பிறகு சிறிது தைரியம் வந்தது. அங்கிருந்து தேசாயின் வீட்டுக்குப் போகத் தாங்கா பிடித்தார்கள். நடு வழியிலேயே அப்பண்ணா தாங்காவைத் திருப்பி அனுப்பிவிட்டு உடுப்பி ஹோட்டலில் கனிரசம் சேர்ந்த பாலை புது மணாளனைப் போல், சாப்பிட்டான். அவனோடு வசந்தனும் லெமன் பருகியவாறே, 'பட்டரே, காரியத்தை நல்லபடி முடித்துக் கொடுத்தால் உம்மைக் குதிரைமேல் ஊர்வலமாக அழைத்துப் போவேன்,' என்று இறுதி ஆறுதல் கூறினான். சரி, மறுபடியும் ஒரு தாங்காவைப் பிடித்துத் தேசாய் வீட்டுக்கு எதிரில் வந்து சேர்ந்தனர்.

வீட்டுக் கதவு மூடி இருந்தது வெளியே வேலைக்காரர்கள் யாரும் காணப்படவில்லை. தகப்பனாரைக் கூப்பிடலாம் என்று வசந்தனுக்குத் தோன்றவில்லை. அது தேசாய் தூங்குகிற நேரம். இவன் வந்திருப்பதோ பாகம் கேட்க; ஆனால் அவருடைய தூக்கத்தைக் கெடுப்பது கஷ்டமான வேலை. வசந்தன் கிசுகிசு என்று பேசினான், அப்பால் பின்புறமாக உள்ளே சென்று தாயாரைச் சந்திக்கலாம் என்று மனத்தில் தோன்றியது. இதைக் கேட்டதும் அப்பண்ணா பட்டன் கூறினான்: 'எஜமான் அப்படிச் செய்தால் காரியம் கெட்டுப்போகும். வந்த சூட்டோடு இரண்டு வார்த்தை பேசினால் ரூபாய்க்கு இரண்டணா காரியமாவது ஆகும் என்று நம்பலாம். நீங்கள் அம்மாவோடு பேச உட்கார்ந்தாலும், சகோதரியிடம் யோசனை கேட்டாலும், பாட்டியோடு கொஞ்ச ஆரம்பித்தாலும் காரியம் ஆனாற் போலத்தான்?' வேறுவழி காணாமல் வசந்தன் கதவைத் தட்டினான்.

கதவு தட்டும் சத்தம் கேட்டு, தேசாயின் தூக்கம் கெட்டுவிடப் போகிறதே என்று பரமா ஓடிவந்தான். ஆனால் அவன் கதவைத் திறப்பதற்குள் தேசாய் விழித்துவிட்டார். கண்களைத் தேய்த்தபடியே அவர் முற்றத்திற்கு வந்தார். திகிலினால் நாக்கைப் பற்களால் கடித்துக் கொண்டு நிற்கும் புத்திரனையும், அவனுக்குப் பின்னால் தோள்களில் கோணலாகச் சந்தனம் பூசிக்கொண்டு, முழங்கால்வரை வேட்டி கட்டிக் கொண்டு, பொய்ப் பணிவோடு சிரித்தபடி நிற்கிற அப்பண்ணா பட்டனையும் அவர் கண்டார். வசந்தன் உள்ளே போவதா இல்லையா என்று சங்கோசப்பட்டு வாசலில் நடுங்கியபடி நின்றிருந்தான். தேசாய் அவனை உள்ளே கூப்பிடாமல் தாமே வாசலுக்கு வந்தார். வசந்தன் மீது ஒரு பார்வை செலுத்தினார், முகத்தைத் திருப்பி அப்பண்ணாவைக் கூர்ந்து பார்க்கலானார். இதனால் தன்னை அறிமுகப்படுத்திக் கொள்ள அப்பண்ணா பட்டனுக்கு வாய்ப்பு கிடைத்துவிட்டது.

'எஜமான், என்னை நீங்கள் தெரிந்து கொள்ள வில்லையா?... நான் அப்பண்ணா பட்டன். நான் மலைப்பிராமணன். முன்புகூட உங்கள் பிள்ளைக்கு நாடகம் சொல்லித் தர வெள்ளை வீட்டுக்கு வந்திருந்தான். நீங்கள் இனாம் கொடுத்து அனுப்பினீர்கள்?'

தேசாய் விகாரமுறாத நிலையில் எல்லாம் கேட்டுக் கொண்டார், பிறகு பரமாவின் பக்கம் திரும்பிச் சொன்னார்: 'டேய், இவருக்கு ஒருபிடி சோளம் கொடுத்து அனுப்பு.'

'இல்லை, இல்லை, எஜமான். நான் பிச்சை கேட்க வரவில்லை...'

'தெரிந்துவிட்டது. தெரிந்துவிட்டது, நீங்கள் வசந்தனின் நலம்விரும்பியா? வசந்தா, உன்னுடைய அசல் நலம் விரும்பியை

அழைத்துக் கொண்டுவராமல் இந்த வைதிகப் பிராமணனை ஏன் அழைத்து வந்தாய்?'

தேசாயின் ஒவ்வொரு சொல்லையும் கேட்க அப்பண்ணா பட்டன் கைகால்களே செயலற்றன. இன்னும் அவன் வாயிலிருந்து வார்த்தை கிளம்பவில்லை. குதிரை மேல் ஊர்வலம் நடக்காவிட்டால் போகட்டும், குறைந்தபட்சம் பத்து ரூபாயாவது சம்பாதித்துக் கொள்கிறேன் என்று எண்ணித் துணிந்து அப்பண்ணா பட்டன் ஓரடி முன்னால் வைத்தான்:

'எஜமான், தன் பங்கை எடுத்துக் கொண்டு போகும்படி உங்கள் பிள்ளைக்குக் கடிதம் எழுதி இருந்தீர்கள்...திடீரென்று மகன் மேல் இவ்வளவு கோபம் ஏன், மகாராஜா? தகப்பனுக்கும் பிள்ளைக்கும் பாகப்பிரிவினை இது முதல் தடவையா என்ன? உங்களைக் கொஞ்சம் சாந்தப்படுத்த வேண்டும் என்பதற்காக வசந்தராவ் இந்த ஏழைப் பிராமணனைத் தம்மோடு கூட்டிக்கொண்டு வந்தார். உங்களிடம் இருந்து ஏதாவது கிடைக்கிறதா இல்லையா என்பது முக்கியமான விஷயம் அல்ல; ஆனால், இந்த வீட்டுக் கலகம் இங்கேயே முடிந்துவிட வேண்டும். இது நம்மைப் போல் அண்டிப் பிழைப்பவர்களின்...' - அப்பண்ணா பட்டனின் நாடகபாணிச் சொற்பொழிவு மேலும் பெருகி இருக்கும்; ஆனால் எல்லாவற்றையும் மௌனமாகப் பார்த்தவாறு வியப்போடு நின்ற பரமாவின் பக்கம் தேசாய் சினத்தோடு நோக்கிக் கத்தினார்: 'ஏன், செவிடாகிவிட்டாயா? இந்தப் பிராமணனுக்கு ஒரு பிடி சோளம் கொடுத்துக் காம்பவுண்டுக்கு வெளியே கொண்டு போய் விடு.'

பயந்துபோன பரமா சோளம் கொண்டு வருவதற்காக உள்பக்கம் ஓடினான். இப்போது வசந்தனின் வாய்திறந்து கொண்டது: 'அப்பண்ணா பட்டரை நான் தான் கூட அழைத்து வந்தேன்.'

'எவன் எவனையோ கூட்டிக்கொண்டு வர இது என்ன சத்திரமா, சாவடியா? அப்படி கூட்டிக் கொண்டு வரவேண்டும் என்றால் உன்னுடைய நலம்விரும்பி ராகப்பாவை அழைத்துக்கொண்டு வா,' என்று கூறிய தேசாய் சினத்தால் நடுங்கியவாறு, 'பாகம் வேண்டுமா உனக்கு, பாகம் எடுத்துக்கொள்,' என்று கொண்டே வசந்தனின் கன்னத்தில் பலமாக ஓர் அறை அறைந்தார். அது பேய் அறைந்தாற் போல் இருந்தது வசந்தனுக்கு. பேச்சற்றுத் 'தொப்'பென்று அவன் தரையில் உட்கார்ந்துவிட்டான்.

நிலவரத்தைப் பார்த்த அப்பண்ணா பட்டன் அதற்குள் கேட்டின் பாதிவழி தாண்டியாகிவிட்டது. எஜமானின்

கட்டளைக்குப் பணிந்து நடக்கும் பரமா அவரிடம் ஒரு நாளும் திட்டு வாங்கியதில்லை, அவன் பட்டனுக்குப் பின்னால் விரைந்தான், அவனை நிறுத்திப் பெரிய பிடியளவு சோளத்தை அவனுடைய வேட்டித் தலைப்பில் முடிந்துவிட்டு, அவனைக் கேட்டுவரை கொண்டு போய் விட்டுவந்தான்.

இந்தச் சந்தடிகளால் வேணுபாய் வெளியே வந்தாள். படிமீது மூட்டை போல் கிடந்த மகனுடைய உடம்பை வருடிக் கொடுத்து அவனைத் தூக்க முயன்றாள். அவன் எழுந்திருக்கத் தயாராக இல்லை. அவள் இடது கன்னத்தின் மீது இருந்த அவனுடைய கையை இழுத்து அகற்றினாள், அதன் மேல் தேசாயின் முதல் மூன்றுவிரல்கள் 'பளிச்'சென்று பதிந்திருந்தன, சிறுவிரல் அடையாளம் மட்டும் சற்று லேசாக விழுந்திருந்தது. தேசாய் மூன்றாவது விரலில் அணிந்திருந்த எண்கோண மோதிரமும் நன்கு பதிவாகி இருந்தது. பிரமித்துப் போய் உட்கார்ந்திருந்த வசந்தன் தாயாரைக் கண்டதும் தேம்பித் தேம்பி அழலானான். பரமாவின் துணையோடு அவனை உள்ளே அழைத்துச் சென்று தன் படுக்கையில் படுக்கவைத்தாள், அவனுடைய யோசனைப்படியே கன்னத்தில் நல்லெண்ணெய் தேய்த்தான், வெந்நீர் வைத்தான். அவளால் ஒன்றும் பேச முடியவில்லை. கண்களிலிருந்து தடையின்றிக் கண்ணீர் பெருகிக் கொண்டு இருந்தது.

அதற்கு எதிரொலியாக வசந்தன் முதலில் தேம்பிக் கொண்டு இருந்தான், பிறகு வெட்கத்தை விடுத்து விக்கி விக்கி ராகத்தோடு அழத் தொடங்கினான்.

முரடனான வசந்தன் அடிவாங்கிவிட்டு இப்படிப் பேசாமல் அழுதது ஏன் என்று வாசகர்கள் என்னிடம் கேட்க யாதொரு காரணமும் இல்லை. தவறான வழியே செல்லும் முரட்டு இளைஞர்கள், அதிலும் அறிவற்ற பணக்காரவீட்டுப் பிள்ளைகள், உடல் வலி என்றால் எப்படி அஞ்சுகிறார்கள் என்பது அனுபவசாலிகளுக்குத் தெரியாத புதிய தகவல் அல்ல.

அன்னையின் மடியில் தலை வைத்து இரண்டு மூன்று மணி நேரம் பணிவிடைகளை ஏற்றபின் வசந்தராவின் அச்சம் கொஞ்சம் குறைந்தது. நடுக்கம் மறைந்தது. கன்னத்தில் இன்னும் வலி இருந்தது. அறையினால் காதுகள் குப் என்று அடைத்துக் கொண்டு இருந்தன. மனப்புண்ணும் சற்று குறைவுற்றது. இதற்குள் பரமா வசந்தனின் மாடி அறையைத் துப்புரவாக்கி வைத்துவிட்டான். தாயாரின் உபதேசப்படி வசந்தன் தன் அறைக்குப் போகுமுன் தேசாயின் அறையில் சென்று அவருடைய கால்களைத் தொட்டு, 'நான் செய்தது தப்பு' என்று சொல்லி மன்னிப்பு கேட்டான். அதற்கு அவர், ' உன் மேல் எனக்கு நம்பிக்கை இல்லை. தப்பு

செய்துவிட்டாய் என்றால் நடத்தையைத் திருத்திக் கொண்டு காட்டு,' என்று கூறி மௌனமானார்.

இதைப் பற்றி மீண்டும் பேச்சு நடக்கவில்லை. இவ்வளவு செய்தும்கூடத் தகப்பனார் அவனை ஒன்றும் சொல்லாமல் ஏற்றுக் கொண்டுவிட்டார் என்பது பற்றி மட்டும் வசந்தனுக்கு மகிழ்ச்சியாக இருந்தது. தந்தையார் இரண்டாம் முறைகூட ராகப்பாவின் பெயரை எடுக்கவில்லை. வசந்தனும் மறுபடியும் கிராமத்துக்குப் போகும் பேச்சையே கிளப்பவில்லை. மீண்டும் அமைதியான நாட்கள் மீண்டன. சுகத்திற்காக விலை தர வேண்டும் என்ற விஷயம் அவன் மனத்திலிருந்து விரைவில் கரைந்து போயிற்று. அவன் தன் குழந்தைப் பிராயத்தை இன்னும் கடக்கவில்லை; அடுத்த ஐம்பது ஆண்டுகள் வரை கடக்கக் கூடிய சாத்தியமும் இல்லை. அன்றைய அடியின் காரணமாக ராகப்பாவின் வீட்டில் அடிவைப்பதையே நிறுத்திவிட்டான்.

# 30. ராகப்பாவின் வெற்றி

தேசாயின் வீட்டிலிருந்து ஒரு பிடி சோளம் பெற்றுக் கொண்டு அங்கிருந்து தப்பி வெளிவந்த அப்பண்ணா பட்டன், 'அவர் என்னை உயிரோடு விட்டாரே, அதுவே பகவானின் கருணை,' என்று தனக்குத் தானே ஆறுதல் சொல்லிக் கொண்டான். அடுத்து என்ன செய்வது என்றே அவனுக்குப் புரியவில்லை. வசந்தனின் உதவியால் அவன் தார்வாருக்கு வந்தான், ஆகையால் அவன் ஒரு காசும் கொண்டு வரவில்லை. வசந்தனோ அவனை நட்டாற்றில் கைவிட்டு விட்டான். தவிர, ராகப்பாவின் வீட்டு முகவரிகூட அவனுக்கு நினைவில்லை, அவனுடைய துணைப்பெயரும் நினைவில்லை. அந்த வீட்டுக்குமுன் ஓர் அத்திமரம் இருந்தது என்பது மட்டும் ஞாபகம் இருந்தது. அதிர்ஷ்டவசமாக, காலையில் தேசாயின் வீட்டுக்கு அழைத்துப் போன தாங்கா எதிரில் வந்தது. கடைந்தேற இதுவே வழி என்று எண்ணிய அப்பண்ணா உயிரையும் மதியாமல் நேராகத் தாங்காவுக்கு முன்னால் நின்று கத்தினான். தாங்கா நின்றது. தாங்காவாலாவிடம் ராகப்பாவின் வீட்டுக்குப் போகும் வழியைக் கேட்டுக் கொண்டு, எங்கெங்கோ சுற்றிய பின் ஒரு வழியாக இறுதியில் அதே அத்திமரத்தருகில் வந்து சேர்ந்து ராகப்பாவின் வீட்டைத் தேடிக் கண்டுபிடித்தான். அங்கே இரண்டு கவளம் சாப்பிட்டான், தேசாய் வீட்டில் நிகழ்ந்ததைத் தொடக்கம் முதல் இறுதிவரை விவரித்தான். வண்டிக்காகவும் வேறு செலவுகளுக்காகவும் ராகப்பாவிடம் ஆறணா வாங்கிக் கொண்டு

பகவானின் நாமத்தைச் சொல்லிய வண்ணம் கிராமத்துக்குப் போகும் பஸ்ஸைப் பிடித்தான்.

ராகப்பா பதினைந்து நாட்கள் வரை வசந்தனின் வருகையை எதிர்பார்த்தான், ஆனால் அவனுடைய அடையாளமும் கூடக் கிடைக்கவில்லை. சந்தைக்கு வந்த கிராமத்தார்கள் வசந்தன் வெள்ளை வீட்டுக்குத் திரும்பவில்லை என்று கூறினார்கள். 'வசந்தன் எங்கே போகக்கூடும்? தார்வாரில் அப்பனோடு தங்கிவிட்டு என்னைப் பார்க்க வெட்கப்பட்டோ அஞ்சியோ வராமல் இருக்கிறானோ? நாடகம் வெள்ளத்தோடு தொலையட்டும். இப்படி தளர்த்தியாக விட்டால் வசந்தன் தன் தகப்பனுக்குக் கட்டுப்பட்டுவிடுவான், என் மகளுக்கும் அவனுக்கும் மணம் என்பது வெறும் சொர்ப்பனமாகவே நின்றுவிடும். தப்பித்தவறிக்கூட அவனை வீதியில் எங்கும் பார்க்க முடியவில்லையே. அடே அப்பா, என்ன கர்வம் அப்பனுக்கு!' என்று அவன் யோசித்தான்.

நாளாக ஆக ராகப்பாவின் ஏக்கம் வளர்ந்துவந்தது. 'வசந்தனை வெளியில் சந்திக்க முடியவில்லை என்றால் தேசாயின் வீட்டிற்கே நேரில் போக வேண்டும். எப்படியாவது ஒருமுறை அவனைச் சந்தித்தாக வேண்டும். அடுத்து என்ன செய்வது? அது அங்கே போன பிறகு தோன்றும்', என்று எண்ணி அவன் தேசாயின் வீட்டுக்குப் போக ஒரு சாக்கு தேடிக்கொண்டிருந்த போது ஓர் அருமையான சந்தர்ப்பம் தானாகவே வாய்த்துக் கொண்டது.

ஒரு நாள் சம்பக்கா சாப்பிட்டது குடித்தது எல்லாவற்றையும் வாந்தி எடுத்துவிட்டாள்.

ராகப்பா அப்படியே தாவிக் குதித்தான்; 'வாந்தி ஆரம்பமாகி எத்தனை நாளாகிறது?' என்று கேட்டான்.

சம்பக்கா, 'மூன்று மாதம் ஆகிவிட்டது,' என்றாள், கண்களில் நீர் ததும்ப.

அன்று மத்தியானமே தாங்காவில் அவளை சிவில் ஆஸ்பத்திரிக்கு அழைத்துக் கொண்டு போனான். லேடி டாக்டரிடம் காட்டிக் கலந்து கொண்டான். சம்பக்கா உண்டாகி மூன்று மாதங்கள் ஆகிவிட்டன என்று தெரிந்தது.

ராகப்பா மனத்திற்குள்ளேயே கோஷம் எழுப்பினான், 'ராகோபா பராரிக்கு ஜே'!

இச்செய்தியைத் தேசாய்க்குத் தெரிவிக்காவிட்டால் ராகப்பாவுக்கு எப்படி அமைதி கிட்டும்?... மறுநாளே தேசாயின் வீடு மீது படையெடுத்தான்.

ராகப்பா ஏன் வந்திருக்கிறான் என்று தேசாய்க்குப் புரியவில்லை. மகனைப் பற்றிப் பேச்சு எடுத்தால் தாமும் தம் கைவண்ணத்தைக் காட்ட வேண்டியதுதான் என்று தீர்மானித்துக்

கொண்ட அவர் அவனைத் தம் அறைக்கு மரியாதையாக அழைத்துப் போய்த் தமக்குப் பிரியமான மெத்தை நாற்காலியில் உட்காரவைத்துப் பாக்கு வெற்றிலை புகையிலை முதலியன தந்து அவனுடைய நலம் பற்றி விசாரித்தார். ராகப்பா மிகவும் பணிவாகவும் பக்தியோடும், தலையணையில் லேசாகச் சாய்ந்து கொண்டு, தேசாயின் பக்கம் முகம் திருப்பி அவருடைய காதில் சொல்ல விரும்புகின்றவன் போன்று சொல்ல ஆரம்பித்தான்.

'உங்களைப் போன்றவர்களின் கிருபையால் எல்லாரும் நலம், ஆனால், மறுபடியும் துர்ப்பாக்கியம் பாருங்கள். இந்தக் கவலையால் எனக்கு இராப்பகலாய் தூக்கம் வரவில்லை, உங்களிடம் பொய்யன் என்று பெயர் எடுத்துவிடக் கூடாதே என்றுதான் கவலை. ஏன் என்றால், மனுஷ்யனுக்கு மதிப்பு நாக்கால் தான். ஒரு முறை வாக்கு கொடுத்துவிட்டால் பொய்க்கக் கூடாது. இதுதான் சநாதன தர்மம்... பகவானே கொடுத்த வாக்கிலிருந்து மாறினால் மனிதனால் என்ன செய்ய முடியும்?... அப்போதுதான் உண்மையான தர்ம சங்கடம் பிறக்கிறது. என் வாக்கு பொய் ஆகிவிடக்கூடாது என்று நான் எந்நேரமும் ஆண்டவனைக் கைகுவித்துப் பிரார்த்தனை செய்கிறேன்... ஆனால், பகவானே வரிந்து கட்டிக் கொண்டால்...'?

தேசாய் பேசாமல் புன்னகையோடு அவன் கூறுவதைக் கேட்டுக் கொண்டு இருந்தார். அவர் புன்சிரிப்போடு இருப்பதைப் பார்க்க அவனுக்குப் பற்றிக் கொண்டு வந்தது. 'டேய் தேசாய், நான் சொல்வதைக் கேட்டு நகைக்கிறாயா?' என்று தனக்குள் கூறிக் கொண்டான். பிறகு தன் குமுறலை அப்படியே தடுத்து எச்சிலை விழுங்கிவிட்டுத் தொடர்ந்தான்.

'தேசாய், பகவானுடைய லீலையைத் தான் பாருங்களேன். இந்த அஸ்தமன வயதில் சந்தானப்பிராப்தி யோகம் இருக்கும் என்று நான் கனவிலும் எண்ணவில்லை. இதை ஒரு கெட்டிக்கார சோதிடன் சொல்லி இருந்தாலும் நான் சிரித்திருப்பேன், ஆனால் இதுவே மெய்யாகிறதே...?'

தேசாயின் சிரிப்பு நின்றுவிடுவதைப் பார்த்து ராகப்பா மனத்துக்குள் சொன்னான். 'வழிக்கு வந்தீரா தேசாய்?' தேசாய் ஒன்றும் உரைக்கவில்லை. ராகப்பா ஒரு சீட்டைக் காட்டி, 'பாருங்கள், இப்போதுதான் லேடி டாக்டரிடம் காட்டிவிட்டு வருகிறேன்,' என்றான். தேசாய் அப்பக்கம் கவனிக்கவில்லை.

'தேசாய், நீங்கள் நம்புகிறீர்களோ இல்லையோ, பகவானே, எனக்கு ஆண்குழந்தை கொடுத்துவிட வேண்டாம் என்றுதான் பிரார்த்திக்கிறேன். நீங்கள் 'ஏன்'? என்று கேட்பீர்கள். நம் கிட்டி எனக்கு அந்நியனா? ஒரு பக்கம் மறுமகன், மறுபக்கம்

மாப்பிள்ளை. அந்தப் பிள்ளையாண்டானைப் பார்த்த நாள் முதலாய் அவன் என் மகனைப் போல் எண்ணிக் கொண்டு இருக்கிறேன். என்னிடம் இருப்பதை... அது கொஞ்சமாக இருக்கலாம் அல்லது அதிகமாய்ப் போனால் ஒரு ராஜ்யமாகவே இருக்கலாம்... அவனுடைய கையில் ஒப்படைத்துவிட்டுக் கண்ணை மூடலாம் என்ற நம்பிக்கையோடு ஒரு நேர்ப்பாதையில் செல்கிறேன். அந்தப் பரமாத்மா தயாநிதி என் நேர்ப்பாதையில் அவர் இடையூறு செய்ய மாட்டார் என்று எனக்கு நம்பிக்கை. பாருங்கள், பாருங்கள், பகவான் எப்படி விளையாடுகிறார்? என்பதை நிச்சயமாக யாராலும் சொல்ல முடியாது... ஆமாம், இதை எல்லாம் நான் உங்களிடம் ஏன் கூறுகிறேன்? நாளைக்கு நாலுபேர் என்னைப் பொய்யன் என்று சொல்லலாம், ஆனால் உங்களையொத்த பெரியவர்களுக்கு உண்மை நிலவரம் தெரிந்திருப்பதே நமக்குக் கவசம்.'

தேசாய் மறுபடியும் புன்சிரிப்பு செய்தபடி உரைத்தார். 'உங்கள் வீட்டில் ஆண்குழந்தை பிறந்தால் நான் எல்லோருக்கும் பேடா தருவேன், ராகப்பா. இந்தத் தத்துச் சிக்கலை மறந்து விடுங்கள். உங்களுடைய சொத்து கிருஷ்ணனுக்குக் கிடைக்க வேண்டும் என்று பகவான் விதித்திருந்தால் யார் என்ன செய்தாலும் அதைக் கவர்ந்து விடமுடியாது. அவனுக்கு அந்தப் பாக்கியம் இல்லை என்றால் அவன் ஆயிரம் முயன்றாலும் அது கிட்டாது. ஆகையால், உங்களைப் போல் விஷயம் தெரிந்தவர்கள், 'எனக்கு ஆண்குழந்தை வேண்டாம், தத்து தான் எடுப்பேன் என்றால் அது பகவானுக்கு ஏற்காது. உலக வழக்கப்படி, 'பகவானே, எனக்கு ஆண்குழந்தை தந்து என் குலம் விளங்கச் செய்யுங்கள்,' என்று தான் நீங்கள் பிரார்த்தனை செய்ய வேண்டும். பகவானுடைய விருப்பம் என்ன என்று யாருக்குத் தெரியும்?'

ராகப்பா மனத்திற்குள், 'ஆம் அண்ணா, நீ பெரிய புத்திசாலி,' என்று கூறிக்கொண்டு தன் ராமாயணத்தைத் தொடர்ந்தான்.

'பிள்ளையோ, பெண்ணோ, அது நம் கையில் இல்லை, நீங்கள் சொல்வது போல உலக வழக்கப்படி நான் ஆண் குழந்தை வேண்டும் என்று பிரார்த்திப்பதே சிரேயசைத்தரும். ஆனால், அதில் என் பாக்கியத்தில் சுகம் இல்லை... என் அகத்துக்காரி மிகவும் பலவீனமானவள். அவள் என்ன ஆகிவிடுவாளோ என்றுதான் எனக்கு ஒரே கவலையாக இருக்கிறது.'

'ஒன்றும் ஆகாது, சுவாமி! பயத்தை விட்டுப் பகவானை நம்புங்கள். எல்லாம் நல்லபடி நடக்கும்.'

தான் சொல்வதற்கு ஒருவித மறுப்பும் சொல்லாமல் எல்லாவற்றையும் அப்படியே ஏற்பதன் மூலம் தன் பிடியிலிருந்து

நறுவிசாகத் தேசாய் நழுவி விட்டதாக ராகப்பாவுக்குப் பட்டது. தேசாய் கோபமாய்க் காணப்படாததால் அவனுக்கு மனதில் பெருங்கோபம் வந்தது. 'அடே, முன்னைப் போல் சக்தி இருந்தால் எந்த வழியிலாவது அவனுக்குக் கோபமூட்டி விடுவேன்', என்று மனத்தில் கூறிக் கொண்டான். அவன் என்ன யோசித்தாலும் தோல்வியே கண்டான். உற்சாகம் இன்றிக் கவிதை எழுத முயலும் கவிஞனைப் போல் ராகப்பா களைப்பால் நிரம்பிப் போனான். இன்னொரு கிளாஸ் தண்ணீர் சாப்பிட்டுப் புறப்பட எண்ணுகையில், கொய்யாமரத்தின் மேல் ஏறிப் பழம் பறிக்கும் வசந்தனை அவன் ஜன்னலிலிருந்து பார்த்துவிட்டான்.

சமூக வழக்குப்படி, அவன் வசந்தனின் பால் கவனம் செலுத்துவதைக் கண்டு தேசாய் அவனை இங்கே வரவழைத்து 'இவன் தான் என் பிள்ளை' என்று ராகப்பாவுக்கு அறிமுகம் செய்துவைப்பார் என்று எதிர்பார்ப்பதற்கில்லை. இதைத்தவிர, பாவச்சொத்தைச் சாப்பிடுகிற இந்தத் தேசாய் அவனுடைய மென்மையான பேச்சை நாசமாக்கக்கூடும், என்று எண்ணிய ராகப்பா முன்பின் யோசியாமல் உட்கார்ந்திருந்த இடத்திலிருந்தே, 'ஏ வசந்த ராவ், ஏ வசந்தராவ்' என்று குரல் கொடுத்தான். தன்னை யார் கூப்பிடுகிறார்கள் என்பது புரியாமல் வசந்தன் மரத்திலிருந்து கீழே இறங்கலானான்.

உங்களுக்கு நம் வசந்தனோடு பழக்கம் உண்டா, எங்கே எப்படிப் பழக்கம் என்பன போன்ற கேள்விகளைத் தேசாய் வினவுவார் என எண்ணி அவன் வாய் ஊறியது. இதை எல்லாம் அவர் கேட்டால், வசந்தன் நாடகத்தில் ராஜா வேடத்தில் நடிக்க விரும்பியதையும், திரை முதலியனபற்றிப் பேசியதையும், சுந்தர சானியின் வீட்டுக்குப் போய்ப் பாட்டு கேட்டதையும் பற்றி நன்றாகத் தாளித்து அவரிடம் உரைத்தால் அவர் தலைகுனிய நேரும் என்று அவன் நினைத்தான். ஆனால் தேசாய் ஒன்றையும் கேட்கவில்லை. ஒன்றுமே நடவாதது போலவும் எல்லாம் பழைய கதைகள் போலவும் அவர் பேசாமல் உட்கார்ந்திருந்தார்.

அறையில் வந்ததுமே வசந்தராவ் ராகப்பாவைக் கண்டு தலையைத் தொங்கவிட்டு விட்டான். அவனுக்கு அதிக அவகாசம் தராமல் ராகப்பா தொடர்ந்து படபடவென்று பேசலானான்: 'அடே வசந்தராவ், நம்மை மறந்து போனீர்களா என்ன? கிராமத்தில் மாட்டுச் சந்தையில் ஒரு ஜோடி மாடு காட்டிவிட்டுத் தார்வாரில் சந்திப்பதாய்ச் சொல்லி எத்தனை நாள் ஆகிறது? இங்கேதான் லேன் பஜாரில் எங்கள் வீடு இருக்கிறது. ஒரு தடவை வாருங்கள். உங்கள் வாக்குறுதியை மறந்துவிட வேண்டாம். ஏன்... உங்கள் தகப்பனார் தடுக்கிறாரா என்ன? 'உங்கள்

பிள்ளையின் பாததூளி எங்கள் வீட்டில் படட்டும்,' என்று அவர்களிடம் எல்லாம் சொல்லி இருக்கிறேன். நாளைக்கு எங்கள் வீட்டுக்கு வாருங்கள்.' பேசிவிட்டுத் தேசாயின் பக்கம் நோக்கிப் பலமாகச் சிரித்துவிட்டு, 'சரி, நான் வருகிறேன்,' என்றவண்ணம் எழுந்தான். தேசாய் பேசாமல் இருந்தார். அவன் போனபிறகுகூட அவர் வசந்தனிடம் ஒன்றும் சொல்லவில்லை.

வீட்டை நோக்கி ஒரு காரணமின்றி விரைந்து சென்று கொண்டிருந்த அவனுக்குத் தன் வாய்ச்சவடால் பற்றி மிகவும் வெட்கமாக இருந்தது. 'அடே, நான் ராகோபா பராரி. இம்மாதிரி அற்பத்தனமான பொய் பேச எப்போது கற்றேன்? இங்கே பொய் பேசுவதற்கு என்ன தேவை இருந்தது? வீட்டுக்கு வா என்று மட்டும் சொல்லி இருந்தால் போதாதா? இப்படி வெட்டிப் பொய் பேச என்ன தேவை இருந்தது?'

தன்னுடைய காலம் மாறிவருகிறது என்பதை ராகப்பா ஒவ்வோரடி எடுத்து வைக்கும் போதும் உணர்ந்தான். தேசாயுடன் போராட வேறுவகைப் பொய்யின் துணையை நாடி இருக்கவேண்டும். இம்மாதிரி எளிய பொய் சொன்னது குறித்து ராகப்பாவுக்குத் தன் மீது சினம் உண்டாயிற்று. அவன் வாயினின்று, 'ஐயோ!' என்னும் சொல் வெளிப்பட்டது.

# 31. மருந்து

மறுநாள் மத்தியான உணவுக்குப்பின் ஒரு மணிநேரம் தூங்கவேண்டும் என்று சாக்கு சொல்லிவிட்டு வசந்தராவ் தன் அறையில் சென்று இஸ்திரி செய்த ஆடை கட்டிக்கொண்டான். சுமார் மூன்று மணிக்கு நன்கு அலங்கரித்துக்கொண்டு, அப்பா உறங்கி இருப்பார் என்று எண்ணி, முற்றத்தின் கதவைத் திறப்பதற்காகக் காத்திருக்கும்போது தேசாயே நேராக அவன் பக்கமே வந்தார். தந்தையின் கைவலிமையை அன்று அடிவாங்கியபின் இன்னும் அவன் மறக்கவில்லை. அவரிடம் அவனுக்கு இருந்த மரியாதை மிகுந்துவிட்டது. அவரைக் கண்டதும் அவன் கிடுகிடுவென நடுங்கலானான். அருகில் வந்த தேசாய் நேராகக் கேட்டார்: 'ராகப்பா வீட்டுக்குப் போகிறாயா?'

அச்சத்தினால், 'ஆம் அல்லது இல்லை' என்றுகூட அவனால் சொல்ல முடியவில்லை. ஒரு பொய்க் காரணம் கற்பிக்கும் தைரியமும் அவனுக்கு இல்லை. மேலும் அச்சப்படுவதற்கு நேரம் தராமல் தேசாய், 'நீ போவதானால் இந்தக் கடிதத்தை

ராகப்பாவிடம் கொடு. நீ வேறு எங்காவது போவதாக இருந்தால் பரமாவை அனுப்புகிறேன்,' என்றார்.

வழிபடுவதற்குரிய தந்தையாருக்குத் தொண்டு புரியும் வாய்ப்பைப் பெற்ற மகிழ்ச்சியால் மகிழ்ச்சியாகப் பொய்யின் உதவியை ஏற்று வசந்தன் உரைத்தான்: 'அந்த வழியாகவே போகிறேன். திரும்பும்போது கொடுத்துவிட்டு வருகிறேன்.'

மேற்கொண்டு ஒன்றும் விசாரிக்காமல் மடித்திருந்த ஒரு காகிதத்தை அவன் கையில் கொடுத்தார்; அதற்கு உறைகூட இல்லை. 'அப்பா கொடுத்தார் என்று சொல்லு' என்றார் அவர்.

இக்கடிதத்தினால் ராகப்பாவின் வீட்டுக்குத் தங்குதடையின்றி செல்ல அவனுக்கு அரசாங்க ஆணை கிடைத்துவிட்டாற்போல் இருந்தது. வழியில், கடிதத்தில் தன்னைப் பற்றி ஒன்றும் எழுதப்படவில்லையே என்பதை அறிவதற்காக ஒரு மரத்தடியில் நின்று அக்கடிதத்தைப் படித்தான். அதில் அவனுடைய பெயர்கூட இல்லை.

அக்கடிதம், பம்பாயிலிருந்து அச்சுதன் அனுப்பிய வெங்கட்ராயின் தானபத்திரன் ஒரு நகல் பிரதி. தேசாய் காலையிலேயே அந்த நகலைத் தயாரித்துவிட்டு வசந்தன் புறப்படுவதை எதிர்நோக்கிஇருந்தார். அதை வசந்தன் வாயிலாகவே ராகப்பாவிடம் அனுப்ப வேண்டும் என்பது அவருடைய திட்டம். ஆகையால் அவன் குளியலறைக்கு முகம் கழுவ வந்தபோதே அவர் விழித்துக்கொண்டார். திருடர்களைப் போல் வெளியில் கிளம்ப அவன் தவிக்கும்போது கடிதத்தை அவனிடம் கொடுத்துவிட்டார்.

ராகப்பா மீது ஒரு போலிக் குண்டு ஏவிப் பார்க்க வேண்டும் என்பது அவர் நோக்கம்.

வசந்தராவ் ஆவலோடு நேராக ராகப்பாவின் வீட்டுக்குப் போனான். ராகப்பா சிரித்தபடி அவனை வரவேற்றான். அவன் வந்ததும் நேர்த்தியான முந்திரி போட்ட உப்புமா தயாரிக்கும்படி சமையலறைக்குக் கட்டளை அனுப்பினான். ராகப்பா அவனைத் திண்டு மீது உட்காரும்படி சொல்லிக் கொண்டே நாசூக்காய்க் கேலி செய்தான்: 'இதனால்தான் அப்பா-பிள்ளை உறவு என்கிறார்கள். உங்களுக்குப் பாகம் வாங்கித் தரவேண்டும் என்ற முயற்சியால் நமக்கும் கெட்ட பெயர். நீங்கள் இருவரும் ஒன்றாகக் கூடிக் கொண்டீர்கள். நம்மை வெண்ணெயில் வந்த மயிரைப் போல் தூக்கி எறிந்துவிட்டீர்கள்.' அப்பால் வேறேதேதோ பேசினார்கள். வசந்தனுக்கு அறை விழுந்ததைத் தவிர மற்ற எல்லாப் பேச்சுகளும் நடந்தன. இறுதியில் நாடகப் பேச்சு நடந்தது. நாடகத்தில் எந்த எந்தக் கம்பெனிக்காரர்கள்

எவ்வளவு எவ்வளவு சம்பாதித்தார்கள், எப்படி நாசமாய்ப் போனார்கள் என்பதை சிரிக்கச் சிரிக்க வருணித்துக் கூறினான்: 'உங்கள் கம்பெனி பிறக்குமுன்பே இறந்துவிட்டது என்று சொல்லுங்கள்!'

வசந்தன் துன்புற்றவனாய்ச் சொன்னான்: 'ராகப்பா, என்ன ஆனாலும் சரி, இன்று இல்லாவிட்டால் நாளை நான் ஒரு கம்பெனி கட்டாயம் ஆரம்பிப்பேன்.'

'சரி, செய்யுங்கள், தம்பி. கட்டாயம் ஆரம்பியுங்கள். ஆனால் உங்கள் கம்பெனி ஆரம்பிப்பதற்குள் நம்மையொத்த கழுகுகள் இந்த உலகத்திலிருந்து போய்விடுவோம்... போகட்டும், அதற்குள் உங்களுக்கு வேறு யாராவது ஒரு குரு கிடைத்துவிடுவார். இக்காலத்தில் குருக்களுக்கா பஞ்சம்?'

'உங்களுக்கு என்ன சொல்வது, ராகப்பா... அன்றைக்குக் காரியத்தைக் கெடுத்தது நீங்கள்தான். இப்போது என்னைக் கிண்டல் செய்கிறீர்கள். அன்றைக்கு அப்பண்ணாவுக்குப் பதிலாக நீங்கள் வந்திருந்தால்...'

'எனக்கும் ஒரு பிடி சோளம் கிடைத்திருக்கும்...'

'உங்களிடம் அப்பா மிகவும் மரியாதை வைத்திருக்கிறார். நேற்று உங்களை மெத்தை நாற்காலியில் உட்கார வைத்தார் அல்லவா, அதில் அவர் யாரையும் உட்கார விடுவதில்லை. அதில் பெரியவர்களையும் மிகவும் வேண்டியவர்களையும் தான் உட்கார வைப்பார்.'

'உங்கள் தகப்பனார் எல்லாவற்றுக்கும் இணங்குவார், ஆனால், உங்களுக்குப் பங்கு தர இணங்கமாட்டார். இன்னொரு விஷயம், வசந்தராவ், அதற்கும் பசி தேவை. பசி இல்லாமல் எந்த வேலையும் நடவாது. உங்களுக்கு இளம் வயது, இந்த விஷயம் உங்கள் மனசில் இன்னும் படவில்லை. நாளைக்கு இரண்டொரு குழந்தைகள் ஆகவேண்டும், அப்புறம்தான் தந்தையின் நிழலில் என்ன சுகம் இருக்கிறது என்று அந்தக் கஷ்டம் உங்களுக்குப் புரியும். அப்போது சரியான முறையில் பங்கு கேட்பீர்கள். வெற்றுக் கம்பெனி ஆரம்பிக்க பொய்யான உற்சாகத்தில் கேட்டீர்களானால், எப்படி கிடைக்கும்?'

பாகம் வேண்டும் துடிப்பு தனக்கு இருக்கிறதா, இல்லையா என்று வசந்தன் தனக்குள் எட்டிப் பார்த்தான். ராகப்பா கூறியது மெய் என்று பட்டது. ஆனால், தந்தையின் அறை இன்னும் மறந்துவிடவில்லை. ஆகையால் அந்தப் பேச்சை மேலே வளர்க்க வசந்தன் விரும்பவில்லை, பேச்சை மாற்றினான். வெறும் ஊர் அக்கப்போர் பேசினார்கள். உப்பிட்டும் தேநீரும் சாப்பிட்ட பின் வசந்தன் புறப்படத் தயாரானான். இதற்குள் தந்தை தந்த

கடிதத்தின் ஞாபகம் வந்தது, அதை ராகப்பாவிடம் கொடுத்தபடி, 'அப்பா கொடுத்தார்' என்றான்.

'உன் தகப்பனார் எனக்குக் கடிதம் அனுப்பினாரா, எனக்கா? அது எதற்கு?' என்றவாறு ராகப்பா கடிதத்தைப் பிரித்துப் பார்த்தான். 'அட' என்றவன் கண்களை அகல விரித்துக்கொண்டு கவனமாய்ப் படித்தான்.

'ஓ, இந்த தேசாய் என் கையில் சிக்கமாட்டான்' — என மனத்தில் சொல்லியபடி வசந்தனுக்கு விடை தந்தான்.

பிறகும் வசந்தன் ராகப்பா வீட்டுக்குப் பல தடவைகள் சென்றான். ஒவ்வொரு தடவையும் அவனுக்கு நல்ல விருந்து செய்தார்கள். அது அவனுக்குக் கொஞ்சம் விசித்திரமாகத் தோன்றியது. ராகப்பாவின் பேச்சும் ரசப்படவில்லை.

ராகப்பா நாடகப் பேச்சே எடுப்பதில்லை. பாகப்பிரிவினைப் பேச்சை வசந்தன் கிளப்ப முயன்றாலும் அவன் அதிலிருந்து தப்ப முயன்றான். ராகப்பா ஏன் இப்படி ஓட முயலுகிறான் என்று வசந்தனுக்கு வியப்பாக இருந்தது. இவனைப் பற்றி அவன் மனத்தில் மரியாதை குறைந்துவிட்டதா? விருந்து உபசாரத்தில் யாதொரு குறையும் காணோம், ஆனால் பேச்சில் முன்போல் ரசிகத்தன்மை மிக்கதாகக் காணோம்; ஏன் இப்படி? ஒருகால் ராகப்பா தன் தகப்பனாரிடம் அஞ்சத் தொடங்கவிட்டானோ என்று வசந்தன் மனத்தில் தர்க்கம் செய்து கொண்டான்.

இதனால் தந்தையின்பால் அவனுக்கு இருந்த மரியாதை உணர்ச்சி மேலும் வளர்ந்தது. ராகப்பாவே பின்வாங்கி விட்டபின் வீட்டில் பாகப்பிரிவினை போன்ற வீண்பேச்சை அவன் தாயாரிடம் ஒருபோதும் பேசவில்லை. மீண்டும் கிராமத்துக்கப் போகும் விருப்பத்தையும் வெளியிடவில்லை. சினிமாவுக்குக்கூட அம்மாவிடம் முடிந்தவரை பறித்துக்கொண்டு, கீழ்வகுப்பில் உட்கார்ந்து ஒரு பிக்சருக்குப் பதிலாக இரண்டு பார்த்தான். கிராமத்தில் புகையிலை போடும் பழக்கம் உண்டாகிவிட்டது, அதனால் இப்போது சா செலவு கூடக் குறைந்து போயிற்று. வீட்டில், அல்லது ராகப்பா வீட்டில் அல்லது நண்பர்களோடுதான் தேநீர் அருந்தினான். தனியாக டீ குடிக்கக் கடைக்குப் போகும் பழக்கம் குறைந்துவிட்டது.

தேசாய் வேணக்காவிடம் சொல்லி வைத்திருந்தார்: 'வசந்தன் பங்கு முதலிய பேச்சுகளை விட்டுவிடலாம். பங்கு கொடுக்கச் சொல்லு, கிராமத்துக்குப் போகிறேன் என்று இம்மாதிரி அவன் ஏதாவது பேசினால் என்னிடம் சொல்லிவிடு. நான் அவனை அடிக்கமாட்டேன். வசந்தனிடம் ஏதாவது மாறுதல் வந்திருக்கிறதா, இல்லையா என்பதைப் பார்க்க வேண்டும்...

ராகப்பா வீட்டுக்குப் போகவேண்டாம் என்று நீ தடுப்பது சரியல்ல. தடுத்தால் நமக்குத் தெரியாமல் ஒளிந்துகொண்டு போவான். இவ்வளவு பெரிய குழந்தையை எவ்வளவுதான் காவல் காக்க முடியும்? அவன் அங்கே போனாலும் அவனிடம் ராகப்பாவின் செல்வாக்கு படாதபடி ஏற்பாடு செய்திருக்கிறேன். வசந்தனின் வயிற்று வலிக்குச் சிகிச்சை, நான் ராகப்பாவுக்கு ஓமம் கொடுத்துச் சாப்பிட வைத்திருக்கிறேன். அதன் விளைவை இனி பார்க்க வேண்டும். ராகப்பா வீட்டுக்குப் போகாதே என்று தடுக்காதே. ஆனால் முன்போல் உபத்திரவம் செய்தால் என்னிடம் சொல்லிவிடு.'

மேலும் பதினைந்து நாள் ஆகியும் வசந்தனிடமிருந்து வார்த்தை ஏதும் கேளாததால் அவர், 'மருந்து வேலை செய்கிறது,' என்று எண்ணிக் கொண்டார்.

உண்மையில் மருந்து வேலை செய்தது, ஆனால் வலி வேறொரு பக்கத்திலிருந்து காணப்பட்டது. ராகப்பா வசந்தனிடமிருந்து அற்பசொற்பமான ஆதாயங்களை அடையும் எண்ணத்தைக் கைவிட்டான், ஆதாயம் அடையவும் இயலாது. வசந்தன் நகரத்திலேயே தங்கிவிட்டபின் தானியத்தை விற்பார் யார்? இதற்குப் பதிலாக வசந்தனையே முற்றிலும் தன்வசப்படுத்திக் கொள்ளத் திட்டமிட்டான் அவன். தேநீர் சிற்றுண்டிக்கு முறைப்படி ஏற்பாடு செய்தான். இரண்டொரு தடவை அவன் வசந்தனோடு சினிமாவுக்கும் போனான். ஒவ்வொரு முறையும் சா கொண்டுவரும் பணி சாந்தாவுடையது. தேநீர் பருகியபடி சாந்தா டீ தயாரிக்கும் அருமையை ராகப்பா பாராட்டுவான்.

ஒருநாள் நல்லவேளை பார்த்து ராகப்பா பூவாணம் விட்டான்: 'வசந்தராவ், நம் சாந்தாவுக்கு இப்போது வயது வந்துவிட்டது. அவளுடைய கலியாணம் பற்றி எனக்கு ஒன்றும் புரியவில்லை. சமீபத்தில் அவளுக்கு ஒரு பையனைக் காட்டினோம். பையனுக்கோ பெண்ணைப் பிடித்திருக்கிறது. எனக்கும் பையனைப் பிடிக்கிறது. ஆனால் வேடிக்கையைப் பார், சாந்தாவுக்குப் பையனைப் பிடிக்கவிலை. நம்முடைய மூத்தபெண் ரத்னா இருக்கிறாளே, அவள் நாம் காட்டிய பையனைக் கொஞ்சம்கூட முணுமுணுக்காமல் கட்டிக்கொள்ள ஒப்புக்கொண்டாள். நான்கூட அவளிடம் சொன்னேன்: 'மாமியார் வீட்டில் உனக்குக் கஷ்டமாக இருக்கும், உன் மாமியார் கொடுக்கால் கொட்டுவாள், உனக்குக் கஷ்டம் தரலாம், நீ பொறுக்க வேண்டியிருக்கும். ஆனால் பையனை நமக்குப் பிடிக்கிறது. உன் விருப்பம் என்ன? — இப்படி கேட்டேனோ இல்லையோ, அவள் என்ன சொன்னாள் தெரியுமா?... 'எனக்குக்

கலியாணம் செய்து வைக்கிறவர் நீங்கள்; அப்படி இருக்க எனக்கு அதைப்பற்றி என்ன யோசனை?' — இப்படி நறுக்காகப் பதில் சொல்லிவிட்டாள். அவளும் நம்முடைய பெண்தான். அவளுக்கும் இவளுக்கும் அதிகமாய்ப் போனால் ஐந்தாறு வயசு வித்தியாசம் இருக்கும். ஆனால் சாந்தா இக்காலத்துத் தேசபக்தி இயக்கத்தில் முன்னணியில் இருந்துவிட்டாள். 'எனக்குக் கதர் கட்டுகிற பையன்தான் வேண்டும், அரசாங்க வேலைக்காரன் வேண்டாம்,' என்கிறாள். பிடிவாதம் செய்கிறாள். அரசு ஊழியன் என்று தான் நான் அந்தப் பையனைத் தேர்ந்தேன். ஆனால் இவள் ன்னடா என்றால் வேண்டவே வேண்டாம் என்று விட்டாள். ான் இதைத் தப்பு என்று சொல்லவில்லை. ஒரு விதத்தில் ர்த்னாவின் போக்கும் சரி, ஒருவிதத்தில் சாந்தாவின் போக்கும் சரி. காலத்தோடு கருத்தும் மாறுகிறது, இல்லையா? இந்தக் காலத்தில் தேசபக்தியும் அவசியம். உங்கள் அபிப்பிராயம் என்ன, வசந்த்?'

'ஆம், வேண்டியதுதான்' என்ற வசந்தன் மறுநாள் முதல் ஒரு காந்தித் தொப்பி வாங்குவதுபற்றி யோசிக்கலானான்.

'உங்களிடம் சொல்வதற்குக் காரணம் இதுதான்: உங்களுக்கு ஏராளமாய் நண்பர்கள் இருக்கிறார்கள். யாராவது நல்ல குடும்பத்துப் பையன், அவனுக்கு ஏதாவது நிலம் இருக்க வேண்டும், தேசபக்தி பற்றிப் பேசவேண்டும் - இப்படி ஒரு பையன் கண்ணுக்குப் பட்டால் சொல்லுங்கள். நானும் ஒரு வரனைப் பார்த்திருக்கிறேன், நல்ல வரன். நல்ல பணக்காரன். நாலு ஜோடி கலப்பைக்கு நிலம் இருக்கிறது. ஒரு ஷராப் கடையும் இருக்கிறது. ஆனால் வரதட்சிணை நிறையத் தரவேண்டும். அதற்கு நான் பயப்படவில்லை. எவ்வளவு வரதட்சிணை கேட்கிற வரனாக இருந்தாலும் சரி, நம் சாந்தாவைப் பார்த்தால் போதும், அவனுடைய பிடிவாதம் குறைந்து போகும். எப்படியோ, இவளுக்கு மணமாகி விட்டால் நம் கவலை கரைந்து போகும். ஆகையால், உங்களுக்குத் தெரிந்த நல்ல வரனாக இருந்தால் சொல்லுங்கள். எனக்கு சிஷ்யன் ஆனபின் இந்த சேவை செய்வது பெரிய காரியமா? பகவான் உங்களுக்கும் நன்மை செய்து விரைவில் உங்களுக்கும் கலியாணம் முடித்து வைப்பார்,' என்ற ராகப்பா பலமாகச் சிரித்தான்.

ஒரே வாரத்திற்குப் பின் வசந்தன் காந்திக் குல்லாயும் நேரு ஷர்ட்டும் அணியத் தொடங்கினான். அதைப் பார்த்த வேணுபாய், வசந்தனும் தன் அண்ணன் அச்சுதன் வழியில் போவதாக எண்ணினான். ராகப்பா மனத்துக்குள் மகிழ்ந்தான்: 'தேசாய், நீ என் கைக்கு எட்டாமல் இல்லை, நான் உன்னை நசுக்கிவிடுவேன்,' என்று மனத்துக்குள் கூறினான்.

# 32. கஜேந்திர மோக்ஷம்

சாலிக்ராமத்தால் வீட்டில் வந்த அமைதி நீண்டகாலம் நீடிக்கவில்லை. வீட்டில் மீண்டும் சச்சரவுகள் ஆரம்பமாயின. கங்கவ்வா பல நாள் வரை வேணக்காவிடம் மனம் விட்டுச் செல்லவில்லை. இம்மாதிரி விஷயங்கள் எல்லாம் எல்லாருக்கும் தெரிந்தவை தானே என்று எண்ணிச் சகித்து வந்தாள். வேணக்கா தான் அவளுக்கு என்ன பரிவு காட்ட முடியும்? சிறிதளவு இதைப்பற்றிக் கற்பனை இருந்தது அவளுக்கு. நாள்தோறும் ஒரே ராக ஆலாபனையைக் கேட்பதால் மனிதனுக்கு அலுப்பு தட்டிவிடுகிறது. வேணக்கா அவள் கூறுவதைக் கேட்டு எப்போது அலுப்பு கொள்வாளோ, கங்கவ்வா இதனால் பேசாமல் இருந்தாள். இதைத்தவிர, தேசாய் தாம் நடுவில் இருந்து இந்தக் கலியாணத்தை நடத்தி வைத்தார், அடிக்கடி புகார் செய்துகொண்டே இருந்தால் அவரையே குற்றம்சாட்டுவது போல இருக்கும். அவருக்கு இம்மாதிரி மனவருத்தம் ஏற்பட்டுவிடக் கூடாது என்று கங்கவ்வாவுக்குப் பயமாக இருந்தது.

எல்லாருடைய வீட்டிலும் மண் அடுப்பு தான் என வேணக்காவுக்கும் தெரியும். இக்காரணம் பற்றிக் கங்கவ்வாவின் வீட்டைப்பற்றி மிகுந்த ஆவல் காட்டாமல் மௌனமாக இருந்தாள். எப்போதாவது ஒரு தடவை, 'கங்கவ்வா, வீட்டில் எல்லாம் நல்லபடி இருக்கிறதல்லவா?' என்று மட்டும் கேட்டு வைப்பாள். உடல்நலம் பற்றி அவள் கேட்பதாகப் பொருள் செய்துகொண்டு கங்கவ்வா, 'இருக்கிறது, நேற்று கிட்டிக்குக் கொஞ்சம் ஜலதோஷம்' என்று பதில் உரைப்பாள். வீட்டில் நடப்பதை எல்லாம் சொல்வது எவ்வளவு சிரிப்புக்கு உரியது என்பது பற்றி வேணக்காவுக்குப் போதிய அநுபவம் இருந்தது. கங்கவ்வா தன் சுகதுக்கங்கள் பற்றிச் சொல்லும்போது வேணக்காவுக்குத் தன் சுகதுக்கங்களே மிகுதியாக நினைவு வரும். வாழ்க்கையில் அவளுக்கு சலிப்பு உண்டாகிவிட்டது. ஒரு பக்கம் பட்டினி, வனவாசம், சிறையிலிருந்தபடி போராட்டம் என்று இருக்கும் அச்சுதன். இன்னொரு பக்கம், பாகம் கேட்பதும், சீட்டாடுவதும், சினிமா பார்ப்பதில் ஆவல் உள்ளவனுமான வசந்தன். வேணக்கா யோசிக்க யோசிக்க, பணக்காரர்களுக்கு உண்டாகும் எல்லாத் துக்கமும் தனக்கும் இருப்பதை நன்கு உணர்ந்தாள். இவ்வாறு, தம் சுகதுக்கங்களை ஒருவருக்கு ஒருவர் அதிகமாய்ச் சொல்லிக் கொள்வதில்லை என்று அந்த இருவரும் சமரசம் செய்து கொண்டாற்போல் இருந்தது.

இச் சமயத்தில் கங்கவ்வாவின் சகிப்புத் தன்மைக்கும் மீறிய சந்தர்ப்பங்கள் அவளுக்கு முன்னால் வரலாயின. சாலிக்ராமத்தின் அருளால் குடும்பத்தில் நிறுவப்பட்ட அமைதி, கிட்டி தேசாயை அணுகி வரதட்சிணைப் பணம் கேட்டு அவமானப்பட்டுத் திரும்பியபிறகு நீடிக்க முடியவில்லை. தேசாய் இத்தனை உறுதியாகத் தன் கட்சியை ஆதரித்தார் என்பதை வேணக்கா சொல்லக் கேட்டுக் கங்கவ்வாவுக்குச் சந்தோஷமாக இருந்தது. ஆனால் தேசாயின் கோபத்தைக் கிட்டி தன் மேல் கொட்டுவான் என்று அவள் எதிர்பார்க்கவில்லை. ராகப்பாவும் கிட்டியும் திட்டமிட்டுச் செய்த காரியங்களால் தமக்கு ஏற்பட்ட நஷ்டத்தைப்பற்றித் தேசாய் தம் மனைவியிடமும் கூறவில்லை. வசந்தன் ராகப்பாவிடம் தானியம் விற்ற தகவல் வேணக்காவுக்குத் தெரியும்; ஆனால் அவள் அதைக் கங்கவ்வாவிடம் தெரிவிக்க வில்லை. நாம் கலியாணம் செய்து வைத்தோம். ஆகையால் நாமும் படவேண்டியதுதான் என்பது அவள் எண்ணம். ஆகையால் கங்கவ்வா சங்கோசம் இல்லாமல் எப்போதும் போல் தேசாயின் வீட்டுக்கு வருவதும் போவதுமாக இருந்தாள். சாலிக்ராம சம்பவத்திற்குப் பின் சில நாட்கள் வரை கிட்டி தாயாரின் நலம்பற்றி விசாரிப்பது வழக்கம். இதனால் எரிச்சல் கொண்ட ரத்னா உள்ளுக்குள் குமுறிக்கொண்டு இருந்தாள். சில நாட்கள் கழித்து வரதட்சிணைப் பணம் தொடர்பாகக் கிட்டிக்கு அவமானம் நேர்ந்தது. இதனால் ஆத்திரமுற்ற கிட்டி தாயாரை இழிவு செய்யலானான். இரண்டொரு முறை பகுத்தறிவை இழந்து அவளிடம் கத்திக் கூக்குரல் போட்டான்.

ராகப்பாவின் செய்கையால் தேசாய்க்குக் கேடு செய்வதில் ஒத்துழைத்ததால் கிட்டிக்குச் சொந்த மகிழ்ச்சி ஒன்றும் இல்லை. இதுவே உலக வழக்கு என்று அந்த வேலைக்கு முனைந்தான், ஆனால் அவனுடைய மனச்சாட்சி அவனைத் துன்புறுத்திக் கொண்டு இருந்தது. வட்டி கொடுக்கும் தொல்லை நீங்கியபாடில்லை. ஒருநாள் கங்கவ்வா பகவானுக்கு முன்னால் புத்தகத்தைத் திறந்து வைத்துக்கொண்டு உட்கார்ந்தாள், அவளுக்கு எதிரில் இருபது ரூபாய் சில்லறையைக் கொட்டிக் கிட்டி, 'உன்னுடைய பெயரால் இந்த வட்டியைக் கட்டுகிறேன்,' என்று கூக்குரல் இட்டான்.

கங்கவ்வாவும் துயரம் அடைந்தாள்; 'நீ இந்தப் பெண் பிள்ளைத்தனத்தை விட்டுவிட வேண்டும். இந்த மூன்று நான்கு வருடத்தில் வட்டி கட்டி கூடவே நூறு இருநூறு ரூபாய் அசல் கடனைத் தீர்க்க உன்னால் முடியவில்லை. வா, மேலும் தீர்ப்போம் என்று நீ என்னைக் கேட்டிருந்தால் நான் மறுக்க போகிறேனா? சம்பாத்தியம் போதவில்லை என்று அழுகிறாய்.

என்னிடம் இந்த அளவு கூட இல்லை, நான் நிர்வாகம் செய்யவில்லையா? நூறு ஆண்பிள்ளைகளிடம் கேள். யுத்தத்தின் போது ஒரு சேர்சோளம் ஒரு ரூபாய்க்கு விற்றது, நான் அரை வயிறு சாப்பிட்டு உனக்கு ஊட்டினேன். உன்னை ஸ்கூலுக்கு அனுப்புவதிலும் குறை வைக்கவில்லை. இப்போது சம்பளம் வாங்குகிறாய், அப்படியும் உனக்குப் போதவில்லையா? உன்னால் தாங்கமுடியாதபடி உன்மேல் இப்போது என்ன சுமை ஏறிவிட்டது? அவள் தனியாகத்தானே இருக்கிறாள்?

கங்கவ்வா சொற்களில் இரண்டிரண்டு அர்த்தம் காணும் கிட்டிக்கும் ரத்னாவுக்கும் இந்தப் பேச்சு மிகவும் உறுத்தியது. அதிலும் கடைசிவாக்கியம் மர்மத்தில் குத்திவிட்டது. அவன் மனம் நோகவேண்டுமென்றே அம்மா இப்படிச் சொன்னதாக அவன் எண்ணினான். அதில் அவனுக்குக் குழந்தை இல்லாததைக் குத்திக்காட்டுகிறாள். ஆகையால் அவளைத் துன்புறுத்த வேண்டும் என்பதற்காக, 'உங்கள் எல்லாருடைய வயிற்றை நிரப்புவதிலேயே எல்லாம் பறந்துவிடுகிறது', என்றான்.

கங்கவ்வா சீறினாள், 'என் வயிற்றை நிரப்புகிற பேச்சைவிடு. உன் சாப்பாடு எனக்கு வேண்டாம். நீ இன்றைக்கே வேலை விட்டாலும் உன்னையும் உன் அகத்துக்காரியையும் உட்கார வைத்துச் சாதம் போட என்னால் முடியும்'.

இவ்வளவு பேசக் கங்கவ்வா பெருமுயற்சி செய்ய வேண்டி இருந்தது: ' என் துணிமணிகளை வெளியே எறிந்து விடு. நான் உன் வீட்டில் இருக்கமாட்டேன். குணாபுரம் போய் விடுகிறேன்', என்று சொல்ல அவள் மனம் முற்பட்டது, ஆனால் முயன்று அந்த எண்ணத்தை அடக்கினாள். என்ன நேர்ந்தாலும் இவ்வீட்டை விட்டுப் போவதில்லை என்ற பிரதிக்ஞை அவளுக்கு நினைவு வந்தது.

அன்று கங்கவ்வா சாப்பிடவில்லை. கிட்டியும் கோபமாக ஆபீசுக்குப் போய்விட்டான். மாலை வரை கங்கவ்வா சாப்பிட வில்லை, அப்படியே ரத்னாவும் சாப்பிடவில்லை. அவர் களுடைய சண்டை சச்சரவால் அந்த வட்டாரமே கலங்கியது. மாலையில் வீடு திரும்பிய கிட்டி பகவானின் படத்துக்கு முன்னால் தாயார் பாய்விரித்துப்படுத்திருப்பதைக் கண்டான். 'அவர் சாப்பிடவில்லை, ஆகையால், நானும் சாப்பிடவில்லை. எனக்கு உபவாசம் இருக்கவராதா என்ன?' என்றாள் மனையாள்.

கிட்டி பயந்து அன்னையிடம் சென்று, 'அம்மா, நான் செய்தது தப்பு. பணம் போவதைப் பார்த்து எனக்கு வருத்தமாக இருந்தது, பொறுக்க முடியவில்லை என்று ஆறுதல் கூறிய பிறகு கங்கவ்வா எழுந்து உணவு கொண்டாள்.

கிட்டியோ இச்சொற்களை மறந்து போனாள், ஆனால் ரத்னாவினால் மறக்க முடியவில்லை. ஒவ்வொரு நாளும் மனத்தாபம் காரணமாகக் கங்கவ்வாவிடம் அவளுக்கு இருந்த அச்சமும் போய்விட்டது. அவளிடம் ஓர் அலட்சியமும் வளர்ந்தது. 'என் கணவரை அவள் வளர்த்தாள் என்றால் நான் எப்போதும் அவளுக்குப் பயந்து நடக்கவேண்டும் என்று அர்த்தமில்லை. இவ்வளவு பாடுபட்டு வளர்த்த மாமியார் அவருடைய கௌரவம் குறையும்படியாக ஏன் இப்படிப் பேசுகிறாள்? எனக்குக் குழந்தை இல்லை என்றால் அதில் என் குற்றம் என்ன? அதற்காகவும் நான் பேச்சு கேட்கவேண்டும்? என்னும் எண்ணங்களால் அன்றைக்குப் பிறகு இன்னும் அதிகமாகச் சத்தம் போட்டு மாமியரை எதிர்க்கலானாள்.

வீட்டில் கிட்டி பையில் வைக்கும் பணம் மறையத் தொடங்கியது. யாரிடம் என்ன சொல்வது என்று கிட்டிக்குப் புரியவில்லை. அண்டை அயலில் உள்ளவர்களோடு ரத்னா தாராளமாகப் பேசினாள், மாமியார்க்காரி ஏதோ மாந்திரீகத்தால் தன் கருப்பப்பையைக் கட்டிவிட்டாள் என்று குற்றச்சாட்டை எல்லாருக்கும் இடையில் பரப்ப முயற்சியும் செய்தாள். அண்டைவீட்டாருக்கு இதனால் ஓர் ஆனந்தம். மத்தியான வேளையில் ரத்னாவை அழைத்து, இரண்டு நல்ல வார்த்தைகள் பேசி, பரிவு காட்டி அவளுடைய வாயிலிருந்து வார்த்தைகளைப் பிடுங்கினார்கள். இச்செய்தி கங்கவ்வாவின் காதில் விழுந்ததும், கிட்டியின் தலைமையில், ரத்னாவை எதிரில் உட்கார வைத்துக் கொண்டு கேட்டாள். 'நான் எந்த மந்திரதந்திரவாதியை வைத்துக் கொண்டு நான் எப்போது சூன்யம் வைத்தேன்?' இருவரில் யாரையும் சமாதானப்படுத்தக் கிட்டிக்குக் கஷ்டமாக இருந்தது. ரத்னா ஆணையிட்டுத் தான் அப்படிக் கூறவில்லை என்றாள். இப்போது சாட்சியம் தேவைப்பட்டது. கங்கவ்வா தன் சாட்சியாகக் காசியின் தாயாரை அழைத்து வந்தாள். காசியின் தாய் நாடகத்தை ஆனந்தமாகப் பார்த்துவிட்டு, யாருடைய கட்சியிலும் பேசாமல் இதை மற்றவர்களிடம் சொல்வதற்காக அங்கிருந்து நழுவினாள். சண்டையை நிறுத்துவதற்காகக் கணவனின் கட்டளைப்படி, 'நான் செய்தது தப்பு' என்ற அவள் கச்சிதமாக மறுத்துவிட்டாள்.

ஒரு நாள் கிட்டி வீட்டுக்காக ஒன்றரைச் சேர் வெல்லம் கொண்டுவந்தான். மாலைக்குள் அதிலிருந்து ஒரு பெரிய துண்டு காணாமல் போய்விட்டது. மாமியார் வீட்டுச் சாமான்களை யாரிடமோ விற்று விடுகிறாள் என்பது மருமகள் கட்சி. மருமகள் பையில் சாமானைப் போட்டு அப்பன் வீட்டுக்க அனுப்பிவிடுகிறாள் என்பது மாமியார் கட்சி. இவ்வாறு

கட்சியாடின பிறகு ரத்னா கிட்டியின் காதில் மெள்ள ஒரு சந்தேகத்தை வெளியிட்டாள்: மாமியார் மடித்து வைத்திருந்த துவைத்த ஆடைகளுக்குக் கீழே கொஞ்சம் துருத்தினாற்போல் தெரிகிறது என்று. தூக்கிப்பார்த்தால் அதற்குக் கீழே ஒரு பெரிய வெல்லத் துண்டு விழுந்தது. மறுபடியும் வாதப்பிரதிவாதம் ஆரம்பமாயிற்று. 'எனக்குக் கெட்ட பெயர் வாங்கித் தருவதற்கு மருமகள் செய்திருக்கிற வேலை இது, என்றாள் கங்கவ்வா. 'நீங்கள் தீட்டும் தீண்டாமையும் மிகவும் பார்க்கிறவர்கள் இல்லையா, ராத்திரி பழைய 'புக்கரி'யை ஏன் சாப்பிட்டீர்களாம்?' என்று பலமாய்க் கத்தினாள் ரத்னா.

தான் சொல்லுவதை மெய்யாக்கப் பொய் சொல்லப்படலாம், ஆனால் ரத்னாவின் கடைசிச் சொற்களைச் சகிக்க முடியவில்லை. இந்தப் பொய்க் குற்றச் சாட்டைக் கேட்டுக் கங்கவ்வா கலங்கிவிட்டாள். அவள் பதிலொன்றும் பேசாமல் சாப்பிடுவதை நிறுத்திவிட்டு உட்கார்ந்தாள். 'நான் செய்தது தப்பு' என்று மனைவியைச் சொல்ல வைக்கக் கிட்டி முதலில் முயன்றான். என்ன அடம்பிடித்தாள். வீட்டுக்காரியின் எதிர்ப்பால் தோற்ற கிட்டி கடைசியில் தாயாரை ஆற்றமுயன்றான். சாப்பிடும்படி அவன் அவளிடம் நோட்டீஸ் விடுவது போன்று கூறினான். மனைவியிடம் அன்போடு மன்றாடியவன் தாயாரைக் கட்டளை இட்டால் கங்கவ்வா எப்படிப் பொறுப்பாள்? 'எனக்கு உத்தரவு போட நீயார்? பேசாமல் ரொம்ப காலமாய்ப் பொறுத்துப் போகிறேன். இனியும் நான் பேசாமல் இருக்கமுடியாது. என்ன செய்வது என்று கோபண்ணாவைக் கேட்கிறேன்,' என்றுவிட்டு தேசாயின் வீட்டிற்குப் போனாள். அப்போது பிற்பகல் மூன்று மணி.

'கோபண்ணா, இப்போது நான் கிட்டியை விட்டுப் போனால் ராகப்பா அவனைக் கரடி ஆக்கி ஆட்டுவிப்பான் என்று உங்களுக்குத் தெரியும். இதற்காகத் தான் இத்தனை காலமும் இவனோடு ஒட்டிக்கொண்டு இருந்தேன். அவன் உதைத்தாலும் வாசல் நிலையைப் பிடித்துக்கொண்டு அங்கேயே உட்கார்ந்திருந்தேன். சொல்லுங்கள், இனி நான் உயிரோடிருந்து என்ன செய்ய வேண்டும்? பிள்ளையைப் பெரியவன் ஆக்கினேன், கலியாணம் செய்தேன். பேரன் பேத்திகளைப் பார்க்க வேண்டும் என்று ஆசை இருந்தது ... ஆனால் பகவானுக்கு என்னவோ இஷ்டமில்லை. அது போகட்டும். இப்படி எல்லாம் ஆகும் என்று நான் ஒரு போதும் எண்ணவில்லை. போன தடவை காசிக்கு அழைதத்துக் கொண்டு போனீர்களே, அதுபோல ஒரு தடவை பத்ரீநாத்துக்கு அழைத்துக் கொண்டு செல்லுங்கள், அண்ணா, பகவானைத் தரிசனம் செய்கிறேன். கங்கா மாதா அங்கேயே

ஓடுகிறாள். எங்காவது மலையிலிருந்து அதில் குதித்து இந்தப் பெண் பிறவியிலிருந்து விடுதலை பெறுகிறேன். இந்த வாழ்க்கை எனக்கு அலுத்துவிட்டது', என்ற கங்கவ்வா அழுதுவிட்டாள்.

கிட்டி இப்போது தேசாயையும் மதிக்கவில்லை என்று அவளுக்குச் சந்தேகம். தேசாய் கூப்பிட்டு அவன் வரவில்லை என்றால் அவருக்கு என்ன மரியாதை இருக்கும்? ஆகையால் அவள் தன்னை அடக்கிக் கொண்டாள். சென்ற இரண்டு ஆண்டு அநுபவத்தையும் கடைசி நிகழ்ச்சியையும் விரிவாக உரைத்த பிறகு, 'இத்தனை காலமாய் எல்லாம் மறைத்து வைத்திருந்தேன். இன்றைக்கு உங்களிடம் சொல்லத் தோன்றியது, சொல்லிவிட்டேன். நீங்கள் மனசில் ஒன்றும் வைத்துக்கொள்ள வேண்டாம், அண்ணா. அவனையன்றி எனக்கு வேறு யார் இருக்கிறார்கள் ? ... நான் திரும்பவும் போகிறேன், பட்டினி போட்டாலும் சரி, வனவாசத்துக்கு அனுப்பினாலும் சரி, நான் வீட்டில் தான் இருப்பேன்'.

தேசாய் அவளைப் போகவிடவில்லை கூறினார் : 'கங்கவ்வா, பயப்படாதே. நீ இங்கேயே ஸ்நானம் செய், கொஞ்சம் சாதமும் பருப்புப்பொடியும் ஆக்கிச் சாப்பிடு. நாளைக்கு மருமகளும் மகனும் உன் காலில்விழுந்து வீட்டிற்கு கூட்டிச் செல்லும்படி நான் ஏற்பாடு செய்கிறேன்'.

கங்கவ்வாவுக்குச் சந்தேகமாக இருந்தது : இன்று இங்கே இருந்துவிட்டால், மகன் நாளைக்கு வந்து கூட்டிக் கொண்டு போவான் என்று என்ன நிச்சயம் ? நாளைக்கு அவன் வராமலிருந்து அவள் தானாகவே வீட்டிற்குத் திரும்பினால் இன்னும் கேவலமாக இருக்கும். ஆகையால் அவள், 'இருக்கட்டும் அண்ணா, ஸ்திரீ ஜன்மம், அநுபவிக்கிறேன்' என்றாள்.

தேசாய் அவளைப் போகவிடவில்லை, வற்புறுத்தித் தடுத்துவிட்டார். மாலையில் வசந்தன் வாயிலாக ராகப்பாவுக்கு பின் வரும் செய்தியை அனுப்பினார்: 'கங்கவ்வா எங்கள் வீட்டில் இருக்கிறாள். நாளைக்குக் காலையில் மருமகளும் மகனும் வந்து அழைத்துக் கொண்டு போகட்டும்'

தேசாயின் குறிதப்பவில்லை, மறுநாள் மகனும் மருமகளும் வந்தார்கள். மன்னிப்பு கோரினார்கள்.

கங்கவ்வாவுக்கு இந்த ரகசியம் விளங்கவில்லை. மருமகளும் காலில் விழுவதைக் காண அவளுக்கு வியப்பாக இருந்தது. தேசாய் சிரித்தவாறே உரைத்தார் : 'இனி கோபத்தைத் துப்பு. சாப்பிட்டாயா இல்லையா ? இப்போது எல்லோரும் சிரிக்க

வேண்டும். ஏனென்றால் எல்லோருக்கும் ஒரு நல்ல செய்தி சொல்லப் போகிறேன்'.

அவர் சிரித்தபடி கேட்டார் : 'கிருஷ்ணா, உன் மாமா இங்கே வந்து அம்மாவை அழைத்துக் கொண்டு போகும்படி மிகவும் வற்புறுத்தினாரா ?'

ஆம் என்பதா இல்லை என்பதா என அவன் தயங்குகையில் அவர் இன்னும் பலமாகச் சிரித்தவாறு இயம்பினார் : 'இனி நீ மாமாவுக்கு சலாம் போடத் தேவை இல்லை. இனி நீ அவனுக்கு மாப்பிள்ளை மட்டும் தான். இப்போது ராகப்பாவுக்குத்தத்து எடுத்துக் கொள்ளும் எண்ணம் இல்லை. அப்படி இருக்க அவனை ஏன் முகஸ்துதி செய்ய வேண்டும் ?'

கங்கவ்வாவும் ரத்னாவும் எக்காலத்தில், 'என்ன சொன்னீர்கள் ?' என்றார்கள். தேசாய் மௌனமாய் சிரித்தார்.

'கேலி செய்கிறீர்களா ?' என்று வினவினாள் கங்கவ்வா.

'நான் ஏன் கேலி செய்கிறேன் ? பதினைந்து நாளுக்கு முந்தி ராகப்பாவே வந்து சொல்லிவிட்டுப் போனான்'.

'வேறுயாரைத் தத்து எடுத்துக்கொள்ளப் போகிறானாம் ?' - கங்கவ்வா கேட்டாள்.

'தத்து எடுத்துக்கொள்வதில் அவனுக்கு நம்பிக்கை போய் விட்டது' என்று அவர்களை மேலும் குழப்பத்தில் ஆழ்த்தி விட்டுக் கடைசியாகக் கூறினார் :

'அவனுக்கே பிள்ளை பிறக்கப் போகிறதாக இருந்தால் தத்து எடுத்துக் கொள்ள வேண்டிய அவசியம் என்ன ?'

ராகப்பா தான் சொன்னான்; என்று தேசாய் மேலே தொடரு முன் வேணுபாய் வாயில் நிலைக்கு பின்னால் இருந்தபடி உரை செய்தாள் : 'சம்பக்காவுக்கு மூன்று மாசம் பூர்த்தி ஆகி, இது நாலாவது மாசம்'.

ரத்னாவுக்கு எல்லையில்லாத வியப்பு. 'மூன்று நாலு மாசமாக வாரம் தவறாமல் பிறந்தகத்துக்குப் போய்க் கொண்டு இருக்கிறேன். யாருமே இதைப் பற்றி என்னிடம் சொல்லவில்லை. சாந்தாவுக்குக் கூடத் தெரியாதா என்ன ?' என்று அவள் யோசனையில் ஆழ்ந்தாள்.

உடலில் வலுவின்மை காரணமாகச் சம்பக்கா கர்ப்பவதியாக இருந்தும் யாதொரு மாறுதலும் காணப்படவில்லை. சாந்தாவுக்குத் தெரியும், ஆனால் ரத்னா மனத்தில் வருந்துவாள் என்பதற்காகச் சம்பக்கா அவளிடம் தெரிவிக்க வேண்டாம் என்று சாந்தாவைத் தடுத்துவிட்டாள். ஆகையால் சாந்தாவும் சொல்லவில்லை.

தெய்வம் தன்னை இப்படி மோசம் செய்யும் என்று கற்பனை செய்து பார்க்கவும் அவளுக்குக் கஷ்டமாயிருந்தது. ராகப்பாவின் வீட்டில் இந்த வயதில் குழந்தை பிறப்பது நடக்க முடியாததைக் கற்பனை செய்வது போல் இருந்தது. நடக்க முடியாதது என்ன, நகைக்கத்தக்கது கூட. ஆனால் ரத்னாவின் சமூக மதிப்பும் பொருளாதார மதிப்பும் இப்போது முற்றிலும் குறைந்துவிட்டது. அவளும் தந்தையிடம் மனத்தாபம் கொண்டாள். அவள் தான் உண்மையான துயரத்தை அநுபவித்தாள். 'பகவானே காப்பாற்ற வேண்டும்', என்று மனத்திற்குள் கூறிக்கொண்டாள். இதே கர்ப்பத்தைப் பகவான் தனக்குக் கொடுத்திருந்தால் - என எண்ணி அவள் மனத்தில் எரிச்சல் உண்டாயிற்று. இந்தப் பைத்தியக்காரத் தனமான எரிச்சலுக்காக அவளுக்குத் தன் மேல் சினமும் வந்தது.

கிட்டிக்குப் பாதி சிரிப்பும் பாதி எரிச்சலுமாக வந்தது. தத்து விஷயத்தை அவன் ஒரு போதும் பெரிய விஷயமாய்க் கருதியதில்லை. அவன் பெண்ணிடம் மயங்கி இருந்தான். ஆனால் அவள் மூலம் சொத்து வரப்போகிறது என்பதால் அவன் சூட்டிய அதிகப்படிப் பூக்கள் தாமாகவே கீழே விழுந்தன. 'ரசிகன் ராகப்பாவை'ப் பற்றி எண்ணிச் சிரிப்பு வரத் தொடங்கியது.

கங்கவ்வாவுக்கு மெய்யாகத்துயரமாக இருந்தது. ஆனால் இனிமை மிக்க இந்நேரத்தில் அவளும்தான் கசப்பான சொற்களை எப்படி உதிர்க்க முடியும் ? வெளிப்படையாக இன்ப மூட்டுவதாக இருந்தாலும் அந்தரங்கமாக கவலைதருவதான இந்த நகைப்பு உண்டாக்கும் விஷயத்தால் மகிழ்ச்சியுற்று அந்தச் சிறு குடும்பம் வீட்டுக்குச் சென்றது.

மறு நாள் மறுபடியும் ரத்னா பிறந்த வீட்டிக்குப் போனாள்.

இப்போது அவள் எந்த விஷயத்திற்காகச் சச்சரவு துவக்க முடியும் ?

அவளுக்கு யாரும் இந்த விஷயம் பற்றிக் கூறவில்லை, அவளுடைய வருத்தத்திற்கு இதுவே முக்கியமான காரணம். இந்த அற்பமான விஷயங்களை வைத்துச் சச்சரவு செய்ய ஆரம்பித்தால், அவள் நேராகச் சொல்ல விரும்பாத வேறு ஏதோ விஷயம் பின்னால் இருப்பதாக விஷயம் தெரிந்தவர்கள் தெரிந்து கொள்கிறார்கள்.

ரத்னா தரையைக் கால்களால் உதைத்தவாறு வந்தாள், எல்லாரையும் சீறிப் பொழிந்தாள். 'என்னிடம் நிசத்தைச் சொல்லவேண்டாமா? சொன்னால் நான் பிடுங்கிக் கொண்டுபோய் விடுவேனா? நான் வீட்டுப்பெண் இல்லையா? என் வீட்டு விஷயத்தைப் பிறர் வாயிலிருந்தா நான் தெரிந்துகொள்ள வேண்டும்? பெற்றவர்கள் என்னைத்

தள்ளிவைத்து விட்டார்களா என்ன? என்னை தொலைத்து முழுகிவிட வேண்டும் என்று கலியாணம் செய்தீர்கள்? என்னை என் தங்கை கூடவா ஏமாற்றுவது? மாமியார் வீட்டில் கஷ்டம் அநுபவிக்கிறவளுக்குப் பிறந்தகத்துத் தைரியம் இருந்தது. நாங்கள் பிறந்தகத்துச் சொத்தை நம்பியா வாழ்கிறோம்? பிள்ளை பிறந்தால் தம்பி கிடைத்தான் என்று எனக்குச் சந்தோஷமாக இருக்காதா? அப்போது லட்டு விநியோகம் செய்ய நான் பாத்தியமுள்ளவள் இல்லையா?' ஒவ்வொரு கேள்வியோடும் அவள் குரல் ஓங்கிக்கொண்டு இருந்தது. அவளுடைய ஆவேசத்தைக் கண்ட ராகப்பாவாலும் அவளைச் சமாதானப்படுத்த முடியவில்லை.

இப்படிக் கத்திக் கூக்குரலிட்டு அழுது தேநீர்க் கோப்பையை உருட்டிவிட்டு, 'இனிமேல் இந்த வீட்டில் கால்வைக்க மாட்டேன். பெண் பிறந்தாலும் என் அகத்துக்காரரைத் தத்து எடுத்துக்கொள்ள வேண்டாம். எடுத்துக்கொண்டால் என்னைத் துண்டுபோட்டுச் சாப்பிடுவது போல,' என்று ஆணையிட்டுவிட்டு அவள் அங்கிருந்து விரைவாக நடந்து வீட்டை அடைந்தாள்.

அன்று முதல் கிட்டியில் வீட்டில் சண்டை ஒய்ந்துவிட்டது என்பதில்லை. ஆனால், தன் பிறந்த வீட்டுக் கர்வத்தைத் தன் விருப்பப்படி கைவிட்ட காரணத்தால் ரத்னாவிடம் புகுந்த வீட்டுக் கர்வம் விழித்துக் கொண்டது. கணவனையன்றி எனக்கு வேறு யாரும் இல்லை. கணவன் மீதே நம்பிக்கை வைக்க வேண்டும், பெற்றவர்கள் நம்முடையவர்கள் அல்ல என்பதெல்லாம் அவள் மனத்தில் உறுதிப்பட்டது. கங்கவ்வாவைக் கூட பகவானால் கொடுக்கப்பட்ட தன்னுடைய ஓர் இன்றியமையாத அங்கமாக அவள் ஏற்றுக்கொண்டாள்.

# 33. அச்சுதனின் இரண்டாவது கடிதம்

அச்சுதனின் இரண்டாவது கடிதம் வருவதற்கு ஒரு மாதம் ஆகிவிட்டது, ஏனெனில் வெங்கட்ராயிடமிருந்து அவனுடைய கதையைக் கக்கவைப்பது அசாத்தியமாக இருந்தது. மாதம் பதினைந்தாம் நாள் அச்சுதன் அசாத்தியத்தைச் சாத்தியம் ஆக்கிவிட்டான். வறட்சியான தோற்றம் தந்தாலும் வெங்கடராய் பெரிய சந்தேகக்காரன், பிடிவாதக்காரன். ஒரு விதத்தில் கொஞ்சம் அற்பனும்கூட. அச்சுதன் எப்போதாவது நீண்ட கேள்வி கேட்டால், 'இம்மாதிரி என்னைத் தொல்லை செய்யாதீர்கள், செய்யாதீர்கள், செய்யாதீர்கள்,' என்பான். இல்லாவிட்டால் சிலசமயம் ஒரேடியாக உரக்கச் சொல்வான். கையைச் சுற்றி 'இது

*'பொய், பொய்' என்பான். பன்முறை, 'ஏன் தேசாய், தேசாய்த் தொழிலைச் செய்கிறீர்களா?' என்று ஆத்திரமூட்டுவான். ஆனால் அச்சுதன் அவனை விடவில்லை. 'என் தகப்பனார் உன் பங்கை வாங்கித் தருவார்' என்று கூறி அவனைச் சிலசமயம் உசுப்புவான்; சிலசமயம் அவனை உற்சாகப்படுத்திக் கொஞ்சம் கொஞ்சமாய் விவரங்களைக்கறப்பான். அவற்றைக் குறித்துக் கொள்வான். ஒரு மாதத்திற்குப் பிறகு கிடைத்த தகவல்களை எல்லாம் வரிசைப்படுத்தித் தேசாய்க்கு இவ்வாறு கடிதம் எழுதினான்.*

*நலம்*
*பம்பாய்*

வழிபடுதற்குரிய தந்தையார் அவர்களின் திருவடிகமலங்களுக்கு சிரஞ்சீவி அச்சுதராவின் சாஷ்டாங்க நமஸ்காரம். தங்கள் கடிதம் கிடைத்தது. தங்கள் கடிதத்திலிருந்து வெங்கடராய் கையாடல் விவகாரத்தில் சிக்கிக்கொண்ட தகவல் தெரிந்தது. அதை நான் பயன்படுத்திக் கொண்டு, 'நீ பொய்க் கை எழுத்து போட்டாய் அல்லவா? என்று சொல்லி அவனைப் பயமுறுத்திவிட்டேன். அவன் மிகவும் உண்மையானவன். ஆண்டவன் மேலும் பெற்றோர் மேலும் ஆணையிட்டுத்தான் அப்படிச் செய்யவில்லை என்கிறான். வெவ்வேறு நேரங்களில் அவனிடமிருந்து சேகரித்த தகவல்களைக் கீழே தருகிறேன். இந்த விவரங்கள் பூர்த்தியாகவில்லை. அதிலுள்ள பல விஷயங்கள் அப்படியே நடந்திருக்கலாம் என்பது என் ஊகம்.

பதினைந்து இருபது ஆண்டுகளுக்கு முன் வெங்கட்ராய் பூனாவில் சேட் தக்கமல் என்ற வியாபாரியிடம் ஊழியனாக இருந்தான். அவனுடைய வீட்டு வேலைக்காரர்களில் வெங்கடராய் மட்டுமே தெற்கத்திப் பிராமணன் என்ற காரணத்தால் சேட்டுக்கு இவனிடம் மிகுந்த நம்பிக்கை. அவன் இவனுக்கு தன் வீட்டுக்குப் பின்புறமே ஓர் அறை கொடுத்திருந்தான். பைத்தியம் போல் காணப்பட்டாலும் வெங்கடராய் நாணயமானவன் என்பதைத் தாங்கள் உணர்ந்திருக்கலாம். நாணயத்தோடு அவ்வப்போது அவன் கெட்டிக்காரனாகவும் ஆகமுடியும். சேட் வீட்டில் வெங்கடராய் தான் பூஜையும் பாராயணமும் செய்வது வழக்கம். சிராத்தமும் அவனே கவனித்துக்கொண்டான். சேட்டின் மனைவி வெங்கடராயின் சுபாவத்தைப் பார்த்து அவனைப் பகவானின் அவதாரம் என்றே மதித்தாள். அவனுக்கு நன்றாக உணவு

போடுவதில் அவளுக்கு ஆனந்தம். அப்பால் நம்பிக்கை வலுக்கவே சேட் பாங்குக்குப் பணம் கொண்டு போவது செக்குகளை மாற்றுவது, முதலிய வேலைகளையும் வெங்கடரா யிடம் ஒப்படைத்தான். இக்காரணத்தால் குன்றிமணி போன்ற கண்களை உடையவனும் கொச்சை மராட்டியும் விசித்திரமான ஹிந்தி பேசுகிறவனும் அச்சமற்றவனும், பைத்தியமுமான இவன் பாங்குக்காரர்களுக்கு மிகவும் தெரிந்தவன் ஆகிவிட்டான். வேலையாகப் பாங்குக்குப் போகும் போது கிளர்க்குகள் அவனை, 'சேட்டம்மா இன்றைக்குச் சாப்பிட என்ன கொடுத்தார்கள், சோமாசியா, லட்டுவா?' என்று பரிகாசம் செய்வார்கள். பதிலுக்கு இவன், 'சாப்பிட்டவன் நான், உங்களுக்கு ஏன் வயிறு வலிக்கிறது?' என்பானாம்; இதை அவனே சொன்னான்.

ஒரு நாள் செக்கை மாற்றுவதற்காகப் பாங்கு வரிசையில் நின்று கொண்டு இருந்தான். இச்சமயம் சேட்டின் டிரைவர் (அவன் பெயர் தாஜிமுத்தீன்) வேகமாகக் காரை ஓட்டிக் கொண்டு வந்து பாங்குக்கு முன்னால் நிறுத்தினான். அவன் வெங்கடராயைக் கூப்பிட்டு இரண்டாயிரத்துக்கு ஓர செக் கொடுத்து, 'மோடாரின் பழைய பாகங்களை மாற்றுவதற்கு சேட் இந்தச் செக் கொடுத்தார். எனக்கு இன்றைக்கே பணம் வேண்டும், செக்கை மாற்ற எனக்கு நேரம் இல்லை. இதை மாற்ற வரிசையின் கடைசியில் நான் நிற்கவேண்டும். உனக்குத்தான் நம்பர் கொடுத்தாகி விட்டதே, இதை மாற்றிக் கொடு' என்று சொன்னான். வெங்கடராய் செக்கை வாங்கிக்கொண்டு மறுபடியும் வரிசையில் நின்றுவிட்டான். அப்போது இவனுக்கு முன்னால் இருந்தவன் பாங்குக் கிளர்க்கோடு எதற்காகவோ வாதாடிக்கொண்டு இருந்தான். வெங்கடராயின் முறை வந்தும் அவன் பேசாமல் நிற்க வேண்டியதாயிற்று. இதனால் தாஜிமுத்தீனுக்கு நேரமாயிற்று. அவன் காரிலிருந்து இறங்கி வந்து அவனுடைய காதில், 'செக்கை மாற்றிக்கொண்டு இங்கேயே இரு. சேட்டைக் கடைக்குக் கொண்டு போய்ச் சேர்த்துவிட்டுப் பதினைந்து இருபது நிமிடங்களில் வருகிறேன்.' என்று சொல்லிப் போய்விட்டான்.

வெங்கடராயுக்கு யாதொரு தடையும் இல்லாமல் பணம் கிடைத்துவிட்டது. முன்னால் வந்த மனிதனோடு தகராறு நடந்த சூட்டில் அந்தப் பாங்குக் கிளர்க் பழக்கமான இந்த ஆசாமி

கொடுத்த செக்கைச் சரியாகப் பரிசீலனை செய்யாமல் ஏற்றுக்கொண்டு விட்டான் போலும். மூன்று நான்கு நிமிடங்களில் அடுத்த ஜன்னலிலிருந்து வெங்கடராய்க்கு இரண்டாயிரம் கிடைத்துவிட்டது. அவன் கொடுத்த மற்றொரு செக்சேட்டின் கணக்கில் சேர்ந்தது. அந்தப் பணத்தைப் பெற்றுக் கொண்டு பாங்குப் படிகளில் அமர்ந்து தாஜிமுத்தீனை எதிர் பார்த்துக் கொண்டு இருந்தான். ஒரு மணி நேரம் ஆகியும் தாஜிமுத்தீன் வரக்காணோம். யாராவது ஓர் அறை அறைந்து கையிலுள்ள பணத்தைப் பிடுங்கிக்கொண்டு போய்விட்டால்? என்ற பயம் கூட அவனுக்கு உண்டாகிவிட்டது. ஆகையால் மேலும் காத்திராமல் அவன் வீட்டுக்குப் போய்விட்டான். அந்தப் பணத்தை டிரங்கில் வைத்து தன் தம்பி ராகப்பாவை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளச் சொன்னான். ராகப்பா அச்சமயம் வேறு எங்கும் வேலை கிடைக்காததால் வேலை தேடி பூனாவுக்கு வந்திருந்தான். அவனிடம் டிரங்கைப் பார்த்துக் கொள்ளும் பொறுப்பை ஒப்படைத்து எங்கும் வெளியே போக வேண்டாம் என்று எச்சரித்து விட்டு வெங்கடராய் வேலைக்குப் போனான்.

சேட்டின் மூத்தமகன் பாபூபாய் வெங்கடராயைப் பார்த்ததும் தன் அறைக்கு வரும்படி சைகை செய்தான். நீண்ட காலமாகவே அவன் போக்கிரித்தனத்திற்காகப் புகழ் பெற்றான். அறைக்குப் போனதும் அவன் வெங்கடராயிடம், 'தாஜிமுத்தீன் உன்னைச் சந்தித்தானா?' என்று கேட்டான். வெங்கடராய்க்குச் சந்தேகம் உண்டாகி, 'ஆம் ஐயா,' என்றான். 'செக் கொடுத்தானா?' என்று தொடர்ந்து கேட்டான் பாபூபாய். வெங்கட்ராய் அதற்கும் ஆம் என்றான். பாபூபாய் மறுபடியும் 'செக்கை மாற்றித் தாஜிமுத்தீனிடம் பணம் கொடுத்துவிட்டாயா?' என்று கேட்டதற்கு வெங்கடராய் வேறுவழியின்றி 'ஆம்' என்று பொய் சொல்லிவிட்டான். பொய் செல்வது என்றால் வெங்கடராய்க்குத் தேள் கொட்டுவது போல் இருக்கும். ஆனால், உண்மை சொல்லி இருந்தால் பாபூபாய் அவனை விட்டிருப்பானா? அவன் இவனுடைய சட்டையைப் பற்றிக்கொண்டு பணத்திற்காகத் துளைத்திருப்பான். தாஜிமுத்தீனுக்கு உண்மையாக நடந்து கொள்ள வேண்டும் என்பதற்காக இவன் பொய் சொல்லி யிருந்தான். இம்மாதிரி கெட்டிக்காரத் தனங்கள் வெங்கடரா யிடம் நிறைய இருக்கின்றன. அவன் தன் கொள்கைமையைக்

கைவிடுகிறவன் இல்லை. இதன் பேரில் பாபூபாய் அவனை விட்டுவிட்டான்.

அன்று முழுவதும் தாஜிமுத்தீன் அங்கே வரவில்லை. சேட்டோ மாலை ரயிலில் பம்பாய்க்குப் போய்விட்டார். மறுநாள் காலையில் வெங்கடராய் சேட்டின் வீட்டில் பூஜைக்கு அமர்ந்திருந்தபோது, ராகப்பா வந்து, 'தாஜிமுத்தீன் வந்திருக்கிறான், இப்போதே பணம் வேண்டும் என்கிறான்' என்று சொன்னான். நீராடிவிட்டுப் பூஜைக்கு உட்கார்ந்துவிட்ட வெங்கடராய் அப்போது எழுந்து டிரங்கைத் தொடமுடியாது. தன் பூணூலில் இருந்த சாவியை எடுத்து அவன் ராகப்பாவிடம் கொடுத்தான்.

ராகப்பாவிடமிருந்து பணம் பெற்றுக்கொண்டு போன தாஜிமுத்தீன் பிறகு திரும்பவே இல்லை.

அடுத்த பத்து பன்னிரண்டு நாட்களில் கணக்குப் புத்தகங் களில் வித்தியாசத்தைக் கண்டு சந்தேகப்பட்டுப் போலீசில் புகார் செய்திருக்கலாம். பன்னிரண்டு, பதினைந்து நாட் களுக்குப் பின் போலீஸ்காரர்கள் வெங்கடராயைக் கைவிலங் கிட்டு அழைத்துக்கொண்டு போனார்கள். இதில் பாவத்தின் பங்காளி தாஜிமுத்தீனா அல்லது வேறு யாராவதா என்பதைக் கூறமுடியாது. செக்கை மாற்றிய காரணத்தால் வெங்கடராய்க்கு ஆபத்து வந்தது.

இதற்கு இடையில் வேலை கிடைக்காததால் ராகப்பா திரும்பிப் போய்விட்டான். வெங்கடராய் திகிலடைந்து ராகப்பாவுக்குக் கடிதம் எழுதினான். ராகப்பா தன் மாப்பிள்ளை சுவாமிராய் குல்கர்ணீயை ஜாமீன் கட்டச் சொல்லி வெங்கடராயைச் சிறையில் அடைபடுவதிலிருந்து காப்பாற்றிவிட்டான்.

அங்கிருந்து மூவரும் தார்வாருக்கு வந்துகொண்டிருந்த போது ரயிலில் சுவாமிராய் சொன்னார்: 'நான் உன் பொறுப்பை ஏற்றுக்கொண்டு இருக்கிறேன், அதனால் உன் பங்கு நிலத்தை என் பெயருக்கு எழுதிக்கொடு. உன்னை எப்படி நம்புவது?' அவர் மிகவும் வற்புறுத்தியதால் தார்வாருக்கு வந்ததும் அவன் அந்தத் தானபத்திரம் எழுதிக் கொடுத்தான். எழுதிக்கொடுத்தபின் வெங்கட்ராய்க்கு அதைப்பற்றி அடிக்கடி கவலை உண்டாக ஆரம்பித்தது.

எழுதப்பட்ட தானபத்திரத்தின் நகல் வெங்கட்ராயிடமும் இல்லை, ராகப்பாவிடமும் இல்லை. ராகப்பாவோ, 'உன் பங்கில் என்ன இருக்கிறது? நம் வயல்களில் இரண்டு நல்ல வயல்களை சுவாமிராய் கேட்டுவிட்டால் என் கதி என்ன ஆகும்?' என்று ஓயாமல் தொந்திரவு செய்து, சுவாமிராயிடமிருந்து அந்தப் பத்திரத்தின் நகல் ஒன்றைக் கேட்டு வாங்கும்படி நிர்ப்பந்தம் செய்தான். ஏற்கனவே சித்தப்பிரமை, இந்த இருவருடைய தொல்லையைத் தாங்கமாட்டாமல் சுவாமிராயிடம் சொன்னான்: 'நான் வக்கீலைக் கலந்துகொள்ள வேண்டும். அந்தப் பத்திரத்தின் நகல் ஒன்று எனக்கு வேண்டும்.'

அநுபவஸ்தரான சுவாமிராய் அவன் கூறியதற்கு இணங்காததால் வெங்கடராய் வருத்தம் அடைந்திருக்கக் கூடும். இறுதியில் தொல்லை பொறுக்க முடியாமல் சினம்கொண்ட சுவாமிராய், 'நான் ஐயாயிரம் ரூபாய்க்கு ஜாமீன் கொடுத்திருக்கிறேன். நான் உன்னிடம் தப்பாக எழுதிவாங்கி இருக்கிறேன் என்று சொன்னால் நான் எந்தத் தண்டனையும் அநுபவிக்கத் தயார்' என்று சொல்லி வெங்கட்ராயின் பக்கம் அந்தப் பத்திரத்தைத் தூக்கி எறிந்தார். வெங்கடராய் அதை எடுத்துக்கொண்டு ராகப்பாவின் வீட்டுக்கு வந்தான். மறுநாள் காலையில் வக்கீலிடம் பத்திரத்தைக்காட்டி யோசனை கேட்க வேண்டும். ஆகையால் வெங்கடராய் அங்கேயே சாப்பிட்டுவிட்டு அங்கேயே படுத்துக் கொண்டான். அன்று இரவே பதினொரு மணிக்கு அவனைப் பிடிக்கவந்த போலீசார் கதவைத் தட்டினார்கள்; அவர்களிடமிருந்து தப்புவதற்காக வெங்கடராய் கொல்லைக் கதவு வழியாக ஓடி ஸ்டேஷனுக்குப் போய்ச் சேர்ந்தான். அங்கிருந்து பம்பாய் வண்டியில் ஏறினான். இக்கதையை வெங்கடராய் கூறியபடியே எழுதி இருக்கிறேன். ஆனால் இதைப் பற்றி எனக்குப் பல சந்தேகங்கள் இருக்கின்றன.

பம்பாயில் சில நாட்களுக்குப்பின் இந்த மாவுமில் முதலாளியின் வீட்டில் வேலைக்குச் சேர்ந்தான். சிறிது காலம் கழித்து முதலாளி மாவுமில் தொடங்கியதும் வெங்கடராய் அதில் சேர்த்து விட்டான். அப்போது முதல் அவன் அஞ்ஞாதவாசத்தின் நாள் கழிக்கிறான். இந்தத் தானபத்திரத் தைப் பார்வை இட்டவர்களில் நான் ஒருவனே 'உன் பங்கு

உனக்குக் கிடைத்துவிடும்; என்று சொல்வதாக வெங்கடராய் உரைக்கிறான்.

இந்த விஷயத்தை வெங்கடராய் கூறிய கிரமப்படியே இது எழுத்தப்பட்டது. பிரமை கொண்ட தன்மையினன் ஆகையால் பல விஷயங்களை அவன் தப்பும் தவறுமாகப் புரிந்துகொண்டு இருக்கக் கூடும். ஆதலால் பல விஷயங்கள் சந்தேகப்படும்படி உள்ளன. தாங்களே அவற்றை வெங்கடராயிடமிருந்து கேட்டிருந்தாலும் தங்களுக்கும் அதே சந்தேகங்கள் எழுந்திருக்கும். நான் எழுதிய குறிப்புகளின் அடிப்படையில் இந்த விவகாரம் தெளிவாகாது என்று கருதி கீழே என் கருத்தை எழுதுகிறேன்.

முதலாவதாக, வெங்கடராய் தன்னிடமுள்ள பத்திரத்தை மூலதானபத்திரத்தின் நகல் என்று நினைக்கிறேன். அவனிட முள்ள பிரதி மூலதஸ்தாவேஜி என்பது சந்தேகமாக இருக்கிறது என்று முன் கடிதத்தில் நான் எழுதியிருந்தது தங்களுக்கு நினை விருக்கும். அதன் மேல் ரிஜிஸ்டிரேஷன் முத்திரை இல்லை; தவிர, மை பழையதான காரணத்தால் அது மூலபத்திரத்தின் காபி போலத் தோற்றுகிறது. இதற்குச் சான்றாக மற்றொரு சங்கதியும் இருக்கிறது : கோபத்தோடு சுவாமிராய் பத்திரத்தை வெங்கடராய் மீது எறிந்துவிட்டார் என்பதில் இது மூலதான பத்திரத்தை இருக்கக்கூடும். இது வெங்கடராயின் கற்பனைக்கு எட்டாத சங்கதி. இது அசல் தானபத்திரமாகவே இருக்க வேண்டும். இரண்டு மூன்று பிரதிகள் எடுத்து ஒரே இடத்தில் வைத்திருந்தால் கோபத்தில் இப்படி நேருவது சகஜம்.

இரண்டாவதாக, ஜாமீன் கட்டியாகிவிட்டது, அப்புறம் போலீஸ் வருவானேன் ? சம்மன் வந்திருக்க வேண்டும். மீண்டும் போலீஸ் வந்தது மெய்யா அல்லது அது வெங்கடராயின் வெறும் அச்சப் பேயா ?

மூன்றாவதாக, வெங்கடராய் பம்பாய்க்கு ஓடி விட்டபின் சுவாமிராயின் கதி என்ன ஆயிற்று ?.... அச்சம் காரணமாகத்தான் அவர் இவனிடம் சொத்து எழுதிவாங்கிக் கொண்டார் என்பது உண்மை. ஏதாவது நேர்ந்துவிட்டால் அவர் இழந்து பணத்திற்குப் பதிலாக இந்தச் சொத்து இருக்கும். இப்படி ஒரு பொய்த் தைரியம் அவருக்கு முதலில் இருந்திருக்கக் கூடும். ஆனால், கவனித்துப் பார்த்த போது அசல் பத்திரமே கையை விட்டுப் போய்விட்டது என்பது

தெரிந்ததும் கட்டாயம் அவர் பயந்து போயிருக்க வேண்டும். ஆனால் இந்த எண்ணமே வெங்கடராயின் மூளைக்கு எட்ட வில்லை. தன்னுடைய சொத்து சுவாமிராயிடம் போயிருக்கும், அவர் ஆனந்தமாக இருப்பான் என்றே அவன் இப்போதும் நினைத்துக் கொண்டு இருக்கிறான். அவனுக்கு உண்மை தெரிந்தால் மிகவும் துயரப்படுவான், அவனுடைய சித்தப் பிரமை அதிகமாகவும் கூடும். இது பற்றி நாம் மிகவும் கவனமாக இருக்க வேண்டும்.

இவை எல்லாம் போகவும், அடிப்படை மர்மம் துவங்காமலே இருக்கிறது. பொய் செக் கொடுத்தவன் யார் ? வெங்கடராய் தலைமறைவானபின் போலீஸ் அவனைத் தேடும் முயற்சியை மேற் கொண்டதா ? இவன் இல்லாமலே கேஸ் நடந்ததா ? ... இவை யாவும் மிக முக்கியமான கேள்விகள். வேறு இடங்களில் அவற்றைப் பற்றி விசாரிக்க வேண்டும். முழுமையாக விசாரணை செய்ய வேண்டும் என்று எனக்கு விருப்பம். இங்கே மேற்கொண்டு தகவல்கள் அறியவும், கோர்ட்டின் பழைய தீர்ப்புகளின் ஃபைல்களை எடுத்துப்பார்க்கவும் முயலுகிறேன்.

இந்தக் கதை முழுவதும் தெரிந்து விட்டால் இதை நம் செய்தித்தாளில் புனை பெயரில் தொடர்ச்சியாக எழுதலா மென்று எண்ணுகிறேன் எங்கள் ஆசிரியரிடம் இதில் சில விவரங்களைக் கூறினேன். அவருக்கு மிகவும் பிடித்துவிட்டது. 'ஹிந்துஸ்தானத்தில் இப்படி நெஞ்சை உருக்கும் நிகழ்ச்சி எழுதுகிறவர்கள் எத்தனை பேர் இருக்கிறார்கள். காமிக்கு களைக் கூட நாம் வெளியிலிருந்து வாங்க நேருகிறது. கதை களையும் வெளியிலிருந்து நாம் வாங்க வேண்டியுள்ளது. அவை எல்லாம் அயல் நாட்டுச் சூழ்நிலையில் எழுதப் பட்ட வை. ஆகையால் இதைத் தொடர்ச்சியாகத் தரச் சொல்கிறேன்,' என்கிறார் அவர். பூனாவுக்குப் போகப் பணம் அனுப்பச் செய்கிறீர்களா ?

என் படிப்பு நல்லபடி நடக்கிறது. உடல் நலமாக இருக்கிறேன். அன்னையாருக்கு வணக்கங்கள். தம்பிகளுக்கு ஆசீர்வாதங்கள்.

*இங்ஙனம்*
*அச்சுதராவ்*

# 34. நெருப்போடு விளையாட்டு

தேசாயிடமிருந்து மகளையும் மருமகனையும் அனுப்பும்படி செய்தி வந்ததும் ராகப்பா முணுமுணுத்தவாறு அவருடைய இச்சொல்லை நிறை வேற்றினான். 'செய்யும் தேசாய், உம்மாலானதைச் செய்யும், வேளை வந்ததும் நானும் உம் கழுத்தைப் பிடிக்கிறேன்.' அவன் மருமகனையும் மகளையும் வீட்டுக்கு அழைத்துப் புத்திமதி சொன்னான் : 'நீங்கள் ஒற்றுமை யாக இருக்க வேண்டும். என் அக்கா மிகவும் துக்கப்பட்டவள், அவளுக்கு மேலும் துக்கம் தரக்கூடாது.' ரத்னாவுக்கு மணமான பின் ராகப்பாவின் வீட்டிற்குப் போகவில்லை. இவ்வளவு பகைமையோடு கூடவே, ராகப்பா கங்கவ்வாவின் வீட்டில் கால் வைக்கவில்லை; கங்கவ்வாவும் ராகப்பாவின் வீட்டிற்க்குப் போக வில்லை. இவ்வளவு பகைமையோடு கூடவே, ராகப்பா கங்கவ்வாவுக்கு பாவங்களின் அதிதேவதை: ராகப்பாவுக்குக் கங்கவ்வா தன் சாமர்த்தியத்தினால் அவனைக் குனிய வைத்து அவனோடு போராடும் ஒரு சக்தி. ஆனால், எப்போதாவது கங்கவ்வாவைப் பற்றின பேச்சு வந்தால் அவன் மனம் கருணையால் நிரம்பிவிடும். திருமணம் முடிவான போதும் இப்படித்தான் நேர்ந்தது. இப்போது கங்கவ்வா உணவும் உண்ணாமல் வீட்டை விட்டுப் போய்விட்டிருக்கிறாள், தேசாயின் வீட்டில் இருக்கிறாள் முதலிய விவரங்களைப் பெண்ணிடமிருந்து அறிந்த போது அவன் உள்ளம் உருகிவிட்டது. இதனால் மகளும் மருமகனும் இசைந்து போனார்கள்.

தன் உள்ளம் இளகியதைக் காட்டிக் கொள்ளாமல் மறைத்துக் கொண்டு, தேசாயின் சொல்லுக்குக் கட்டுப்பட்டே இவ்வாறு செய்வதாகக் காட்டிக் கொண்டான். பெண்ணையும் மருகனையும் மறு நாளே போகும்படி நிர்ப்பந்தம் செய்தான். நல்லறிவின் வழியே நடப்பதற்கும் தனக்கே உரித்தான ஒரு காரணத்தைத் தேடிக் கொள்வதே தீயறிவின் சிறப்பு.

ஆனால் இவை எல்லாவற்றின் விளைவு வேறாக முடிந்தது. அவனால் அலட்சியம் செய்யப்பட்ட ஒரு விஷயத்தை வைத்துத் தேசாய் தனக்கும் தன் மகளுக்கும் இடையில் வேற்றுமை உணர்ச்சி உண்டாக்கி விடுவார் என்று ராகப்பா எண்ணவில்லை. இரண்டு நாள், மூன்று நாளுக்கு ஒரு முறை ஓடிவரும் ரத்னா சச்சரவுக்குப் பிறகு பதினைந்து நாள் ஆகியும் தலைகாட்ட வில்லை. கிட்டியை வீதியில் தான் இரண்டு மூன்று தடவை சந்தித் தான். அவன் தன் பெண்ணைப் பற்றி என்ன கேட்பது ? ரத்னாவின்

முகம் காணப்படாததால் மனத்தில் தவிப்பாக இருந்தது. எப்படி யாவது புருஷன் வீட்டில் சுகமாக இருக்கட்டும் என்று மனத்தை திடப்படுத்திக் கொண்டான். 'இப்போது நான் ராவணன்; நாச காலம் வந்துவிட்டது, ஒவ்வொன்றாக இழந்து கொண்டு இருக்கிறேன்' என முணுமுணுத்தவாறு எண்ணினான்: 'சரி, தேசாய், மற்றோர் இடத்தில் உன்னைக் குனியவைக்கிறேன், பார்.'

இரண்டு ஆசைகள் நாளுக்கு நாள் வலுபெற்றுக் கொண்டு இருந்தன. ஆண் குழந்தை பிறக்க வேண்டும் என்பது ஒன்று. அதற்காக சத்யநாராயண பூஜை செய்வித்தான்; நேர்த்தி நேர்ந்து கொண்டான், பம்பாயின் புகழ்பெற்ற சோதிடருக்கு ஐந்து ரூபாய் மணியார்டர் செய்து கேள்வி கேட்டான். 'பிள்ளை தான் பிறக்கும்' என்று அங்கிருந்து பதிலும் வந்தது. ஐந்தணாவும் ஐந்து பாக்கு வெற்றிலையும் வைத்து, உடம்பில் தேவதைக்கு உணவூட்டும் யோகினியிடம் கேட்டான். அதற்கும் அப்பதிலே வந்தது.

மற்றோர் ஆசை, வசந்தராவுக்கு சாந்தாவை மணம் செய்துவைப்பது. தேசாயிடம் தன் கர்வத்தைக் காட்ட ஒரே வழி எஞ்சியிருந்தது. ஆகையால் வசந்தனை வீட்டுக்கு வரும்படி உற்சாகப்படுத்திக் கொண்டே இருந்தான். எப்போதும் சாந்தாவே அவனுக்குத் தேநீர் தருவது வழக்கம், ஆனால் வசந்தன் அவளோடு ஒன்றும் பேசுவதில்லை. அவனுக்கு வெட்கம். 'அவனுக்குத் தான் அந்த ஷராப் கடைக்காரப் பையன் கிடைப்பதாக இருக்கிறானே, என் பக்கம் ஏன் கவனம் செலுத்த ஆரம்பித்திருக்கிறான் ? எனக்குப் பெண் கொடுக்க வேண்டும் என்று விரும்பினால் அவன் ஏன் அதை நேரிடையாகக் கூறக் கூடாது ? கதராடை மட்டும் கட்டுவதால் என்ன லாபம் ?' என்று அவன் எண்ணுவான். உடனுக்குடன் பயன் வேண்டுகிற வசந்தன் சிறப்பான ஆதாயம் எதையும் கவனியாமல், செல்லம் கொழிக்கும் தன் வீட்டிலும் கிடைக்காத சுவையுள்ள பட்சணங்களோடு, அக்கப்போர்களோடும், சில சமயம் சீட்டாட்டத்தோடும் திருப்தி அடைந்துவிடுவான்.

வசந்தனின் மனத்தில் ஒரு சந்தேகம் :

ஒரு கால், பெண் என்னை விரும்புகிறாளோ ? அப்படி இல்லாவிட்டால், நான் ராகப்பாவின் வீட்டிலிருந்து புறப்படும் நேரம் பார்த்து பூப்பறிக்கிற சாக்கில் தோட்டத்தில் தோற்றம் தருவானேன் ? வசந்தனுக்கு முதலில் நாடகப்பித்து பிடித்திருந்த போது அவன் தனக்காகக் கல்ச்சர் (போலி) முத்துக்களின் மாலை ஒன்று செய்து கொண்டிருந்தான். அந்த மாலையைப் பிரித்துப் பெண்கள் அணியும் டிசைனில் வேறு செய்து, சாந்தாவிடம் தருவதற்கான தருணத்தை எதிர்பார்த்துப் பல நாளாகப்

பையிலேயே வைத்துக் கொண்டு இருந்தான். கடைசியில் ஒரு நாள் தருணம் வாய்த்தது, ஆனால் இடம் பொருந்தவில்லை; அது வீதி, வீட்டிலோ சாந்தா ஒரு போதும் தனியாகச் சந்திப்பதில்லை. சம்பக்கா அவள் மீது முழு கண்காணிப்பு வைத்திருந்தாள்.

ஒரு நாள் தோழியின் வீட்டிலிருந்து வந்து கொண்டிருந்த சாந்தா வீதியில் வசந்தனுக்கு எதிர்ப்பட்டாள்.

வசந்தன் நடுத் தெருவில் தன்னோடு பேசுவான் என்று அவள் கனவிலும் கருதவில்லை. வசந்தன் அவளுக்கு முன்னால் போய்த் தூண் போல் நின்று கொண்டான் : 'ராகப்பா ஊரில் இருக்கிறாரா ?

'இருக்கிறாரே'

'வீட்டில் இல்லைய ?'

'வெளியே போயிருப்பார்.'

'இதைக் கொஞ்சம் பாரேன்', என்று கூறிக்கொண்டே வசந்தன் ஜேபியிலிருந்த மாலையை எடுத்துக் தூரத்திலிருந்தே அவள் கையில் வைத்தான்.

அவள் அந்த மாலையைப் பார்த்த வண்ணம் தன் மென்விரல் களால் அதன் பெரிய முத்துக்களை வருடவானாள். அவளுடைய விரல்களும் வசந்தனுக்கு முத்துக்கள் எணத் தோன்றலாயின. அவன் உற்சாகமாய் உரைத்தான் : 'முத்துக்கள் அசல் அல்ல, கல் சா்டு.'

என்ன பேசுவது என சாந்தா விழிந்தான். ஆகையால் சற்றுப் பொறுமையற்றவளாய், 'உங்கள் தாயாருடையதா ?' என்று வினவினாள்.

'இல்லை, என்னுடையது தான். கிராமத்தில் நாடகமாடும் போது ராஜா வேஷம் போட்டுக் கொள்ளச் செய்தேன். உனக்குப் பிடிக்கிறதா ? பிடித்தால் எடுத்துக் கொள்ளேன்.'

இதன் பேரில் சாந்தா இன்னும் பொறுமை இழந்தாள். பார்வையை ஒட்டி இங்குமங்கும் நோக்கிய போது, இக் காட்சியைத் தெரு வீடுகளிலுள்ள சில ஸ்திரீகள் தத்தம் வீடுகளிலிருந்து காக்கா விழிகளால் கவனிப்பதைக் கண்ணுற்றாள். வீடுகள் எட்டி இருந்தமையால் இவர்கள் பேச்சை அவர்கள் கேட்க முடியாது. ஆயினும் சாந்தாவுக்கு அது உசிதமாய்ப்படவில்லை. முன்பு அவள் ஊர்வலத்தில் கலந்து கொண்ட பொழுது சில கழுகுகள், 'ஓ, சம்பாவின் பெண் அல்லவா, வேறுயாராக இருக்க முடியும் ?' என்று பேசினார்கள். அந்த அவமானகரமான சொற்கள் அவளுக்கு ஞாபகம் வந்தன. 'நான் மறுத்தால் இந்த மகாராஜா நடுத்தெருவிலேயே வற்புறுத்த ஆரம்பிப்பார். இந்த முத்துக்கள் எவ்வளவு வசீகரமாக உள்ளன !'

என்று நினைத்துச் சொன்னாள்: 'என் சிநேகிதிகளிடம் காட்டிவிட்டுத் திருப்பித் தருகிறேன்' சொல்லிவிட்டு அதை மேலே எறிந்து கையில் பிடித்தவாறு முன்சென்று விட்டாள்.

வசந்தன் திகைப்புண்டவன் போலானான். அவன் தன்னைப் பாக்கியவான் என்று எண்ணினான்.

நாட்கள் கழியவும் ராகப்பாவுக்குத் தன்னை அடக்கிக் கொள்ளக் கஷ்டம் ஆகிவிட்டது. ஒரு நாள் வசந்தனுக்கு முன்னால் வெளிப்படையாகப் பேச்சை எடுத்தான்.

'வசந்த், நான் சாந்தாவைப்பற்றி மிகவும் யோசித்தேன்: அந்த ஷராப் கோவிந்த ராவின் மகன் இன்றைக்கு நான் சொன்னாலும் ஆடிக்கொண்டே வந்து சாந்தாவை மணம் செய்து கொண்டு விடுவான், ஆனால் அவர்களுடைய குடும்பம் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. பார்வைக்கு எல்லாரும் பணக்காரர்கள் போலத் தான் தெரிகிறார்கள்; ஆனால் இந்த ஷராப்களை யாரும் நம்பிவிட முடியாது. தங்கம் வெட்டுகிறவன் கை கசாப்புக்காரன் கை போல. அவர்கள் பேராசை பிடித்தவர்கள், வீட்டில் சண்டை சச்சரவு ஏதோவது இருந்தபடியே இருக்கும், விஷம் வகையரா. இவர்களுடைய பரம்பரையே சபிக்கப்பட்ட பரம்பரை. குழந்தைகள் பைத்தியங்களாகவோ முட்டாள்களாகவோ பிறக்கும். எனக்கு அங்கே சம்பந்தம் செய்து கொள்ளத் தைரியமே வரவில்லை. ஆகையால் நான் ஒரு யோசனை செய்திருக்கிறேன்.'

'என்ன ?'

'நமக்கும் உங்களுக்கும் சிநேகம் ஆகி இரண்டு வருஷம் ஆகிவிட்டது. உங்களுடைய சுபாவம் எனக்குப் பிடிக்கிறது. உங்கள் தகப்பனாரிடம் என் மரியாதை நாளுக்கு நாள் அதிகமாகிறது... உங்களுடைய உயரம், அகலம், உங்களுடைய உருவம், உங்களுடைய சுபாவம் எல்லாமே சாந்தாவுக்குப் பதினாறாரைப் பொருத்தமாக இருக்கின்றன. நான் எங்கள் சாந்தாவை உங்களுக்குக் கலியாணம் செய்து கொடுத்தால் நீங்கள், உங்களுடைய தந்தையார், உங்களுடைய குலம் கூடப் பெருமை பெறும், எனக்கு இதைப் பற்றிக் குன்றிமணி அளவு சந்தேகம் கூட இல்லை. இரண்டு நாளாகத்தான் இந்த எண்ணம் என் மனத்தில் வந்துள்ளது. எனக்குத் தூக்கம் வரவில்லை. என்னால் அடக்கிக் கொள்ள முடியவில்லை, சொல்லிவிட்டேன்.'

வசந்தன் பூரித்துப் போனான் : 'நீங்கள் சொல்வதை என்னால் தட்ட முடியாது. அப்பா ஒப்புக் கொள்ளும்படி செய்து விட்டீர்களானால், நான் நாளைக்கே தயார்.'

ராகப்பா எதிர்பார்த்தது இதைத் தான். ஆகவே, அதற்கு மறுமொழியும் தயாராக இருந்தது. தேசாய்க்குத் தன்னைப் பற்றி

நல்ல அபிப்பிராயம் இல்லை என்று அவனுக்குத் தெரியும். அவர் இந்த விவாகத்திற்கு இணங்குவார் என்பது நடக்காதகாரியம். இதைத் தவிர, அவர் ஒரு முறைவாய் திறந்து 'இல்லை' என்று விட்டால் மீண்டும் அவரை இணங்கச் செய்வது கடினம். இத்துடன். 'அச்சுதனுக்கு முதலில் மணம் ஆகட்டும், பிறகு வசந்தனைக் கவனிக்கலாம்,' என்று தேசாய் சாக்கு சொல்லவும் கூடும். இது தான் ராகப்பாவுக்குப் பிடிக்கவில்லை. அவனுடைய கனவே வேறு: வசந்தன் தானே தகப்பனாரிடம் சொல்ல வேண்டும், அவரோடு சண்டை போட வேண்டும், தன் வீட்டை விடுத்து இவன் வீட்டில் வந்து தங்க வேண்டும், இவனுடைய பெண்ணை மணந்து கொண்டு, தந்தைக்கு எதிராக வழக்குப் போட்டுப் பங்கு வாங்கி சுதந்திரமாக இவன் சொல்கிறபடி நடந்து கொள்ள வேண்டும். இவ்வளவும் நடந்து விட்டால் தேசாய்க்கு இவனுடைய கைவரிசை தெரிந்துவிடும். இதை எல்லாம் எண்ணி ராகப்பா, 'உங்களுக்குச் சம்மதமா இல்லையா. ரத்தசம்பந்தம் வலுவானதுதான். முதலில் நீங்கள் உங்கள் மனத்தில் நிச்சயம் செய்து கொள்ளுங்கள். பிறகு நான் சொல்கிறேன்.'

'என் மனத்தில் நிச்சயித்துவிட்டேன், மேலே சொல்லுங்கள்.'

இப்போது நம் சாந்தாவுக்குப் பதினைந்து பூர்த்தி ஆகிப் பதினாறாவது வயது நடக்கிறது. இன்னும் அவள் மூன்று வருஷம் காத்திருக்கலாம் என்று நினைக்கிறீர்களா ? முதலில் அதைச் சொல்லுங்கள் ?

'நான் எங்கே அப்படிச் சொல்கிறேன் ?'

நீங்கள் அல்ல, உங்கள் தகப்பனார் சொல்லக்கூடும், அப்பாவைச் சம்மதிக்க வைக்கும்படி நீங்கள் சொன்னீர்கள் அல்லவா.... மூத்தபையன் இன்னும் படிக்கிறேன், அவன் படிப்பு முடியட்டும், பிறகு வசந்தனின் கலியாணம் பற்றி யோசிக்கலாம் என்று உங்கள் தகப்பனார் சொல்வார். அவர் அப்படிச் சொன்னால். அது தப்பும் அல்ல. சமூகத்தின் பார்வைக்கு அனுகூலமாக எல்லா காரியங்களும் நடக்க வேண்டும் என்று பெரியவர்கள் விரும்புவார்கள். அவர் அப்படி சொல்லிவிட்டால் நான் மூன்று நான்கு ஆண்டுகள் காத்திருக்க முடியாது... சாந்தாவுக்குப் பதினாறு பூர்த்தி ஆகிறதோ இல்லையோ, அவளுக்குச் கலியாணம் ஆகிவிட வேண்டும் என்று எனக்கு ஆசை.'

'அது எப்படி முடியும் ?' என்று வசந்தன் குழப்பத்துவம் கன்னத்தைத் தடவியபடி கேட்டான்; தந்தையின் அந்த அறையின் நினைவு வந்துவிட்டாற் போல.

'அது உங்கள் வேலை. உண்மையாக நீ என் மகளை மணக்கவிரும்பினால் இதை நீங்கள் தகப்பனாரிடம் தெளிவாகச் சொல்லிவிட வேண்டும். உங்களுக்கு அந்த விருப்பம் இருந்தால் நீங்களாகவே சொல்வீர்கள். என்னைப் போன்ளவர்கள் இந்த விஷயமாக ஒன்றும் சொல்ல முடியாது. எனக்கும் பாதி ஆயுள் முடிந்துவிட்டது. நாலு பேருக்கு நடுவில் கௌரவமாகப் பழகுகிறேன். ஒரு பெண்ணுக்குக் கலியாணமும் செய்து விட்டேன். நான் உங்கள் தகப்பனாரிடம் போய், மூத்தவனுக்கு முன்னால் இளையவனுக்கு மணம் செய்யுங்கள் என்றால் நாலு பேர். 'கிழவனுக்கு வயசு ஆயிற்றே தவிர, புத்தி வரவில்லை' என்று என்னை அவமதிப்பார்கள். அப்படிச் செய்வதில் அர்த்தம் ஒன்றும் இல்லை. நம் சாந்தா உங்களுக்குத் தகுந்த பெண்: இவளால் உங்களுக்கு அதிர்ஷ்டம் கூடிவரும். இவ்வளவுதான் நான் சொல்ல முடியும், பாக்கி உங்கள் உறுதியைப் பொறுத்தது.'

வசந்தன் மேலும் குழப்பமுற்றான். மிகவும் யோசித்துக் கூறினான் : 'நீங்கள் சொல்வது போல நான் செய்யத் தயாராக இருக்கிறேன்.'

'நான் ஒரே விஷயம் சொல்கிறேன்...உங்கள் தகப்பனாரை ஒப்புக் கொள்ளும்படி செய்ய வேண்டியது உங்கள் வேலை. நாம் இதில் குறுக்கிட முடியாது. இதிலேயே நீங்கள் எல்லாம் புரிந்து கொள்ள வேண்டும். நீங்கள் அசடோ, முட்டாளோ இல்லை. உங்களுக்கு எல்லாம் புரியும். நம் சாந்தாவையும் நீங்கள் பார்த்து இருக்கிறீர்கள். நான் என் அனுபவத்தின் அடிப்படையில் சொல்கிறேன். ஆண்பிள்ளையின் எதிர்காலம் அவனுடைய கலியாணத்தைப் பொறுத்தது. கலியாண விஷயத்தில் சிலசமயம் சிறியவர்கள் பெரியவர்களுக்குப் புத்தி புகட்ட வேண்டி யிருக்கிறது.'

வசந்தன் ஒரே ஒரு இடத்தில் இதைப் பற்றித் துணிந்து பேச முடியும். அவன் தாயாரிடம் அடம் பிடிக்கலாம். அவனால் எதையும் தீர்மானிக்க முடியவில்லை. இதே மனநிலையில் ராகப்பாவிடம் விடைபெற்று வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தான்.

பதினைந்து நாட்கள் வரை தாயாரிடம் சமையலறையில் மன்றாடினான். அவள் பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவள். இம்மாதிரி விஷயங்கள் அவளுக்கு முற்றிலும் புதியவை. தேசாய்க்கு அவளைக் காட்டுவதற்காக அழைத்து வந்த போது அவளோடு முப்பத்திரண்டு பெட்ரோமாக்ஸ்காரர்கள், உருவிய வாளுடன் இருபது காவற்காரர்கள், இரண்டு துப்பாக்கிக்காரர்கள், பாண்டுவாத்தியக்காரர்கள், கூட்டம் கூட்டமாக உறவினர்கள் முதலியவர்கள் இருந்தார்கள். இப்போது வரன் தானாகவே 'இந்தப் பெண்ணைக் கட்டிக் கொள்ள வேண்டும்; என்பதும்,

அதுவும் ஆயிரம் ரூபாய் வரதக்ஷிணை கூடத் தர முடியாத ராகப்பாவுடன் சம்பந்தி உறவு கொண்டாடுவது என்பது, அதற்கும் மேலே, அச்சுதனைப் பின் தள்ளிவிட்டு ! இவை யாவும் அவளுடைய கற்பனைக்கு அப்பாற்பட்ட விஷயங்கள், அசாத்திய மானவை. அவனுடைய கிசுகிசுப் பேச்சால் ஆத்திரமுற்று அவள் கச்சிதமாக, 'இது தான் உன் விருப்பம் என்றால், போய் நீயே சொல்லிக்கொள். அந்த ராகப்பாவைப் பற்றி எதையும் கேட்க எனக்கு இஷ்டம் இல்லை,' என்று கூறிவிட்டாள்.

அம்மா கொஞ்சமாவது இடம் கொடுத்தால் அவன் பேச்சை மேலே வளர்க்க முடியும். ஆனால், அவனே முன்னேறிப் பேசுகிற துணிச்சல் என்றைக்கோ தீர்ந்து போய்விட்டது. அவன் இப்போது இரட்டைக் குழப்பத்தில் ஆழ்ந்தான்: இங்கே வீட்டில் பேச்சைத் தொடர முடியவில்லை , அங்கே ராகப்பாவுக்கு முகம் காட்டத் தகுதி இல்லை.

இவ்வாறு, ஒரு முடிவுக்கும் வர முடியாத காரணத்தால் வசந்த ராவ் ராகப்பா வீட்டுக்குப் போவதையே நிறுத்திக் கொண்டான்.

தேசாய்க்கு மனைவி வழியாகத் தகவல்கள் எல்லாம் எட்டி விட்டன. ஒரு தடவை, அச்சுதனின் இரண்டாம் கடிதத்தை வேலைக்காரன் மூலம் ராகப்பாவுக்கு அனுப்பினார், 'படித்து விட்டுத் திருப்பி அனுப்பிவிடவும்'. என்று சொல்லி அனுப்பினார்.

ஒரு நாள் சிநேகிதியின் வீட்டுக்குப் போகச் சாந்தா அலங்கரித்துக் கொண்டு தயாரான போது சம்பக்கா அவளைக் கூர்ந்து பார்த்தபின், 'சாந்தா, இங்கேவா,' என்றாள். அவளைப் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டு, அவள் பிளவுஸில் ஒளித்து வைத்திருந்த முத்துமாலையை வெளியில் இழுத்து, 'இதை யார் கொடுத்தார்கள் ?' என்று கேட்டாள்.

'என் சிநேகிதியுடையது'.

'நிசம் சொல்லு'.

'நிசம், சிநேகிதியுடையது.'

'எந்த சிநேகிதி ?'

'பத்மா'.

'அவள் ஏன் கொடுத்தாள் ?'

'அம்மா, உனக்கு என்ன பைத்தியமா ? இரண்டு நாள் போட்டுக் கொள்வதற்காகக் கொடுத்தாள்.'

'சாந்தா, நிசத்தைச் சொல்லிவிடு. உன் கலியாணக் கவலையால் எனக்கு இராத் தூக்கம் வரவில்லை. இப்போது நீ பொய் சொன்னால் எதிர்காலத்தில் சுகம் கிடைக்காது.'

'அம்மா, எதற்காக நான் பொய் சொல்கிறேன் ? நீ பத்மாவைக் கூப்பிட்டுக் கேட்டுக் கொள். நான் திருட ஆரம்பித்து விட்டேன் என்று உனக்குச் சந்தேகம் வந்து விட்டதா ?'

சம்பக்காவுக்கு என்ன சொல்வதென்று தோன்றவில்லை. சினந்து கொள்ளவும் அவளுக்குத் தெம்பு இல்லை. கணவனிடம் புகார் செய்தால் அவன் எந்த விதமாகப் பேசுவானோ, தெரியவில்லை. வாயை அடைக்கும் பதிலாகத்தான் சாந்தாவும் சொல்லி இருக்கிறாள். முன்போல் வலிமை இருந்தால் சாந்தாவின் கன்னத்தில் இரண்டு அறை விட்டிருப்பாள், இப்போது அதையும் செய்ய முடியாது. வெளியிடமுடியாத தன் கோபத்தைக் காட்டுவதற்காக அவள் நகர்ந்தபடி சாந்தாவின் அருகில் வந்து அவளுடைய தோளை இருமுறை கிள்ளினாள்.

'அம்மா, கொஞ்சம் கொஞ்சமாக உங்களிருவருக்கும் பைத்தியம் பிடிப்பதாய்த் தோன்றுகிறது. அப்பா தனக்குத் தானே பேசிக் கொள்கிறார், நீ சிறிய பெண் குழந்தைகளைப் போலக் கிள்ளுகிறாய்'.

'ஒன்றுமில்லையடா, குழந்தை, நீ உன் சிநேகிதி வீட்டுக்குப் போ.'

இதனால் சம்பாவுக்கு ஆறுதல் உண்டாகவில்லை. சாந்தா போனபின் திடீரென்று மனத்தில் ஓர் எண்ணம் எழுந்தது: சிநேகிதியின் மாலை என்றால், அது பிளவுசுக்குள் ஏன் ஒளிந்து கொண்டு இருந்தது ?... சரி, இனி இன்னும் சற்றுக் கவனமாக இருக்க வேண்டும் என்று எண்ணிப் பேசாமல் இருந்துவிட்டாள்.

அவளுடைய நல்லதிர்ஷ்டம், வசந்தனுடைய வருகையும் குறைந்து போயிற்று.

## 35. வினையும் பயனும்

**ச**ம்பக்காவுக்கு எட்டாம் மாதமே வலி கண்டுவிட்டது. வீட்டுக்கு வந்து பார்த்த டாக்டர் அவளுடைய பலவீனத்தைக் கண்டு ஆஸ்பத்திரிக்கு அழைத்துப் போகும்படி சொன்னார். ராகப்பா ஆம்புலன்ஸை வரவழைத்து மனைவியை ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போனான். தாயார் வீட்டைவிட்டுப் போகும் போது சாந்தா துக்கத்தால் அழுதுவிட்டாள். அவள் அழுவதைப் பார்த்து சம்பக்கா வலியிலும் கூறினாள்: 'நான் திரும்பும் வரை கிருஷ்ணனின் தாயார் வீட்டில் இரு.' ஆனால் சாந்தா அதற்குத் தயாராகவே இல்லை: 'எனக்குப் பயம் ஒன்றும் இல்லை. நான் வீட்டில் இருக்கிறேன்,' என்று கூறி விட்டாள்.

சென்ற ஐந்தாறு ஆண்டுகளில் சம்பக்கா முதல் முறையாக வீட்டை விட்டுப்புறப்பட்டாள்.

பக்கத்து வீட்டுப் பையன் பீமசேனனோடு ராகப்பா மனைவியை ஆஸ்பத்திரிக்கு அழைத்துப் போனான். சம்பக்கா கத்திக் கதறுவதைப் பார்த்து ராகப்பாவின் நெஞ்சு நடுங்கி விட்டது. உள்ளத்தைப் பிளக்கும் காட்சியைக் கண்டு அவனுடைய ரோமம் சிலிர்த்தது. ஆஸ்பத்திரிக்கு வெளியே வெற்றுமனமாகி ஆண்டவனைப் பிரார்த்தித்தபடி உட்கார்ந்திருந்தான்.

சம்பக்காவின் வலி பொறுக்கு முடியாததாகிவிட்டது. வலுவும் அவளுக்கு இல்லை. அநாஸ் தேலியா தருவதற்காக டாக்டர்கள் தங்களுக்குள் யோசித்தார்கள். ஆனால், துர்ப்பலம் காரணமாக அதனால் தீயவிளைவுகள் ஏற்படலாம் என்று பயந்து டாக்டர்கள் தரவில்லை. பிரசவப் பகுதியில் கடமையில் இருந்த டாக்டர்களுக்குக் கூட சம்பக்காவின் வெறித்த விழிகள் அச்சமூட்டின.

இந்த நோவிலும் தன்னைச் சமாளித்துக் கொண்டு சம்பக்கா எழுந்து உட்கார முயன்றாள். அதைக் கண்டு ஒரு நர்ஸ் ஓடிவந்தாள், அவளைப் படுக்கவைக்க முயற்சி செய்யலானாள். இதன் பேரில் சம்பக்கா பிடிவாதமாக எழுந்து, 'அவர் எங்கே போனார்?' என்று கேட்டாள். 'வெளியில் இருக்கிறார், கவலைப் படாதீர்கள்.' என்றாள் நர்ஸ்.

'ஒரு தடவை பார்க்க வேண்டும், அவரைக் கொஞ்சம் உள்ளே அனுப்புங்கள். ஒரு வார்த்தை சொல்ல வேண்டும்', என்று கூறி விட்டுக் கூச்சலிட்டாள்.

விதிக்குப் புறம்பாக இருந்தும் டாக்டரிடம் அனுமதி பெற்றுக் கொண்டு நர்ஸ் வெளியே கவலையில் மூழ்கியிருந்த ராகப்பாவிடம், சொன்னாள்: 'இன்னும் நேரம் ஆகும். உங்களை உள்ளே கூப்பிடுகிறார். நீங்கள் உள்ளே போகலாம்.'

ராகப்பாவுக்கு அழுகை வந்தது. 'கடைசியாகச் சந்திக்கக் கூப்பிடுகிறாள்,' என்று எண்ணிக்கொண்டே உள்ளே போனான்.

தேம்பிக்கொண்டே கேட்டான்: 'ஏன்? .... எப்படி இருக்கிறாய்?'

ஒரு கணம் அவன் குரலைக் கேட்டுச் சம்பக்கா அவனுடைய துக்கத்தைப் பொருள்படுத்தாமல் வலியால் துடித்தபடி கேட்டாள்: 'நீங்கள் இங்கேயே உட்கார்ந்திருக்கிறீர்களா?'

'ஆம்'

'உங்களுக்குப் புத்தி சரியாக இருக்கிறதா, இல்லையா? வீட்டில் சாந்தாவைத் தனியாக விட்டு வந்தீர்களா? பீமனை இங்கே இருக்கச் சொல்லிவிட்டு நீங்கள் வீட்டுக்குச் செல்லுங்கள்.

எனக்கு ஒன்றும் ஆகிவிடாது. நீங்கள் வரவிரும்பினால் அவளையும் கூடவே அழைத்து வாருங்கள்...செல்லுங்கள். நீங்கள் போகாவிட்டால் என் மாமிசம் சாப்பிட்டாற் போல,' - கோபமாக இப்படிச் சொல்லிவிட்டு அவள் படுக்கையில் உறுதியாக உட்கார்ந்தாள். பிறகு வலிவந்ததும் துடிக்கலானாள்.

ராகப்பா மேல் வேட்டியை முகத்தில் போட்டுக் கொண்டு 'உம்..உம்' என்று ஒரு கணம் அழுதுவிட்டான். நர்ஸ் அவன் சட்டையை இருந்ததும் நிதானித்துக் கொண்டு கண்களைக் துடைத்தவாறு வெளியே வந்தான்.

'பீமய்யா, நீ இங்கேயே இரு. சாப்பாடு அனுப்புகிறேன். ஏதாவது தெரிந்தால் சைக்கிளில் வந்து சொல்லு. நான் இரண்டொரு மணி நேரத்தில் வருகிறேன்', என்று பீமசேனனிடம் சொல்லிவிட்டு வீட்டை நோக்கி நடந்தான்.

வீட்டில் சாந்தா சிறிது நேரம் தனியாக உட்கார்ந்து அழுது கொண்டு இருந்தாள். அப்பால் தனிமையின் நுகர்ச்சி அவளுக்கு அச்சமூட்டியது. வீட்டின் வெளிக் கதவை மூடினாள். வேறு யார் வீட்டிலாவது போய் உட்கார அவளுக்கு வெறுப்பு. தன்வீட்டில் தனித்திருந்து நடுங்கிக் கொண்டு இருந்தாலும் அவளுக்குக் கவலை இல்லை. அண்டைவீட்டுக் கிருஷ்ணனின் தாயார் வீட்டிலும் கால் வைக்க மாட்டேன் என்று உறுதி கொண்டு, மனத்தை மாற்றுவதற்காக ஒரு நாவலை எடுத்துப் படிக்கத் தொடங்கினாள், ஆனால் படிக்க முடியவில்லை.

சென்ற தடவை கிருஷ்ணனின் தாயார் வீட்டுக்குப் போன போது அவளுக்குப் பெரிய அவமானம் ஆயிற்று.

வீதியில் அவளும் வசந்தனும் சந்தித்த செய்தி காதும் காதுமாகப் பரவி இரண்டொரு மாதத்தில் கதை ஆகிவிட்டது. சாந்தாவின் தோழிகள் ஒன்றும் தெரியாதவர்கள் போல, 'முத்து மாலை எங்கிருந்து வந்தது?' என்று கேட்டதற்கு அவள் கலங்காமல் தைரியமாக, 'அப்பா என் பிறந்த நாளுக்காகச் செய்து கொடுத்தார்,' என்று உரைத்துவிட்டாள். சிநேகிதிகளுக்கு அவளிடம் பொறாமை; ஆனால் அவளுக்கு முன்பு யாரும் அதைக் காட்டிக் கொள்வதில்லை. எதாவது ஒரு விதத்தில் எல்லாருமே இக் கேள்வியைக் கேட்டார்கள். அவள் எல்லாருக்கும் இதே பதிலைக் கூறினாள். இந்த அழகான முத்துக்களைப் பார்த்துப் பலருக்கு வயிற்றெரிச்சல். கதை நன்கு பரவிவிட்டது. ஆனால் சாந்தாவுக்குத் தெரியாது. அவள் தைரியமாக இருந்தாள். அவளுடைய தைரியம் சில கிழவிகளுக்குச் சகிக்க முடியாதபடி இருந்தது. அவர்கள் தங்கள் பெண்களுக்கு எச்சரிக்கை விடுத்தார்கள். சாராபாயின் வாயிலிருந்து இந்த அழகான சொற்

கோவை வெளிப் பட்டது: 'அட, அவள் சம்பாவின் பெண்ணாக்கும், வேறு யாரும் அல்ல.'

கிருஷ்ணனின் தாயாரின் மகள் மந்தாகினியோடு சாந்தாவுக்கு நெருங்கிய நட்பு. இவ்விருவரின் நட்பையும் குலைக்க முயன்று தோற்று மற்றொரு வழி கண்டு பிடித்தாள்.

ஒரு தடவை கிருஷ்ணனின் தாயார் வீட்டில் பெண்களுக்குப் பூவும் தாம்பூலமும் தரும் சடங்கு நடந்தது. கிருஷ்ணனின் தாயார் சிறிது நேரத்துக்கு முன்பே சாந்தாவைக் கூப்பிட்டு அவளிடம் நன்கு வேலையும் வாங்கிக் கொண்டாள். கௌரி மண்டபம் அலங்கரிப்பதற்கு சாந்தாவுக்கு மூன்று மணி நேரம் பிடித்தது. வீட்டில் கூட்டம் நிரம்பியதும் சாந்தா பிளவுசுக்குள் மறைத்து வைத்திருந்த முத்துமாலையை வெளியே எடுத்து எல்லாருக்கும் தெரியும் படியாக அணிந்து கொண்டாள். இதைக் கண்ட கிருஷ்ணனின் தாயார் அக்கம்பக்கம் இருந்த ஸ்தரீகளை மௌன மாக இருக்குமாறு சைகை செய்துவிட்டு, 'இப்போது மிகவும் அழகாயிருக்கிறது. கௌரிமாதா மண்டபத்தில் இருக்கிறாளா, அல்லது, வெளியில் இருந்தா என்பதே தெரியவில்லை. இந்த முத்து உன் நிறத்துக்கு ரொம்பவும் பாந்தமாக இருக்கிறது. ஏண்டி நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'

பெண்மணிகள் சொன்னார்கள்: 'ஆம், நம் சம்பக்கா பெண்களின் நிறமே தனி.'

சாந்தா மிக வெட்கத்தோடு, ஆனால் பொய்ப் பணிவோடு பகர்ந்தாள்: 'அட விடுங்கள். இவை கல்ச்சர் முத்துகள், அசல் அல்ல.'

மாதர் கும்பலில் இரண்டொருவரிடமிருந்து சிரிப்பொலி எழுந்தது. 'சரி, நாங்கள் கிளம்புகிறோம்' என்றனர் சிலர். பெரும் பாலான ஸ்திரீகள் இந்தக் கேலியைக் கேட்டனர். ஆனால், அச்சத்தால் மௌனம் சாதித்தனர். சிலர் தலையைக் கவிழ்த்துக் கொண்டனர்.

சாந்தா விரைவாக வீட்டுக்கு வந்தாள், இனி அண்டை அயலார் யாருடைய வீட்டுக்கும் போவதில்லை என்று உறுதி செய்து கொண்டாள். அவள் கடை வீதியிலிருந்து கம்பளி, பட்டு நூல் வாங்கிக் கொண்டு வந்தாள். தன் எதிர்காலத் தம்பிக்காக ஜெட்டியும் ஸ்வெட்டரும் பின்னுவதும், நாவல்கள் படிப்பது மாகப் பொழுது போக்கத்தொடங்கினாள்.

இந்த அநர்த்தங்களுக்கு எல்லாம் வேர் வசந்தன். அவனும் அப்பக்கம் வருவதை நிறுத்திவிட்டான். மனத்திற்குள் அவனை சாந்தா ஏசினாள். அவன் மறுபடியும் எப்போதாவது வந்தால் அவன் முகத்தில் இந்த மாலையை எறிந்துவிட வேண்டியதுதான்

என்று முடிவு செய்துகொண்டவளாய்ப் பதினைந்து வரை அவனை எதிர்பார்த்தாள். இதனால் கழுத்தில் கிடந்த மாலை அவளை முட்களாய்க்குத்தியது. ஒரு மாதம் ஆகியும் வசந்தன் அந்தப்பக்கம் தலை காட்டவில்லை.

சாந்தாவைப் பார்த்துப் பல நாட்கள் கழிந்துவிட்ட காரணத்தால் கற்பனைச் சித்திரங்களைத் தீட்டிக் கொண்ட மனம் அமைதி இழந்தது. தந்தையிடம் விவாகம் பற்றிப் பேசும் ஆற்றல் இல்லாததால் அவன் இந்தப் பக்கம் வருவதை விட்டுவிட்டான். சம்பக்காவின் நோய் பற்றிக் கேள்விப்பட்டான், இதே சாக்கில் சாந்தாவின் முகத்தை ஒரு தடவை பார்க்கலாம் என்று ஓடி வந்தான்.

கதவு கொஞ்சம் திறந்தாற் போல் இருந்தது. உள்ளேயாரும் காணப்படவில்லை. ஒரு வேளை எல்லாரும் சம்பக்காவின் அறையில் இருக்கலாம் என்று எண்ணி அவன் கதவைத் திறந்து கொண்டு நடு அறைக்கு வந்து சேர்ந்தான்.

சத்தம் செய்யாமல் உள்ளே வந்த வசந்தனைப் பார்த்த சாந்தா முதலில் திடுக்கிட்டாள். சம்பக்கா ஆஸ்பத்திரிக்குப் போன தகவலைக் கூறிய பிறகு இத்தனை நாட்களாய்ப் பட்ட அனுபவங்களை நினைத்துக் கோபம் காட்டினாள், முன்பு உறுதி செய்து கொண்டவாறு கழுத்து மாலையைக் கழற்றித் திருப்பித் தந்து விட விரும்பினாள். இந்த மாலை காரணமாக எற்பட்ட கசப்பான அனுபவங்களைச் சில அரை குறைச் சொற்களால் வெளியிட்டாள்.

வசந்தன் மன்னிப்பு கோரியபடி அவனுடைய காலில் விழலானாள். கலியாணமே ஆகிவிட்டது போல் மன்றாடலானான். தெய்வத்துக்குச் சூட்டப்பட வேண்டிய மலர் இவனுடைய நிர்மால்யம் ஆகிவிட்டது.

ஆஸ்பத்திரியிலிருந்து புறப்பட்ட ராகப்பா வீட்டிலிருந்து வெளியில் வரும் வசந்தனை கண்டு விட்டான். அவன் நெஞ்சு பலமாகப் படபடக்கத் தொடங்கியது. விரைத்து நடந்தான்; மத்தியானம் ஒரு மணிக்கு மிக ஒளிரும் வெயில்.

ராகப்பா ஓட்டமாக வந்து வீட்டில் நுழைந்தான். நடு அறையில் களைத்தவள் என, அஞ்சியவள் என வெற்று நோக்கால் சுவர்களைக் கூர்ந்து பார்த்த வண்ணம் இருந்த மகளைப் பார்த்ததும் 'வேசி' என்று கத்திக் கொண்டே அவளைத் தோள்களைப் பற்றித் தள்ளிவிட்டான். கண் மூடித்தனமாய்க் கன்னங்களிலும் முதுகிலும் அடித்தான். கடைசியில் சோர்ந்து போய், 'வேசி, நீ என்னைக் கொன்றே விட்டாய்' என்று கூறித் தலையில் கையை வைத்துக் கொண்டு சுவர் மீது சாய்ந்தபடி உட்கார்ந்துவிட்டான்.

இதற்குள் கதவு தட்டும் சத்தம் கேட்டது. உள்ளே வந்தவன் பீமசேனன். ராகப்பாவைப் பார்த்ததும் உம்...உம்... என்று விசித்தபடி சொன்னான்: 'மாமி போய்விட்டாள்'. கேட்டதும் ராகப்பா தாங்காவில் ஆஸ்பத்திரிக்கு ஓடினான்.

அவனுடைய மனைவியின் உயிர் பிரசவத்தின் போது பிரிந்துவிட்டது. நாடி விழுந்த பிறகு குழந்தை பிறந்தது.

குழந்தை - ஆண் குழந்தை - செத்துப்பிறந்தது.

ராகப்பா மனைவிக்கும் மகனுக்கும் இறுதிச் சடங்குகளை தடுமாற்றமின்றி தன்னைத் தானே செய்வித்தான். கூடியிருந்தோர், 'நாங்கள் எல்லோரும் கூட இருக்கிறோம்' என்று சொன்னதை அவன் கேட்கவில்லை. சிசுவின் சடலத்தைத் தன்கையில் ஏந்திக் கொண்டு ஆஸ்பத்திரியிலிருந்து மயானம் வரை மனைவியின் பிணத்துக்குப் பின்னாலேயே நடந்தான்.

ஏற்பாடுகளை எல்லாம் செய்வதற்காக தேசாயே வந்து சேர்ந்தார்; ஆனால் அவர் வருவதற்கு முன்னரே பாடை முதலியவற்றுக்கு ராகப்பா ஏற்பாடு செய்து விட்டான்; யார் யாருக்குத் தகவல் அனுப்ப வேண்டுமோ அதற்கும் அவனே ஏற்பாடு செய்து முடித்து விட்டான். தேசாய்க்கு எஞ்சியிருந்த வேலை, சம்பக்காவின் பாடைக்குத் தோள் கொடுப்பது ஒன்று மட்டும் தான்.

ரத்னாவும் சாந்தாவும் மிகவும் அழுதார்கள். அவர்களுக்கு ஆறுதல் சொல்ல வந்த வேணுபாயும் அழுதுவிட்டாள். கங்கவ்வா தைரியமாக முன் வந்து அவ்விருவரையும் மார்போடு அணைத்துக் கொண்டு, 'என்னையே உங்கள் தாயாராக நினைத்துக் கொள்ளுங்கள்,' என்று தேற்றினாள்.

அப்போது கங்கவ்வா இழவு வீட்டிலேயே தங்கினாள். தம்பியையும் நீண்ட நேரம் ஆறுதல் கூறிக் கொண்டு இருந்தாள்: ராகப்பா பேசாமல் கேட்டுக் கொண்டு இருந்தான், இப்போது அவனுக்கு ஆறுதல் தேவை இல்லை.

## 35. தேசாய்க்கு ஒரு கடிதம்

மறுநாள் இரவு பத்து மணிக்குக் கிட்டி இழவு வீட்டிலிருந்து தன் வீட்டுக்குத் தூங்குவதற்காகப் புறப்பட்டான். அப்போது ராகப்பா தன் அறையில் உட்கார்ந்து வெகு நேரமாக ஏதோ எழுதிக் கொண்டு இருந்தான். அவன் கிட்டியைக் கூப்பிட்டுச் சொன்னான்: 'இந்தக் கடிதத்தை நாளைக்குக் காலையில் தேசாயிடம் கட்டாயம்

கொடுத்து விடு. இப்போது தூங்கிக் கொண்டு இருப்பார். அவரை எழுப்ப வேண்டாம். நாளைக்குப் போய்க் கொடுத்து விடு.'

அன்று இரவு கிட்டிக்கு விரைவில் தூக்கம் வரவில்லை. எல்லோரும் ராகப்பாவை ஏசிக்கொண்டு இருந்தார்கள். கிட்டிக்கும் அவனிடம் இருந்த மரியாதை சிறிது குறைந்து விட்டது. இதையன்றி அவன் மனத்தில் ஒரு விதப் பயம் குடியேறியது. குற்றத்திற்கு இங்கேயே, இந்த உலகத்திலேயே தண்டனை கிடைத்து விடுகிறது என்கிற புதிர் அவன் உள்ளத்தைப் பிசைந்து கொண்டு இருந்தது. கண்களுக்கு முன்னால் இவ்வளவும் நடந்த பிறகு அச்சம் தோன்றுவது இயற்கை இல்லையா?

மறுநாள் நேரம் கழித்துத் தூக்கம் கலைந்தது. எழுந்ததும் முகத்தைக் கழுவிக் கொண்டு தேசாயின் வீட்டில் அந்தக் கடிதத்தைச் சேர்த்து விட்டு துக்க வீட்டுக்கு விரைந்தான்.

பாதி வழி தான் கடந்திருப்பான், பின்னால் தேசாயின் தாங்கா வேகமாக வந்தது. தாங்காவை நிறுத்தித் தேசாய், 'நானும் அங்கே தான் வருகிறேன், தாங்காவில் ஏறிக்கொள்,' என்றார். கிட்டி வியப்புற்றவனாய் தாங்காவில் ஏறினான்: இருவரும் ராகப்பாவின் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்த போது காலை ஒன்பது மணி இருக்கும். வீட்டைச் சுற்றிலும் ஒரே கூட்டமாக இருந்தது. உள்ளே இருந்து பெண்கள் அழுது புலம்புகிற சத்தம் கேட்டுக் கொண்டு இருந்தது. வாசலில் ஒரு போலீஸ்காரன் காவல் காத்தான்.

இரவில் இரண்டொரு தடவை ரத்னா முனகல் சத்தம் கேட்டாள்.

மாமியார் தூக்கத்தில் பிதற்றுவதைக் கேட்டுப் பழக்கப் பட்டவள் அவள். தவிர, இழவு வீடு ஆனதால் பயந்து அப்படியே தூங்கிவிட்டாள்.

மற்றவர்களோ அயர்ந்து அடித்துப் போட்டாற் போலத் தூங்கினார்கள். கங்கவ்வா தினம் போலக் காலை ஆறு மணிக்கு எழுந்தாள். தம்பியின் அறை மூடி இருப்பதைக் கண்டாள். அவள் ஒன்றும் விசாரிக்கவில்லை. எட்டு மணி வரையிலும் ராகப்பா வெளியே வராதிருக்கவே, அவனை எழுப்பும்படி கங்கவ்வா ரத்னாவிடம் சொன்னாள். உள்பக்கம் தாழிடப்பட்டிருந்தது. என்ன தட்டியும் கதவு திறக்கப்படவில்லை. கடைசியில் பீமசேனனைக் கூப்பிட்டுப் பின்பக்கத்திலிருந்து ஜன்னலில் ஏறிப் பார்க்கச் சொன்னார்கள். சிவப்புக் கண்ணாடியாக இருந்தால் உள்ளே இருந்தது ஒன்றும் தெரியவில்லை. ரத்னா கண்ணாடியை உடைக்கும்படி கூறினாள். கண்ணாடியை உடைத்து உள்ளே பார்த்த போது, ராகப்பாவின் பிணம் உத்திரத்திலிருந்து தொங்கிக் கொண்டு இருந்ததைக் கண்டு பீமசேனன் பீதியுற்று நின்ற

இடத்திலிருந்தவாறே கீழே விழுந்துவிட்டான். செய்தி பரவியதும் வட்டார மக்களின் கூட்டம் கூடிவிட்டது.

போலீஸ்காரர்கள் அப்போது தான் வந்து பஞ்சாயத்து கூட்டி இருந்தார்கள். சடலத்தின் கம்ஸ் பையில் ஒரு கடிதம் இருந்தது:

'சம்பந்தப்பட்ட எல்லாருக்கும், பிந்ததோள ராகவேந்திர வாமனாகிய நான் தெரிவித்துக் கொள்வது என்ன என்றால், நான் என் மனைவி இறந்த துயரத்தாலும், வேறு கவலைகளாலும் துன்புற்று, பாவபுண்ணியம் பற்றிக் கருதாமல் என் விருப்பமாக என் அறையின் உத்திரத்தில் கயிறு கட்டிக் கழுத்தில் சுருக்க இட்டுக்கொண்டு இறக்கிறேன். நான் இதை என் விருப்பப்படியே செய்கிறேன். இதற்கு யாரும் பொறுப்பு அல்ல என்பதுடன் யார் மீதும் பொறுப்பு சுமத்தப்படவும் கூடாது. யாரும் துக்கப்பட வேண்டாம். என் இறுதிக் காரியங்களுக்காக நான் எங்கள் தெருக் கோடியில் உள்ள விறகுக் கடைக்காரரிடம் பதினைந்து ரூபாய் கொடுத்திருக்கிறேன், அதன் ரசீதை இக்கடிதத்தோடு வைத்திருக் கிறேன். பைத்தியம் பிடித்துவிடுமோ என்று சில நாளாகப் பயமாயிருந்தது. ஆகையால் மூன்று மாதங்களுக்கு முன்னால் ஒரு உயில் தயாரித்தேன். அதையே என் சட்ட பூர்வமான உயிலாய்க் கொள்ள வேண்டும் என்று சத்தியப் பிரமாணமாகச் சொல்கிறேன். உயில் இரும்புப் பெட்டியில் இருக்கிறது, சாவி இத்துடன் இருக்கிறது. இரும்புப் பெட்டியில் நூற்று எண்பத்தைந்து ரூபாய் எட்டு அணா ஆறு தம்பிடிகள் ரொக்கம் இருக்கிறது. இரும்புப் பெட்டி, உயில், பணம் ஆகியவற்றை என் மருமகன் சிரஞ்சீவி கிருஷ்ண சுவாமி ராவ் குல்கர்ணி தம் பொறுப்பில் ஏற்றுக் கொள்ள வேண்டியது. இந்தப் பணத்தில் இருந்து என் பத்தினியின் கிரியைகளைச் செய்ய வேண்டியது. எல்லாச் சொத்துரிமையும் அவனையே சேர வேண்டியது. இதை எல்லாம் எழுதும் போது நான் முழு சுய அறிவுடன் இருக்கிறேன், போதைப் பொருள் எதையும் உட்கொள்ளவில்லை.'

கீழே ராகப்பாவின் கையெழுத்து இருந்தது, முன்னாள் தேதியும் இருந்தது. அதே தேதியிட்டு விறகுக் கடைக்காரர் ரசீதும் இருந்தது. விறகுக் கடைக்காரன் கூறினான்: 'ராகப்பா பணம் தந்து நாளைக்கு இரண்டு வண்டி விறகு வேண்டும் என்றார்'. வருடத் தேவைக்குக் கேட்கிறார் என்று எண்ணினேன். அவர் சொன்னபடி விறகு அனுப்பிவிடுகிறேன்.' ராகப்பாவின் இறுதிக் கடிதம் காரணமாகப் போலீசார் அதிகமாக விசாரணை நடத்தவில்லை. கதவு உள் பக்கம் தாழிடப்பட்டிருந்ததால் அவர்கள் அதை உடைத்துக் கொண்டு உள்ளே போக வேண்டியதாயிற்று என்பதால் போலீஸ் எவ்விதச் சந்தேகமும் கிளப்பவில்லை.

கிட்டி தேசாயைச் சந்தேகமாகப் பார்த்தான். அவர் உரைத்தார்: 'நீ கொடுத்த கடிதத்தை உன்னிடம் காட்டுகிறேன். அதைப் பற்றி இங்கே கிளப்ப வேண்டாம். இதனால் இன்னும் தொந்தரவு உண்டாகலாம்.'

போலீஸ்காரர்கள் 'காரணம்' என்ற பத்தியில் 'மனைவியின் சாவும் வேறு கவலைகளும்' என்று எழுதிக் கொண்டு பிணத்தை உரிமைக்காரனான கிட்டியிடம் ஒப்படைத்தார்கள். சடலத்தைப் பார்த்த தேசாய், 'எந்தப் பெண்ணுக்கும் இதைக் காட்ட வேண்டாம்' என்றார். கிட்டியும் பயந்த படிதான் ஒரு தடவை பார்த்தான். அந்த அழகான முகம் உதட்டைக் கடித்துக் கொண்டு இருந்ததைப் பார்க்கச் சண்டையிடுவதற்குத் தயாராக இருப்பது போலத் தோன்றியது.

வேறொன்றும் யோசியாமல், பிரேதத்துக்கு அருகில் யாரையும் அணுக விட வேண்டாம் என்று கிட்டிக்குக் கட்டளை இட்டுவிட்டுத் தேசாய் ஆக வேண்டிய வேலைகளைக் கவனிக் கலானார். ஒரு மணி நேரத்தில் பிணம் மயானத்தை அடைந்தது.

பன்னிரண்டு நாட்கள் கழிந்த பிறகு தேசாய் கிட்டியைத் தன் வீட்டுக்கு அழைத்து ராகப்பா அனுப்பிய கடிதத்தைக் காட்டினார்.

நலம் ஸ்ரீ தார்வார்

திருவாளர் பஹாதுர் தேசாய் அவர்களின் திரு முன் ராகப்பாவின் இரண்டு வார்த்தைகள் தங்களுக்கு எதிரில் தெரிவித்துக் கொள்கிறேன். தோல்வி என்றால் எனக்குப் பயமாக இருக்கிறது. இங்கு, 'தங்களிடம் நான் தோற்க வில்லை,' என்பதை நான் சொல்ல வேண்டியுள்ளது, தங்கள் மகன் அச்சுதனின் கடிதத்தை எனக்கு அனுப்பி என்னைப் பயமுறுத்த முயன்றீர்கள். அதனால் நான் பயந்து போனேன் என்று தாங்கள் கருதினால், அது மெய் அல்ல. நான் இதை விளக்கிக் காட்டுகிறேன். தங்களுக்கு நான் போக்கிரியாகக் காட்சி தருகிறேன் என்றால் நான் அதற்காக வருந்தவில்லை. நான் என் கோட்பாட்டின்படி நடக்கிறேன். நான் இன்று கழிவிரக்கம் ஏதும் இல்லாமல், பாவபுண்ணியங்களுக்கு மேலே எழுந்து, சமநோக்குடன் என் செய்கைகளைப் பார்க்கிறேன், இன்று அந்தக் கண்ணோட்டத்தை இழந்தது தான் எனக்குத் துயரம் தருகிறது. என்னை நல்லறிவு துன்புறுத்தத் தொடங்கிய போது என்னுடைய சக்தியில் பாதியே எஞ்சினாற் போல் இருந்தது. முன்பு போல அச்சமின்றிச் செயலாற்றும் சக்தி இருந்திருந்தால் பின்னால் நிகழ்ந்தவை நிகழ்ந்திரா.

என்னுள் நல்லறிவு விழித்துக் கொண்டபொழுதுதான் தாங்கள் தங்கள் மகன் அச்சுதன் எழுதிய கடிதத்தை அனுப்பி, இறந்த காலத்தை எனக்கு நினைவூட்டி என்னைக் கீழே வீழ்த்த முயற்சி செய்தீர்கள். நான் பழைய ராகப்பாவாக இருந்திருந்தால் தங்களுடைய கடிதங்களால் மிரண்டிருக்க மாட்டேன். இப்போதும் நான் மிரண்டுவிடவில்லை, அந்தக் கடிதங்களில் என்னையே நான் கண்டு பச்சாத்தாபப்பட்டேன். சரி, இது போதும், அக்கடிதங்களுக்கு அவ்வளவு பெருமை இல்லை.

உதாரணத்திற்காக, தாங்கள் விரும்பினால் பூனாவுக்குச் சென்று பத்தாண்டு விசாரணை நடத்துங்கள். எனக்குக் கேடு உண்டாக்கும் யாதொரு விஷயத்தையும் எவ்வளவு தேடினாலும் காண முடியாது. நானே இதைத் தங்களுக்கு எழுதிவிடுகிறேன், இதனால் தங்களுக்கு உண்மை விளங்கிப் போகும், தங்களிடம் நான் அஞ்சுவதற்கு ஒரு காரணமும் இல்லை என்பதும் தெளிவாகிவிடும். இதனால் என் துர்க்குணங்களோடு நற்குணங்களும் தங்களுக்குத் தெரிந்துவிடும்.

எங்கள் பிதுரார்ஜிதமான நிலம் எல்லாம் அடகில் சிக்கி இருந்தன. நாங்கள் தார்வாரில் மூன்று நான்கு வகுப்பு வரை படித்தோம். எனக்கு இங்கே வேலை கிடைக்காததால் நான் பூனாவுக்கு வெங்காடியிடம் போனதைத் தாங்கள் புதல்வரின் கடிதங்களின் வாயிலாக அறிந்திருக்கிறீர்கள். எனக்கு மணமாகி அப்போது இரண்டு ஆண்டுகள் ஆகியிருந்தன. பல விவகாரங்கள் காரணமாக (ஒரு வேளை, அவை தங்களுக்குத் தெரிந்திருக்கலாம்) வேலைக்குப் போகு முன்பே நான் மணம் செய்து கொள்ள நேர்ந்தது. கலியாணமான ஆண்டிலேயே நம் ரத்னா பிறந்தாள். வருவாயும் குறைவு. இவ்வாறு வறிய நிலையில் நான் வேலை தேடப் பூனாவுக்குப் போனேன். பூனாவில் வேலைக்காகப் பாங்குகள், ஆபீஸ்களை வளைய வந்தேன். செய்தித்தாள்களில் விளம்பரங்களைக் கவனித்துக் கொண்டு இருந்தேன். இவ்வாறு அங்கே ஒரு வாரம் கழிந்தது. வேலை ஒன்றும் கிடைக்கும் என்று தோன்றவில்லை. வெங்காடியைப் போலக் காவற்காரனாக என்னால் இயலாது.

வெங்காடி செக்கை மாற்றிக் கொண்டு வருவதற்கு முதல் நாள் காலையில் செய்தித் தாளில் டிரைவர் தாஜிமுத்தீனைப் பற்றி ஒரு செய்தி படித்தேன். அவன் லக்ஷ்மி ரோடில் ஒரு கிழவன் மீது காரை ஏற்றி விட்டான் என்றும் போலீஸ்

அவனைப் பிடித்துக் கொண்டு போய் விட்டனர் என்றும் செய்தித் தாளின் ஒரு மூலையில் அச்சாகி இருந்தது. வெங்கடராய் செய்தித் தாள் படிக்கிறவன் அல்ல, தப்பித் தவறிப் படித்திருந்தாலும் மூலைச் செய்தியைக் கண்டிருக்க முடியாது, ஆகையால் இந்த விபத்துச் செய்தி வெங்காடிக்குத் தெரிந்திருக்க முடியாது. சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்ளத் துணிவு தேவைப்படுகிறது. நான் இந்த நல்ல வாய்ப்பை என் வயிற்றுக்காகப் பயன்படுத்திக் கொண்டேன். வெங்காடி பூஜைக்கு உட்கார்ந்த போது, 'தாஜிமுத்தீன் வந்திருக்கிறான் என்று சொல்லி இரண்டாயிரம் ரூபாயையும் நான் கைப் பற்றினேன். மனைவியும் குழந்தைகளும் பட்டினி கிடக்கும் துர்பாக்கியத்தைப் பார்க்கிற நிலைமை தங்களுக்கு ஏற்படா திருக்கப் பகவான் அருள் புரியட்டும். ஆனால் இத்தகைய சூழ்நிலையில் இம்மாதிரி வேலை செய்கிறவர்களை இகழ்ச்சிக் கண்களோடு பார்க்கக்கூடாது.

ஆனால், செக் பொய்யானது என்று நான் கற்பனை செய்யவில்லை, வெங்கடராயோ இவ்விஷயத்தை மறந்தே போனான். நான் தார்வாருக்குத் திரும்பி வந்தேன். ஒரு வாரத்துக்குள்ளேயே எனக்கு வெங்காடியின் கடிதம் கிடைத்தது. பொய்ச் செக் என்றும் ஆகையால் போலீஸ் அவனைக் காவலில் வைத்துள்ளது என்றும் தெரிந்தது. பூனாவுக்குப் போவதற்காக வக்கீலைக் கலந்து, எப்படியாவது வெங்காடியைச் சிறையிலிருந்து காப்பாற்றவும் ஜாமீன் கட்ட சுவாமிராய் முன் வந்தான். நான் ஜாமீன் தர முடியாது, ஏனெனில் என் நிலம் கடன்பட்டிருந்தது. என்னிடம் இரண்டாயிரம் அப்படியே கிடந்தது. சுவாமிராயை அழைத்துக் கொண்டு பூனாவுக்குப் போனேன். வெங்கடராயை விடுவித்தோம். சுவாமிராய் அவனுக்காக ஐயாயிரத்துக்கு ஜாமீன் கொடுத் தான். மூவரும் தார்வாருக்குத் திரும்பினோம். வெங்காடி சுவாமிராயின் கண்காணிப்பில் அவன் வீட்டிலேயே தங்கி இருந்தான்.

மேலுக்குத் தைரியசாலி போலக் காட்டிக் கொண்ட சுவாமிராய் வெங்காடியின் சித்தப் பிரமை கொண்ட சுபாவத்தைக் கண்டு உள்ளுக்குள் அச்சமுற்றான் போலும்; ஏனெனில் என்னிடம் சொல்லாமலேயே அவன் வெங்காடி யிடம், 'நான் உன் பொறுப்பை ஏற்றுக் கொண்டு இருக்கிறேன். நீ உன் பங்கு சொத்து என் பெயருக்கு எழுதி வை,' என்று கூறி

இருந்தான். தங்களுக்குக் கிடைத்ததே, அந்தத் தானபத்திரத்தை எழுதி சுவாமிராய் வெங்காடியிடம் கையெழுத்திடுமாறு கேட்டான்; 'ஆனால் வெங்கடராய், 'என் சகோதரன் கையெழுத்திட்டால் தான் நான் கையெழுத்து போடுவேன்' என்று அடம்பிடிக்க ஆரம்பித்தான். இதன் பேரில் சுவாமிராய் என்னைக் கூப்பிட்டு, 'உன் சொத்துக்கு ஆசை கொண்டு அல்ல, ஆனால் இவனுடைய சுபாவத்துக்காக நான் ஒரு தானபத்திரம் வேண்டும் என்று எண்ணுகிறேன். ஐயாயிரம் சின்ன தொகை அல்ல,' என்றான். எனக்கும் அது நியாயம் என்று பட்டது. நான் அதில் கையொப்பம் இட்டேன். அதற்குப் பிறகு தான் வெங்காடி கையெழுத்து போட்டான்.

இதன் பிறகும் வெங்காடியின் நச்சரிப்பு நிற்கவில்லை. அவன் ஒரு விந்தை மனிதன். ஏனோ தெரியவில்லை, 'அவனுக்கு சொத்து விட்டான்,' என்று ஏந்நேரமும் சண்டை யிட்டுக் கொண்டு இருந்தான். தங்களுடைய பிள்ளை ஊகம் செய்தது போல் வெங்காடியிடம் தானபத்திரத்தைத் திருப்பி வாங்குமாறு நான் சொல்லவே இல்லை. ஆனால் சுவாமிராய் ஒரு நாள் ஆத்திர முற்று நகல் என்று எண்ணி அசல் தானபத்திரத்தையே வெங்காடியின் முகத்தில் எறிந்து விட்டான். அவன் அதை எடுத்துக் கொண்டு எங்கள் வீட்டுக்கு வந்தான். அதை வக்கீலிடம் காட்டி அவனுடைய சொத்தை மீட்டுத் தரும்படி உயிரை வாங்கிவிட்டான். 'நாளைக்கு வக்கீல் வீட்டுக்குப் போவோம்,' என்று நான் அவனுக்கு ஆறுதல் சொன்னேன். அந்தப் பத்திரத்தைப் பார்த்ததுமே அது நகல் அல்ல, அசல் என்று எனக்குப் புரிந்து விட்டது. ஆச்சரியத் தாலோ அல்லது வெங்காடியின் தொல்லை பொறுக்க முடியாமலோ வாய் தவறி நான் அவனிடம், 'நீ ஏன் கவலைப் படுகிறாய், அசல் பத்திரத்தையே அவன் உன்னிடம் கொடுத்து விட்டான். நீ அதைத் திருப்பித் தரவேண்டாம். உன் சொத்து உனக்கே கிடைத்துவிடும்' என்று சொல்லிவிட்டேன். இதனால் அந்த அசடுக்குக் கொஞ்சம் ஆறுதல் உண்டானதாகத் தோன்றியது. இரவு சாப்பாடு முடிந்தது. என் துரதிர்ஷ்டம், அவனுக்கு என் வீட்டில் சாப்பாடு போட்டு என் வீட்டிலேயே தூங்கவைத்துக் கொண்டேன். அன்று இரவு கிராமத்திலிருந்து வந்த யாரோ கதவைத் தட்டினார்கள். வெங்காடி, 'அய்யய் யோ, போலீஸ் என்னைப் பிடிக்க வந்து விட்டது,' என்று அலறிக் கொண்டே புழைக் கடைப்பக்கமாக ஓடினான். எங்கே

போய் விடுவான் இவன் என்று எண்ணி வந்தவர்களைக் கவனிக்கத் தொடங்கினேன். ஆனால், அன்று ஓடிய வெங்காடியைப் பற்றி மீண்டும் தங்கள் கடிதங்களால்தான் தகவல் கிடைத்தது.

வெங்காடியைப் பொறுத்த வரை கற்பனையும் உண்மையும் வெவ்வேறு அல்ல. அசல் தானபத்திரம் கிடைத்துவிட்டதாலோ அல்லது மெய்யாகவே போலீஸ் பயத்தாலோ அவன் ஓட்டம் பிடித்திருக்கலாம். இரண்டும் சாத்தியமே. இதன் விளைவாக என் தமக்கையின் வீடு பாழடைந்தது, அவள் விதவை ஆனாள், அதற்கான கெட்ட பெயர் என் தலையில் விடிந்தது. நானே என் அத்திம்பேருக்குத் தீங்கு செய்திருந்தால் எனக்கு வருத்தம் உண்டாகாது. குழந்தையின் வாயில் முலை கொடுத்து விட்டுத் தூங்கிய தாயார் கண் விழித்த போது குழந்தை மூச்சு திணறி உயிர் இழந்துவிட்டதைப் பற்றித் தாங்கள் கேள்விப்பட்டிருக்கலாம்... என் நிலைமையும் அப்படியே இருந்தது. நான் வலுவற்றவனாக இருந்தபோது இவை எல்லாம் எனக்கு முன்னால் நிகழ்ந்தன. அந்த இரண்டாயிரத்தைக் கைப்பற்றிய தீவினை என்னைத் தொடர்ந்தது. சுவாமிராய் இருந்த போதே ஓரே மாதத்தில் அவருக்கும் எனக்குமிருந்த நட்பு முடிவடைந்துவிட்டது. அவன் உருகி உருகி இறந்தான். வீடோ முன்பே பாழ்த்துவிட்டது. அந்த இரண்டாயிரத்தில் ஏதாவது செய்யவிரும்பினேன். ஆனால் கங்கவ்வாவோ என்னை நாய் போலக் கேவலப்படுத்தி வந்தாள். என் வீட்டிலிருந்து வெங்காடி தலைமறைவானதே, கங்கவ்வாவுக்கு என் மேல் துவேஷம் வைத்துக் கொள்ளப் போதிய பெரிய காரணம் ஆகிவிட்டது.

சகோதரிக்கு முகம் காட்டாமல் நான் கிராமத்தில் தங்கிவிட்டேன். நிலத்தை அடகிலிருந்து மீட்டு விவசாயம் தொடங்கினேன். குடும்பத்தின் நிலைமை திருந்தியது.. ஒழுங்கான வாழ்க்கை நடத்தலானேன். நான் என் வாழ்க்கைக்கு ஒரு கோட்பாடு வகுத்துக் கொண்டு இருந்தேன். 'வாழ்க்கையில் மறுபடியும் தோல்வி காணக்கூடாது எனில், எந்த வேலையை, அது எத்தகைய வேலை ஆயினும் சரி - மேற்கொள்கிறோமோ அதை முழுமனத்தோடு குறையற்ற முறையில் செய்ய வேண்டும். வேலையின் வெற்றிக்காக

தோல்வி, வெற்றி, அச்சம், நிபந்தனை முதலிய எல்லா விகாரங்களையும் விட்டுவிட வேண்டும். இந்த நம்பிக்கையால் ஒவ்வொரு வேலையிலும் நீதி அநீதி என்ற கேள்வியைத் தள்ளி வைத்தேன். விகாரமில்லாத உருவத்தில் காரியத்தை நிறைவேற்றுவதே என் வாழ்க்கையின் விதி ஆகி இருந்தது. ஆகையால் எனக்குப் 'பராரி' என்ற பெயர் கிடைத்தது.

தார்வாருக்கு மறுபடியும் வந்த பிறகு நான் முழு முயற்சி செய்து சி. கிருஷ்ணனுக்கு என் மகளைக் கொடுத்தேன். பழங்கதைக்கு முடிவு கட்டிக் கங்கவ்வாவுடன் முன் போல உறவு ஏற்படுத்த வேண்டும் என்பது என்னுடைய பல நோக்கங்களில் ஒன்று. ஆனால் அவளுடைய பிடிவாதமும் கர்வமும் என் போக்கிரித் தனத்துக்கு அறை கூவலாயின. அவளுடைய அவமதிப்பு என்னுள் பிடிவாதத்தைத் தோற்றுவித்தது. நான் அவளுடைய சொல்லுக்குமாறாக இந்தக் கலியாணத்தை நடத்தினேன். அந்தக் கலியாணத்தில் தங்களையும் நடுவில் இழுத்தேன். இதில் ஏமாற்ற முற்றதாகத் தங்களுக்கு ஒரு போதும் தோன்றவில்லையா என்ன ?

இப்போது இருக்கவே இருக்கிறது. என் தோல்வி பற்றின மற்றொரு விஷயம். வரதக்ஷிணைக்கான பணம் குறைந்து விடும் என்று எனக்குத் தெரியும். சி. கிருஷ்ணனின் பணம் தங்களிடம் நிற்கிறது என்று தெரிந்து கொண்ட பிறகு, தங்களிடமிருந்து ஐநூறு வாங்க வேண்டும் என்று யோசித்தேன். தாங்கள் அந்தச் சுழலில் சிக்கவில்லை. ஆனால் இதற்காகத் தாங்கள் என்னைப் புகழாமல் இருக்க முடியாது. ஆயினும் செய்யப் போனது ஒன்று, நடந்தது வேறு. எனக்குப் பிரியமான ஒரு ஜீவன் ஐநூறு ரூபாய்க் குறையை நிறைவு செய்ய வேண்டி எனக்குத் தெரியாமலே முயற்சி செய்து காலன் வாய்ப்பட்டு விட்டது. அந்த வேதனை இப்போதும் இருக்கிறது. என்னுடைய வீழ்ச்சியின் போது நேர்ந்த இந்த இரண்டாம் தோல்வி என்னை உடைத்துவிட்டது. நான் வேறொன்றும் செய்ய முடியவில்லை. தங்களைப் போன்ற கௌரவப்பட்ட மனிதர்களுக்கு மஹாபூபின் சாவினுடைய துக்கம் புரியாது, ஆனால் அவள் மூன்றே மாதங்களில் என்னைக் கிழவன் ஆக்கிவிட்டாள். வேலையில் எனக்கு இருந்த பிடிப்பு போய் விட்டது. நான் முற்றிலும் வேறு ராகப்பா ஆகிவிட்டேன். என் பிடி தளர்ச்சியுற்று விட்டது.

நீரில் கல் எறிந்து அலைகள் நம்பக்கம் வர வேண்டும் என்று விரும்பினால் அலைகள் நாம் சொல்லுவதை ஏற்குமா ? நான் கவிதைப் போலப் பேசவில்லை. ஆனால், என் அனுபவங்களின் சாரவடிவமாகவும் என் வினைகளின் போக வடிவமாகவும் இந்தக் கேள்வி நான்கு ஆண்டுகளாகத் தொடர்ந்து எனக்கு முன்னால் நிற்கிறது... ஏதோ ஒன்று செய்யப் போகிறீர்கள், வேறொன்று நேர்ந்துவிடுகிறது, இதற்குப் பொறுப்பாளி யார் ?... அனுபவிப்பார் யார் ? ... நான் அனுபவத்தைக் கேட்கிறேன், வேதாந்தத்தை அல்ல. ஆனால் அனுபவமே வேதாந்தத்தை நோக்கிப் போகிறது. இவ்வாறாக மென்மை பெற்றுவிட்ட என் மனம் சென்றதை எல்லாம் நினைத்துத் துயரப்படுகிறது. நான் வலுவற்றவன் ஆகிவிட்டேன். உடல் வலிமை இன்னும் குன்றிவிடவில்லை, ஆயினும், ஒரு நோக்கத்தைக் குறிக்கோளாய்க் கொண்டு முன்னேறுகிற மன ஒருமை நாளுக்கு நான் குறைந்து கொண்டே வருகிறது.

இனி அடுத்த அனுபவத்தைக் கேளுங்கள். நான் வேலை செய்யச் சோம்புவதில்லை, ஆனால் அச்சம் பிறந்துவிட்டது: ஒன்று செய்யப் போய் முற்றிலும் வேறொன்றாக முடிந்தால் அதற்கு யார் பொறுப்பாளி ? இதே கேள்வி நாள்தோறும் கடுமையான வடிவோடு மின்னிடுவதால் வேலை செய்யும் போது விரும்பத்தகாத விளைவு ஏற்படும் என்கிற அச்சம் ஆரம்பமாகிவிட்டது. ஆனால், வேலையை விடலாமா? வேலை செய்துதான் ஆகவேண்டி இருக்கிறது. ஆகையால், முன்னதாக யோசித்து வேலையை ஏற்கும் பழக்கத்தைக் கைவிட்டேன், அதற்கு முன்னால் திரண்டிருந்த வெள்ளத் தோடு போகலானேன். விரும்பாமலே மனத்தில் புதுப்புது ஆசைகள் பிறக்கலாயின. என்னுடைய அச்சமே உருக் கொண்ட ஓர் ஆசை எழுந்தது: என் தமக்கைக்கு என் சொத்து கிடைக்கக் கூடாது என்பதே அந்த ஆசை. இந்த நோக்கத்தால் மனைவியின் உயிரை அபாயத்திலிட்டு ஆண்குழந்தை பெற முயற்சி செய்தேன். நான் இதில் வெற்றி பெற்றே விட்டேன், ஆனால், தெய்வம் என்னை எதிர்க்க உறுதிகொண்டு இருந்தது.

இனி ஒரு புகல் இல்லை.

மிகவும் கெட்ட நேரத்தில் தாங்கள் அந்தக் கடிதங்களை அனுப்பினீர்கள். அவற்றால் நான் அஞ்சிவிடவில்லை. பழைய நினைவுகள் அதிகமாய் விளக்கம் பெற்ற காரணத்தால் நான்

கோழை ஆகிவிட்டேன். என் காரியங்களின் விளைவுகள் என் விருப்பப்படி ஏற்படாத காரணத்தால் எனக்குப் பயம் உண்டாகத் தொடங்கியது. என் தமக்கை தன் வீட்டிலிருந்து தங்கள் வீட்டுக்குப் பசியும் தாகமுமாய் வந்த அன்றைக்கு, நான் தாங்கள் சொன்னதற்குப் பயந்து பெண்ணை அனுப்ப வில்லை, ஆனால், கங்கவ்வாவிடம் என்னைப் போன் றோருக்கும் இரக்கம் உண்டு. அவள் கஷ்டப்படுவதைப் பார்க்க முடியும். ஆனால், அவள் பட்டினி கிடப்பதைப் பொறுக்க முடியாது.

இனி, என் இறுதித் தோல்வி, என் அகத்துக்காரியின் சாவு! சில சமயம் பகவான் தீயறிவை வரம்பு கடக்கச் செய்து நல்லறிவு வழங்குகிறார் என்று தோன்றுகிறது. நான் என் மனைவியை ஆயிரம் விதமாக காதலித்தேன் - இவ்வளவு அனுபவம் தங்களுக்கு கிட்டும் சாத்தியமில்லை - ஆனால் ஆயிரத் தோராவது விதமாகவும் காதலிக்க முடியும் என்று கண்டு கொண்டேன். நான் அவளுக்கு அநியாயம் செய்த போது, அவள் நோவைப் பொறுத்த போது, அவள் எல்லாவற்றையும் ஊமையாகப் பொறுத்தாள், இறுதியில் போய்விட்டாள். அப்போது என்னைப் போன்ற ஆளின் மனத்திலும் கூட கருணையும் பாசமும் மாயையும் வழிய வழிய நிரம்பின. 'கரையற்ற கருணை! கடல் அலைகளென எழுகின்ற இரக்கம்.... எனக்குச் சந்தேகம் எழுகின்றது, சாதுக்களும் மகான்களும் இப்படித்தான் பகவானைக் காதலித்திருப்பார்கள் என்று. எவ்வளவு கண்ணீர் பெருக்கினாலும் இந்த இரக்கம் முடிவடைவதில்லை. உடல்கள் ஒன்றானாலும் இந்தப் பாசம் முடிவடைவதில்லை. எனக்கு என் மனைவியின் பால் இப்படிக் கரையற்ற உயர்ந்த காதல் மனத்தில் பிறக்கும் என்று நான் ஒரு போதும் எண்ணவில்லை. பார்க்கப்போனால், என் திருமணம் நொடிநேர இன்பம் நாடியே நடைபெற்றது.

கடைசி விஷயத்துக்கு வருகிறேன். தங்களுடைய மகன் வசந்தன் உறுதியுள்ள பிள்ளை அல்ல. அடிக்குப் பயந்து விட்டான். தங்களுக்கு அற்ப சொற்பமான நஷ்டம் உண்டாக்கு வதில் எனக்குத் திருப்தி ஏற்படவில்லை. அவன் கொஞ்சம் தைரியசாலியாக இருந்திருந்தால் என் மெய்யான கைவரி சையைக் கண்டிருப்பீர்கள். தங்கள் கண்களுக்கு முன்னா லேயே, என் பெண்ணுக்கும் அவனுக்கும் மணம் கடத்தி,

அவனுடைய பங்கை வசூலிப்பதற்காகக் தங்களைக் கோர்ட்டின் கட்டைக் கூண்டில் ஏற்றிப் பாராமல் அடங்கி இருக்கமாட்டேன். ஆனால், உங்களுடைய வசந்தனைப் போன்ற பகையாளியை வைத்துக் கொண்டு களத்தில் இறங்கினேனே, நானே புத்தி கெட்டவன்.

தங்கள் வசந்தனுக்கு என் மகளைக் கொடுக்க விரும்பினேன். ஆனால், நான் என் மனைவியை ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் சென்றிருந்த போது அவன் அவளைக் களவாடிவிட்டான். இச்செய்தி சில நாட்களிலேயே பரவிவிடும், சந்தேகம் இல்லை. ஆனால் இதுதொடர்பாக நான் தங்களிடம் எவ்வித் வேண்டுகோளும் விடுக்க விரும்ப வில்லை. இத்தனை நாளாக நான் தங்களிடம் பகைமை பாராட்டினேன், இப்போது தங்களுக்கு ஒரு நல்லவாய்ப்பு கிட்டிவிடும். இதனோடு சௌ. சாந்தாவின் சொந்தத் தவறும் இருக்கிறது. நானும் என் மனைவியைத் திருடினேன், ஆனால், மனைவி ராகப்பாவைக் காதலித்தாள். என் மகள், என் மனைவி இருவருக்கும் இடையில் பூமியும் ஆகாயமும் போன்ற வேற்றுமை இருக்கிறது. அவள் தன் அறிவீனத்தின் பயனை நுகர வேண்டி இருக்கும். அவள் எப்போது வேண்டுமானாலும் என் அருகில் வரலாம். நான் தான் முன்னோடியாக இருக்கிறேனே.

நான் இன்று இரவு இரண்டரை மணிக்கு வேலையிலிருந்து ஓய்வு பெறுகிறேன். இதற்கு முன்னால் நான் எங்காவது தோற்றிருந்தால், அது தங்களிடம் அல்ல என்பதைத் தெளிவாய்க் கூறிவிடுகிறேன். இது என்னுடைய இறுதி வேலை. கிருபை என்றும் இருக்கட்டும்.

*தங்கள் பழைய பகைவன்*
*ராகப்பா*

# 37. முடிவும் அச்சுதனின் மூன்றாவது கடிதமும்

***ரா****கப்பா இறந்த பிறகு ஆறுமாதத்தில் கிட்டியின் வீட்டுச் சூழ்நிலையே மாறிவிட்டது. ராகப்பாவின் உயிலில் மிகவும் தெளிவாகவே சொல்லப்பட்டிருந்தது. 'என் வீட்டில் ஆண் குழந்தை பிறந்துவிட்டால் கேள்வியே எழாது; பெண் பிறந்து*

விட்டால், நான் தத்து எடுத்துக் கொள்கிறேனோ இல்லையோ, என் சொத்துகள் சி. கிருஷ்ணனுக்கே சேர வேண்டும். அவனையே தத்துப் பிள்ளையாக ஏற்கும் எண்ணம் எனக்கு இருக்கிறது, ஆனால் எனக்குப் பைத்தியம் பிடித்துவிடுமோ எனப் பயமாக இருக்கிறது, அப்படி நேர்ந்து நான் சுவீகாரம் செய்து கொள்ள முடியாமற் போனாலும் என்னுடைய சொத்துகள் அவனையே சேரும்.' இதைத் தவிர, வெங்கடராய் தன் பங்கைக் கேட்டால் கொடுத்துவிட வேண்டும் என்றும், சாந்தாவுக்கு மணம் செய்யப்பட வேண்டும் என்றும், பிறக்கிற குழந்தை வளர்க்கப்பட வேண்டும் என்றும் அவன் உயிலில் தெளிவாய்க் குறிப்பிட்டிருந்தான்.

பிராமணர்களின் யோசனைப்படி ஒரு மாதம் வரை கிட்டி ராகப்பாவின் வீட்டைவிட்டு சாந்தாவையும் தன்னோடு கூட்டிச் சென்று தன் வீட்டிலேயே இருந்தான், அதற்குப்பின் ராகப்பாவின் வீட்டுக்குக் கிரகசாந்தி செய்வித்து அங்கேயே போய் வசிக்கலானான். இந்தப் பயங்கரமான நிகழ்ச்சிகள் எல்லாம் கிட்டியின் உள்ளத்தில் சம்மட்டி போல் காயப் படுத்திவிட்டன, அவனுடைய மூளை தளர்வடைந்துவிட்டது. அவன் ஒரே அடியில் கருமமே எண்ணியிருக்கும் தன்மையில் குதித்துவிட்டான். வீட்டில் கிரகசாந்தியின் மந்திரங்களை ஓதியதால் சாந்தி ஸ்தாபிக்கப்பட்டது. இதனால் அவனுக்கு கருமமே கண்ணாக இருப்பதில் எல்லையில்லாத ஆனந்தம் உண்டாயிற்று. அவன் ஆழ்ந்து சிந்தனை செய்யும் மனிதன் அல்ல. இப்போது சினிமாவுக்குப் பதிலாகப் பஜனைக்கும் புராணக் கதலஷேபங்களுக்கும் போகத் தொடங்கினான். இரண்டொரு மாதத்துக்கு ஒரு முறை வீட்டில் சத்ய நாராயணனின் கதை நடக்க ஆரம்பித்தது. தேநீர்க் கடைக்குப் போவதே அறவே நிறுத்திவிட்டான். தலை மயிரை வெட்டிக் கொண்டு தலை நடுவில் உச்சிக்குடுமி வளர்க்கலானான். ஜார்ஜோடும் பெயரளவுக்குத்தான் நட்பு இருந்தான், அவனுடைய வீட்டிலும் கிட்டி தேநீர் அருந்துவதில்லை. 'சாலிக்ராம மகிலை' என்ற மராட்டிப் புத்தகத்தை ஒன்றரை அணா கொடுத்து வாங்கினான், நாள்தோறும் அதைப் படித்து சாலிக்ராமத்திற்கு அபிஷேகம் செய்தான், ஒவ்வொரு நாளும் அரை மணி நேரம் சந்தியாவந்தனம் செய்தான். இதனால் சுறுசுறுப்பு மிகுந்தது. வீட்டில் அவன் மந்திரம் ஓதுவதைப் பார்த்து எல்லாருக்கும் அவனிடம் மரியாதை உண்டாயிற்று. கச்சேரியிலும் ஆபீஸிலும் அக்கப்போரும் அரட்டையும் குறைந்ததால் வேலையும் நன்றாக நடந்தது. இதனால் அவனுக்குப் புரியாமல் இருந்த விஷயங்கள் எல்லாம் இப்போது தாமாகப் புரிய ஆரம்பித்தன. கையில் காசு தங்கியது. முகமும் வைதிகத்தேசுடன் ஒளிரத் தொடங்கியது. உடம்பிலும்

கொஞ்சம் சதை போட்டது. இப்போது கிட்டியின் வாழ்க்கையில் கட்டுப்பாடு வந்துவிட்டது.

கிட்டி தன் சுபாவத்தையும் மனப்பாங்கையும் புரிந்து கொண்டான். அவன் சாமானியன். இதைவிட முன்னேற அவனால் இயலாது. இன்னும் இருபதாண்டுகள் போனாலும், அவனிடம் சிறப்பான மாறுதல் ஒன்றும் வந்துவிடப் போவதில்லை.

ரத்னாவின் மதிப்பு மேலும் விழுந்துவிட்டது. தாய் தந்தையர் மாண்ட பின், 'நான் உன் தாய் இல்லையா ?' என்று கூறுகிற ஒருவர் இருக்கிறார் என்ற பாவனையால் அவள் முனைப்பு கொள்வாள். சில சமயம் மாமியாருக்காக ஒரு கோப்பை பால் கொணர்ந்து இரவில் படுக்குமுன் பருகும்படி வற்புறுத்துவாள். கணவனிடம் எல்லோரும் மரியாதையாக நடந்து கொள்வதைக் கண்டு அவளுக்கும் அவனிடம் மரியாதைப் புத்திவந்தது. கிட்டி கணவன் மட்டும் அல்ல, குருவும் ஆனான். மெள்ள மெள்ள ரத்னாவும் முகத்தில் மஞ்சள் பூசவும் துளசிக்குத் தண்ணீர் ஊற்றவும் தொடங்கினாள். குழந்தை பிறப்பதற்காகக் கங்கவ்வா கூறிய காரியங்களை எல்லாம் செய்யலானாள்.

அநாதைகளாய் அழுது கொண்டு இருந்த ரத்னாவுக்கும் சாந்தாவுக்கும் கங்கவ்வா தாயெனத் தோற்றம் தந்தாள். அவர்களுடைய பொறுப்பை அவள் ஏற்றுக்கொண்டாள். ராகப்பாவின் விறுவிறுப்பான இருக்கை மறைந்து போனதால் கங்கவ்வாவுக்கு எல்லாமே சூன்யமாகப்பட்டது. ராகப்பாவின் ஆவிதன்னைப் பிடித்துக் கொள்ளும் என்கிற அச்சம் அவளை உள்ளுக்குள்ளேயே சில நாள் துன்புறுத்தி வந்தது. ஐந்தாறு நாட்கள் வரை அவள் பயங்கரமான கனவுகள் கண்டுகொண்டு இருந்தாள். ஆனால், கங்கவ்வா ராகப்பாவின் பெண்களிடம் அன்பு செலுத்தி அந்த அச்சத்தை வெருட்ட முயன்றாள். கங்கவ்வா இனி உண்மையாகவே மனத்தைத் தாராள குணம் உள்ளதாக ஆக்கிக் கொள்ள வேண்டும் என்று தேசாய் சொன்னதற்கு அவள், 'கோபண்ணா, இவர்களில் யாரும் எனக்கு அந்நியர்கள் அல்ல. அப்படி ஒரு காலம்,' என்று மறுமொழி பகர்ந்தாள். வீட்டில் எல்லோரும் மரியாதையாக நடந்து கொண்டதால் ஒரு மாதத்தில் அவளுக்கு அமைதி கிட்டியது. பதரிநாத் போக வேண்டும் என்ற எண்ணம் கொண்டு இருந்த கங்கவ்வாவின் மனம் இந்த சுகத்தைக் கண்டு உலகத்தின் பால் திரும்பிவிட்டது. சௌபாக்கிய வசமாக, கங்காமாதாவே அங்கு நடந்து வந்தாள்.

காசியில் இவர்கள் தங்கி இருந்த வீட்டுக்காரர்களில் இருவர் ராமேசுவரயாத்திரைக்குப் புறப்பட்டார்கள். வழியில் தங்கள்

எஜமானர்கள் வீட்டில் தங்கித் தக்ஷிணை வாங்கியவாறே தார்வாருக்கு வந்து சேர்ந்தார்கள். அவர்கள் தங்கள் சிறப்புமிக்க எஜமானரான தேசாயைத் தேடி வந்தார்கள். தேசாய் கங்கவ்வாவுக்கும் சொல்லி அனுப்பினார். கங்கவ்வா கிட்டியோடு வந்தாள்; வந்தவர்களை இரவு சாப்பாட்டுக்கு அழைத்தாள். சாப்பாடானபின் கிட்டியின் கையால் ஒரு ரூபாய் தக்ஷிணை கொடுக்க வைத்தாள். அவர்களிடமிருந்து எட்டாணா விலையுள்ள கங்காதீர்த்தப் பாட்டில் ஒன்று பெற்றுப் பகவானின் பூஜையில் வைத்தாள். இவ்வாறு கங்கையன்னை தானாகவே வீட்டுக்கு வந்து சேர்ந்தாள்.

அச்சுதராவ் தேசாயின் கடிதம் கண்டு பூனா போகும் எண்ணத்தை விடுத்துத் தார்வாருக்கு வந்தான். தனக்கு முன் வசந்தனுக்கு மணம் செய்வதை அவன் எதிர்க்கவில்லை. சாந்தாவைக் கட்டிக் கொள்ளும்படி தேசாய் சொன்னதை வசந்தன் மகிழ்ச்சியோடு ஒப்புக் கொண்டான். ராகப்பாவின் இறுதி விருப்பத்தை நிறைவேற்றுவதற்காகத் தேசாய் அவன் மகளைத் தம் மருமகள் ஆக்கிக் கொண்டார். இதனால் எல்லோரும் அவரை, 'உண்மையான மனிதர், பெரிய மனிதர்,' என்று பாராட்டினார்கள். முகூர்த்த நாள் முதலியன முடிவு செய்துவிட்டு அச்சுதன் பூனாவுக்குப் போய்விட்டான். ஆனால் வேணுபாய்க்கு இதனால் மிகுந்த துக்கம்; தான் அவமதிக்கப்பட்டதாக எண்ணினாள். பத்து ஏக்கர் மிராசு ராகப்பாவின் பெண், தற்கொலை செய்து கொண்டவன் மகள், அவளுக்கு மருமகள் ஆவதாம், இரண்டு காசு வரதக்ஷிணை கூட இல்லாமல், அதற்கும் மேலே மூத்தவன் இருக்க, இளையவனுக்குக் கலியாணம். இவை எல்லாம் அவள் மனத்தை மாவாய் அரைத்தன. சில சமயம் சாப்பிட்டபின் தாம்பூலம் தரிக்கும் போது அழுது விடுவாள். தேசாய் அவளுக்கு ஆறுதல் கூற முயலுவதே இல்லை, ஏனெனில் ஒரு காலும் ஓயாத அழுகை அது.

விவாகம் முடிவான பிறகு சாந்தா கழுத்தில் வசந்தனின் முத்து மாலையையும் மஹபூப் கொடுத்த சந்திர ஹாரத்தையும் அணிந்து கொண்டு தன் தெரு சிநேகிதிகளைக் காணச் சென்றாள்.

தேசாய் கங்கவ்வாவையும் கிட்டியையும் உட்கார வைத்துக் கொண்டு அவர்களுடைய கணக்கைப் படித்துக் காட்டினார்; 'இனி இந்தப் பணச் சுமையை என்னால் தூக்க முடியாது' என்று அழுத்தமாய்க் கூறிவிட்டார். கிட்டி இதுவரை நடந்ததற்கு மன்னிப்பு கேட்டான். அந்தப் பணத்தை என்ன செய்வது ? சொல்லுங்கள். கடனை நான் தீர்த்துக் கொள்கிறேன்,'என்றான். 'கடனை உடனே அடைத்துவிடவேண்டும்; பாக்கிப் பணத்தைத்

தபால் ஆபீசில் கங்கவ்வாவின் பெயரில் போட்டு விடுங்கள்,' என்று தேசாய் யோசனை சொன்னார். அப்படியே செய்யப் பட்டது. கங்கவ்வாவின் பெயரில் அஞ்சல் அலுவலகத்தில் ஓராயிரத் திரு நூறு ரூபாய் போட்டார்கள்; கிட்டி கடன் சுமையிலிருந்து விடுதலை ஆனான்.

ஜார்ஜ் வாஷிங்டன் கம்பார் கர்ணீவின் கடுமையான மெய் யொழுக்கம் காரணமா, ஜோஷிராமராய் எப்படி மாற்றத்திற்குப் பிறகு ஜார்ஜ் நிர்வாகத் தலைமைக் குமாஸ்தா ஆனான். அப்பால் மேல் அதிகாரிகளின் சிபாரிசால் அந்தப் பதவி அவனுக்கு நிரந்தரம் ஆயிற்று, அவன் வீட்டில் ஸ்டீபனுக்குப் பிறகு மற்றொரு பையன் பிறந்தான். சாமுவேல் சாரம்மாவை ரத்னா அடிக்கடி சந்திக்க நேரும், அப்போது ரத்னா அவளுடைய குழந்தைகளை மடியிலிட்டுக் கொண்டு கொஞ்சுவாள்.

பூனாவுக்குப் போன அச்சுதன் இக்கடிதம் எழுதினான் :

'தீர்த்தவடிவான தந்தையாரின் திருவடி கமலங்களில் சாஷ்டாங்க நமஸ்காரம். நான் நலமாக இருக்கிறேன். என் முட்டாள் தனத்தின் காரணமாக எனக்கு வெட்கமாக இருக்கிறது. கொஞ்சம் புத்திசாலித் தனமாக வேலை செய்திருந்தால் பம்பாயில் உட்கார்ந்திருந்தபடியே பாதிப் பிரச்னை தெளிவுபட்டிருக்கும். பம்பாயில் எனக்குப் பல குஜராத்தி, மார்வாடி நண்பர்கள் இருக்கிறார்கள். அவர் களுடைய நடவடிக்கை, பழக்கவழக்கங்கள் எனக்குத் தெரியும். அவர்கள் மிகுந்த பணக்காரர்கள், வியாபாரிகள், ஆகையால் சட்டம்-விதிகளுக்குப் பயப்படுகிறவர்கள். இதை அறிந்திருந்தும் நான் அதைப் பயன்படுத்திக் கொள்ளவில்லை.

பூனாவில் சேட் தக்தமல் இன்னும் இருக்கிறார். அவரைச் சந்தித்தேன். தம் வீட்டில் வெங்கடராய் என்னும் பெயருள்ள ஒருவன் வேலைக்கு இருந்ததை அவர் நன்றாய் ஞாபகம் வைத்திருக்கிறார். செக் மோசடி பற்றிக் கேட்டபோது அவர் மழுப்பலாகப் பதில் அளித்தார். 'எனக்குத் தான் மறதி. செக் சரியானது தான். அதனால் கேஸை வாபஸ் வாங்கி விட்டோம்.' என்றார். பின் நடந்த கதையை நான் அவரிடம் சொல்லவில்லை. தேவை ஏற்பட்டால் மறுபடியும் சென்று எல்லாவற்றையும் சொல்லி அவருடைய காதுகளைப் பிடித்துக் கொள்ள வேண்டும் என்று யோசிக்கிறேன்.

இவ்விஷயமாக என் கட்சி இது தான் : கணக்கில் குறைவு இருந்ததன் பேரில் முன்பின் யோசியாமல் சேட் போலீஸில்

புகார் கொடுத்துவிட்டார். போலீசார் ஓரளவு விசாரணை நடத்தியதும், எல்லாம் தம்முடைய மகன் தலையில் விடியும் என்று எண்ணி சேட் உடனே கேஸை வாபஸ் பெற்றிருக்கக் கூடும். எல்லா சேட்களின் பிள்ளைகளும் பெரும்பாலும் தங்கள் குழந்தைப் பிராயத்தில் தவறு செய்கிறார்கள். ஆனால் அவர்களே சற்று பெரியவர்களானதும் தங்கள் தந்தையின் தொழிலை அவர்களைவிட நன்றாக நிர்வாகம் செய்கிறார்கள். இது இவர்களுக்குச் சாதாரண விஷயம். இப்போது சேட்டின் கடையில் அவருடைய பெயர்ப் பலகையோடு அவருடைய மகன் பரபூபாயின் பெயர்ப் பலகையும் தொங்குகிறது. தன்னுடைய மகன் கிரிமினல் கோர்ட்டின் கூண்டில் சாட்சியாக மட்டும் நிற்பது வியாபாரி சேட்டுக்கு உடன்பாடாக இல்லை. இது அவர்களுடைய வியாபார தர்மத்திற்கு விரோதம். இதனால் அவர்களுடைய மரியாதை கெட்டுப் போகும். ஆகையால், செக் மெய்யானதே, அவர்தாம் தவறுதல் செய்து விட்டார் என்று சொல்லியோ, அல்லது வேறு வழியிலோ கோர்ட்டிலிருந்து சங்கடத்திலிருந்து விடுதலை பெற்றிருக்கலாம். தாஜிமுத்தீனை மிரட்டியோ அல்லது சில்லறை கொடுத்தோ வெருட்டி இருப்பார்கள். கேஸின் தேதிகளை அடிக்கடி தள்ளிப் போடச் செய்து அடிப்படையே ஆதாரமற்றது என்று காட்டிக் கேஸை அங்கேயே முடித்திருப் பார்கள் என்பது என் அபிப்பிராயம்.

பையன் என்று எண்ணி சேட் என்னோடு அதிகமாக உரையாடவில்லை. இந்த அவமானம் காரணமாகப் பிறகு நடந்ததைக் கூறாமல் அங்கேயே பேச்சை நிறுத்தி விட்டேன். சேட் நல்லவர். செக்கினால் எத்தகைய அநர்த்தம் ஏற்பட்டு விட்டது என்பதை அறிந்தால் அவரே முன் வந்து உதவி செய்வார். அவரிடம் இருந்து கேஸ் நம்பர் தெரிந்தால் போதும், அப்புறம் நாமே வழி கண்டு கொள்ளலாம்.

சுவாமிராய்க்கு உண்டான நஷ்டத்திற்கு அரசின ரிடமிருந்து ஈடு பெற முடியும் என்பது என் கருத்து. ஏனெனில், ஜாமீன்தாரர் ஆன காரணத்தால் அரசு அவரிடம் ஐயாயிரம் ரூபாய் வசூல் செய்தது. அப்பால் வழக்கே பொய் என்று நிரூபிக்கப் பட்டுவிட்டது. கேஸ் முடிந்துவிட்ட காரணத்தாலும், அதனுடைய விளைவு தெரியாததோடு ரீஃபண்டுக்காக யாரும் மனு செய்து கொள்ளாததாலும் ஜாமீன் தொகை இன்னும்

அரசிடமே நிற்கிறது. ஆகையால் இப்போது சுவாமிராயின் வாரீசான கிருஷ்ணனை ரீ.ஃபண்டுக்காக மனு செய்யும்படி சொல்லலாம். இத்தோடு, வெங்கடராய் அஞ்ஞாதவாசம் புரியத் தேவை இல்லை. போலீஸுக்குப் பயப்படாமல் அவன் இனி நடமாடலாம்.

இந்தக் காரியத்தில் நமக்கு சேட் தக்கமல்லின் உதவியும் வேண்டும். அதை நான் பெற முடியாது. இதற்காக அருள் கூர்ந்து தாங்களே வருகை புரிய வேண்டும். தங்களால் இக்காரியம் நிறைவேறும் என்று எனக்கு நம்பிக்கை. தாங்கள் இங்கே வந்த பிறகு என்னுடைய நண்பர் இளம் வக்கீல் ஒரு வரைக் கலந்து கொண்டு அவசியமானால் அவரையும் அழைத்துக் கொண்டு பூனாவுக்குப் போகலாம்.

அன்னையாருக்கு அநேக நமஸ்காரங்கள். வசந்தனோடு நானும் மணம் புரிந்து கொண்டு விட வேண்டும் என்று அவர்கள் மிகவும் வற்புறுத்தினார்கள் நான் மிகவும் நிஷ்டூரமாக அவர்களை மறுத்துவிட்டேன். இக் காரணத்தால் அவர்கள் மிகவும் வருத்தமாக இருப்பார்கள். அவர்களுக்கு ஆறுதல் சொல்லுங்கள். அடுத்த கடிதத்தில் அவர்களையும் இரண்டு வரி கட்டாயம் எழுதச் சொல்லுங்கள். இது என் பணிவான வேண்டுகோள். தம்பிகளுக்கு ஆசிகள். வருகிற போது புருஷோத்தமனையும் அழைத்து வாருங்கள்.

*தங்கள்*
*அச்சுத ராவ்.*

Printed at : Printsman, Doriwalan, Karol Bagh, New Delhi